In medicine which was his most favourite subject, he made the deepest and most thorough research. He equipped himself with a full knowledge of Western Medicine and also our system, and tested all indigenous recipes by actual administration to patients in a hospital in which English and Indian Doctors worked in harmony. He selected some four thousand recipes as the most efficacious ones and had them versified in Tamil, so that the prescriptions might be easily memorised. These recipes have been classified into 18 books, according to the diseases to which they relate. These books have been among the first to be included in our programme for publication, and the seven books already published have amply justified the preference shown to them. We have received numerous letters from doctors and others who have purchased these volumes, testifying to the wonderful efficacy of the prescriptions contained in them. The books that have already been published deal with (1) Gastric complaints, (2) Children and Women's diseases, (3) Eye-diseases, (4) Anæmia and Jaundice, (5) Cough and Asthma, (6) E. N. & T., and (7) Diabetes. Two more are about to be issued in addition to the present publication. They relate to Fever and Rheumatism, respectively. The other eight dealing with (1) Delirium, (2) Piles, (3) Purgatives, (4) Treatment of Diarrhœa, (5) Treatment for poisons, (6) T. B. and allied diseases, (7) Diseases consequent on fever, and (8) Leprosy, will soon be taken up for publication.

In the present publication, 308 prescriptions have been included and the diseases to which they relate include all Skin diseases, boils, abscess, eczema, cancer etc. It is specially to be noted that Cancer which is defying the modern world of doctors appears to have been successfully treated by a few simple applications in Raja Serfoji's Hospital.

Dr. S. Venkatarajan has edited this work with great care and has contributed a valuable introduction in which he has described the different kinds of skin diseases, abscess etc., mentioned in the text of the recipes, and also given a full account of the surgical instruments described in Sanskrit and Tamil treaties on surgery. Our thanks are due to him for his valuable services.

It is hoped that this publication will be found as useful as its predecessors in this series.

We are grateful to the Government of Madras for their timely grants that have enabled us to publish this and other valuable manuscripts of this Library.

Saraswathi Mahal,
Tanjore,
20—11—52.

S. GOPALAN,
Honorary Secretary.

# முகவுரை.

'சரபேந்திர வைத்திய முறைகள்—விரண ரோக, கரப்பான் ரோக சிகித்ஸை' என்ற இவ்வெளியீட்டில் சரபோஜி மகா ராஜாவால் நம் நாட்டு வைத்தியர்களைக்கொண்டும், மேல்நாட்டு வைத்தியர்களைக்கொண்டும் நடத்தப்பட்ட மருத்துவஆராய்ச்சி யின் பயனாகக் கைகண்டதென தேர்ந்தெடுக்கப்பட்ட வைத்திய முறைகளுள் பலவித ரணங்களுக்கும், சிரங்கு, பிளவை, புற்று, கரப்பான் முதலிய ரோகங்களுக்குமான முறைகள் அடங்கி யிருக்கின்றன.

கலை, விஞ்ஞானங்களிலேயே தான் வாணாளையும் பொரு ளையும் அர்ப்பணம் செய்த சரபோஜி மன்னர் மக்களுக்கு மிக வும் அவசியமான மருத்துவக்கலையில் அதிகமாக ஈடுபட்டு ஆழ்ந்த ஆராய்ச்சி செய்து அதன் பயனையும் நமக்கு அளித் திருக்கிறார். நம் நாட்டு வைத்திய முறையையும், மேல்நாட்டு முறையையும் செவ்வனே பயின்று ஓர் ஆஸ்பத்திரியை ஏற் படுத்தி, செலவைப் பொருட்படுத்தாமல் இருவகை முறைகளி லும் வல்லவர்களான வைத்தியர்களை நியமித்து, நம் நாட்டில் எளிதில் கிடைக்கக்கூடிய மருந்துச் சரக்குகள், மூலிகைகள் சேர்ந்த மருந்து முறைகள் அனைத்தையும் நோயாளிகளுக்குப் பிரயோகம் செய்து பரீக்ஷித்து, நிச்சயம் பலனளிக்கக்கூடிய தென சுமார் 4000 முறைகளை மன்னர் தெரிந்தெடுத்தார். அம் முறைகளைத் தனது ஆஸ்தானத் தமிழ்ப் புலவர்களைக்கொண்டு

செய்யுள்களாக இயற்றுவித்து, வியாதிகளுக்கேற்ப அவை களைப் பதினெட்டு புத்தகங்களாகத் தொகுத்துச் சுவடிகளில் காப்பாற்றி வைத்திருக்கிறார்.

இப்பதினெட்டுத் தொகுதிகளில் இதுவரையில் 7 தொகுதிகள் வெளிவந்துள்ளன. அவைகளில் (1) குன்ம ரோகம், (2) கர்ப்பிணி பாலரோகம், (3) கண்ணைப்பற்றிய வியாதிகள், (4) பாண்டு காமாலை, (5) ச்வாஸகாசம், (6) சிரோ ரோகம், (7) நீரிழிவு இவைகளைப்பற்றிய சிகிச்சை முறைகள் அடங்கியிருக்கின்றன. இவ்வெளியீடுகளை வாங்கி அவற்றை உபயோகித்த வைத்தியர்கள் பலரிடமிருந்து அவைகள் 'அற்புதமான குணமளிக்கின்றன' என்று கடிதங்கள் கிடைத்திருக்கின்றன. இவ்வெளியீட்டிலுள்ள முறைகளும் அவ்விதமே குணமளிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இம்முறைகளில் புற்று நோய்க்கான முறைகள் குறிப்பிடத்தக்கவை. தற்காலத்தில் புற்றுநோய் சிகிச்சைக்காக மேல்நாட்டு முறையில் பலவிதமாகப் பாடுபட்டு வந்தும் அந்நோயை சுலபமாகத் தீர்ப்பதற்கான வழிகள் இன்னும் கண்டுபிடிக்கப் படவில்லை. ஆனால் சரபோஜி ராஜாவின் ஆஸ்பத்திரியில் இந்நோயை சில சுலபமான முறைகளைக்கொண்டு சிகிச்சை செய்திருப்பதாகத் தெரிகிறது. அவை இதில் நெ. 68, 181-வது முறைகளில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலின் பதிப்பாசிரியர் டாக்டர் S. வெங்கட்ராஜன் அவர்கள் செய்யுட்களுக்கு உரைநடையையும் முகவுரையில் இதிலுள்ள முறைகளில்கண்ட பலவித வ்ரணங்களின் குறி

குணங்களையும், தமிழ் நூல்களிலும், ஸம்ஸ்க்ருத நூல்களிலும் கண்ட சஸ்திர சிகிச்சைக்கான ஆயுதங்களின் விவரத்தையும், எழுதியுதவியிருக்கிறார். அவரது அரிய சேவைக்கு நமது நன்றி உரித்தாகும்.

இந்நூலையும், இதுபோன்ற இம்மஹாலிலுள்ள மற்ற அரிய நூல்களையும் வெளியிடுவதற்குத் தக்கசமயத்தில் பொருளுதவி செய்துவரும் சென்னை அரசாங்கத்தாருக்கும் நாங்கள் எப்பொழுதும் கடமைப்பட்டுள்ளோம்.

ஸரஸ்வதி மஹால்,
தஞ்சை.
22—11—52.

**எஸ். கோபாலன்,**
கௌரவக் காரியதரிசி.



# பொருளடக்கம்.


பக்கம்.

I. முகவுரை ... ... I-LXXXVIII

**சஸ்திரங்கள்** (விரணசிகித்ஸைக்கான ஆயுதங்கள்) iii—xxiv

1. சஸ்திரங்களின் இலக்ஷணங்கள் ... iii
2. சஸ்திரங்களின் தோஷங்கள் ... viii
3. கருக்கு இருக்கவேண்டிய கிரமம் ... ix
4. பாயன ஸம்ஸ்கார விதி ... ix
5. அநுசஸ்திரங்கள் ... ix
6. சஸ்திரங்களின் பிரயோஜனங்கள் ... x
7. சஸ்திரங்களைப் பிடிக்கும் வகை ... x
8. சஸ்திர கோசம் (ஆயுதப்பெட்டி) ... x
9. யந்திர விதி ... ... xi
11. யந்திரங்களின் பொது உருவங்கள் ... xi
11. யந்திரங்களின் பொதுவான வேலைகள் ... xviii
12. அவயவங்களைச் சேதித்து ப்ரத்யக்ஷ பரிசோதனை செய்யும் கிரமம் ... xix
13. சஸ்திர சிகித்ஸையை அப்யஸிக்கும் முறை .... ... xix
14. பழைய காலத்திலிருந்த சஸ்திர சிகித்ஸையின் அபூர்வ சாமர்த்தியத்தின் உதாரணங்கள் ... xx
15. சஸ்திர சிகித்ஸையும், ஒட்டவைத்தலும் ... ... xxiii

பக்கம்.

16. வ்ரண சோதம் ... xxiv
17. பழுக்காத வீக்கத்தின் லக்ஷணங்கள் ... xxiv
18. பழுக்க ஆரம்பித்து, முழுவதும் பழுப்பதற்கு முன்னுள்ள வீக்கத்தின் லக்ஷணங்கள் ... ... xxiv.
19. அதிகாரகப் பழுத்த சோபத்தின் குறிகள் ... ... xxv
20. சோபத்தைக் கீறுவதற்கும் தானே உடைவதற்கும் ஏற்ற நிலைமைகள்.. xxv
21. பழுக்காத கட்டியைக் கீறுவதனாலேற்படும் விகாரங்கள் ... xxv
22. சீழ் உள்ளேயே தங்கிவிடுவதினாலேற்படும் குறிகள் ... xxvi
23. சஸ்திரப் பிரயோகமும் ஆகாரமும் .... xxvi
24. மயக்கம் உண்டுபண்ணத்தகாதவர் ... xxvi
25. சஸ்திர சிகித்ஸையைச் செய்யும் முறை xxvi
26. சஸ்திர சிகித்ஸையில் வைத்தியனுக்கு வேண்டிய குணங்கள் ... xxvii
27. வ்ரணரோகி செய்யக்கூடாதவை ... xxviii
28. ஆகார நியமங்கள் ... ... xxviii
29. வ்ரணங்களில் வைத்துக் கட்டப்படும் பஞ்சின் நிலைமை (விகேசிகை) ... xxix
30. தையல் போடவேண்டிய விரணங்கள்,. xxix
31. தைக்கத்தகாத விரணங்கள் ... xxix
32. தையல் போடும் முறை .... xxx
33. பந்தனமீடும் முறை ... xxx
34. பந்தன முறைகள் ... xxxi
35. பந்தனமிடத்தகாத விரணங்கள் ... xxxi

பக்கம்.


36. விரணங்களின் பேதங்கள் ... xxxii

37 நிஜவிரணம், ஆகந்துக விரணம் முதலியன ... ... xxxii

38. துஷ்ட விரண இலக்ஷணங்கள் ... xxxii

39. சுத்த விரண இலக்ஷணங்கள் ... xxxiii

40. விரணம் ஆறாமலிருப்பதன் காரணங்கள் xxxiv

41. மெத்யோ விரணங்களின் (அடி படுதல்) குறிகள் ... ... xxxiv

42. அக்கி ... ... xxxv

43. விஸர்ப்ப வகைகள் ... xxxvi-xxxviii

44. கிரந்தி பேதங்கள் ... xxxviii—xxxix

45. கண்டமாலைக் குறிகுணங்கள் ... XL

46. அரையாப்புக் கட்டி ... XL

47. நாடிவிரணம் (புரை) .. XL-XLII

48. எழுநாயறு. படுநாயறு ... XLII

49. கன்னமூலம் ... ... XLII

50. வெப்புப் பாவை ... .... XLIII

51. மகோதரம் ... XLIII-XLIV

52 பிளவைக் குறிகள் ... ... XLV

53. பககப் பிளவை ... ... XLVI

54 நீராமை (Dropsy)... ... XLVII

55. பேராம்பல் ... ... XLVIII

56. கரப்பான் ரோகக் குறிகள் XLIX-LV

57. விப்புருதிக் குறி குணங்களும் வகைகளும் ... LV-LVIII

58. பக்ன நிதர்னம் ... ... LVII

பக்கம்.

59. ஸந்தி பக்னலக்ஷணங்கள், வகைகள் LVII-LVIII
60. காண்டபக்ன குறிகளும் வகைகளும் LVIII-LIX
61. பாதவன்மீக ரோகம் ... LIX
62. பவுத்திர ரோக வகைகளும் குறி குணங்களும் ... ... LX-LXI
63. யோனிகந்த நிதானமும் வகைகளும் ... LXII
64. குஷ்டரோக நிதானமும் வகைகளும் ... LXIII-LXVII
65. ஸப்த தாதுக்களையும்பற்றிய குஷ்டங்களின் இதர லக்ஷணங்கள் LXVII-LXVIII
66. குஷ்டம் உண்டாகக் காரணம் ... LXVIII
67. குஷ்டரோக ஸம்ப்ராப்தி ... LXIX
68. ரோக அகராதி ... ... LXIX
69. சத்திர விதி ... ... LXXI
70. 26 வகை சஸ்திரங்களின் பெயர் ... LXXII
71. சஸ்திரங்களின் இலக்ஷணங்கள் ... LXXVII-LXXVIII
72. அகஸ்தியர் சத்திர விதி LXXIX-LXXXVIII

II. சரபேந்திரர் விரண ரோக, கரப்பான் ரோக சிகித்சை முறைகளிலுள்ள மருந்து வகைகளின் அட்டவணை ... 1—18

1. எண்ணெய் வகைகள் ... 1
2. நெய் வகைகள் ... ... 6
3. சூரண வகைகள் ... ... 7
4. பத்து வகைகள் ... ... 8

பக்கம்.


| | | | |
|---|---|---|---|
| 5. | களிம்புகளும், சேர்வைகளும் | ... | 9 |
| 6. | கல்க வகைகள் | ... | 11 |
| 7. | காரச்சீலைகளும், திரிவகைகளும் | ... | 13 |
| 8. | கஷாயங்கள் | ... | 13 |
| 9. | பணியார வகைகள் | ... | 14 |
| 10 | புகை வகைகள் | ... | 15 |
| 11. | உருண்டை வகைகள் | ... | 15 |
| 12. | கட்டு மருந்து | ... | 16 |
| 13. | லேகிய வகைகள் | ... | 16 |
| 14. | பச்சிலை மருந்து வகைகள் | ... | 17 |
| 15. | பிட்டு வகைகள் | ... | 17 |
| 16. | பற்ப வகைகள் | ... | 17 |
| 17. | வேது வகைகள் | ... | 17 |
| 18. | தொடு மருந்துகள் | ... | 17 |
| 19. | பால் மருந்துகள் | ... | 18 |
| 20. | மிதிப்பு வகை | ... | 18 |
| 21. | குழம்பு வகை | ... | 18 |
| 22. | நஸ்ய வகை | ... | 18 |
| 23. | கார வகை | ... | 18 |
| 24. | வாந்தி வகை | ... | 18 |
| 25. | மெழுகு வகை | ... | 18 |
| 26. | வெட்டை வகை | ... | 18 |

III. சரபேந்திர வைத்ய முறைகள்—
விரண ரோக சிகித்ஸை ... 1-228

பக்கம்

IV. சரபேந்திர வைத்திய முறைகள் —
கரப்பான் ரோக சிகித்ஸை ... 229-365

V. இம் முறைகளிலுள்ள மருந்துகளின்
அட்டவணை ... ... 366-383

VI. இம் முறைகளின் நோய்க்குறிப்பு
அகராதி ... .... 385-392

VII. பிழை திருத்தம் ... ... 393

# சரபேந்திரர்
# விரண ரோக, கரப்பான் ரோக சிகித்ஸை முறைகளிலுள்ள
## மருந்துவகைகளின் அட்டவணை.

### I. எண்ணெய் வகைகள்.


| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
|---|---|---|
| 1. | *(அடுக்குச்சட்டி) யெண்ணெய் (கண்டமாலைக்குப் பூச்சு) ... | ... 358 |
| 2. | (அரத்தை) யெண்ணெய் (புண், புரைகளுக்கு) ... | 113 |
| 3. | (அரளி) யெண்ணெய் (சிரப்புண், சிறங்குகளுக்கு) | 119 |
| 4. | (அரிதார) எண்ணெய் (சிறங்கிற்கு) | ... 19 |
| 5. | (ஆத்திக்கா) யெண்ணெய் (புண்களுக்கு) | ... 124 |
| 6. | (இரஸ) தைலம் (சொறி, சிறங்குகளுக்கு) | ... 99 |
| 7. | (இலுப்பைப்பட்டை) யெண்ணெய் (பரு, படுவன்களுக்கு) ... | ... 207 |
| 8. | இலைக்கள்ளி எண்ணெய் (புண், புரைகளுக்கு) ... | 12 |
| 9. | (உசிலை) எண்ணெய் (புண்களுக்கு) | ... 61 |
| 10. | (உத்தாமணிசாரணை) எண்ணெய் (புண்களுக்கு)... | 63 |
| 11. | (உப்பு) எண்ணெய் (சிறு, பெரு சிறங்குகளுக்கு) | 68 |
| 12. | (எருக்கம்) வேர்த் தைலம் (கிரந்தி, கரப்பான், சிறங்குகளுக்கு) ... | ... 182 |
| 13. | (எருக்குத்) தைலம் (சொறி, குஷ்டந் தீர) | ... 214 |
| 14. | (எருக்கம் வேர்த்) தைலம் (விப்புருதிக்கு) | ... 334 |


*பிறைக்குறிகளுள் காணப்படும் பெயர்கள் நமது கற்பனைப் பெயர்களாகும்.

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம் |
|---|---|---|
| | **எண்ணெய் வகைகள்**—தொடர்ச்சி. | |
| 15. | (எலுமிச்சம்பழ) எண்ணெய் (கரப்பானுக்கு) ... | 233 |
| 16. | எலுமிச்சங்கா யெண்ணெய் (விப்புருதிக்கு) ... | 322 |
| 17. | (எலும்பு) எண்ணெய் (கண்டமாலைக்கு) ... | 355 |
| 18. | (எருமுட்டை) யெண்ணெய் (நிராத புண், புரைகளுக்கு) ... ... | 117 |
| 19. | (கடுக்கா) யெண்ணெய் (கெர்ப்ப விப்புருதிக்கு)... | 347 |
| 20 | (கரப்பான்) எண்ணெய் (கர்ப்பிணி கரப்பானுக்கு) | 261 |
| 21 | (கரிசாலங்கண்ணி) எண்ணெய் (கரப்பானுக்கு).... | 249 |
| 22. | (கருஞ்சீரக) எண்ணெய் (கன்னக்கிரந்தி, காளான், கரப்பானுக்கு) ... ... | 78 |
| 23. | (கருஞ்சீரக) எண்ணெய் (சிலந்தியுடன் கூடிய வியாதிக்கு) ... ... | 202 |
| 24. | (குங்கிலியப்) பிசினி எண்ணெய் (பித்தவெடி, வாய்ச்சூலைக்கு) ... ... | 135 |
| 25. | (குங்கிலிய) எண்ணெய் (வெட்டுக் குத்துக்கு) ... | 148 |
| 26. | (குப்பைமேனி) எண்ணெய் (கண்டமாலைக்கு உள்ளுக்கும், பூசுக்கும்) ... ... | 357 |
| 27. | (குருந்தைத்) தைலம் (மண்டைக் கரப்பானுக்கு) | 229 |
| 28. | (கெந்தகாதி) தைலம் (துருவிய கன்னக்கிரந்திக்கு) | 83 |
| 29. | (கெந்தகத் தாளக) தைலம் (சிறங்கு, சொறி, கடி விரணங்களுக்கு) ... ... | 103 |
| 30. | (கோவை) எண்ணெய் (கிரந்தி, சிறங்கு, கரப்பானுக்கு) ... ... ... | 181 |
| 31. | (சங்கம்வேர்) எண்ணெய் (அரையாப்பு, தொடைவாழை, கட்டு, வீக்கம், விப்புருதி, எழுச்சி, முதலியவைகளுக்கு மேலே பூச) ... | 272 |
| 32. | (சித்ரமூல) தைலம் (புரை, புண்களுக்கு) ... | 6 |

நே. மருந்துகளின் பெயர். பக்கம்.

**எண்ணெய் வகைகள் — தொடர்ச்சி.**

33. (சித்ரமூல) எண்ணெய் (கிரந்தி, கரப்பான், சிறங்குகளுக்கு) ... ... .... 206
34. (சித்ரமூல) எண்ணெய் (ஓடுவிற்கு) ... 219
35. (சித்ரமூல லசுன) எண்ணெய் (செங்கரப்பான், விடக்கரப்பான் முதலானவைகளுக்கு) ... 246
36. (சித்ரமூல) எண்ணெய் (கரப்பானுக்கு) ... 251
37. (சித்ரமூலாதி) எண்ணெய் (மேகக் கட்டி, அரையாப்புக் கட்டி, புண்களுக்கு) ... 280
38. (சித்ரமூலாதி) எண்ணெய் (பவுத்திரச் சிலந்திக்கு) 307
39. (சித்ரமூலாதி) எண்ணெய் (பவுத்திரம், புரை, புண்கள் முதலியவைகளுக்கு மேலே போட) ... 320
40. (சித்ரமூல) எண்ணெய் (சடைக்கிரந்தி, கிரந்தி, கரப்பானுக்கு) ... ... 239
41. (சிவனார் வேம்புத்) தைலம் (18 வித குஷ்டங்களுக்கும்) ... ... 216
42. (சிறுபுள்ளடி) எண்ணெய் (ஓடுவிற்கு) ... 221
43. (சிற்றவரை) முக்கூட்டெண்ணெய் (கிரந்தி, கன்னக் கிரந்தி, கன்ன வாதங்களுக்கு) ... 187
44. (சின்னி) எண்ணெய் (கிரந்திமுதற் குஷ்டத்திற்கு) 72
45. (செங்கதாரி) எண்ணெய் (செங்கரப்பானுக்கு) ... 256
46. (செங்கதாரி) எண்ணெய் (சகல வீக்கத்திற்கும் உள்ளுக்கு) .... ... 320
47. சேங்கொட்டை எண்ணெய் (மேக விரணங்களுக்கு) ... ... 96
48. (சேங்கொட்டைத்) தைலம் (வெள்ளை, கருப்பு செங்குஷ்டங்களுக்கு) ... ... 212
49. (சேங்கொட்டை ரஸ தைலம்) (கருங்குஷ்டம், காணாக்கடிகளுக்கு) ... ... 170

**எண்ணெய் வகைகள்**—தொடர்ச்சி.


50. (சொறித்தவளை) எண்ணெய் (ஓடுவிற்கு) ... 220
51. (தலைமயிர்) எண்ணெய் (தீப்பட்ட புண்களுக்கு).. 110
52. திருக்கள்ளி எண்ணெய் (விப்புருதிக்கு) .... 324
53. (திரிபுரமெரித்தான்) எண்ணெய் (புண், புரை களுக்கு எண்ணெயும், பூச்சும்) ... 294
54. (துவரெண்)ணெய் (புண், புரை, சிறங்குகளுக்கு) 39
55. (துவரெண்) ணெய் (உடரலை, கால், கைப்புண் களுக்கு) வேறு ... ... 74
56. (துவரெண்)ணெய் (கிரந்திக்கு) ... 198
57. (துளசி) யெண்ணெய் (பச்சுடம்பிற் கிரந்தி, கரப்பானுக்கு) ... ... 88
58. (தேங்காய்) பாலெண்ணெய் (ஆறாத புண்களுக்கு) 115
59. (தேங்காய்) பாலெண்ணெய் (கெர்ப்ப விப்புரு திக்கு நக்க) ... ... 329
60. (நத்தைச்சூரி) எண்ணெய் (அரையாப்பிற்கு) ... 279
61. (நன்னாரிவேர்) எண்ணெய் (கரப்பானுக்கு) ... 248
62. (நாய்வேளை, இலத்தி) தைலம் (சகல கரப்பா னுக்கும்) ... ... 230
63. (நால் பாமராதி) எண்ணெய் (தீப்பட்ட புண் களுக்கும், வைசூரிப் புண்களுக்கும்) ... 91
64. (நாற்கூட்)டெண்ணெய் (பெருங்கரப்பான், ஓடு கரப்பானுக்கு) ... ... 257
65. (நிலக்குமிழ்) எண்ணெய் (விப்புருதிக்கு) உள் ளுக்கும், பூச்சும்) ... ... 348
66. (நிலவேம்பு) எண்ணெய் (கரப்பானுக்கு) ... 258
67. (நீரடிமுத்து) எண்ணெய் (பெருவியாதிக்கு ... 163
68. (பச்சை) யெண்ணெய் (புண்களுக்கு) ... 23

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
|---|---|---|
| | **எண்ணெய் வகைகள்—தொடர்ச்சி.** | |
| 69. | பாடாண எண்ணெய் ... ... | 1 |
| 70. | (புங்க) எண்ணெய் (புண், புரைகளுக்கு) ... | 109 |
| 71. | (பூண்டு) எண்ணெய் (எழுநாயிறு படுநாயறுக்கு) | 235 |
| 72. | (முடக்கொத்தான்) எண்ணெய் (விப்புருதிக்கு, உள்ளுக்கு) ... ... | 335 |
| 73. | (முன்னைக்கொழுந்) தெண்ணெய் (தீப்படும் புண்களுக்கு) ... ... | 90 |
| 74. | (வசாதி) தைலம் (மண்டைக்கரப்பானுக்கு) ... | 233 |
| 75. | (வசாதி) தைலம் (எழுநாயிறு, படுநாயிறு முதலியவைகளுக்கு) ... ... | 297 |
| 76. | (வாகையிலை)த்தைலம் (கழலை, கரப்பான் சிலந்திக்கு) ... ... | 240 |
| 77 | (வாழைக்கா) யெண்ணெய் (சிறங்கிற்கு) ... | 19 |
| 78. | விரணாந்தகத் தைலம் ... ... | 59 |
| 79. | (வில்வாதி) எண்ணெய் (கிரந்திக்கு) ... | 387 |
| 80. | (வீழி வே)ரெண்ணெய் (சத்தி விப்புருதி, ஓடு விப்புருதிக்கு) .... ... | 340 |
| 81. | (வெங்காய) எண்ணெய் (ஒட்டுக்கோழை, விப்புருதி முதலியவைகளுக்கு உள்ளுக்குச் சாப்பிட) ... ... ... | 322 |
| 82. | (வெங்காய) எண்ணெய் (கரப்பானுக்கு) ... | 260 |
| 83. | (வெங்காய) முக்கூட்டெண்ணெய் (விடக்கரப்பானுக்கு) ... ... | 242 |
| 84. | (வெள்ளறுகு) எண்ணெய் (புண்கள் ஆற) ... | 22 |
| 85. | வேம்பாடம்பட்டை) எண்ணெய் (மலட்டு விப்புருதிக்கு) ... ... | 327 |
| 86. | (வேலம்பட்டை) எண்ணெய்பத்து (பல்லரணை, பல்குத்து, சிலந்தி, வெட்டுக்குத்துக்கு) ... | 363 |

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
|---|---|---|

## II. நெய் வகைகள்.


87. (அருகம் வேர்) நெய் (விடபாகத்திற்கு) ... 250
88, அறுகு நெய் (கரப்பான், கிரந்திகளுக்கு) ... 255
89. (அவுரி நெய்) (5 வகை விப்புருதிகளுக்கும்) ... 323
90. (அவுரி நெய்) (கெர்ப்ப விப்புருதிக்கு) ... 339
91. (ஆடாதோடை) நெய் (வாய். ஈறு, நாக்கு முதலிய இடங்களிலுள்ள வேக்காளத்திற்கு) ... 28
92. (ஆடாதோடை) நெய் (சோபமான கிரந்திக்கு) .... 125
93. (இளநீர்) நெய் (கெர்ப்ப விப்புருதி, கூடல் விப்புருதிக்கு) ... ... 332
94. (கார்ப்பாஸாஸ்த்யாதி) நெய் (யோனிலிங்கம், வயிறு, மூக்கிலிருந்து இரத்தம் விழுதலுக்கு) ... 158
95. குக்குலுகிறுதம் (அடைக்கிரந்திக்கு) ... 241
96. (கோக்ஷுராதி) நெய் (துன்மாங்கிஷங் கரைய) ... 138
97. (சித்ரமூல) நெய் (படுவனுக்கு) ... 130
98. (செங்கதாரி) நெய் (ஓடிப்பாயும் புண்களுக்கு) ... 51
9੍. (செருப்படி) நெய் (கரபபானுக்கு) .... 253
100. திரிபலாதி கிருதம் (குஷ்டம் முதலானவைகளுக்கு) ... ... 174
101. படோலாதி கிருதம் (உடம்பில் புண், புரைகளுக்கு) ... ... 47
102. பஞ்சதிரவிய நெய் (விடபாகம், வீக்கத்திற்கு) ... 267
103. (பிப்பல்யாதி) கிருதம் (பவுத்திரம், பிளவை, விப்புருதி, மூலக்குத்து, நாடிவிரணம், கண்டமாலை, யோனிச்சூலை, நாக்குச்சிலந்திப் புண்களுக்கு) ... ... ... 314
104. (பூண்டு) நெய் (உதர விப்புருதிக்கு) ... 345

நே. மருந்துகளின் பெயர். பக்கம்.

**நெய் வகைகள்**—தொடர்ச்சி.

105. (பூண்டு) நெய் (கெர்ப்ப விப்புருதிக்கு) ... 343
106. முருங்கை நெய் (விப்புருதிக்கு) ... 330
107. வெள்ளறுகு நெய் (புண்களுக்கு) ... 4
108. வேலிப்பருத்தி நெய் (விப்புருதி, மகோதரம், புண், புரை, நீராமை, பெருவயிறு, நீர்க் கோர்வை, கடிகை விப்புருதிக்கு) ... 337

III. **சூரண வகைகள்.**

109. (அழிஞ்சில் வேர்) சூரணம் (குஷ்டத்திற்கு) ... 178
110. (இண்டம் வேர்) சூரணம் (குஷ்டத்திற்கு) ... 211
111. (இலவம்பட்டைச்) சூரணம் (18 வித குஷ்டங்களுக்கும்) ... ... 212
112. (எட்டிவேர்) சூரணம் (கண்டமாலைக்கு) ... 359
113. கருங்கோழிச் சூரணம் (புண், கிரந்தி, சூலை, மேகவெகை, கழிச்சல் முதலானவைகளுக்கு) ... 80
114. கருங்கோழிச் சூரணம் (துன்மாங்கிஷத்திற்கு) ... 141
115. கருங்கோழிச் சூரணம் (கிரந்திக்கு) ... 195
116. கருவேலிலைத்தூள் (புண்களுக்கு) .... 52
117. (குண்டலாதிச்) சூரணம் (புண், சூலை, கைகால் முடக்குக்கு) ... ... 64
118. (குமிழம் வேர்ச்) சூரணம் (குஷ்டத்திற்கு) ... 177
119. (சித்ரமூலாதிச்) சூரணம் (கிராணி, அக்கினி மந்தம், பாண்டு முதலானவைகளுக்கு) ... 270
120. (சித்தாமல்லிச்) சூரணம் (படர்தாமரை, குஷ்டம், கடிவிஷங்களுக்குப் பூச்சு மருந்து) ... 292
121. (செங்கதாரிப்பட்டைச்) சூரணம் (கரப்பானுக்கு) 237

நெ. மருந்துகளின் பேயர். பக்கம்.

சூரண வகைகள்—தொடர்ச்சி.

122. (திரிகடுகுக்குக்கிலாதிச்) சூரணம் (கரப்பான், கிரந்திகளுக்கு) ... ... 261

123. (நாகதாளிவேர்ச்) சூரணம் (குஷ்டத்திற்கு) ... 210

124. (நிலப்பனைக்கிழங்கு) சூரணம் (முழங்காற் கரப்பானுக்கு) ... ... 238

125. (நிலவாகைச்) சூரணம் (படர் தாமரைக்கு உள் மருந்து) ... ... 289

126. (பறங்கிப்பட்டைச்) சூரணம் (கிரந்திக்கு) ... 193

127. பறங்கிப்பட்டைச்) சூரணம் (பறங்கிப் புண்களுக்கு) ... ... 40

128 (பறங்கிப்பட்டைச்) சூரணம் (கிரந்தி, ரஸம், பாஷாணம் முதலியவைகளுக்கு முறிவு மருந்து) 128

129. (பிரண்டைச்) சூரணம் (18 வித குஷ்டங்களுக்கும்) ... ... ... 169

IV. பத்து வகைகள்.

130. (அபினிப் பத்து) (உடையாத சிலந்திக்கு) ... 145

131. (அழிஞ்சில்வேர்) பத்து (தண்டு நொந்தால்) ... 228

132. (இந்துப்புப்) பூச்சு) (படர்தாமரைக்கு) ... 284

133 (இரஸ) மருந்து (பவுத்திரத்திற்கு) .... 303

134. (எருக்கம் வேர்ப் பத்து) (விப்புருதி, பிளவைக்கு) ... ... 364

135. (கிட்டாதிப்) பூச்சு (கண்டமாலை முதலான வீக்கத்திற்கு) ... ... 350

136. (கொட்டைக்கரந்தைப்) பத்து (கண்டமாலை வீக்கந் தீர) ... ... 351

137. (சித்ரமூல வேர்ப்) பத்து (உடல் வெள்ளைக்கு) 163

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
|---|---|---|
| | **பத்து வகைகள்**—தொடர்ச்சி. | |
| 138. | (சோற்றுக்கற்றாழைப்) புற்கை முதலான மருந்துகள் (அடிபட்டு விழுந்து எலும்பு முறிந்த காயத்திற்கு) ... | ... 151 |
| 139. | (தகரைவேர்ப்)பூச்சு(படர்தாமரைக்கு) | ... 282 |
| 140. | (தகரைவேர்ப்) பூச்சு (படர்தாமரைக்கு) வேறு | 283 |
| 141. | (தகரைவிதைப்) பூச்சு (படர்தாமரைக்கு) | ... 287 |
| 142. | (தகரைவிதைப்) பத்து (படர்தாமரைக்கு) | ... 293 |
| 143. | (தாளிப்பூப்) பத்து (எழுவியாதிக்கு) | ... 298 |
| 144. | (தும்பையிலைப்) பத்து (கண்டமாலைக்கு) | ... 350 |
| 145. | (நிலவாகைப்) பூச்சு (படர்தாமரைக்கு) | ... 291 |
| 146. | (புளிநரளைக் குழம்பு) பத்து (படுவனுக்கு) | ... 205 |
| 147. | (பூந்திப்பழப் பத்து) (எழுநாயிறு, படுநாயறுக்கு) ... ... | ... 300 |
| 148. | (பெருங்காயப்) பத்து (உடையாத கட்டிகளுக்கு) ... ... | .... 144 |
| 149. | (பொடுதலைப்) பத்து (உடையாத புண்களுக்கு) | 54 |
| 150. | (முருங்கை வேர்ப்) பத்து (கிரந்தி, கன்னவாதத்திற்கு) ... | ... 186 |
| 151. | (வசம்புப் பத்து) (வாய் புற்றிற்கு) | ... 223 |
| 152. | (வாகையிலைப்) பூச்சு (படர்தாமரைக்கு) | ... 288 |
| 153. | (வேப்பிலைப்) பத்து (கரப்பான் வீக்கத்திற்கு)... | 278 |
| | **V. களிம்பு வகைகளும், சேர்வைகளும்.** | |
| 154. | (இரஸாதிக்) களிம்பு (கண்டமாலை முதலான எவ்வித வீக்கத்திற்கும்) ... | ... 311 |

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
|---|---|---|
| | **களிம்பு வகைகளும், சேர்வைகளும்**—தொடர்ச்சி. | |
| 155. | (இறைச்சிக்) களிம்பு (கிரந்திக்கு) ... | 125 |
| 156. | (எருக்கம் வெண்ணெய்) களிம்பு (காதிற்குச் சமீபமாக உண்டான எழுச்சிக்கு) ... | 134 |
| 157. | (எலும்புக்) களிம்பு (புண், புரைகளுக்கு) ... | 105 |
| 158. | (எலும்புச்) சேர்வை (கிரந்திக்கு) ... | 199 |
| 159. | (ஏலாதிச்) சேர்வை (சிறங்கிற்கு) ... | 14 |
| 160. | (ஒட்டடைக்) களிம்பு (வாய்ப்புண், வெடிகளுக்கு) ... ... | 95 |
| 161. | காரக்களிம்பு (புண், புரைகளுக்கு) ... | 37 |
| 162. | (கிட்டாதிக்) களிம்பு (கண்டமாலைப் புண்களுக்கு மேலே போட) ... ... | 359 |
| 163. | (குங்கிலியக்) சேர்வை (புண்களுக்கு) ... | 36 |
| 164. | (குங்கிலியக்) களிம்பு (புருடக்கிரந்திக்கு) .... | 66 |
| 165. | (குங்கிலியக்) களிம்பு (புண், புரை, வாய்விலங்காப் புண்களுக்கு) ... ... | 93 |
| 166. | (குங்கிலியச்) சேர்வை (கிரந்திக்கு) .... | 184 |
| 167. | (குங்கிலிய ரஸக்களிம்பு) (விரணங்கள், கிரந்தி, கரப்பானுக்கு) ... ... | 232 |
| 168. | (சங்காதி வேர்க்) களிம்பு (பழம்புண், புரைகளுக்கு) .. ... ... | 50 |
| 169. | சாதிலிங்கச் சேர்வை (புண், கிரந்திகளுக்கு) ... | 16 |
| 170. | (சித்ரமூலாதி) வெண்ணெய் (எழுவியாதிக்கு) ... | 299 |
| 171. | (சீதாரிச்) சேர்வை (கிரந்திக்கு) ... | 75 |
| 172. | (தாளகக்) களிம்பு (புண், புரைகளுக்கு) ... | 10 |
| 173. | (துத்தாதிச்) சேர்வை (புண், பிளவை, கிரந்திக்கு) ... ... ... | 33 |

| ந. | மருந்துகளின் பேயர். | பக்கம். |
|---|---|---|

களிம்பு வகைகளும் & சேர்வைகளும்—தொடர்ச்சி.

174. (துத்தந்துருசாதிக்) களிம்பு (புண்களுக்கு) ... 45
175. (துருசுமஞ்சட்) சேர்வை (புண், புரை, சிறங்கிற்கு) ... ... ... 38
176. (துருசுக்) களிம்பு (கிரந்திக்கு) ... 189
177. (துருசுச்) சேர்வை (கரப்பானுக்கும், புண்ணிற்ணிற்குப்) ... ... 234
178. (துளசிரஸக்) களிம்பு (சொறி, சிறங்கிற்கு) ... 105
179 (தேங்காய்) களிம்பு (கண்டமாலை முதலான புண்களுக்கு) ... .... 362
180. (பாதரஸ) வெண்ணெய் (கிரந்திக்கு) ... 197
181. (பாதரஸ) வெண்ணெய் (புரைகளுக்கு) ... 111
182. (புகைமருந்துச்) சேர்வை (புண், புரைகளுக்கு).... 20
183. (பேய்ப்பீர்க்கம்) களிம்பு (ஆறாத அழுகுணிப் புண்களுக்கு) ... .... 77
184. (விடந்தீஞ்சானிலை) வெண்ணெய் (புண்ணிற்கு) 106

VI. கல்க வகைகள்.

185. (அப்பக்கோவை) கல்கம் (விடபாகத்திற்கு) ... 268
186. (அப்பக்கோவை) கல்கம் (விடபாகத்திற்கு) ... 269
187. (அம்மான்பச்சரிசிக்) கல்கம் (விப்புருதிக்கு) ... 333
188. (ஆயில்) கல்கம் (பறங்கிச் சிறங்குகளுக்கு) ... 118
189. (இண்டம்) வேர்க் கல்கம் (புண், புரைகளுக்கு) ... 113
190. (இம்புரல்வேர்) கல்கம் (வயிற்றுள் புழுவிற்கு) 226
191. (இலுப்பைப்) புண்ணுக்குப் புகை (விப்புருதி, கண்டமாலைக்கு) ... ... 331

நெ. மருந்துகளின் பெயர். பக்கம்.

**கல்க வகைகள்**—தொடர்ச்சி.

192. (உய்யகொண்டான்) கல்கம் (விடபாகந்திற்கும், கரப்பானுக்கும்) ... ... 266
193. (கருவேலங் கொழுந்து) கல்கம் (ஊமச்சிங்கனுக்கு) ... ... ... 226
194. (கிராம்புக்) கல்கம் (குடல் படுவனுக்கு) ... 206
195. (சித்ரமூல) விழுது (படுவன், பரு முதலானவைகளுக்கு) ... ... 206
196. (சித்திரமூலாதி) கல்கம் (அரையாப்பிற்கு) ... 275
197. (சித்ரமூல) மருந்து (விப்புருதிக்கு) ... 326
198. (சித்ரமூல) கல்கம் (படைகரப்பான், கிரந்திக்கு) 231
199. (திராய்) கல்கம் (புண்களுக்கு) ... 121
200. (நத்தைச்சூரி வேர்) மருந்து (பவுத்திரப் புண்களுக்கு) ... .... ... 306
201. (நத்தைச்சூரிவேர்) கல்கம் (கண்டமாலைக்கு) ... 361
202. (நரிவிட்டைக்) கல்கம் (பரு, படுவனுக்கு பௌனம் செய்ய) ... ... 208
203. (நாணல் விதை) கல்கம் (துன்மாங்கிஷம் கரைய) 140
204. (நிலவாகை) விழுது (படர்தாமரைக்குப் பூச்சு)... 287
205. (நிலவாகைக்) கல்கம் (குஷ்டத்திற்கு) ... 177
206. (நிலவாகை) விழுது (படர்தாமரைக்குப் பூச்சு) 288
207. (நீர்க்கடம்பு) கல்கம் (அனுபானத்துடன் குறு, மறு, கொப்பள மருந்து) ... ... 160
208. (பாகலிலைக்) கல்கம் (அக்கிக்கு) ... 222
209. (பிரண்டைக் கொடிவேலி) விழுது (அகுவைக்கு) 224

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம். |
| --- | --- | --- |
| | **கல்க வகைகள்**—தொடர்ச்சி. | |
| 210. | (புளியங்கொழுந்து) விழுது (படர்தாமரைக்கு உள்ளுக்கு) ... | ... 290 |
| 211. | (வசம்பு) மருந்து (மேகப் புண்ணிற்கு) | .... 13 |
| 212. | (வெட்பாலைக்) கல்கம் (தொண்டைப் புண், வீக்கத்திற்கு) ... | ... 136 |
| | **VII. காரச்சீலை வகைகளும், திரிவகைகளும்.** | |
| 213. | (காரச்சீலை) மஞ்சள் (புண்ணிற்கு) | ... 2 |
| 214. | காரச்சீலை (துருசு) ... | ... 3 |
| 215. | காரத்திரி (புண்வாய்க்கு) ... | ... 57 |
| 216. | காரச்சீலை (புண், புரைகளுக்கு) | ... 116 |
| 217. | (தாளகச்) சீலை (எழுநாயறு, படுநாயறு முதலானவைகளுக்கு) ... | ... 296 |
| 218. | (திருகுக்கள்ளிச்) சீலை (பவுத்திரத்திற்கு மேல் போட) ... .... | ... 319 |
| 219. | (துருசுக்) காரச்சீலை .... | ... 3 |
| 220. | (தேத்தாம்பழச்) சாறு சீலை (கண்டமாலைக்கு) | ... 352 |
| 221. | (நாயுருவித்) திரி (புண் வாய்க்கு) | ... 59 |
| 222. | நாயுருவித்) திரி (புண், புரைகளுக்கு) | ... 101 |
| 223. | (வேம்புத்) திரி (புண், புரைகளுக்கு) | ... 100 |
| | **VIII. கஷாய வகைகள்.** | |
| 224. | (இலுப்பைப்பட்டை)யடை கஷாயம் (எழுநாயறு, படுநாயறுக்கு) ... | ... 298 |
| 225. | (ஏலாதி) கஷாயம் (பித்த கரப்பானுக்கு) | ... 245 |
| 226. | (கழுதை லத்திக்) கஷாயம் (கிரந்திக்கு) | ... 192 |

| நே. | மருந்துகளின் பெயர். | பக்கம் |
| --- | --- | --- |
| | **கஷாய வகைகள்**—தொடர்ச்சி. | |
| 227. | (கோக்ஷுராதி) கஷாயம் (ஊதுகரப்பானுக்கு) | 244 |
| 228. | (சங்கம்வேர்ப்பட்டைக்) கஷாயம் (விடபாக வீக்கத்திற்கு) ... | ... 271 |
| 229. | (செம்பரத்தை விழுதுக்) குடிநீர் (வயிறு, வாய் நாற்றத்திற்கு) ... | ... 218 |
| 230. | (புளியம்பட்டைக்) கஷாயம் (குதிப்புற்றுக்கு) ... | 133 |
| 231. | (முருங்கைவேர்) கஷாயம் (விடபாகம், வீக்கம், வாதகரப்பான் முதலானவைகளுக்கு) | ... 252 |
| 232. | (வேப்பம்பட்டைக்) கஷாயமும் எண்ணெயும் (கத்தி, குண்டு, அம்புக்குத்தி முதலான காயங்களுக்கு) ... | 154 |
| 233. | (வேர்புப் புல்லுருவிக்) கஷாயம் (குஷ்டத்திற்கு) ... | 209 |
| | **IX. பணியார வகைகள்.** | |
| 234. | (கெந்தகாதி) அடை (பெருஞ் சிறங்கு, சிறு சிறங்கு முதலானவைகளுக்கு) | ... 67 |
| 235. | (சித்திரமூலாதி) அடை (அரையாப்பிற்கு) | ... 276 |
| 236. | (தகரைவிதைத்) தயிர் (படர்தாமரைக்குப் பூச்சும் மருந்தும்) ... | ... 286 |
| 237. | (நிலவாகைத்) தயிர் (சிறங்குகளுக்கு) | ... 98 |
| 238. | (பசரியிலைக்) களி (உடையாத கட்டிகளுக்கு) ... | 55 |
| 239. | மிளகரணைக் கிழங்குக்களி (பவுத்திரம், கர்ணப் புண்களுக்கு) ... | ... 313 |
| 240. | (வாகைப்பட்டைக்) களி (ஊது கரப்பான் முதலியவைகளுக்கு) ... | ... 263 |
| 241. | (வில்வவேர்க்) களி (நீர் விழும் பவுந்திரத்திற்கு) | 311 |

| நெ. | மருந்துகளின் பெயர். | பக்கம் |
|---|---|---|

## X. புகை வகைகள்.

| | | |
|---|---|---|
| 242. | (இலுப்பைப்) புண்ணுக்குப் புகை (விப்புருதி, கண்டமாலைக்கு) ... | ... 331 |
| 243. | (கருவேலம்பிசினிப்) புகை (புண், புரைகளுக்கு) | 114 |
| 244. | (பாடாண வங்கப்) புகை (புண்களுக்கு) | ... 107 |
| 245. | (பாதரஸ வெள்ளெருக்குப்)புகை (தீராத புண்கள், புரைகளுக்கு) ... | ... 30 |
| 246. | (பாதரஸ சிறுகாஞ்சோறிப்) புகை (ஓட்டுப்புண், புரைகளுக்கு) ... | ... 44 |
| 247. | (பாம்புவஸாதிப்) புகை முதலான மருந்துகள் (யோனிச்சூலைக்கு) ... | ... 155 |
| 248. | (வங்கரஸப்) புகை (பொரி கிரந்திக்கு) | ... 16 |
| 249. | (வங்கரஸப் பாஷாணப்) புகை (புண்களுக்கு) ... | 24 |
| 250. | (வங்கரஸாதிப்) புகை (புண், புரைகளுக்கு) | ... 26 |

## XI. உருண்டை வகைகள்

| | | |
|---|---|---|
| 251. | (அபினி ரஸ) உருண்டை (புரை, புண், கடுப்பிற்கு) ... ... | ... 7 |
| 252. | (ஓமக்கொடுக்காப்புளி) மாத்திரை (வயிற்றுள்சீழ், புரை, புழுவிற்கு) ... | ... 219 |
| 253. | (ஓமாதி) மாத்திரை (விடபாகம், விஷ வாயுவிற்கு) ... ... | ... 265 |
| 254. | (கருணைக்கிழங்கு) உருண்டை (கண்டமாலைக்கு) | 352 |
| 255. | (கருஞ்சீரகாதி) மாத்திரை (குஷ்டத்திற்கு) | ... 215 |
| 256. | (சித்ரமூல) உருண்டை (விரணம், சிலந்திக்கு) ... | 9 |
| 257. | (சித்ரமூலவேர்) உருண்டை (கண்டமாலை, எழுவியாதி, பலவியாதிக்கு) ... | ... 353 |
| 259 | (சீரகாதி) உருண்டை (அரையாப்பிற்கு) | ... 274 |

நே. மருந்துகளின் பெயர். பக்கம்.

**உருண்டை வகைகள்**—தொடர்ச்சி.

259. (பாதரஸ பாஷாண) உருண்டை (ஓட்டிய புண், புரைகளுக்கு) ... ... 41
260. (பாதரஸத் தாதுவேலை) உருண்டை (ஓட்டிய புண் புரைகளுக்கு) ... ... 42
261. (மருக்காரை) மாத்திரை (படர்தாமரைக்குப் பூச்சு) ... ... ... 285

## XII. கட்டு மருந்துகள்.

262. (உப்புக்கட்டு) (எழுநாயிறு, படுநாயிறு விக்கத்திற்கும், கரப்பானுக்கும்) ... ... 301
263. (ஆழியிலைக்) கட்டு மருந்து (பிளவைப் புண்களுக்கு) ... ... ... 363
264. கட்டு மருந்துகள் (புண்ணிற்கு) .... 62
265. (சிவகரந்தைக்) கட்டு மருந்து (எழுச்சி, வீக்கம், புண்களுக்கு) ..... ... 133
266. (பிராய்வேர் கட்டு) மருந்து (பஞ்சைக்கு) ... 306
267. வரட்பாளக்கட்டு (புண்களுக்கு) ... 53

## XIII. லேகிய வகைகள்.

268. இடிலேகியம் (புண், சூலைக்கு) ... 11
269. இடிவல்லாதி லேகியம் (கிரந்தி, சூலைக்கு) ... 84
270. இடிவல்லாதி லேகியம் (கிரந்தி, சூலைக்கு) வேறு 86
271. (ஓம) லேகியம் (உதர விப்புருதிக்கு) ... 342
272. கெந்தக ரஸாயனம் (18 வகைக் குஷ்டங்கள், 14 வகைக் கிராணிகள் முதலானவைகளுக்கு)... 175
273. வல்லாதி லேகியம் (குஷ்டத்திற்கு) ... 173

நே. மருந்துகளின் பெயர். பக்கம்.

## XIV. பச்சிலை மருந்து வகைகள்.

274. (குப்பைமேனி) மருந்து (பவுத்திரத்திற்கு) ... 309
275. (குப்பைமேனி) மருந்து (நெடுநாளான, நூதன பவுத்திரத்திற்கு) ... ... 310
276. (துத்தியிலை) மருந்து (செவ்வாப்புக்கு) ... 203
277. (நந்தியாவட்டை, வெல்ல) மருந்து (யோனித் திரி விழ) ... ... 159
278. (பாவட்டையிலைச்) சாறு முதலான மருந்துகள் (சொறி குஷ்டம், கடிகளுக்கு) ... 213

## XV. பிட்டு வகைகள்.

279. (இம்புரல்) பிட்டு (கெர்ப்ப விப்புருதிக்கு) ... 340
280. (சித்ரமூல வேர்ப்) பிட்டு (கிரந்திகளுக்கு) ... 129
281. (திருகுக்கள்ளிப்) பிட்டு (வெண்குஷ்டத்திற்கு)... 165

## XVI. பற்ப வகைகள்.

282. சங்கம்வேர் பற்பம் (சகல விரணங்களுக்கும்) ... 69
283. வங்க தாளேச்வர பற்பம் (கிரந்தி, சூலை, கிரிச்ரம், குன்மம் முதலியவைகளுக்கு) ... 179

## XVII. வேது வகைகள்.

284. (எலுமிச்சம்பழ) வேது (குத்து, வெட்டுப் புண்களுக்கு) ... ... 146
285. (எலுமிச்சம்பழ) வேது (வெட்டு, அம்பு, குண்டு பட்டதற்கு) ... ... 149
286. சாதிலிங்க வேது (கிரந்திப் புண்களுக்கு) ... 16

## XVIII. தொடு மருந்துகள்.

287. (எருக்கம்பால்) தொடுமருந்து (கருங்குஷ்டத்திற்கு) ... ... 167
288. (சேங்கொட்டைத்) தொடுமருந்து (உண்ணுக்குக் கரைய) ... ... 131

நெ. மருந்துகளின் பெயர். பக்கம்.

## XIX. பால் மருந்து வகைகள்.

289. (ஆலம்பால்) மருந்து (பெருவியாதிக்கு) ... 168

290 தேங்காய்ப் பால் மருந்து (தோடகச் சிரங்குகளுக்கு) ... ... 102

## XX. மெழுகு வகைகள்

291. (ஆமணக்கம்) பருப்பு மெழுகு (உடையாத சிலந்தி, உடைந்த சிலந்திகளுக்கு) ... 201

292. (வீரமெழுகு) (கிரந்தி, புண், புரைகளுக்கு) ... 200

## XXI மிதிப்பு வகை.

293. (பேய்ப்பீர்க்கு) மிதிப்பு (படர்தாமரைக்கு) ... 280

## XXII. குழம்பு வகை.

294. (நாபிக்) குழம்பு (தீராத புண், புரைகளுக்கு) ... 30

## XXIII. நஸ்ய வகை

295. (வசம்பு, உள்ளி) நஸ்யம் (எழுநாயிறு, படு நாயிறுக்கு) ... ... 292

## XXIV. கார வகைகள்.

296. (உவர்மண்) காரம் (பவுத்திரம், கழலை, உடையாத சிலந்திக்கு) ... ... 144

## XXV. வாந்தி வகைகள்.

297. (மூத்தெருக்கம்பட்டை) வாந்தி, (பெருங் கிரந்தி, கண்டமாலைக்கு) ... ... 186

## XXVI. வெட்டை.

298. வெள்ளிய வெட்டை (குஷ்டத்திற்கு) ... 175


---



# முகவுரை.

ஆயுர்வேத முறையைச் சஸ்திர சிகித்ஸையைப் போதிக்கும் 'தன்வந்தரி மதம்' என்றும், காயசிகித்ஸையைப் போதிக்கும் 'ஆத்ரேய மதம்' என்றும் இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு யுத்தத்தின்போது கைகால் போனவர்களும், சல்யம் (அம்பு, குண்டு) முதலானவைகள் சிக்கியுள்ளவர்களும் எவ்வளவு பேரோ! அவர்களுக்குத் தக்க சிகித்ஸைகளும் அப்போதைக்கப்போது அளிக்கப்பட்டிருக்கவேண்டும். இதையன்றி குன்மம், உதரம் (சித்ரோதரம், பத்தகுதோதரம்) அர்சஸ், ச்லீபதம், வ்ருத்தி முதலிய சஸ்திர சிகித்ஸையினாலேயே குணம் செய்யக்கூடிய வ்யாதி வகைகளுக்கும், இச்சிகித்ஸை முறையில் தேர்ச்சியுள்ளவர்களை நியமித்திருக்கவேண்டும் என்று ஊகிக்க இடமிருக்கிறது.

தன்வந்திரி பகவானிடம் சஸ்திர சிகித்ஸையைக் கற்று நூல் செய்தவர்கள் அறுவர். ஸுச்ருதர், ஔபதேன்வர், பௌஷ்கலாவதர், கோபுரரக்ஷிதர், ஔரப்ரர், போஜர் முதலியோர். அந்நூல்களுள் இப்போது நமக்குக் கிடைத்திருப்பது 'ஸுச்ருத ஸம்ஹிதை' என்ற பழமையான கிரந்தம். சஸ்திர சிகித்ஸை முறைகளைப் பிரதானமாகக்கொண்டது.

பிற்காலத்தில் வைத்யம் செய்பவர்கள் ஆசார சீலர்களாகவும், ஸத்வ குணம் நிறைந்தவர்களாகவும் இருந்தமையால், சிகித்ஸையின் இப்பகுதியை அருவருக்கத் தக்கதென்று எண்ணிக் கையாளாமல் விட்டுவிட்டனர் போலும்! இச் சஸ்திர சிகித்ஸை முறைகளை நாம் நடைமுறையில் கொண்டு வராமலிருந்ததாலும், தக்க ஆசிரியர்கள் கிடைப்பதும் துர்லபமாக இருந்ததாலும், இச் சிகித்ஸைமுறை நூல் அளவி

லேயே நின்றுவிட்டதுடன் ஆங்கில வைத்யமுறை தான் சஸ்திர சிகித்ஸை முறைக்கு ஏற்றது என்ற நம்பிக்கைக்கும் வந்துவிட்டோம் எனினும் இம்முறைகளை நாம் ஆராய்ச்சி செய்வோமாகில் பண்டைய காலத்தில் சஸ்திர சிகித்ஸை முறைகளின் ஆதாரத்தைக்கொண்டே நவீனகால சஸ்திர சிகித்ஸை முறைகள் ஏற்பட்டிருக்கின்றன என்பது நன்கு புலனாகும்.

ஸுச்ருத ஸம்ஹிதை அக்ரோபஹரணீயாத்யாயத்தில் சஸ்திர சிகித்ஸை கீழ்க்கண்டபடி 8 விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

1. சேத்யம் — அறுக்கத் தகுந்தவை (Incising)
2. பேத்யம் — இரண்டாக பிளக்கத் தகுந்தவை. (Excising)
3. லேக்யம் — சுரண்டத்தக்கவை. (Scrapping)
4. வேத்யம் — குத்தத்தக்கவை. (Puncturing)
5. ஏஷ்யம் — துழாவத்தக்கவை (Probing)
6. ஆஹார்யம் — வெளியில் இழுக்கத்தக்கவை (Extracting)
7. விஸ்ராவ்யம் — கசிவை வெளிப்படுத்தவேண்டியவை (Letting out fluids)
8. ஸீவ்யம் — தைக்கவேண்டியவை (Suturing)

சரகர் (சரகஸம்ஹிதை ஸூத்ரஸ்தானம் 13 அத்யாயத்தில்) சஸ்திர கர்மத்தை 6 விதமாகப் பிரித்து அவைகளைப் பிரயோகிக்கும் இடங்களையும் கீழ்க்கண்டபடி கூறுகிறார்.

1. **பாடனம்** (அறுத்தல்)—நாடீவ்ரணங்கள், பழுத்த வீக்கங்கள், க்ஷோதரம், பத்தகுதோதரம் சல்யத்துடன் கூடிய விரணம் முதலானவை.

2. **வ்யதனம்** (குத்துதல்) —உதர ரோகம், ரக்தகுல்மம், இரத்ததோஷப் பிரகோபத்தினுலுண்டான ரோகங்கள், விஸர்ப்பம், பிடகம் முதலியன.

3. **சேதனம்** (வெட்டி யெடுத்தல்) — அடி கனத்தும், அதிக விசாலமான புண்கள், அர்சஸ் முதலான வளர்ச்சிகள் முதலியவை.

4. **லேகனம்**—(சுரண்டுதல்) வெண் குஷ்டம், வாதரக்தத்தினுலேற்படும் சட்டி, பிடகை, ரத்தம் தூஷித்தலாலேற்பட்ட சர்ம ரோகங்கள், தடிப்புகள் முதலியவை.

5. **ப்ரோச்சனம்**— (கொந்துதல்) குஷ்டத்தினுல் ஆக்ரமிக்கப்பட்ட அங்கம், வீக்கம் முதலியன.

6. **ஸீவ்யம்**—(தைத்தல்) வெகுதூரம் அறுத்துவிடப்பட்ட விரணங்கள், வயிற்றிலும், இதர இடங்களிலும் ஏற்பட்ட காயங்கள் முதலியன.

**சஸ்திரங்களின் (ஆயுதங்களின்) லக்ஷணங்கள்.**

(அஷ்டாங் ஹ்ருதம் ஸூத். அத். 29.)

சஸ்திரங்கள் மயிரைப் போக்கும்படியான கருக்கு உள்ளவைகளாகவும், பார்ப்பதற்கு நன்ருகவும், கையிலடங்கக்கூடிய பிடியுள்ளவைகளாகவும், எஃகினுல் செய்யப்பட்டு வழவழப்பாகவும், கருநெய்தல் மலர்போன்ற காந்தியுடனும் இருக்கவேண்டும். சஸ்திரங்களின் சராசரி நீளம் 6 அங்குலமாகும். அதன் கருக்கு சஸ்திரத்தின் எட்டிலொருபங்கு இருத்தல் நலம். அடிக்கடி உபயோகப்படுத்தக்கூடிய சஸ்திரங்கள் 26. இவைகள் ஒவ்வொன்றிலும் வகைக்கு 2 அல்லது 3 கருவிகள் எப்போதும் வைத்தியரிடம் இருக்கவேண்டும். அவைகளாவன :

1. **மண்டலாக்ரம்** — ஆள்காட்டி விரலின் நகத்தினுட்புறம் போல் வளைந்து கூர்மையானது. இது கட்டிகளைக் கீறுவதற்கும் அறுப்பதற்கும், போதகி என்ற கட்டியைச் சேதிக்கவும் உபயோகமாகும்.

2. **வ்ருத்திபத்ரம்** (Scapel) — இது அறுத்தல், வெட்டுதல், கிழித்தல் முதலான வேலைகளுக்கு ஏற்றது.

3. **உத்பலபத்ரம்** — இது நீண்ட முகத்தை உடையது. சேதன கர்மத்திற்கு மாத்திரமே உபயோகப்படக் கூடியது.

4. **அத்யர்த்தாரம்**— குறுகிய முகத்துடன் செய்யப்பட்ட சஸ்திரம். இது பேதனம் என்ற பிளத்தலுக்கு மாத்திரமே உபயோகிக்கப்படும்.

5. **ஸர்ப்பமுகம்**—மூக்கு, காது, முதலிய அவயவங்களிலேற் படும் அதிமாம்ஸ வளர்ச்சிகளை (Nasal polypus Etc.,) அறுப்பதற்கு உபயோகப்படும். இதன் கருக்கு ½'' இருந்தால் போதுமானது.

6. **ஏஷணி** (Probes) — இதன் முகம் மண்ணுண்ணிப் பாம்பை யொத்ததாக வழுவழுப்பாக இருக்கும். இதனால் புரையோடும் புண்களின் ஆழத்தை யறியமுடியும்.

7. **ஸூசீமுகஏஷணி** (Director) — பிளக்கும் வேலைக்கு உதவக்கூடியபடி ஊசி முனையைப் போன்ற முகமுடைய மற்றொரு வகை ஏஷணிக்குத் துவாரம் உண்டு.

8. **வேதஸபத்ரம்**— குத்துவதற்கேற்றபடி நீர்வஞ்சியிலையை யொத்தபடி கருக்கு (Blade) இருத்தல் வேண்டும்.

9. **சராரிமுகம்;**—சராரி என்ற பக்ஷியின் முகத்தைப் போன்று செய்யப்பட்ட கருவி, முனையின் கருக்கு 2''.

10 **த்ரிகூர்ச்சம்** :—மூன்று முனைகளுள்ளதாகச் செய்யப்பட வேண்டும். இக்கருவிகள் ஸிராவ்யதம் (ரத்தத்தை வெளியே யெடுத்தல்) என்ற வகை சிகித்ஸைக்கு ஏற்றது.

11. **குசாடா:**—வாயினுள் இரத்தமோக்ஷணம் செய்ய உபயோகப் படக்கூடியது. கருக்கு 2''.

12. **அந்தர் வக்த்ரம்**—மேலே சொன்னதைப் போல இருக்கும். ஆனால் அறுக்கும் முனை $1\frac{1}{2}$''.

13. **அர்த்த சந்திரமுகம்**—மேற்கூறியதைப் போல இருக்கும். முனை வளைவுள்ளதாக இருக்கும்,

14. **வ்ரீஹீமுகம்:**—முனை $1\frac{1}{2}$'' அளவுடையதாகும். ஸிரை என்னும் ரத்தக் குழாய்களையும், வயிற்றையும் கிறுவதற்குப் பிரயோஜனப்படும்.

15, **குடாரி**—பசுவின் பல்லைப்போன்ற உருவமுடையதாக $\frac{1}{2}$'' அளவில் இக்கருவியின் முகம் செய்யப்பட வேண்டும். மரக் கைப்பிடி போட்டுக்கொள்ளவும். எலும்புகளின் மேல் அமைந்துள்ள ஸிரைகளைக் கிறுவதற்குப் பிரயோஜனப்படும்.

16 **சலாகை**— செப்புக்கம்பியின் இரு நுனிகளிலும் மரு தோன்றி வித்தைப்போல் குமிழ் அமைக்கவும். இதனால் லிங்கநாசம் என்ற நேத்திர ரோகத்தைக் கிறலாம்.

17. **அங்குலிசஸ்திரம்**— ஆள்காட்டி விரலின் முதற்கணு கொள்ளும்படியான மோதிரம் செய்து அதிலிருந்து

கத்தியின் அலகுகள் மேலும் கீழும் ½" நீண்டிருக்க வேண்டும். இவ்விரண்டையும் சேர்த்து வேண்டும் போது நாற் கயிற்றினால் கட்டவும். இது தொண்டையிலுள்ள அதிமாம்ஸத்தைச் சேதிக்க உதவும்.

18. **படிசம்**— தொண்டையிலுண்டாகும் களசுண்டி முதலான கிரந்திகளையும் பிடித்துக்கொள்ளத் தக்கவாறு வளைந்த சாமணம்.

19. **கரபத்ரம்** (Hand-saw)—10 அங்குல நீளமும் 2" அகலமுமுள்ள கருக்குடன் நுனியில் சிறுசிறு பற்களுடன் எலும்புகளைச் சேதிக்கும் கைவாள். இதற்குக் கைப்பிடி யுண்டு.

20. **கர்த்தரி**— சாதாரணக் கத்தரிக்கோல் போல் இருப்பதுடன் இன்னும் வலிமையுள்ளது. இதனால் நரம்பு, கயிறு முதலியவைகளைக் கத்தரிக்கலாம்.

21. **நகசஸ்த்திரம்**— 9 அங்குல நீளத்தில் இரு அலகைகளில் மேலிருப்பது நகத்தைப் போல் வளைந்தும், கீழிருப்பது நேராகவும் கருக்குடன் இருக்கவேண்டும். இக்கருவியினால் உடம்பிலுள்ளே தங்கியிருக்கும் முள் முதலானவைகளை எடுப்பதுடன், அறுத்தல், கீறல், கொத்துதல் முதலான வேலைகளையும் செய்யலாம்.

22. **தந்தலேகனம்**— 4 பட்டையுடையதாகவும் ஒரு பக்கம் வரம்புடனும், மற்றொரு பக்கம் கருக்குள்ளதாகவும் தயார் செய்யப்பட்டது. பற்களில் ஏற்படும் காரைகளை நீக்கப் பிரயோஜனப்படும் ஆயுதம்.

23 **ஸூசிகள்** (ஊசிகள்) நூல்கள் புகக்கூடிய காதுகளுள்ளதாகவும் எளிதில் ஒடியாவண்ணமும் இருக்க வேண்டும். மாம்ஸங்களுள்ள இடங்களைத் தைக்க

வேண்டுமென்றால் முப்பட்டையுள்ள 3'' நீள ஊசிகள் தேவை. எலும்புப் பிரதேசம், கைகால் கணுக்கள் விரணங்கள் முதலானவைகளைத் தைக்க 2'' ஊசிகளை உபயோகிக்கவேண்டும். இரைப்பை, குடல் முதலானவைகளைத் தைக்கவேண்டுமெனில் 2'' நீளமுள்ளதும் வில்லைப்போல் வளைந்ததாகவும் உள்ள ஊசிகள் பயன்படக்கூடியவை.

24. **கூர்ச்சம்**— 4 அங்குல நீளமுள்ள ஊசிகளில் ஏழு அல்லது எட்டு எடுத்து ஒரு பீடத்தில் குத்தி அவைகள் நழுவாமல் கட்டிவிடவும். இது நீலிகா, வ்யங்கம் முதலிய வியாதிகளைக் கொந்துவதற்குப் பிரயோஜனப்படும்.

25 (a) **கஜம்**:— ½ அங்குல நீளமுள்ளதும் அதன் நுனியின் பக்கவாட்டில் 8 முட்களுள்ளதுமான ஒரு இரும்புக் குச்சியை மூக்கினுள்ளே செலுத்திக் கைகளால் கடைந்து துஷ்ட ரத்தத்தை வெளிப்படுத்தக்கூடியவாறு அமைக்கப்பட்ட ஆயுதம்.

(b) **யூதிகா**—கர்ணபாலி என்னும் காதிலுண்டாகும் விரணங்களைக் குத்தி ஆற்றக்கூடிய கருவிக்கு இப்பெயர். அதன் நுனி முல்லை மொட்டைப் போன்றிருக்கும்.

26. **ஆரா**:— நான்கு பட்டைகளை யுடையதாய் அதன் மேல் பாகத்தில் ½'' கனமுடையதாகவும் விரணங்களுக்குள்ளே செலுத்தக்கூடியதாகவும் இருக்கும் ஒருவித கத்தி. விரணத்தின் வீக்கம் பழுத்திருக்கிறதா இல்லையா என்று சந்தேகாஸ்பதமான இடங்களிலும், நன்றாகப் பழுத்த கர்ண பாலியிலும் இதைப் பிரயோகிக்கலாம்.

27. **கர்ண வேதனி:—**இது முப்பட்டையுள்ள ஊசி. இதற்குத் துவாரமுண்டு. 3" நீளமுடையது. இது காதுகளைக் குத்துவதற்கு உதவும்.

**சுஸ்ருத ஸம்ஹிதைப்படி** சஸ்திரங்கள் 20 வகை.

| | | |
|---|---|---|
| 1. | மண்டலாக்ரம் | Knife for Incision. |
| 2. | கரபத்ரம் | |
| 3. | வ்ருத்திபத்ரம் | Razors, nail clippers, Lancet Etc. |
| 4. | நகசஸ்திரம் | |
| 5. | உத்பலபத்திரம் | |
| 6. | அர்த்ததாரம் | |
| 7. | முத்கரிகா | |
| 8. | த்ரிகூர்ச்சம் | Needle, Trocar, Canula Etc., |
| 9. | குசபத்ரம் | |
| 10. | ஆடீமுகம் | |
| 11. | சராரிமுகம் | |
| 12. | அந்தர்முகம் | |
| 13. | குடாரிகா | Axe, Awl, Knife, Needles Etc. |
| 14. | ஆரம் | |
| 15. | வேதஸபத்ரம் | |
| 16. | வ்ரீஹிமுகம் | |
| 17. | படிசம் | Hook, Tooth Forceps Etc., |
| 18 | தந்தசங்கு | |
| 19. | ஏஷணி | Probe & Director. |
| 20. | ஸூசிகள் | Needles for Sutures. |

## சஸ்திரத்தின் தோஷங்கள்.

கூர்மையின்மை, கருக்குச் சிதைவு, அளவில் சிறுத்தல், மிகப்பருமன், குறுகியிருத்தல், நீண்டிருத்தல், வளைதல், மழுங்குதல் முதலியன.

## கருக்கு இருக்கவேண்டிய க்ரமம் :

பேதன கர்மத்திற்கு ப்ரயோகிக்கப்படும் சஸ்திரங்களின் முனை சிறுகடலைப்பருப்பின் அளவுள்ளதும்,

லேகன கர்மத்திற்கானவைகளின் முகம் அரைக்கடலைப் பருப்பின் கனமும்,

குத்துவதற்கும், ஸிராவ்யதத்திற்கும் உபயோகப்படுத் தக்கூடிய சஸ்திரங்கள் நீண்டு கூர்மையாகவும்,

அறுப்பதற்கு ப்ரயோஜனப்படும் சஸ்திரங்களின் முனை ½ மயிரிழையும் இருத்தல் வேண்டும்.

## பாயன ஸம்ஸ்கார விதி (துவைச்சல் கொடுத்தல்)

சஸ்திரங்களை நெருப்பில் காய்ச்சி க்ஷாரம், திராவகம், எண்ணெய், தண்ணீர் முதலியவைகளில் தோய்ப்பதால் அதற்கு நல்ல கருக்கும், வேலையில் விசேஷச்சிறப்பும் உண்டாகிறது. எலும்புகளை உடைக்கும் சஸ்திரங்களுக்கு க்ஷாரபாயனமும், மாம்ஸத்தைப் பிளப்பதற்கும் அறுப்பதற்கும் உபயோகமுள்ள சஸ்திரங்களுக்கு உதகபாயனமும், ஸிரா, ஸ்நாயு முதலியவைகளை அறுக்கும் காரியங்களுக்குப் பிரயோஜனப்படக்கூடிய சஸ்திரங்களுக்குத் தைலபாயனமும் யோக்யமானது.

## அநுசஸ்திரங்கள்

அட்டை, க்ஷாரங்கள், அக்னி, கண்ணாடித் துண்டுகள், கருங்கல், நகம் முதலியவைகள் சஸ்திரங்களைப்போல் உபயோகிக்கக்கூடியவை. அவைகளுக்கு அநுசஸ்திரங்கள் என்று பெயர்.

## சஸ்திரங்களின் பிரயோஜனங்கள்

கீழ்நோக்கி அறுத்தல், மேல்நோக்கி அறுத்தல், தைத்தல், துழாவுதல், சுரண்டுதல், கொந்துதல், வெட்டுதல், பிளத்தல், குத்துதல், பிடித்து இழுத்தல், கடைதல், சுடுதல் முதலியவை சஸ்திரங்களின் பிரயோஜனங்களாம்.

## சஸ்திரங்களைப் பிடிக்கும் வகை

(1) வெட்டுதல், சுரண்டல், அறுத்தல் முதலிய வேலைகளைச் செய்யும்போது சஸ்திரத்தின் கணுவுக்கும் கருக்குக்கும் இடையிலுள்ள பாகத்தை ஆள்காட்டி விரல், நடுவிரல், கட்டை விரல் இம்மூன்று விரல்களினாலும் ஒரே நிதானமுள்ள மனதுடனும், இறுகவும் பிடித்து உபயோகிக்க வேண்டும்.

(2) இரத்தமோக்ஷணம் (ஸிரையைச் சேதித்து இரத்தத்தை வெளிப்படுத்துவது) செய்யவேண்டுமெனில் சஸ்திரத்தின் கணுவை ஆள்காட்டி விரல், கட்டை விரல், இவ்விரு விரல்களினாலும் ஸ்திரமாகப் பிடிக்கவும்.

(3) வ்ரீஹிமுகம் போன்ற சஸ்திரங்களைப் பிரயோகிக்கையில் சஸ்திரம் முழுவதையும் உள்ளங் கைக்குள்ளடக்கி அதன் முகத்தை மாத்திரமே பிடிக்கவேண்டும்.

(4) பிடுங்கி எடுக்கும் வேலையில் ஈடுபடுகையில் சஸ்திரத்தின் அடிப்பாகத்தை இறுகப் பிடிக்கவும்.

## சஸ்திர கோசம் (ஆயுதப் பெட்டி)

12" நீளமும் 9" அகலமுமுள்ள பெட்டி தயார் செய்து, அதற்குள் பட்டு, பஞ்சு, இலை, ம்ருதுவான தோல் இவைகளை வைத்துத் தையல் கெட்டியாகவும், பார்ப்பதற்கு அழகாகவும், சஸ்திரங்களை வைப்பதற்கேற்பத் தனித்தனியான

இடைவெளிகளுடன் கூடியதாகவும் செய்து, தக்கபடி தாழ்ப்பாள் வசதியுடனும் இருத்தல் வேண்டும்.

## யந்திர விதி.

(பலவித யுக்தியமைந்த ஆயுதம் முதலியவை)

பலவிதமான அவயவங்களுள் பலவிதமாகச் சிக்கியுள்ள சல்யங்களை (அம்பு, குண்டு, முள், ஆணி முதலியவை) வெளிப்படுத்தக்கூடிய வகையில் அமைந்தவைகளும், மூலம், பவுத்திரம் முதலிய வியாதிகளைத் தக்கபடி பார்த்தறியப் பிரயோஜனமுடையவைகளும், க்ஷாரம் (caustics), அக்னிகர்மா முதலியவைகளைச் செய்யும் வசதியுள்ளவைகளும், அவ்வாறு க்ஷாராக்னி கர்மங்களைச் செய்கையில் இதர பாகங்களுக்குத் தீங்கு நேரிடாவண்ணம் காப்பாற்றுவதற்குத் தக்கபடி அமைந்தவைகளும், வஸ்திமுறைகள் (Enema) முதலானவைகளுக்கு உபயோகப்படும் கருவிகளும் 'யந்த்ரங்கள்' எனப்படும்.

குடுவை, சுரைக்குடுக்கை, கொம்பு, ஜாம்பவோஷ்டம் என்ற சலாகை முதலியவைகளும், நம்து சௌகரியத்திற்குத் தக்கபடி பற்பல விதமாக அமைத்துக்கொள்ளப்படும் யுக்திகளும் யந்திரங்களாகும்.

### யந்திரங்களின் பொது உருவங்கள்.

காகம், பருந்து, சிங்கம், கரடி, முதலியவைகளின் முகங்களைப்போலக் கருவிகளைத் தயார் செய்து அப்பெயர்களையும் இட்டிருக்கிறார்கள். (காகமுக யந்த்ரம், கங்கமுக யந்த்ரம், ஸிம்ஹமுக யந்த்ரம், போன்றவை).

### (1) ஸ்வஸ்திக யந்திரங்கள் (கொரடு வகைகள்)

இவ்வித யந்திரங்கள் எலும்பில் தைத்திருக்கும் சல்யங்களை வலுவாகப் பிடித்து இழுக்க உபயோகமானவை.

இவைகள் பெரும்பாலும் (18 அங்குல நீளமுள்ளதாக) இரும்பினால் ஆக்கப்பட்டு இடையிலுள்ள கழுத்தில் ஒரு கடலைப்பருப்புப் பிரமாணமுள்ள இலை வைத்து இறுக்கப்பட வேண்டும். கருவியின் முகம் அங்குசத்தைப்போல் வளைந்தும் இறுகப் பிடிக்கும்படியும் அமைக்கப்படவேண்டும்.

## (2) ஸந்தம்ச யந்திரம்.

(*சாமண வகைகள்*) Forceps & Tongs.

இவை 16 அங்குல நீளமுள்ளதும் ஒருபுறம் இணைக்கப்பட்டும் மற்றொருபுறம் வாய்கள் விடுபட்டும் சல்யங்களைப் பிடிக்குமாறும் அமைக்கப்படவேண்டும். இவை மாம்ஸம், சர்மம், ஸிரை முதலியவைகளில் சிக்கியுள்ள சல்யங்களை (முட்கள், அம்பு முதலியவை) எடுக்க உதவும்.

6" நீளமுள்ள ஸந்தம்ச யந்திரங்களினால் சிறிய சல்யங்களை எடுக்கலாம்.

## (3) முசுண்டி யந்திரம்.

(*பற்களுள்ள சாமணம்*) (Rat tooth forceps, artery forceps etc.)

இந்த யந்திரத்தின் முகத்தில் சிறுசிறு பற்களும் வளையாத வகையில் மேல்புறத்தில் வளையமும் வைக்கப்பட்டிருக்கும். இது ஆழமான புண்களிலுள்ள மாம்ஸ முளைகளைப் பற்றி இழுக்க உதவும். கண்களின் இரப்பைக்கடியில் வளர்ந்திருக்கும் மாம்ஸங்களையும் பிடித்து இழுக்கலாம்.

## (4) தாள யந்திரம் (*காதுச் சாமணம்*)

12" நீளமுள்ளதும், மீனின் தாடையைப்போல் இரு தகடுகள் சேர்ந்ததுமான மெல்லிய சாமணம் தயார் செய்து கொண்டு காதுகளில் சிக்கியிருக்கும் சல்யங்களை எடுக்கலாம்.

## (5) நாடீ யந்திரம்.

(இரு பக்கங்களிலும் துவாரமுள்ள குழாய்)

இதில் பலவகையுண்டு. ஸ்ரோதோ மார்க்கத்திற்குத் தக்கபடி இதன் அளவு வித்யாஸப்படும். இக்குழாயை ஸ்ரோதோ மார்க்கங்களில் விட்டுச்சல்யங்கள் இருக்கும் இடங்களை ஆராய்ந்து பிடுங்குவதற்கு ஏற்றபடி. வஸதியுள்ள படியும், தோஷங்களை உறுஞ்சுவதற்கு ஏற்ற வகையிலும் அமைக்கவேண்டும். தொண்டையினுள்ளே பற்றியிருக்கும் சல்யங்களைப் பார்ப்பதற்கு ஏற்பட்ட நாடீயந்திரம் 10'' நீள முள்ளதாகவும் 5'' கனமுள்ளதாகவும் இருக்கும் (கண்டசல் யாவலோகினி).

## (6) வராங்க யந்திரம்

குழலுக்குள் 5 முகத்வாரங்களும், 4 காதுகளும் அமைத் துக்கொண்டு, மாமஸாதிகளைப் பற்றிக்கொள்ள உதவும் யந்திரத்திற்கு 'வராங்க யந்திரம்' என்று பெயர்.

## (7) சல்யநிர்காத நாடீ

இது 12 அங்குல நீளமுள்ளதாயும் தாமரைப் புஷ்பத்தி னுள்ளே யிருக்கும் மொட்டைப்போன்றும் ஒரு குழலாகத் தயார் செய்யப்பட்டு, அதன் உள் துவாரம் நாலிலொரு பங் குள்ளதாக அமைக்கப்படவேண்டும். இதன் மூலமாக உள் ளிருக்கும் சல்யங்களை உடைத்து வெளியே கொண்டுவர லாம்.

## (8) அர்சோ யந்திரம் (மூலமுளையைப் பரிசோதிக்கும் யந்திரம்)

(Anal Speculum)

பசுவின் முலேக்காம்பைப்போல் 4'' குழாய் தயார்செய்து கொண்டு இருபக்கங்களிலும் துவாரங்கள் அமைத்து அத னுள்பாகம் கட்டை விரல் உட்புகும்படியாகச் செய்துகொள்

ளவும். மத்தியிலிருக்கும் துவாரத்திற்குப் பக்கவாட்டில் இரு புறங்களிலும் இன்னும் இரு துவாரங்களிடவும். யந்திரத்தின் புரைவாயில் ½" கனத்தில் வரம்பு அமைத்துக்கொள்ளவும். உள்ளே யிருக்கும் இரு துவாரங்களினாலும் மூலமுளைகளைப் பார்க்கவும், மத்தியிலுள்ள த்வாரத்தினால் ஏற்ற சிகித்ஸை செய்யவும் கூடும்.

இதைப்போலவே தயார் செய்து பக்கவாட்டில் துவாரங்கள் இல்லாமலிருந்தால் அதற்கு "சமீ யந்திரம்" என்று பெயர். இதனால் மூலமுளைகளை நசுக்க முடியும். அர்சோ யந்திரத்தில் மேல்சொன்ன விளிம்பை யகற்றிவிடில் அது "பகந்தர (பவுத்திர) யந்திர"மாகும்.

(9) **கிரணநாடீ யந்திரம்** (மூக்கினுள் செலுத்தப்படும் குழாய்)
(Nasal Speculam)

2" நீளமும் ஆள்காட்டி விரல் உள்புகும்படியும் அமைத்த ஒரே துவாரமுள்ள குழாய் இதன்மூலம் மூக்கிலுண்டாகும் மாம்ஸ வளர்ச்சியைப் பார்க்கக் கூடும்

(10) **அங்குலித்ராணம்:** (விரல்களைக் காப்பாற்றும் யந்திரம்)

4 அங்குல நீளத்தில் தந்தத்தினாலோ அல்லது கட்டையினாலோ மேலும் கீழும் த்வாரமுடையதாகச் செய்து பசுவின் முலைக்காம்பைப்போல் அமைக்கவும். இது பற்கள் கிட்டியிருக்கும் ரோகியின் வாயை நன்றாகத் திறப்பதற்கு உதவும்.

(11) **யோனிவ்ரணேக்ஷண யந்திரம்** (Vaginal Speculam)

16 அங்குல நீளத்தில் 4 சலாகையுடன் கூடியதாகவும் மத்தியில் ஆணியினால் நன்கு பிகிக்கப்பட்டுமிருக்கும். நான்கு சலாகைகளின் முகமும் சேர்ந்து தாமரையின் மொட்டைப் போல் குவிந்திருக்கும். அந்த சலாகைகளின் அடிபாகம் விரிந்திருக்கும். அதைப் பிடித்து அமுக்கினால் தாமரை

மொட்டை யொத்த முன்பாகம் விரியும். இதனுல் ஸ்திரீக ளின் மர்ம ஸ்தானத்தை விசாலப்படுத்தி வ்ரணங்களைச் சோதித்தறியலாம்.

## (12) நாடீவ்ரண யந்திரங்கள் (Blowers and Cathetors)

6 அங்குல நீளத்தில் அடிபாகத்தில் கட்டைவிரல் கொள் ளும்படியான துவாரமுடையதாகவும் நுனி மிகவும் சிறுத் துக் கடலை புகும்படி யுள்ளதாகவும் ஒரு குழல் அமைக்கவும். அடிப்பாகத்தில் வரம்புகள் அமைக்காமல் தோல் பையைக் கட்டி விடவும் (திருத்தி). இந்த யந்திரம் குழிப்புண்களையும், புரைகளையும் கழுவுவதற்கும், எண்ணெய் முதலானவைகளைப் போடுவதற்கும் உபயோகமானது.

## நளிகாயந்திரம் (Canula)

இருபக்கங்களும் துவாரமுள்ள ஒரு குழாயாகும். இத ஞல் ஜலோதரத்தில் வயிற்றிலுள்ள நீரை வடியச் செய்ய லாம். பக்ஷிகளின் இறகுகளையும் இம்மாதிரி உபயோகிக்க லாம்.

## (14) ச்ருங்க யந்திரம் (கொம்பு வைத்து இரத்தத்தை யுறிஞ்சுதல்)

அடியில் 3 அங்குல விஸ்தீரணமுள்ளதாகவும் 18 அங் குல நீளமாகவும், வரவரக் கொம்பைப்போல் சிறுத்தும் இருக்கவேண்டும். நுனியிலுள்ள துவாரம் வெண்கடுகு புகும் படியான அளவுள்ளதாக இருக்கவேண்டும். அதன் நுனி பாகத்தை முலைக்காம்பையொத்ததாகத் தயார் செய்வதுடன், யந்திரத்தின் மத்ய பாகங்களில் யாதொரு விரிசலும் இருக்கக் கூடாது. இந்த யந்திரம் 'சூஷணம்' என்ற உறிஞ்சும் வேலைக் குப் பிரயோஜனப்படும்.

(15) **அலாபூயந்திரம், கடயந்திரம்** முதலியன.

'அலாபூயந்திரம்' நீளத்தில் 12 அங்குலமும், அதன் உள் பாகம் 18 அங்குல விஸ்தாரமும் உள்ளதாகவும் மெல்லிய தகட்டினால் செய்யப்பட்ட கருவியாகும். அதன் முகம் 3 அல்லது 4 அங்குலம் சுற்றளவிருந்தால் போதுமானது. இதனுள் காகிதத்தைக் கொளுத்திப்போட்டு இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டிய இடத்தில் சிறிது கீறி அதன்மேல் இக்கருவியைக் கவிழ்த்து வைக்கவும். இது இரத்தம், கபம் முதலானவற்றை யுறுஞ்சும்,

'கடயந்திரம்' குன்மத்தைக் கரைப்பதற்கும், அதை இடம்விட்டு மாற்றுவதற்கும் பிரயோஜனப்படக்கூடியது.

இதையன்றி மூத்ரமார்க்கத்தில் அடைத்திருக்கும் கல்லை வெளிப்படுத்தவும் உதவும்.

(16) **சரபுங்க சங்கு.**

இது 10 அங்குல நீளத்தில் ஒன்றும் 12 அங்குல நீளத்தில் மற்றொன்றுமாக நன்றாக அழுந்தியுள்ள சல்யங்களை அசைத்து வெளிப்படுத்தக் கூடியவாறு அமைக்கப்படவேண்டும். இதனால் கெட்டுப்போன பற்களைக் குத்தி வெளிப்படுத்தலாம்.

(17) **கர்ப்ப சங்கு** (Decapitation Hook & Axis Traction forceps.)

இது 8" நீளமுள்ளதாகவும் முனையில் வளைந்ததாகவும் இருக்கும். இந்த யந்திரத்தைக் கொண்டு கர்ப்பாசயத்தில் நிலைமை மாறியிருக்கும் கர்ப்பத்தை வெளிப்படுத்தலாம்.

(18) **படிச யந்திரம்**—2.

இது தூண்டில்முள்ளைப் போன்ற இருவகைக் கருவிகளின் சேர்க்கை. இதைக்கொண்டு சல்யங்களை வெளியே இழுக்கக்கூடும்.

## சலாகை யந்திரங்கள் (PROBES)

### (19) கண்டூபதமுக சலாகைகள்.

*மண்ணுண்ணிப் பாம்பின் முகத்தைப் போலவும் அதே பருமனுள்ளதுமான சலாகைகள் புண், புரைகளில் துழாவுவதற்குப் பயன்படும்.*

### (20) மார்ஜனசலாகை (Mops.)

*6 குச்சிகளையெடுத்து அவற்றின் நுனிகளில் பஞ்சைச் சுற்றி வைக்கவும். இவைகள் சீழ், அழுக்கு முதலானவைகளைத் துடைப்பதற்கு உதவும். இவைகளின் நீளத்தையும் உருவத்தையும் தேவைக்குத்தக்கபடி அமைத்துக்கொள்ளவேண்டும்.*

### (21) கர்ணசோதன சலாகை (குறும்பைவாங்கி) (Ear Scoop)

*சிறு அரசிலை விளும்புபோற்ற ஓரங்களுடைய கரண்டி காதினுள் இருக்கும் அசுத்தங்களைச் சுத்தம் செய்ய உதவும்.*

### (22) ஜாம்பவோஷ்ட சலாகைகள்.

*க்ஷாரங்களைப் பிரயோகிக்கவும், அக்னி கர்மாவிற்கும் ஏற்றதாகப் பற்பல நீள உருவங்களில் மும்மூன்று சலாகைகளை அமைக்கவும்.*

### (23) மஸூரதள யந்திரங்கள்.

*இவை செவி, மூக்கு முதலிய இடங்களில் சிக்கியிருக்கும் சல்யாதிகளை எடுப்பதற்குத் தக்கபடி கடலைப்பருப்பினளவு முனையுள்ளதாய் 8" நீளத்தில் ஒன்றும் 9" நீளத்தில் ஒன்றும் சேர்த்து உபயோகிக்கப்படும்.*

(24) ஸர்ப்பபண யந்திரம். (சுரண்டும் யந்திரம்) (Curette)

16'' நீளத்தில் ஒன்றும் 12'' நீளத்தில் ஒன்றுமாக இரு சலாகைகளின் நுனிகளைப் பாம்பின் படத்தைப்போல் வளை வாகச் செய்து சுரண்டும் வேலைக்கு உபயோகிக்கலாம்.

அநுயந்திரங்கள் :— அயக்காந்தம், கயிறு, உலக்கை, தோல், நரம்பு, உரோமம், பற்கள், நகம் முதலியன.

யந்திரங்களின் பொதுவான வேலைகள்

அடித்தல், கடைதல், நிரப்புதல், மார்க்கங்களைச் சுத்தம் செய்தல், சுரண்டுதல், இழுத்தல், கட்டுதல், நசுக்குதல், உறுஞ்சுதல், உயரத்தூக்குதல், தாழ்த்துதல், அசைத்தல், ஒடித்தல், சுழற்றுதல் முதலியவை யந்திரங்களின் முக்கிய மான வேலைகளாகும்.

ஸுச்ருத ஸம்ஹிதைப்படி மொத்த யந்திரங்கள் 101, என்று கணக்கிடப்பட்டு, அவைகள் கீழ்க்கண்டபடி 6 வகை களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | ஸ்வஸ்த்திக யந்திரம் | 24 வகைகள் | | (Forceps) |
| (2) | ஸந்தம்ச யந்திரங்கள் | 2 | ,, | (Tongs) |
| (3) | தாள யந்திரங்கள் | 2 | ,, | (Hooks) |
| (4) | நாடீ யந்திரங்கள் | 20 | ,, | (Tubular Instruments) |
| (5) | சலாகா யந்திரங்கள் | 25 | ,, | (Bougies) |
| (6) | உபயந்திரங்கள் | 55 | ,, | (Surgical accessories) |

யந்திரங்களைப் பொதுவாக சாஸ்திரத்தில் கூறப்பட் டிருக்கும் விதமாகவாவது, உபதேச ரீதியிலாவது, மற்றவித யந்திரங்களைப் பார்த்தாகிலும், யுக்திகளுக் கேற்பவும் செய்து கொள்ளல்வேண்டும்.

## அவயவங்களைச் சேதித்து ப்ரத்யக்ஷ பரீசோதனை செய்யும் கிரமம்.
(Method of Dissection.)

வயதாகாமலும், விஷம், கொடிய வியாதி முதலியவைகளினால் இறக்காமலும், அங்கஹீனம் இல்லாமலும் இறந்தவருடைய சரீரத்தைத் தர்பம், புல் முதலானவைகளைக் கொண்டு நன்றாக இறுகக்கட்டி, ஒரு துவாரமுள்ள பெட்டியில் வைத்து, ஓடுகிற ஆற்றுஜலத்தில், மீன் முதலானவைகள் தின்னாதபடி அமுக்கி வைத்துவிடவும். 7 நாட்கள் சென்ற பின், இச்சரீரத்தை யெடுத்து, ஒரு மெல்லிய குச்சியினால் ஒவ்வொரு பாகமாகப் புரட்டவும். அப்போது உடம்பின் பகுதிகள் வ்யக்தமாகப் புலனாகும். பின்பு, கீழிருக்கும் தசை நார்களை மயிர் கற்றையினால் சுரண்டிவிடவும். இவ்வாறு செய்தால் நுண்ணிய இரத்தக் குழாய்கள் கூடப் புலப்படும். சுரண்டுவதற்கு வெட்டிவேர், மயிர்கத்தை, தர்ப்பை, புல்வேர் முதலியவைகளையும் உபயோகிக்கலாம்.

## சஸ்திர சிகித்ஸையை அப்பியாசம் செய்யும் முறை:—

(1) **கத்தியினால் அறுக்க.**—சர்க்கரை கும்மட்டிக்காய், பூஷணிக்காய் முதலியவைகளில் பழக்கம் செய்தல்.

(2) **துவாரமிட:**— மூத்திரப்பையில் ஜலம், மணல், களி, முதலியவைகளை நிரப்பி அதன்மேல் பழகல்.— தோல் பைகளிலும் பழகலாம்.

(3) **இரத்தம் குத்திவாங்க.**— இறந்த ஜந்து, அல்லித்தண்டு முதலியவைகளில் பழகவும்.

(4) **சலாகைவிட்டு சோதித்தல்.**— பூச்சியரித்த கட்டை, மூங்கில், உலர்ந்த சுரைக்காய் முதலியவைகளுள்ளிட்டுப் பழக்கஞ் செய்யவும்.

(5) **பற்களைப் பிடுங்க**— இறந்த ஜந்துக்களின் பற்களைப் பிடுங்கிப் பழகவும்.

(6) தையல் போடுதல் — சர்மம், துணி முதலியவைகளில் தைக்கவும்.

(7) காரம் வைத்தல்.—மாம்ஸத் துண்டுகளின் மேல் இடவும்.

(8) சிலந்தி. விப்புருதிகளுக்கு.— மெழுகை ஒட்டிய மரத் துண்டுகளின்மேல் பழகவும்.

(9) காயத்திற்குக் கட்டுப்போட — களிமண்ணால் செய்த பொம்மைகளில் கட்டுப் போடவும்.

(10) மூத்திரமெடுத்தல்.—ஜலம் நிரப்பப்பட்ட மூக்குவைத்த மண் பாத்திரத்திலிருந்தோ, அல்லது சுரைக் குடுக்கைகளிலிருந்தோ நாளல் தட்டையைக்கொண்டு நீரை எடுக்கப் பழகவும்.

## பழையகாலத்தில் இருந்த சஸ்திரசிகித்ஸையின் அபூர்வ சாமர்த்தியத்தின் உதாரணங்கள்.

"बद्धगुदे परिस्राविणि च स्निग्ध स्विन्नस्य अभ्यक्तस्य, अधोनाभेर्वामतः चतुरङ्गुल प्रमाणानि आन्त्राणि विनिष्कृष्य, निरीक्ष्य, बद्धगुदस्य आन्त्रप्रतिरोधकरं अश्मानं वालं वा अपोह्य, मलजातं चा, ततो मधुसर्पिर्भ्यां अभ्यज्य, आन्त्राणि यथास्थानं स्थापयित्वा, बाह्यव्रणं उदरस्य सीव्येत् ।"

(सुश्रुत संहिता उदरचिकित्सा)

பத்தகுதம் (Intestinal obstruction) பரிஸ்ராவி (Intestinal perforation) என்னும் உதரரோகங்களில் ஸ்வேத, அப்யங்கனாதிகளைச் செய்தபின் தொப்புளுக்குக் கீழுள்ள ரோமராஜிக்கு இடதுபுறமாய் 4 அங்குலம் விட்டு மேல்வயிறைக் கிழிக்கவும். உள்ளிருக்கும் குடலில 4 அங்குலம் வெளிப்படுத்தி அங்கு அடைபட்டிருக்கும் கல், மயிர் முதலான மலங்களை வெளியில் எடுத்த பின்பு, அக்குடலை நன்கு சுத்தம்செய்து, வ்ரணஹரமான தேன, நெய் முதலானவைகளைப் பூசிக் குடல்களை அந்தந்த இடத்தில் வைத்துத் தைத்து, வயிற்றின்மேலும் தையல் போடவும்.

(2) பரிக்ஸ்ராவியில்

**शल्यमुद्धृत्य आन्त्रस्रवान् संशोध्य, तच्छिद्रान्त्रं समादाय, कालपिपीलिकाभिर्दंशयेत्. दष्टे च तासां कायानपहरेत्, न शिरांसि, ततः पूर्ववत् सीव्येत्, सन्धानं च यथोक्तं कारयेत् ।**

மேற்கூறியவாறு குடலை வெளியிலெடுத்தபின், அங்கு அடைபட்டிருக்கும் சல்யத்தை வெளியிலெடுத்துச் சுத்தம் செய்து, அத்துவாரங்கள்தோறும், கருமை நிறமுள்ள கட்டெறும்புகளை விட்டுக் கடிக்கச் செய்யவும். அவைகள் அத்துவாரங்களின் இருபுறங்களையுஞ் சேர்த்து இறுகப்பற்றிக் கொண்டபின் அதன் தலையைத் தவிர மற்ற பாகங்களை வெட்டியெடுத்து விடவும். இவ்வாறு துவாரங்களை மூடியபின் குடலைச் சரியாக அதனதன் இடங்களில் வைத்துத் தைத்துவிடவும். ஆறுவதற்கேற்ற மருந்துகளையும் போடவும். (எறும்புத்தலை இறுகப் பிடித்துக்கொள்ளும் தன்மையும் இலகுவாக ஜீர்ணமாகக்கூடிய தன்மையும் வாய்ந்தது.)

இதைப்போலவே அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் கூறப்பட்டிருக்கிறது:

प्रयुञ्जीत भिषक् शस्त्रमार्तबन्धुनृपार्थितः ।
स्निग्ध.स्वन्नतनोर्नाभेरधो बद्धक्षतान्त्रयोः ॥
पाटयेदुदरं मुक्त्वा वामतश्चतुरङ्गुलात् ।
चतुरङ्गुलमानं तु निष्कास्यान्त्राणि तेन च ॥
निरीक्ष्याऽपनयेद्बालमललेपोपलादिकं ।
छिद्रे तु शल्यमुद्धृत्य विशोध्यान्त्रं परिस्रवम् ॥
मर्कोटैर्दंशयेच्छिद्रं, तेषु लग्नेषु चाऽहरेत् ।
कायं मूर्ध्नोऽतु चान्त्राणि यथास्थानं निवेशयेत् ॥
अक्तानि मधुसर्पिर्भ्यामथसीव्येद्बहिर्व्रणम् ।
ततः कृष्णमृदाऽऽलिप्य बध्नीयाद्यष्टिमिश्रया ॥
निवातस्थः पयोवृत्तिः स्नेहद्रोण्यां वसेत्ततः

(अष्टाङ्ग हृदयं उदरचि. श्लो 107 to 111)

(இதன் பொருள்)

பத்தகுதோதரம், உதகோதரம் முதலானவைகள் ஔஷத ஸேவையினுல் தீராவிட்டால் வைத்யன் ரோகியின் பந்துக்கள், அரசன் முதலானவர்களின் அனுமதியின்பேரில் சஸ்திர சிகித்ஸையைச் செய்யவேண்டும். வியாதியஸ்தருக்கு ஸ்நேஹ, ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்து, நாபிக்குக் கீழே (தொப்புளுக்கு) மத்யரேகைக்கு இடது பக்கத்தில் 4 அங்குல அளவில் சஸ்திரத்தினுல் கீறவும். அத்துவாரத்தின் மூலமாகக் குடலை வெளியில் எடுத்து, அதனுள்ளிருக்கும் மயிர், மலம், கற்கள் முதலியவைகளை வெளிப்படுத்தவும்.

சித்ரோதர ரோகத்தில், முன் கூறியபடி குடலை வெளியிலெடுத்து அங்கு அடைபட்டிருக்கும் சல்யத்தை வெளியிலெடுத்து, கசியும் நீரையும் சுத்தம் செய்து மர்கோடம் என்ற வகை எறும்புகளைவிட்டு, இரணத்தின் வரம்புகளையொன்று சேர்த்துக் கடிக்கச் செய்து, அதன் உடலை நீக்கிவிடவும். பின்பு குடலை ஏற்கனவே இருந்தவாறு வைத்துத் தேன், நெய் முதலியவைகளைப் பூசி, வ்ரணத்தின் வெளிவாயைத் தைத்து விடவும். கறுத்த களிமண்ணையும் அதிமதுரத்தையும் கூட்டியரைத்து அவ்விடத்தில் லேபனம் செய்து கட்டி விடவும். காற்றோட்டம் அதிகமில்லாத இடத்தில் இருந்துகொண்டு, பாலையே உணவாக உட்கொள்ளவும். எண்ணெய்த் தொட்டியிலும் அந்நோயாளியை அமரும்படி செய்யவும்.

மேற்கூறியபடி கட்டெறும்புகளினுல் தைக்கப்படும் முறை கூடியவரை தற்காலத்தில் வழங்கப்படும் உடம்பிலேயே சீரணித்துவிடும் catgut என்ற வகை நரம்பினுலான தையல் முறைக்கு ஒப்பானது. மேலேசொன்ன வகைத் தையல்முறை தென் அமெரிக்காவிலுள்ள 'பெரு' முதலான பிரதேசங்களில் இப்போதும் கையாளப்படுகிறது. இவ்

வகைத் தையல் முறைக்கு ஆங்கிலத்தில் "DORAT'S SUTURE" என்றும் பெயர்.

இம்மாதிரியே ஸிராவ்யதம் (Venesection) க்ஷார கர்ம (alkaline application), அக்னிகர்மம் (cauterization) முதலானவைகளிலும் நம் முன்னோர்கள் மிகவும் தேர்ச்சி யடைந்திருக்கிறார்கள் என்பதை அவர்களியற்றிய கிரந்தங் களைப் படித்தால் நன்கு விளங்கும்.

## சஸ்திர சிகித்ஸையும் & ஒட்டவைத்தலும்.

(Rhinoplastic Surgery & Skin graphting)

நல்ல இடத்திலிருந்து மெல்லியதாக எடுக்கப்பட்ட சரு மத்தை, பெரும் அளவில் கிறப்பட்ட வேறொரு இடத்தில் பொருந்தவைத்துத் தைத்துவிடுதல் என்ற முறை அக்காலங் களில் மிகப் பிரபலமாக இருந்திருக்கிறது என்பதை ஸுச் ருத ஸம்ஹிதை ஸூத்ரஸ்தானம் 16-ம் அத்யாயத்தைப் படித் தால் விளங்கும். அறுந்துபோன காதைப்படியும்படி வைத் துக் கழுத்திலிருந்து எடுக்கப்பட்ட சருமத்துண்டைப் பொருத்தித் தைத்துவிடுதல் முறையாகும்.

*மேல்நாட்டு சஸ்திர நிபுணர்களும் இம்முறை இந்தியா வில் மிகப் பழமையான சஸ்திர சிகித்ஸை முறை என்பதை ஒப்புக்கொள்ளுகின்றனர்.

மேலும் ருக்வேதத்தில், சண்டையில் கால்களை இழந்த வர்களுக்கு இரும்பினால் செய்யப்பட்ட கால்களும், கண்களை இழந்தவர்களுக்குக் கண்களும் வைக்கப்பட்டன என்று காணப்படுகிறது. (I, 116, 15 & 16.)

* Doctor Hirsehberg of Germany says, "The whole of plastic Surgery in Europe took a new flight when those cunning devices of Indian workmen become known to us."

வ்ரண ரோகம் என்ற இத்தொகுதியில் வ்ரணசோதம் (விரணங்கள் ஏற்படுவதற்கு முன்னுள்ள வீக்கம்), சாரீர, விரணங்கள், பக்னம் (எலும்புமுறிவு), நாடீவிரணங்கள், பவுத்திரம், விஸர்ப்பம் (கரப்பான்போன்றவை) சல்யாஹரணம் நெருப்புச்சுட்டபுண்கள் முதலான பற்பல வியாதிகளுக்கும் மருந்துகள் சொல்லப்பட்டுள்ளதால் அவைகளின் லக்ஷணங்களையும், வகைகளையும் கூறவேண்டியது அவசியமாகிறது:—

## வ்ரண சோதம் (ABSCESS)

வ்ரணம் ஏற்படுவதற்கு முன் வீக்கம் ஸம்பவித்துப் பின்பு அது நன்றாகப்பழுத்து உடையும். சீதோபசாரங்கள், பற்று வகைகள், ஜலௌகா முதலானவைகளின் உபயோகம், ரத்தத்தை வெளிப்படுத்தல் முதலியவைகளினால் முதலிலேயே கூடிய வரை பழுக்காதபடி செய்யவேண்டும்.

### பழுக்காத வீக்கத்தின் லக்ஷணங்கள்:—

வீக்கம் ஏற்பட்டவிடத்தில் வர்ண வேறுபாடு உண்டாகும். சிவப்பாகவும் காற்று அடைத்த துருத்தியைப்போலத் திரண்டு உடைந்துவிடுவதைப் போலவும், வலியுடனும் இருக்கும். உடம்பில் வேதனையுடன் அடிக்கடி கொட்டாவி, படபடப்பு, ருசியின்மை, உடம்பில் எரிச்சலும், தாகம், ஜ்வரம், தூக்கமின்மை முதலியவைகளும் ஏற்படும். நெய் முதலானவைகளை அதன் மேல் போட்டால் அது உருகிவிடும், தொடமுடியாத வலியுமேற்படும்.

### பழுக்க ஆரம்பித்து நன்றாகப் பழுக்காத வீக்கத்தின் லக்ஷணங்கள்

வலி மிகக்குறைவடையும், விரண வீக்கமும் சுருங்கும், உடம்பு வாட்டமுறும் விரண வீக்கங்களின் ஓரங்கள் பள்ளமாகி, மத்ய பாகம் மேலெழுந்து நிற்கும். அரிப்பு, வீக்கம்

முதலானவை சாந்தமாகும், சிவப்புநிறம் மாறி வெளுப்பு நிறமுண்டாவதுடன், துருத்திக்குள்ளிருக்கும் தண்ணீரைப் போல் சீழ் அதனுள் ஸஞ்சரிக்கும்.

வாதவிரண சோபமாகில் வலியுடனும், பித்த சோபமானல் எரிச்சலுடனும், கபத்திணலெனில் வீக்கத்துடனும், இரத்ததோஷப் பிரகோபமாகில் சிவப்பாகவும் இருக்கும். மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்தால்தான் சோபம் பழுக்கும்.

## அதிகமாகப் பழுத்த சோபத்தின் குறிகள்.

அதன்மேல் துவாரம் ஏற்பட்டுச் சீழ் வெளிவரும். உடையாமல் போனல் அது சருமத்தையும், மாம்ஸாதிகளையும், தின்னவாரம்பிக்கும். சுருக்கங்கள் ஏராளமாக விழுவதுடன், கருமை நிறத்தையும் அடைந்து அவ்விடத்திலுள்ள மயிர் உதிரும்.

## சோபத்தைக் கீறுவதற்கும், தானே உடைவதற்கும் ஏற்ற நிலைமைகள்.

நல்ல பலமில்லாதார்களுக்கும், குழந்தைகளுக்கும் ஏற்படும் விரண சோபங்கள், நன்ருகப் பழுத்தவிரண சோபங்கள், மர்ம ஸ்தானங்களிலேற்படும் விரண சோபங்கள், ஸந்திகளில் ஏற்பட்டிருக்கும் விரண வீக்கங்கள் முதலானவைகளைத் தானகவே உடையச் செய்வதுதான் ஹிதமானது.

மற்ற இடங்களிலுண்டான சோபங்களைக் கீறலாம்.

## பழுக்காத கட்டியை கீறுவதனலேற்படும் விகாரங்கள்.

ஸிரை முதலான இரத்தக் குழாய்கள், நரம்புகள் முதலியன சேதமடையும். அதிகமான இரத்தப்பெருக்கு, தாங்க முடியாத வலி, விரணத்திலிருந்து நீர்க்கசிவு, புண்கள் முதலானவைகளும் ஏற்படும்.

## சீழ் உள்ளேயே தங்கிவிடுவதனுலேற்படும் தீமைகள்

சீழ் கட்டிக்குள் விருத்தியடைந்தால் அது, ஸிரை ஸ்நாயு, ரக்தம், மாம்ஸம் முதலானவைகளைத் தின்றுவிடும் காய்ந்த் புல்லை அக்னி எவ்வாறு பஸ்மம் செய்துவிடுமோ அவ் வாறு அழித்துவிடும்.

## வைத்தியன் கட்டிகளுக்குச் சிகித்ஸை செய்யவேண்டிய முறை.

பக்குவமான வீக்கத்தை அறுக்காமலிருப்பதும், பழுக் காத கட்டியைக் கீறவும் கூடாது. அப்படிச் செய்தால் அவன் சண்டாளனுக்குச் சமானமாவான்.

## சஸ்திரப் பிரயோகமும் ஆகாரமும்.

நோயாளிக்குச் சஸ்திர சிகித்ஸை செய்யுமுன் அவனுக்கு வேண்டிய அளவு சாப்பாடு போடவும். ஏனெனில் பசியிருக் கையில் சஸ்திரப்பிரயோகஞ் செய்தால் நோயாளி ஒருக்கால் மூர்ச்சையாகிவிடக்கூடும். வலி தெரியாமலிருக்கும்படி நோயா ளிக்கு மதுவையும் அருந்தக் கொடுத்துப் பின்பு சஸ்திர சிகித்ஸையும் செய்யலாம்.

## மயக்கம் உண்டுபண்ணத் தகாதவர்

கர்ப்பம் வெளிவராமல் தடையுற்றிருக்கும் ஸ்திரீ, கல் லடைப்பு ரோகமுள்ளவர், வாயினுண்டான வியாதியினால் அவதியுறுபவர், உதரரோகி முதலானவர்களுக்கு மயக்கம் கொடுக்கக்கூடாது.

## சஸ்திர சிகித்ஸையைச் செய்யும் முறை

பிணியாளியைக் கிழக்கு முகமாக உட்காரச்சொல்லி அவனுக்கு எதிரில் வைத்யன் நின்றுகொண்டு, மர்மஸ்தானங்

களை நீக்கிவிட்டு வீக்கத்திற்குள் சஸ்திரத்தை அனுலோமமாகச் (மேலிருந்து கீழ்) சீழ் வெளிப்படுமாறு நன்ருகக் கீறவும். சஸ்திரத்தை ஒரே தடவையில் உள்ளே செலுத்தி விடவும். பெரிய வீக்கங்களில் 2 தடவைகள் பிரயோகிக்கலாம். புரையோடிருந்தால் ஏஷணியைவிட்டுத் துழாவி அது எவ்வளவு தூரம் வியாபித்துள்ளது என்பதை அறிந்து பின்பு கீறவும். மேலே எழுந்து நிற்கும் வீக்கத்தைக் கீறுவதனுல் கெடுதல் இல்லை. கூடியவரை சீழ், சதை வளர்ச்சி முதலியவைகள் அதிலேயே நின்றுவிடாவண்ணம் நன்ருகக் கீறி விடவும்.

## விரண சிகித்ஸையில் வைத்தியனுக்கு வேண்டிய குணங்கள்.

வைத்யனுக்குத் தைரியம், சீக்கிரத்தில் சிகித்ஸையை முடிக்கும் தன்மை, உடம்பில் வியர்வையோ, நடுக்கமோ இல்லாமலிருத்தல் முதலான குணங்களிருக்கவேண்டும். மனதில் கலவரமேற்படக்கூடாது எந்த விதமான சஸ்திரப்பிரயோகத்திலும் நிதான புத்தி இருத்தல்வேண்டும்.

## சஸ்திரத்தைக்கொண்டு குறுக்காக அறுக்கக்கூடிய இடங்கள்.

நெற்றி, புருவம், பல்லீறு, தோள், வயிறு, அக்குள், நேத்திரத்தின் கீழ் மேல் புறங்கள், உதடு, கன்னம், கழுத்து, துடையிடுக்கு முதலிய இடங்களைத் தவிர மற்ற இடங்களில் சஸ்திரத்தைக் குறுக்காகப் பிரயோகிக்கக்கூடாது,

## கட்டுக்கட்டவேண்டிய வஸ்துக்களின் இலக்ஷணங்கள்.

அவை சுத்தமாகவும், மெல்லியதாகவும், கெட்டியாகவும் இருத்தல்வேண்டும். கவலிகை எனப்படும் பஞ்சு சேர்ந்த துணி, அகில் முதலான சரக்குகளின் தூபங்களைப் போடப்

பட்டவைகளாகவும், ம்ருதுவாகவும், வழவழப்பாகவும், மடிப்புகளில்லாமலும் இருத்தல் வேண்டும்.

## விரணரோகி செய்யக்கூடாதவை

பகலில் தூங்கக்கூடாது. ஸ்திரீ சேர்க்கை கூடாது.

## ஆஹார நியமங்கள்

யவம், கோதுமை, கடலை, பயறு, துவரை, ஆரைக்கீரை, இளமுள்ளங்கி, கத்திரி, அம்மான்பச்சரிசி, சிறுகீரை, பாகல், வெள்ளெரி புடலை, கண்டுபாரங்கி, இந்துப்பு, மாதுளை, கடுக்காய், நெய், கொதித்து ஆறிய ஜலம், சம்பா சாதம் இவைகளை வேண்டிய அளவு உட்கொள்ளலாம்.

வ்ரணரோகி அஜீர்ணமுண்டாகும் வண்ணம் சாப்பிடக்கூடாது. அஜீர்ண மேற்படில் விரணத்தில் வீக்கமும், வலியும், அழற்சியும், எரிச்சலும் உண்டாகும்.

## விரணரோகி உபயோகிக்கக்கூடாதவை

புதிய தானியம், எள், உளுந்து, மது, ஆநூப மாம்ஸம் (கப தேசத்திலிருந்து கிடைக்கும் மாம்ஸாதிகள்), தயிர், வெண்ணெய், வெல்லம், கருப்பஞ்சாறு, புளி, உப்பு, காரம் முதலியவைகளையும் நீக்கவேண்டும். பித்தத்தைப் பிரகோபிக்கச் செய்யும் பதார்த்தங்களையும் அறவே நீக்கவேண்டும்.

சரியானபடி ஜீரணமாகாத குருவான வஸ்துக்களையும், விதாஹி, விஷ்டம்பி (தக்தபாகம் அடையக்கூடிய) குணமுள்ள வஸ்துக்களையும், சீதள பதார்த்தங்களையும் நீக்கி விடவும்.

## வ்ரணங்களின் கட்டுகளை அவிழ்த்தல்

மூன்ருவது நாளன்று கட்டுகளை அவிழ்த்துச் சுத்தம் செய்யலாமேயல்லாது இரண்டாவது நாளன்று அவிழ்க்கக்

கூடாது. அவசரப்பட்டு அவிழ்த்தால் வலி தீவிரமாகப் போய், விரணங்களில் கரடுகட்டி ஆறுவது தடைப்படும்.

## விரணங்களில் வைத்துக் கட்டப்படும் பஞ்சின் நிலைமை (விகேசிகை)

அதிக நைப்புள்ளதும், வரட்சியுள்ளதும், இறுக்கிக் கட்டப்பட்டதும், சரியாகப் பொருத்தி வைக்கப்படாததுமான விகேசிகை நல்லதல்ல. ஏனெனில், நைப்புள்ளது ஊண் தண்ணீர் கசிவையும், வரட்சியான விகேசிகையினால் தசைநார்கள் அறுக்கப்படுவது போன்ற உணர்ச்சியும், வலியும், இரத்தப் பெருக்கும் உண்டாகும். முறை தவறிக் கட்டப்பட்டால் விரணங்களில் அது உராய்ந்து வலி அதிகமாகும். விகேசிகைகளை விரணத்தினுள் நன்ருகச் செலுத்துவதால் புரைகளும், துற்நாற்றத்துடன்கூடிய மாம்லத்துடன் கூடிய புண்களும் சீக்கிரம் ஆறிவிடும்.

## தையல் போடவேண்டிய விரணங்கள்.

அடி முதலியவைகளாலேற்படும் விரணங்களின் வாய் பெரிதாக இருந்தால் அவைகளை உடனே தைத்துவிடவேண்டும். மேதஸ் வருத்தியாவதனு லேற்படும் கிரந்திகள், கர்ணபாலி, சிரஸ், கண்கள், தொண்டை, மூக்கு, உதடு, கைகள், கழுத்து, நெற்றி, பின்புறம், ஆண்குறி, வயிறு முதலான இடங்களில் ஏற்பட்ட விரண சோபங்களையும் கீறித் தைத்து விடவும்.

## தைக்கத்தகாத விரணங்கள்.

அற்ப தசைநார், மாம்ஸம் முதலான இடங்களிலுள்ள விரணங்களையும், கைகளின் இடுக்கு, தொடையிடுக்கு முதலான அசையும் பாகங்களிலிருக்கும் விரணங்களையும், வாயு ஸஞ்சரிக்கும் இடத்தையும், சல்யம் உள்ளிருக்கும் விரணத்தையும், க்ஷாரம், விஷம், அக்னி இவைகளினுலேற்பட்ட விரணங்களையும் தைக்கக்கூடாது.

## தையல் போடும் முறை

அடிபட்ட இடத்திலிருக்கும் உறைந்த இரத்தம், புல், ரோமம் முதலானவைகளை நீக்கிவிட்டுத் தொங்கும் மாம்ஸ பாகங்களையும் எலும்புகளையும் அதனதன் இடத்தில் பொருத்தி, இரத்தப் பெருக்கு நின்றபின், தசைநார், நூல், நரம்பு முதலியவைகள் ஏதேனுமொன்றைக்கொண்டு தையல் போடவும். தையல்களை அதிக இடைவெளி உள்ளதாகவோ, அல்லது வெகு நெருக்கமாகவோ போடக்கூடாது. விரணங்களின் விளிம்புகளின் நுனியிலோ அல்லது அடியிலோ தையல்களைப் போடக்கூடாது.

தையல் போட்டபின் ரோகியை ஆச்வாஸப்படுத்தித் தேன், நெய், அஞ்சனம், பட்டின் கறுக்கு முதலியவைகளையோ அல்லது வெள்ளி லோத்திரப் பட்டை, அதிமதுரம் இவைகளையோ தேனுடன் குழைத்து விரணத்தின் மேல் பூசவும். இரத்தம் பெருகாத விரணங்களின் வாயைக் கீறி இரத்தம் வடியச் செய்து பின்பு தையல்களிடவும். அப்போது தான் அவைகள் கூடும்.

## பந்தனமிடும் முறை.

கட்டுமுறைகளை கட்டுப் போடவேண்டிய அவயவம், பழக்கம் முதலியவைகளை அநுஸரித்துக் கட்டவேண்டும்.

கம்பளி, தோல் முதலியவைகளினால் செய்யும் பந்தனம் உஷ்ண குணமுள்ளவை.

பட்டைக்கொண்டு பந்தனமிடச் சீத குணமுள்ளவையாம்.

பருத்தி, மரவுரி முதலியவைகளினாலிடப்பட்ட பந்தனங்கள் உஷ்ணம், சீதம் ஆக இரு குணங்களையும் பெற்றிருக்கும்.

எலும்பு முறிந்த விரணங்களில அங்கங்களைத் தாங்கி பந்தனம் செய்யப் பலகைகள், தர்ப்பம் முதலியவைகளைப் பிரயோகிக்கவேண்டும்.

## பந்தன முறைகள்

இவை 15 வகைப்படும். (1) கோசபந்தனம் (2) ஸ்வஸ்திக பந்தனம் (3) முத்தோலி பந்தனம் (4) சீன பந்தனம் (5) தாம பந்தனம் (6) அநுவேல்லித பந்தனம் (7) கட்வா பந்தனம் (8) விபந்த பந்தனம் (9) ஸ்தகிகா பந்தனம் (10) விதான பந்தனம் (11) உத்ஸங்கபந்தனம் (12) கோபண பந்தனம் (13) யமக பந்தனம் (14) மண்டல பந்தனம் (15) பஞ்சாங்க பந்தனம்.

## பந்தனமிடப்படாத வ்ரணங்களுக்கு நேரிடும் கெடுதிகள்.

பூச்சி, கொசு முதலியவைகள் விரணங்களில் உட்கார்ந்து அசுத்தம் செய்யும். (2) வாயு அதிகமாகச் சேரும். (3) விரணங்களில் பிரயோகிக்கப்படும் ஸ்நேஹம் முதலான மருந்துகள் வெகுநேரமிராது. ஆகவே அவை சீக்கிரம் ஆறாது.

எலும்புமுதலானவை, ஒடிந்ததாலேற்பட்ட விரணங்களுக்கு மேலும் அவை நீங்கு நேரிடாவண்ணம் பாதுகாத்து, அசைவு ஏற்படாமலிருக்கச்செய்யும்.

## பந்தனமிடத்தகாத வ்ரணங்கள்.

குஷ்டவிரணம், நெருப்புச்சுட்ட புண்கள், மதுமேகவிரணங்கள், சுண்ணாம்பினாலேற்பட்ட விரணங்கள், அக்கி போன்று வெகுளஎளிதில் பரவும் விரணங்கள் முதலானவைகளைக் கட்டக்கூடாது.

## விரணங்கள் ஆறியபின் பத்தியக்கிரமம்

அஜீர்ணபோஜனம், தேகப்பயிற்சி, புணர்ச்சிமுதலிய வைகளையும், அதிகச்சந்தோஷம், கோபம், பயம் முதலியவை களை நீக்கவும். இம்மாதிரியான பத்தியத்தை விரணம் ஆறிய பின் 6 மாதங்களுக்கேனும் குறைந்தபக்ஷம் கடைப்பிடித்தல் நலம்.

## விரணங்களின் பேதங்கள்.

இவைகளை நிஜவிரணங்கள் என்றும், ஆகந்துகவிரணங்கள் என்று ஒருவகையாகவும், சுத்த விரணம் (Simple Ulcers) அல் லது துஷ்ட விரணம் (Chronic Ulcers) என்று மற்றொரு வகை யாகவும் பிரிக்கலாம்.

## நிஜ விரணம்

சரீர தோஷங்களின் மாறுபாடுகளினால், தானாகவே உண்டாகும் விரணங்கள் 'நிஜவிரணங்க'ளாகும்

## ஆகந்துக விரணம்.

அடி, வெட்டு, குத்து முதலியவைகளால் ஏற்படும் புண்கள்.

## துஷ்ட விரண இலக்ஷணங்கள்.

1. விரணத்தின் வாய் மூடி மறைதல் அல்லது அதிகமாக விரிதல்.
2. அதிகமான மிருதுத்தன்மை அல்லது கடினம்,
3. விரணத்தின் அடிபாகம் ரொம்பவும் மேலெழுந்தோ அல்லது ஆழ்ந்தோ இருத்தல்,
4. தொட்டால் அதிகக் குளிர்ச்சியாகவோ அல்லது சூடா கவோ இருத்தல்.

5. அதிகமான சிவப்பு, வெண்மை, அல்லது கருமையா யிருத்தல்.

6. துர்நாற்றமுள்ள சீழ் அதிகமாக வடிதல் முதலியவை களுடன்.

7. தாங்கமுடியாத வலியும், அழற்சியும், அரிப்பும், வீக்க மும் உண்டாகும்.

## சுத்த விரண இலக்ஷணங்கள்.

(1) நாக்கின் நிறமுடையதாகவும், ம்ருதுவாகவும், வழ வழப்பாகவும் இருக்கும்.

(2) விரணத்தின் சுற்றுப்புறங்கள் கறுநிறமாக இருப்ப துடன், சீழ்ப்பெருக்கு, வலி, உஷ்ணம் முதலான உபத்ரவங்கள் முதலியவைகள் இராது.

## வ்ரணங்கள் உண்டாகும் இடங்கள்

1. தோல். 2. ஸிரை (இரத்தக் குழாய்கள்). 3. மாம் ஸம். 4. ஸ்நாயு (Tendons, தசைநார்). 5. ஸந்திகள் (மூட்டு கள்). 6. எலும்பு. 7. குடல்கள். 8 மர்மஸ்தானங்கள் (சிரஸ், ஹ்ருதயம், சிறுநீர்ப்பை) முதலான இடங்கள் வ்ரணத்தின் ஸ்தானங்கள்.

## எளிதில் குணமாகும் விரணங்களாவன.

(1) மனோதிடமும், நல்ல மாம்ஸவளர்ச்சி, சரியான பசி, வாலிப தேகம், சரீர பலம் முதலியவைகள் உள்ளவர்களுக்கு விரணங்கள் ஏற்பட்டால் அவை எளிதில் குணமடையும்.

(2) விரணங்களின் வடிவம் வட்டமாகவோ, நீண்ட தாகவோ, அல்லது மத்ய பாகம், விளும்பு, சுற்றுப்புறம் முத லானவை சுத்தமாக காணப்பட்டாலோ அவைகளை எளிதில் ஆற்றிவிடலாம்.

(3) பின்புறம், ஆண்குறி, உதடு, உள்வாய், கன்னம் முதலிய உறுப்புகளிலேற்படும் விரணங்களும் ஸுகஸாத்ய மானவை.

## விரணம் ஆறுமலிருப்பதற்கான காரணங்கள்.

ஸ்நாயு என்ற தசைநாரில் சீழ்பிடித்துத் துர்நீர் கசிவதா லும், ஸிரை எனப்படும் இரத்தக் குழாய்கள் துண்டித்துவிட் டாலும், விரணம் ஆழ்ந்து சரீர தாதுக்களைப்பற்றியிருந்தா லும், க்ருமிகள் சேர்வதனாலும், எலும்புகள் முறிந்துவிடுவத னாலும், சல்யங்கள் உள்ளேயே தங்கிவிடுவதனாலும், விஷ கடியுள்ள விரணங்களும், முறைப்படி சிகித்ஸை செய்யப்படா மலிருந்தாலும், தவறாகக் கட்டப்பட்டாலும், நைப்பின்மையா லும், மயிர் முதலியவை உராய்வதனாலும், அதிர்ச்சியினாலும், அமிதபோஜனம், கள், முதலியவைகளை அதிகமாக உபயோகப் படுத்துவதாலும், பகல் தூக்கம், இரவில் கண்விழிப்பு, அதி கப் புணர்ச்சி முதலியவைகளைச் செய்வதனாலும் விரணங்கள் எளிதில் குணமாவதில்லை.

## விரணம் ஆறிவருவதின் குறிகள்.

விரணத்தின் ஓரங்கள் புறாவின் வர்ணத்தையொத்தபடி யும், அதன் உள்பாகம் சீழ் முதலியவைகளில்லாமலும், சிறு சிறு மாம்ஸ முளைகளுடன் கூடியதாகவும் இருக்கும். மேலும் விரணத்தில் சுருக்கங்களும் ஏற்படும்.

## ஸத்யோ விரணங்களின் குறிகள்.

நெருப்பு, அடி, வெட்டு, குத்து முதலிய ஆகந்துக (வெளி யிலிருந்து உண்டான) காரணங்களினாலுண்டாகும் விரணங்க ளுக்கு 'ஸத்யோ விரணம்' என்று பெயர்.

இவை 8 வகைப்படும்.

(1) **க்ருஷ்ட வ்ரணம்** (சிராய்த்தல்) உடம்பின் தோல் சிறிது வழுமூண்டு நிணநீரோ அல்லது கொஞ்ச இரத்தக் கசிவோ ஏற்படும்.

(2) **அவக்ருத்த வ்ரணம்** (காயம் உண்டாதல்). மேற் கூறியதைவிட ஆழமான சிதைவு ஏற்பட்டு, இரத்தம் ஸ்ரவித்தல்.

(3) **விச்சின்னம்** அடி பலமாக விழுவதனுல் சதை வெளிவரும்.

(4) **ப்ரவிலம்பி.** எலும்பைத் தவிர மற்ற தசைகள் வெளியில் வந்து தொங்கும்.

(5) **பாதிதம்.** பலமான அடியினுல் தசைநார் துண்டித்து வீழ்தல்.

(6) **வித்தம்.** கூர்மையான ஆயுதத்தினுல் குத்தப்படுதல்

(7) **பிந்நம்.** கத்தி, அறுவாள் முதலியவைகளினுல் கிழிக்கப்படுதல்.

(8) **விதளிதம்.** அடி, பாரம், முதலியவைகளினுல் சரீர அவயவங்கள் நன்ருக நசுக்கப்பட்டு, இரத்தம், மஜ்ஜை முதலியவைகள் வெளியில் வருதல்.

இனி இவ்விரணரோக கரப்பான்ரோக சிகித்ஸை முறைகளில் காணப்படும் நோய்களுக்கான குறிகளையும், வகைகளையும் ஆராய்வோம்.

**அக்கி.**

இது 'விஸர்ப்பம்' என்ற வகையைச் சேர்ந்தது. உடம்பில் வீக்கம் ஏற்பட்டுப் பலநிறமுள்ள கொப்பளங்கள் உண்டாகும். இவை சிற்சில சமயங்களில் ஜ்வரத்துடனே அல்லது ஜ்வரமில்லாமலோ இருக்கும். இது மர்மஸ்தானங்களைப்பற்றி

அதிசீக்கிரத்தில் பரவுவதால் 'விஸர்ப்பம்' என்ற பெயரை அடைகிறது.

இது ஏழு வகைப்படும்.

### வாத விஸர்ப்பம்.

உடம்பெங்கும் வீங்கி, அதன்மேல் கறுநிறமுள்ள கொப்பளங்கள் எழும்பும், அதிகமான குத்தல் வலி, சரீர வாட்டம், இரைப்பு, தாகம் முதலியவைகளேற்படும்.

### பித்த விஸர்ப்பம்

சரீர முழுதும் வெகு சீக்கிரத்தில் வீங்கி, அதன்மேல் சிவப்பு அல்லது மஞ்சள் நிறமுள்ள கொப்பளங்களேற்படும். பித்த ஜ்வர லக்ஷணங்களும் காணும்.

### கப விஸர்ப்பம்.

தேக முழுதும் மினுமினுப்பான வீக்கம், அதில் வெளுப்பு நிறமுள்ள கொப்பளங்கள் எழும்புதல், அரிப்பு, ச்லேஷ்ம ஜ்வர குறிகள் முதலியவைகளேற்படும்.

### வாத பித்த விஸர்ப்ப லக்ஷணங்கள்

இதற்கு அக்னி விஸர்ப்பம் என்று வேறொரு பெயரும் உண்டு.

வீக்கம், ஜ்வரம், வாந்தி, மூர்ச்சை, பேதி, தாகம், எலும்பு பொடியானது போன்ற வலி, அக்னி மந்தம், ருசியின்மை, உடம்பிற்கு ஏற்றதல்லாத வஸ்துக்களிட விருப்பம், நெருப்புச் சுட்ட விரணத்தைப்போன்ற எரிச்சல், எரிச்சலுண்டான இடங்கள் கருமை நிறமடைதல், எரிச்சலில்லாத இடங்களில் சிவப்பு நிறப்புள்ளிகள், நெருப்புச்சுட்ட கொப்பளம்போல் உடம்பு முழுவதும் எழும்புதல், சரீர வேதனை, நித்திரையின்மை,

உடம்பு அலட்டல் முதலானவைகள் ஏற்படும். இது அசாத்ய ரோகமாகும்.

## வாத கப விஸர்ப்ப லக்ஷணம்

உடம்பில் பல உபத்திரவங்களுடன் கொப்பளங்களை உண்டாக்கும். ரத்த தாதுவும் கோளாறடைவதால் இந்நோய் சருமம், மாம்ஸம் இவைகளில் வ்யாபித்திருக்கும். இரத்தக் குழாய்களை நீண்டதாகவோ, வட்டவடிவமாகவோ, கொப்பள வடிவமாகவோ தடிக்கச் செய்யும். சிவப்பு நிறமுள்ள சுருக்கங்கள் கிரந்தி ரூபமாக எழும்பும். அப்போது ஜ்வரம், இரைப்பு,இருமல், பேதி, சரீரத்தில் வலி, வாய்உலரல், விக்கல், வாந்தி, உள்ளெரிச்சல், மூர்ச்சை முதலியவைகளுண்டாகும். இதற்குக் "கிரந்தி விஸர்ப்பம்" என்றும் பெயர்.

## கப பித்த விஸர்ப்பம்

ஜ்வரம், மரத்துப்போதல், தூக்கம், சோம்பல், தலைவலி, உடம்பு இளைப்பு, பிதற்றல், ருசியின்மை, மூர்ச்சை, பசியின்மை, எலும்புகளில் வலி, நாவரட்சி, இந்திரியங்களில் பார உணர்ச்சி, சீதபேதி, சிறுவிக்கம், இவைகளுடன் தேக காங்கையுமேற்படும். அவ்வீக்கங்களில் கறுப்பு நிறமும், வெளுப்பு நிறமும் கலந்த மினுமினுப்புள்ள தடிப்புகள் காணும். இவைகள் சீக்கிரத்தில் பழுத்து உடைவதில்லை. மாம்ஸங்களை அழுகச் செய்து துர்நாற்றத்தைக் கொடுக்கும். இதற்குப் 'பங்கவிஸர்ப்பம்' என்ற வேறொரு பெயரும் உண்டு.

## ஸந்நிபாத விஸர்ப்பம்

வாதம் முதலான தோஷங்களின் விஸர்ப்பங்களிலேற்படும் குணங்களைப்பெற்று ரஸாதி தாதுக்களைக் கெடுப்பதால் இதற்கு 'ஸர்வ விஸர்ப்பம்' என்றும் பெயர்.

**க்ஷத விஸர்ப்பம்**

ஆயுதம் முதலான சஸ்திரங்களினால் ஏற்பட்ட விரணத்தி லுள்ள உதிரம் கோளாரடைந்து வாயுவையும், இரத்தத்தை யும் பிரகோபிக்கச் செய்து, கொள்ளுப் பிரமாணமுள்ள கொப் பிளங்களை உண்டாக்கும்.

## கிரந்தி பேதங்கள்.

கபதோஷப் பிரகோபத்தினால் தோல், மாம்ஸம், நரம்பு முதலான விடங்களில் முடிச்சுகளுண்டாகும். இது கிரந்தி ரோகமாகும்.

**வாதக் கிரந்தி**

கறுத்த நிறத்துடன் காரணமில்லாமல் விருத்தியடைந்தும், குறைந்தும் உடம்பில் பற்பல கட்டிகள் ஏற்படும். இவை குத்தல், புரளல் முதலியவைகளைக் கொடுக்கும். இது பழுத்து உடைந்தால் அதிலிருந்து சிவப்பு நிறமுள்ள இரத்தம் ஸ்ரவிக் கும். பின்பு இது மிருதுவாகும்.

**பித்தக் கிரந்தி**

மஞ்சள் நிறமும் சிகப்பு நிறமும் கலந்த கட்டிகளேற்பட்டு அவைகளில் எரிச்சல் அதிகமாக இருக்கும். பழுத்து உடைந் தால் இரத்தமும் சீழும் பெருகும்.

**கபக் கிரந்தி**

வெளுத்தும், கனத்தும், அரிப்புடனும், அதிக வலியில்லா மல் வீக்கம் உண்டாகும். பழுத்து உடைந்தால் கெட்டியான சீழ் வெளிவரும்.

**ரத்தக் கிரந்தி**

மூன்று தோஷங்களும் கோளாரடைந்து இரத்தத்தை முறித்துக் கிருமிகளையுண்டாக்கும். இக்கிரந்தி மாமிஸத்தையும்

நரம்பையும் அநுஸரித்துப் பித்தக் கிரந்திகளுக்குள்ள குணங் களைப்பெற்று ரத்தம் ஸ்ரவிக்கும்.

### மாம்ஸக் கிரந்தி

மாம்ஸத்தை விருத்திசெய்யும் மாம்ஸம் முதலானவைகளை அதிகமாகச் சாப்பிடுவதனால், மினுமினுப்புடன் பருத்துக் கெட்டியான பற்பல கட்டிகளுண்டாகும். இது பழுத்து உடைந்தால் கபக்கிரந்திக்குள்ள குணங்களுடன்கூடிய பெருக்கு உண்டாகும்.

### மேதோ கிரந்தி

மேதஸை அதிகப்படுத்தும் ரஸாதி வஸ்துக்களைப் புசித்து அது விருத்தியாகும்போது வாயு அதிகமடைந்து மாம்ஸத் திலோ, தோலிலோ, வெளுப்பு நிறமுள்ளதும், மினுமினுப் பானதும் உள்ளே குலுங்குவதுமான சிறுசிறு கட்டிகளேற் படும். இது பழுத்து உடைந்தால் பிசினைப்போலக் கறுப்பு, சிவப்பு, வெளுப்புநிறமுள்ள சீழ் வெளிவரும். இதனால் தேகம் இளைக்கும்.

### அஸ்திக் கிரந்தி

எலும்புகள் நொறுங்கி உடம்பிலேயே சிக்குவதால் இக் கட்டி யேற்படும். இது சிற்சில சமயங்களில் விருத்தியாவதும் குறைவதுமாக இருக்கும்.

### நரம்புக் கிரந்தி

நரம்புகள் புடைத்து ரஸதாதுவின் ஓட்டமில்லாமல் தேங்கும். இரத்தஓட்டமும் நின்று வாயு அதிகரித்து நரம்பு களை முடங்கச்செய்து கட்டிகளைப் பிறப்பிக்கும்.

### வ்ரணக் கிரந்தி

ஷட்ரஸங்களையும் அதிகமாக உண்பதனால் இந்நோய் ஏற் படும் தேகத்தில் சிறுபுண் ஏற்பட்டாலும், அது வெகு எளி தில் விருத்தியாகி மாம்ஸங்களை முடிச்சு முடிச்சாக எழும்பச்

செய்யும். விரணங்களில் ஸஞ்சரிக்கும் வாயு அங்குள்ள தூஷித்த ரத்தத்தை உலரச் செய்வதால் விரணங்கள் அதிகமாகி எரிச்சலும், தினவும் அதிகமாகும். இது பெரிதானால் 'அற்புத கிரந்தி' என்ற நோயாகும்.

## கண்டமாலையின் குறிகுணங்கள்

த்ரிதோஷங்கள் மேதோ தாதுவை தூஷித்து, மாம்ஸமும் வ்ருத்தியடைந்து, கழுத்து, கண்கள், அக்குள் முதலான இடங்கள் சிறுமினுத்து நெல்லிக்காய்ப் பிரமாணமுள்ள பல கட்டிகளை உண்டாக்கும். இவைகள் சின்னாட்கள் சென்ற பின் பழுத்து உடையுந்தன்மை வாய்ந்தவைகளாகும். இவற்றுள் சிலவகை அற்ப வலியுள்ளவைகளாகவும், உடைந்து சீழைச் சொறிந்துகொண்டும், அரிப்புடனும், உஷ்ணத்துடனும் இருக்கும். சிலது அடிக்கடி கிளைத்துக்கொண்டும், வெகு நாளாகியும் அமுங்காதவைகளுமாக இருக்கும். மேலும் இந்நோய் அநேகமாகக் கழுத்தைச்சுற்றிலும் ஏற்படுவதால் இதற்குக் 'கண்டமாலை' என்ற பெயரேற்பட்டது.

## அசாத்தியக் குறிகள்

இக்கண்டமாலைக்கட்டியானது அறுகின் வேரைப்போல் சிறு சிறு துவாரங்களோடு கூடியிருந்தாலும், இதனால் ஜ்வரம், இருமல், வாந்தி, பக்கவலி, தேக இளைப்பு முதலிய உபத்ரவங்களேற்பட்டாலும், அசாத்யமாகும்.

## அரையாப்புக்கட்டி

மேற்கூறியபடி குறிகுணங்களுள்ள கட்டிகள் தொடையிடுக்குகளிலுண்டானால் அதற்கு 'அரையாப்புக்கட்டி' என்று பெயர்.

## நாடீவ்ரணம் (புரை)

இப்பகுதியின் ஆரம்பத்தில் கூறியபடியுள்ள விரண வீக்கம் நன்கு பக்குவமாகிய பின்னும் அதைச் சிகித்ஸை

செய்யாமல் அலக்ஷ்யம் செய்தால் அது மாம்ஸம் முதலான தாதுக்களை அழித்து நாடீவிரண ரோகத்திற்குக் காரணமாகும். சீழ் சேர்ந்துள்ள விரணத்தைத் தக்கபடி சுத்தம் செய்யாமலிருந்தாலும் அது சர்மம், மாம்ஸம், ஸிரை, ஸ்நாயு முட்டுகள், எலும்பு முதலியவைகளைக் கெடுத்துப் புரை ஓடும் புண்களை ஏற்படுத்துகின்றது. இதன் சீழ் சிறுகச்சிறுக துவாரம் செய்துகொண்டு உள்ளே ஒரு குழாய்போல் செல்வதனால் இதற்கு 'நாடீவிரணம்' என்ற பெயருண்டாயிற்று. இவை 5 வகைப்படும்.

## வாத நாடீவிரணம்

அதிகக் கடுமையானதும், ஸூக்ஷ்மமான முகத்துடனும் அதிகமான வலியுடனும், நுரையுடன் கூடிய சீழ் அல்லது துர்நீரை இரவு நேரங்களில் அதிகமாக வெளிப்படுத்தும். கருஞ்சிவப்பு நிறமுள்ளதாகவும் இருக்கும்.

## பித்த நாடீவிரணம்

இவ்வகையில் அதிகமான எரிச்சல், ஜ்வரம், நாவரட்சி, முதலியவைகளுடன் இதிலிருந்து வடியும் நீர் பசுமைநிறமாகவும் அதிகச்சூடாகவும் இருக்கும். பகல் நேரங்களில் அதன் பெருக்கு அதிகமாகவிருக்கும்.

## கப நாடீவிரணம்

கெட்டிப்பட்டும், மிகவும் வெளுப்பு நிறத்துடனும்' பிசுபிசுப்புடன் கூடியதாகவும், சிறிது இரத்தம் கலந்தும், அரிப்புடனும் வலியுடனும்கூடிய துர்நீர்க்கசிவை யுண்டாக்கும். இரவில் இதன் கசிவு அதிகமாக இருக்கும்.

## ஸந்நிபாத நாடீவ்ரணம்

அதிகமான ஜ்வரம், மேல்மூச்சு, மூர்ச்சை, வாயுலரல் முதலிய பொதுக்குறிகளுடன் மேற்கூறிய மூவகையிலும்

உள்ள குறிகளுடன்கூடிய நாடீவிரணமாகும். இது அஸாத்ய ரோகமாகும்.

## சல்யஜ நாடீவ்ரணம்

சரீரத்திலுட்புகுந்த முள் முதலான சல்யங்கள் இருக்குமிடத்திலிருந்தும், அதைச் சுற்றிலுமுள்ள இடங்களிலிருந்தும் புரையை உண்டுபண்ணும். அதிலிருந்து நுரைத்தும் உஷ்ணமானதும், இரத்தத்துடன்கூடிய துர்நீர் வெளிவரும். அதிகமான வலியும் உண்டாகும். இதிலுள்ள சல்யத்தை நீக்கினுலொழிய விரணம் இலகுவில் ஆருது.

## எழுநாயிறு, படுநாயிறு

எழுநாயராகி லெழும்வலது பக்கம்
பழுகாதடி நெஞ்சில் பார்கழுத்தில்—வழுவாமல்
நொந்து சீழ்க்கொள்ளும் நுகர இடமானல்
தொந்தபடுநாய றெனச்சொல்

(அகஸ்தியர்—2000)

(இ-ள்)

கழுத்து,நெஞ்சு முதலான இடங்களில் வலியேற்பட்டுச் சீழுடன் கூடிய வீக்கம் உண்டாகும். இது வலதுபுறத்திலிருந்தால் 'எழுநாயறு' என்றும், அதுவே இடதுபுறத்திலிருந்தால் 'படுநாயறு' என்றும் வழங்கும்.

## கன்னமூலம்

கன்னமூல மதுவலி காதிலும்
மன்னரியாணி யடித்துற வாங்கிலுஞ்
சென்னிநெத்தி பிடரியுஞ் சேரநோய்
சொன்ன நீரோடு சோறுங் குமட்டுமே

(அகஸ்தியர் 2000—299)

(இ-ள்)

காதுகளில் வலி ஏற்படும். நெற்றி, பிடரி, கன்னங்கள் முதலான இடங்களில் குத்தலேற்பட்டு ஆகாரமும் இறங்காது. இதற்குக் 'கன்னமூலம்' எனப்பெயர்.

## வெப்புப்பாவை

மத்தித்திருந்து வுடல்வற்றிக்
கனல்போல்மேனி வதும்பல்செயும்
அப்புக்காத்து மிகவுண்டாம்
கைப்புப்புளிப்பை மிகத்தேடி
உப்பும்வயிறு தனிற்புரளு
மொருபக்கத்தே தான்கிடக்கும்
வெப்புப்பாவை யிதுவென்று
வியனுமுனிவோர் விளம்பினரே.

(அகஸ்தியர் 2000—செய்.283)

(இ-ள்)

உடம்பில் வாயு அதிகமாகச் சேர்ந்து உடம்பு இளைக்கும். நோயாளிக்குக் கசப்புச்சுவை, புளிப்புச்சுவை இவைகளுள்ள பதார்த்தங்களில் விருப்பம் உண்டாகும். ஜ்வரமேற்படும். வயிறு உப்பும். ஒருபக்கத்தில் வலியும், வீக்கமும் உண்டாகும்.

## மகோதரம் அல்லது பெருவயிறு நோய்க்குக் காரணம்

தும்பிதேரை விடுநீரால் தோஷந்திரண்ட சுனைநீரால்
கம்பினுமியால் நெல்லுமியால்* மயிரிலாம்பு தான்கட்டிச்
செம்பொன் மகரக் குழைமடவாய் தினமுமுன் மேலுண்பதனுல்
வம்புமுலையாளிடு மருந்தால் மகோதரநோயும் வந்திடுமே.

(அகஸ்தியர் 2000—252)

* 'கதி முள்ளெலும்பால் மயிரதனுல்' என்ற பாடபேதமும் உண்டு.

(இ-ள்)

தும்பி, (தட்டான் பூச்சி) தேரை முதலியவைகளின் சிறுநீர் உடம்பின்மேல் விழுவதாலும், ஓரிடத்திலும் வெளியேறாமல் தேங்கி அசுத்தங்களுடன் கூடிய சுனைநீரை உட்கொள்வதனாலும், கம்பு, நெல் முதலான தான்யங்களின் உமி வயிற்றில் சிக்கிக்கொள்வதாலும், மயிர் குடலில் தங்குவதாலும், அதிக அளவில் சாப்பிடுவதனாலும், இடுமருந்து முதலியவைகளினாலும் மகோதர நோய் சம்பவிக்கும்.

## குறிகள்

அங்கமு முடைக்கவீங்கி வுரமெலிந்தாகமாகி
மங்கியவுதரந்தன்னில் வாயுவுஞ் சலமுங்கோர்த்து
கங்குல் சேர்நேரமாகில் கடியதோர் வாதைபண்ணு
மங்குல் சேர்குழலினாளே மகோதரமென்னலாமே.

(அகஸ்தியர் 2000—253)

(இ-ள்)

உடலெங்கும் வீக்கம், மார்புப்பக்கங்களில் இளைப்பு, நாவரட்சி, வயிற்றில் வாயுவும், நீரும் அதிகமாகச் சேர்ந்து குலுங்குதல், இரவு நேரங்களில் உபாதையின் அதிகரிப்பு முதலான குறிகள் உண்டாகும்.

## மகோதர அசாத்யக் குறிகள்

மேலோடு வயிறுமூதி மிகைக்கவே வீங்கும்போது
ஊசிபோலுதரம்நொந்து உதரமுங்காலும் வீங்கி
பாசிபோல் கண்சிவந்து பசுந்துடல் நீலம்போலாய்
கூறிடவேண்டாமிந்தக் குணமீது கண்டபோதே
சாவதே திண்ணமென்று சடக்கென விரைந்துபோமே

(அகஸ்தியர் 2000—34)

(இ-ள்)

வயிறு மிகப்பெரிதாகும், குத்துவலியுண்டாகும், வயிறு கால்கள் முதலான இடங்களில் அதிகமான விக்கம், கண்களில் சிவப்பு, உடலில் நீலநிறம் முதலிய குறிகள் ஏற்பட்டால் நோயாளி இறப்பது திண்ணம் என்று அறிந்துகொள்ளவும்.

## பிளவையின் குறிகள்.

பெரியபிளவை முள்ளெலும்பில்
　　பெருக்கப் பிளக்கும் நடுமுதுகி
பெருமையதுவு மாறும
　　லடங்காவுழலையது வெடுக்கும்
மரியப் பொன்னிறுவாரையல்லி
　　யதுவும் புன்னைக் காயளவு
உரியப்பழமோர் தனிற்குடிக்க
　　உழலைதவன மோடிடுமே. (உ)

(அகஸ்தியர் 2000)

(இ-ள்)

முள்ளெலும்பின் மேல் இப்பிளவை ஏற்பட்டு வெட்டுவதைப் போன்ற வலியைத் தரும். தாங்கவொண்ணாத எரிச்சலும் உண்டாகும், இதற்கு மருந்தாவது.

பொன்னுவரை, அல்லி இவ்விரண்டையும் (புஷ்பங்கள்) புன்னைக் காயளவெடுத்து நன்றாக அரைத்துப் புளித்த மோரில் குழப்பி அருந்தவும். எரிச்சல் நிற்கும்.

முதுகிடுமையந்தன்னில்
　　முள்ளந்தண் டதனைப்பற்றி
பதுமமாங் காய்கள்போல
　　பிளவையும் பலகண்ணுகில்

மதியுறு மருந்தினாலும்
  மற்றுள கருவியாலும்
விதியின்படியேதென்ன
  வேதமா முனிவர் சொன்னார் (௬)

(இ-ள்)

முதுகின் நடுவிலுள்ள முள்ளந்தண்டின் மேல் சிறு சிறு தாமரை மொட்டின் பிரமாணமுள்ள பற்பல கண்களுடன் கூடிய கட்டிகள் உண்டாகும்.

இவைகளை மருந்துகளினாலும், சஸ்திர சிகித்ஸைகளினாலுமே ஆற்றக்கூடியவை.

**பக்கப் பிளவை.**

மார்பினி லீரல்தன்னில் மறுப்படாத் தண்டுகோல்போல்
நேர்படச் செம்மையாக்கி நிற்பதே வரவுநெஞ்சில்
கார்செறி குழலினாளே! கருவியால் கீறிக்காரம்
பேர்படக் கட்டப்பக்கப் பிளவையும் விட்டுப்போமே. (௬)

முதுகிற் புறத்திலுறைபோல முள்ளந்தண்டி தனைத்தப்பி
யிதுவேவந்தால் மரணமில்லை யெனவேகண்க ளடைபடுமென்
றதிலேமேனி குளிர்ஜ்வரமு மதனோடுமூலை கழிச்சலுட
னிதுதான்பக்கப் பிளவையதுக் கினிதாங் காலைக்கீறியிடே.
(௭)

(அகஸ்தியர் 2000 ஏடு 248)

(இ-ள்)

மார்பு, ஈரல், முதலான இடங்களில் தண்டுகோல் போன்ற வீக்கமேற்படும். இதனைச் சஸ்திரத்தினால் கீறிக் காரம் வைக்கக் குணமுண்டாகும்.

இப்பிளவை முள்ளந்தண்டைத்தவிர முதுகின் மற்ற பாகங்களில் ஏற்பட்டால் சுக சாத்யமாகும், இருந்தாலும்

பிளவையின் கண்களடைபட்டு, உடம்பில் குளிர் ஜ்வரமும், எரிச்சலும், கழிச்சலும் உண்டாகுமாதலால் அதைச் சஸ்திரத்தினல் கீறி ஆற்றிவிடுதல் நல்லது.

## பிளவையின் ஸ்தானங்கள்.

பிளவைபிறக்கும் வகைகேளீர் பிடரிகன்னந் தலைமுதுகு
வளமதிடுப்புமார்தனிலே வருநோய் பந்து கமலம்போல்
துளையதாகிக் கண்வெடித்துச் சுற்றித்தோன்றுமென்றுயர்ந்
ரளகபார முலையாளே! யறிந்தே புவியிலுரையீரோ. (தோ
(அகஸ்த்யர் குணவாகடம்-297)

(இ-ள்)

கழுத்துப்பிடரி, கன்னம், தலை, முதுகு, இடுப்பு, மார்பு, முதலிய இடங்களில் பந்து, தாமரைமொட்டு முதலியவைகளைப் போன்ற கட்டிகளேற்பட்டு அதில் பல கண்களும் ஏற்படும்.

## நீராம்பல் (நீராமை) (Dropsy.)

உடம்புமுலர்ந்து §யிருமலுண்டாய்
*யுதரம் வீங்கி நாவரண்டு
துடங்கண் வெளுத்துப் புறங்காலுந்
தடித்து வீங்கித் தாகமுமாய்
அடந்தே மூச்சு மிகத்தோன்று
மனத்தல் மிசவேவுண்டாகும்
மடந்தாய் சொன்னோம் நீராம்பல்
வருந்துங் குணங்களிவைதானே. (உசசு)

---

§'திமிருண்டாய்' என்னும் பாடபேதம்.

*'யுதரம் வீங்கியுள்ளடைந்து' என்றும் பாடம்.

மார்பின்கீழ் வயிறு தாழ்ந்து
வகைபட வீக்கமாகி
நேரொத்த காயம்வற்றி
நிறமது வெளுத்து நாவும்
நீர்வற்றித் தண்ணீர்தேடும்
நினைவற்றுப் பலவுங் கேட்கும்
வார்கட்டு முலையாய்ச் சொன்னோம்
வயிற்றி நீராம்பலாமே. (உருய)

(இ-ள்)

உடம்பு இளைத்து இருமலேற்படும். வயிறு வீங்கும், அடிக்கடி நாவரண்டு தாகமேற்படும். கண்கள் வெளுத்துப் புறங்கால்கள் வீங்கும். மூச்சுத் திணரலுண்டாகும். மனதில் வேதனையுண்டாகும். மேல்வயிறு உளளே போகும் (உட் செல்லும்). அடிவயிற்றில் வீக்கமுண்டாகும். நாக்கு வெண் மை நிறத்தையடையும். இக்குறிகள் காணப்பட்டால் அது 'நீராம்பல்' ரோகமாகும்.

## பேராம்பல் (பேராமை) (General Anasarca)

வீங்குஞ்சலமு மிசக்கோற்கும்
மிகுந்தே பொருமுமுடலெங்கும்
தேங்கும் வாங்கும் முகந்தன்னைத்
தேடுமறுகித்துயர் மிகுந்திருக்குங்
தாங்குவகண்ணு மேல்மூச்சுஞ்
சோபை யும்பின் தாபிக்கும்
எங்குமிகவே பேராம்ப
லிதுவே செய்யுங் குணந்தானே. (உருக)

(இ-ள்)

உடம்பெங்கும் வீக்கமுண்டாகும். சருமத்தில் நீர் ததும்பி நிற்கும். முகத்தில் சோகக் குறிகள் காணும். கண் கள் சொருகும். மேல்மூச்சு அதிகமாக இருக்கும். உடம்பில் எரிச்சலுண்டாகும். இதனைப் 'பேராம்பல்' என்று கூறுவர்.

# கரப்பான் ரோகக் குறிகள்.

(அகஸ்தியர் குணவாகடத்திலிருந்து)

வாத கரப்பான்

வீங்குங்குத்தி மிகவுழைந்து
விடம்போலுடலந் திமிர்ந்துகண்டு
அங்கம்புண்ணில் சலம்விழுந்தா
லதுவுந்தினவு சொறிசெய்யில்
நீங்கிச் செவ்வே தீராது
நெடுநாட்படவே மசகிநிற்கும்
தேங்கச்சுட்டுப் புகைத்துவிடத்
தீரும் வாதக் கரப்பனிதே. (௩௪)

தலையுங்கனத்து காலெரிந்து
தறுகாவுடம்புந் திமிருண்டாய்
புலையுங்காலும் வீக்கமுமாய்
புளையாதிருக்கு முறுப்புளையுங்
களையும் மலையுஞ் சரீரநேர்
மிகுந்து வலுவைக் குறைத்துவரும்
வலுவும் குலையுங் குன்மவாதங்
கொடிய கரப்பன் தானுமே. (௩௫)

நொந்துதான் கனத்துமிக்க
நோவுடைப் புண்கள் தன்னில்
வந்துவல் லாயுதங்கள்
வடுவறத் தைத்திடத்தில்
சந்துதாழ் மொழிபெருத்
தசைவு தானங்களாகிற்
வந்துதான் தொடுக்குஞ் சேதி
வாதமாங் கரப்பானுமே, (௩௮)

(இ-ள்)

உடம்பில் வீக்கமும் குத்துவலியுமுண்டாகும் விஷத்தைச் சாப்பிட்டதுபோல் உடம்பெங்கும் திமிரேற்படும். அங்கங்களிலேற்பட்ட புண்களில் ஜலம் வடியும். அதிகமான அரிப்பு உண்டாகும். அதைச் சொறிந்தால் இலகுவில் ஆறாத விரணமாகும். இவைகளுக்குப் புகையிட்டால்தான் குணமாகும்.

தலையில் பார உணர்ச்சி, கைகால்களில் எரிச்சல், உடம்பில் திமிர், காலில் வீக்கம், உறுப்புகள் அதனதன் வேலைகளைச் செய்யாமலிருத்தல், சரீரத்தின் பலம் குன்றல், முதலான குறிகளும் காணும்.

புண்களின் அடிபாகம் கனமாகி அதில் ஆயுதங்கள் தாக்கினால் அவை நாளாவட்டத்தில் வாதகரப்பான் ரோகத்தைத் தோற்றுவிக்கும்.

## வரள் கரப்பான்.

கால்தலையுடம்பதெங்கும் கனக்கவே சிறுசிறுங்காய்
சேலது கடிவதத்தித் தினவுடன் சொறிவதாகிச்
சாலவே காதுநாசி மிடறுதான் தாதாராகில்
மால்தரு மடந்தைமாதே வரட்சிசேர் கரப்பானுமே(சுஙு)

வார்சொல்லறிந்து வசங்காதே வரட்சிக்கரப்பான் வகைகேளீர்
ஊறுஞ்சொறிதான் பரபரத்து யுடம்பு மிகவே பதைப்புண்டாய்
தீருமிருந்து பரந்தேனுந் திதமாய்ச்சாம்பல் பொருக்கேறு
மாறுமொருவற் குண்டென்னில் சடாய்ப்புலால்மேல் நாறுவதே. (சுரு)

(இ-ள்)

தலை, உடம்பு முதலான இடங்களில் கனம் அதிகமாகும். சிறுசிறு சிறங்குகள் அதிகமாகி அரிப்பு ஏற்படும். காதுகள், மூக்கு முதலான விடங்களிலும் இது பரவும்.

உடம்பில் சொறிகளேற்பட்டு, உடம்பில் சிறு வீக்கமு மேற்படும். நன்றாகச் சொறிந்துவிட்டால் அவ்விடத்தில் சாம்பல் நிறமுள்ள பொருக்குகள் ஏற்படும்.

## மண்டைக் கரப்பான்.

சிரசில வலிக்கும் மயிர்காலிற்
சிறங்காயழிஞசப் புண்ணாகும்
பரவிச் செவியில் சீழ்பாயும்
பக்கங்கழுத்தடி கண்டுகட்டும்
விரசங்கொண்டு வேதனையு
மிகவும் பிடரி தலைநோகும்
வரசேயறிந்த குழல்மடவீர்
மண்டைக்கரப்பான் குணந்தானே. (ருச)

(இ-ள்)

தலைவலி அதிகமாகும். மயிர்கால்கள்தோரும் சிறங்குகளேற்பட்டுப் புண்களாகும். காதுகளிலிருந்து சீழ் வெளி வரும். அருசியுடன் வேதனை அதிகமாக இருக்கும். கழுத்துகளின் பக்கங்களினடியில் கரளைகள் உண்டாகும். இவை (enlargement of glands) 'மண்டைக் கரப்பான்' குறி குணங்களாகும்.

## விஷ பாகம்.

விங்கும்வெற்று மொருபக்கம் மேனிவரண்டு வெளிறிடுங்கண்
தூங்குந்தலையுங் கனத்துநிற்கும் துயரம்மிகுந்து தாகிக்கும்
வாங்கிப்பொசிக்கமாட்டாது வாயுவுடலில் விஷம்போல
ஏங்கிக் கொல்லும் விஷபாகமிதுவே செய்யுங் குணமாமே,

(அகஸ்தியர் 2000—செய். 1513.)

(இ-ள்)

உடம்பில் வீக்கம் ஏற்பட்டுப் பின்பு அது குறையும். உடம்பில் வரட்சி அதிகமாகி வெளுப்பாகும். தூக்கம், தலை பாரம், இவைகளுடன் தாகம் மிகுந்து காணும். சாப்பாடு செல்லாது. உடலில் வாயு நிற்கும். பின்பு வாதனை அதிகமாகி உயிரையும் மாய்க்கும். இவைகள் விஷபாகத்தின் இலக்ஷணங்களாகும்.

(கீழ்கண்ட கரப்பான் ரோகங்களின் குறிகள் 'பாலவாகட'த்திலிருந்து எடுக்கப்பட்டவை)

## பித்தக்கரப்பான் குறிகுணம்

தலைவலி, தேகத்தில் சூடு, வாந்தி, சில சமயங்களில் கடுமையான ஜ்வரம், உடம்பு சிவப்பாதல், கண்கள் பசுமை நிறத்தையடைதல், மலபந்தம், முதலான குறிகள் காணும்.

## கபக்கரப்பான்

நன்முகப் பேச இயலாமை, மார்படைப்பு, நெஞ்சு, மார்பு முதலானவைகளில் புண்களேற்படுதல், தலைவலி, வாய் புண் உண்டாதல், முதலான குறிகளால் 'கபக்கரப்பான்' என்று தெரிந்துகொள்ளவும்.

## அரிகரப்பான்

இலிங்கப்புற்று, யோனிப்புற்று, உடலில் ஆறாதபுண்கள், அரிப்பு, உடல் ஆக்ருதி மாற்றம், முதலான குறிகளுடன் இருதுடையிடுக்குகளிலும் விரணமாகி அதிலிருந்து நீர் வடிதல், உடம்பு இளைப்பு, வாட்டம் முதலான குறிகுணங்களும் ஏற்படும்.

## ஊதுகரப்பான்

குளிர் ஜ்வரம், உடம்பெங்கும் சிறு கட்டிகளேற்படல், செயலின்மை, உடலில் வீக்கம், மூக்கில் புண் உண்டாதல் முதலான குறிகுணங்கள் தோன்றும்.

## சூலைக் கரப்பான்

முகவாட்டம், உடலில் வெடிப்புகள் காணல் முழங்காலை நீட்டவும், மடக்கவும் முடியாமை, கையினுல் உணவு உட்கொள்ள முடியாமை, மயக்கம் முதலான குறிகளேற்படில் அது 'சூலை கரப்பா'னுகும்.

## வெடி கரப்பான்

உடல் வீக்கம், கிரந்தியில் கண்டு கண்டான வீக்கம், ஜ்வரம், தலைவலி, அரிப்பு முதலான குறிகளேற்படும்.

## பொரி கரப்பான்

உடம்பில் சிவப்பு நிறமுள்ள தடிப்புகள், அவை பழுத்து உடைந்தால், அவைகளில் தாங்கமுடியாத எரிச்சல், நாவரட்சி, மனப்ராந்தி முதலான குறிகளுண்டாகும்.

## சட்டைக் கரப்பான்

மூட்டுகளில் வலியுடன் கள்ளிப்பூவைப் போன்ற சிறங்குகளேற்படும். அதிலிருந்து துர்நீர் கசியும். உடலில் உஷ்ணம், மலச்சிக்கல், தலைவலி, ஆகாரத்தில் வெறுப்பு, முதலான குறிகளும் ஏற்பட்டால் அது 'சட்டைக் கரப்பான்' ஆகும்.

## ஓடு கரப்பான்

மூட்டுகளில் வீக்கம் ஏற்பட்டு அவைகளை நீட்டவும் மடக்கவும் முடியாமை, நரம்புகளில் வலியேற்பட்டுக் குத்துவலி ஏற்படல், மலச்சிக்கல், உடம்பில் தடிப்புகளேற்பட்டுப் பின்பு வீக்கங்கள் முதலான குறிகளேற்படும். இது 'ஓடு கரப்பான்' என்ற நோயின் குறிகளாகும்.

## கருங்கரப்பான்

காரணமில்லாமல் அழுகை, ஜ்வரம், குழந்தை பாலுண்ணாமை, உடல் நிறவேறுபாடு, நரம்புகள் பசுமை நிறமடைதல்,

கையிற்றங்காது துள்ளிவிழுதல், கால், முகங்கள் முதலான விடங்களில் வீக்கம் முதலான குறிகளேற்படும்.

## செங்கரப்பான் குறிகுணம்.

ஜ்வரம், உடம்புவலி, வீக்கம், அனத்தல், அரிப்பு, வியர்க்குரு, முகம் கருமை நிறம் அடைதல், உடம்பு சிவப்படைதல் முதலிய பற்பல குறிகளுண்டாகும். இது அசாத்யமாகும்.

## கொள்ளிக்கரப்பான்

வயிறு வீக்கம், மலபந்தம், உடல்மெலிதல், குரற்கம்மல், விக்கல், முதலான குறிகள் உண்டாகும். இதில் 'கொள்ளுக் கரப்பான்' என்ற ஒருவகையும் உளது. கொள்ளின் நிறத்தை யொத்த தட்டையான தடிப்புகள் உடம்பு முழுவதும் ஏற்படும். இதற்குக் கொள்ளை அவித்து அதிலிருந்து கிளம்பும் ஆவியைக் கரப்பான் புண்களில் பிடித்தல் வழக்கம். ஆனால் 'கொள்ளிக்கரப்பான்' என்ற நோயால் பீடிக்கப்படும் குழந்தைகள் பிழைப்பது அரிது.

## தோஷக் கரப்பான்

தேகத்தின் உள்ளும், மேலும் நடுக்கத்துடன் கூடிய ஜ்வரம் உண்டாகும். உடம்பு அழன்று புண்களேற்படல், கள்ளின் வாடை வாயிலிருந்து வீசுதல், உடல் வீக்கம், மூக்கில் அரிப்பு, தீராத அழுகை முதலானவை ஏற்படும்.

## வாலைக்கரப்பான் குறிகள்

கால்கடுப்பு, கில்கள், கழுத்து, இவ்விடங்களில் சருமம் வெடித்துப் புண்கள் முதலானவைகளேற்படும். அதிலிருந்து நீர்வடியும். உடம்பு இளைத்தல், முதலான குறிகளும் உண்டாகும்.

## வீங்குகரப்பான் குணம்.

உடம்பில் வீக்கங்கள் கட்டுக்கட்டுகளாக உண்டாகி பின்பு புண்களேற்பட்டு எரிச்சலுண்டாகும். எரிச்சல் நின்றபின் அதிலிருந்து நீர் வடியும். இது 'வீங்கு கரப்பான் ரோகம்' ஆகும்.

## விப்புருதிக்குறி குணங்கள் (வித்ரதி)

இது சீழுள்ள கட்டிகளைக் குறிக்கும். வாதாதி தோஷங்கள் சர்மம், இரத்தம், மாம்ஸம், மேதஸ் என்கிற கொழுப்பு முதலானவைகளை தூஷித்துப் பின்பு கிரமமாக அஸ்தி முதலான ஆழமான தாதுக்களைப்பற்றி விருத்தியாகி பெருத்த வீக்கத்தை உண்டுபண்ணுகின்றன. பின்னர் இது மெதுவாகப் பழுத்து உடையும்.

## வாதவித்ரதி

கறுப்பு அல்லது சிவப்பு நிறமுள்ள கட்டிகள் உண்டாகி அவை சில சமயங்கள் பெரிதாகவும், சில சமயங்களில் சிறியதாகவும் ஏற்பட்டு, அதிக வேதனையுள்ளதாகவும் இருக்கும்.

## பித்த வித்ரதி

பழுத்த அத்திப்பழம் போன்ற நிறமுடையதாகவும், ஜ்வரம், எரிச்சல் முதலானவைகளோடு கூடியவைகளாகவும், சீக்கிரத்தில் பழுக்கும் தன்மையுள்ளதாகவும் இருக்கும்.

## கப வித்ரதி

இது அகல்போன்று அகன்றும், வெண்மை நிறமுள்ளதாகவும், குளிர்ச்சியாகவும், பளபளப்புள்ளவைகளாகவும், வேதனைக் குறைவுள்ளதாகவும், வெகு மெதுவாகப் பக்குவமடையுந் தன்மையுள்ளவைகளாகவும் இருக்கும். கொட்டாவி, அருசி முதலான குறிகளும் உண்டாகும்.

## ஸந்நிபாத வித்ரதி

பற்பல நிறங்களுள்ளதாகவும், மிகுந்த வலியுடன் கூடிய தாகவும், சீழுடன்கூடிய திரண்டு வராத கட்டியுடனும் மிகப் பெரிதாகவும் இருக்கும்.

## ரக்த வித்ரதி (Haemotoma)

வித்ருதிக்கட்டி கறுமை நிறமுள்ள கொப்பளங்களினால் சூழப்பட்டுள்ளதாக இருக்கும். எரிச்சல் அதிகமாகும். தாகம், ஜ்வரம் முதலான குறிகளுமுண்டாகும். புருஷர்களுக்கு வெளிப்புறத்திலும் ஸ்திரீகளுக்கு உட்புறமும் இந்நோய் காணும்.

## அபிகாதஜ வித்ரதி

கத்தி முதலான ஆயுதங்களினால் தாக்கப்பட்டவன், விரண ரோகிக்குள்ள பத்யங்களை அநுஸரிக்காமல் இருந்தால், அடி பட்டதாலேற்பட்ட வெப்பம் வாயுவினால் தேகமுழுவதும் பரவி, இரத்தத்துடன்கூடப் பித்தத்தையும் அதிகரிக்கச் செய்து இந்நோயை உண்டாக்கும். ஜ்வரம், நாவரட்சி, அழற்சி முதலியவைகளும் ஏற்படும்.

## அந்தர் வித்ரதி (abscess of Internal Organs)

தோஷங்கள் கோளாறடைந்து குல்மரூபமாகவோ, புற்றைப்போன்றோ, நன்றாகப்படர்ந்தோ உடலின் உட்புற அவயவாதிகளில் வித்ருதியை உண்டாக்குகின்றன. அவைகள் எந்தந்த அவயவங்களைப் பாதிக்கின்றனவோ அந்தந்த பெயர் களையும் அடையும்

குதவித்ருதியில்—அபானவாயு தடைப்படும்.

வஸ்திவித்ருதியில்—சிறுநீர் மிகுந்த கஷ்டத்துடன் வெளி வரும்.

**நாபிவித்ருதியில்:**—விக்கலுண்டாகும், மேலும் தேகத்தில் தாங்கவொண்ணாத வலியும், மனக்குழப்பமும் ஏற்படும். அபானவாயு ப்ரகோபமும் அதிகரிக்கும்.

**வங்க்ஷண வித்ரதி**— பின்பாகத்தில் தொடையிடுக்குகளிலும் பிடிப்பும், கடுமையான வலியுமேற்படும்.

**ப்லீஹ வித்ரதி**—மூச்சுத்திணரல் அதிகமாயிருக்கும்.

**இருதய வித்ருதி**— கால், கை முதலான அங்கங்களில் பிடிப்பு ஏற்பட்டு வலியும், இருமலும் உண்டாகும்.

**யக்ருத் வித்ருதி**—(Liver abscess) பெருமூச்சும், விக்கலும் அதிகமாகும்.

**க்லோம வித்ருதி**— (Left Lung abscess) நாவரட்சி அதிகமாகும்.

## தோஷங்கள் வெளிவரும் மார்க்கம்

நாபிக்குமேல் ஏற்படும் கட்டிகள் பக்குவமடைந்தால் அந்த தோஷம் வாய்மூலமாக வெளிவரும். நாபிக்குக் கீழ் உண்டாகிப் பக்குவமடைந்த வித்ருதிகளின் தோஷங்கள் குதத்தின் மூலமாகவே வெளியாகும்.

## பக்ந நிதானம் (Fractures)

பக்னம் இருவகைப்படும். ‘ஸந்தி பக்நம்’ (மூட்டு நழுவுதல், (Dislocations of Joints) என்றும், ‘காண்டபக்நம்’ எலும்பு முறிதல் (Fractures) என்றும் அவைகளுக்குப் பெயர்களாகும்.

## ஸந்திபக்ந லக்ஷணங்கள்.

கோளாறடைந்த மூட்டுகளை நீட்டும்போதும், மடக்கும் போதும், அல்லது திருப்பும்போதும் வலி அதிகமாக

இருக்கும். ஓரே நிலமையில் வைத்திருந்தபோதிலும் வலி அதிகமாகும். அந்த பாகத்தைத் தொடவும்முடியாது. மேலும் அம்மூட்டை நீட்டவோ அல்லது மடக்கவோ முடியாத நிலமையும் ஏற்படும். இவை 'மூட்டு நழுவு'தலின் குறிகளாகும்.

**வகைகள்**

**உத்பிஷ்டம்**—மூட்டில் சேரும் எலும்புகளின் முனைகள் ஒன்றோடொன்று தேய்வதுடன் வீக்கமும் உண்டாகும். இரவு நேரங்களில் வலி அதிகமிருக்கும்.

**விச்லிஷ்டம்**—மூட்டுகள் விலகிவிடுதல் என்ற இவ்வகையில் எப்போதும் வலியிருக்கும்.

**விவர்த்தம்**—மூட்டிலுள்ள எலும்புகள் ஒன்றின்மேலொன்று ஏறிக்கொண்டு வீக்கத்துடன் வலியையும் உண்டாக்கும். இரவு வேளைகளில் வலி அதிகரிக்கும்.

**திர்யக்கதம்**—ஸந்தியை விட்டு எலும்பு விலகி குறுக்காகப் பாய்ந்துவிடும். வலி அதிகமாயிருக்கும்.

**ஊர்த்வக்ஷிப்தம்**— எலும்புகள் தன் நிலைமைகளை விட்டு ஸந்தியின் மேலே தூக்கிக்கொள்ளும். கடுமையான வலி உண்டாகும்.

**அதஃக்ஷிப்தம்**—ஒரு எலும்பு தன் ஸ்தானத்தைவிட்டுக் கீழ்நோக்கி நழுவி அதன் முனைகள் ஒன்றுசேராமலிருப்பதுடன் அதிகமான வலியும் உண்டாகும்.

## காண்டபக்நத்தின் குறிகள்.

அவயவம் துவளல், வீக்கம், வலி, ஒடிந்த எலும்புகளை சேர்த்து இணைத்தால் 'நற'நற' என்ற சப்தம் (Cripitation) தொடமுடியாதவலி, குத்தல், துடித்தல், அவயவத்தை எப்படி வைத்தபோதிலும் வலி தாளாமை முதலியவைகளாம்.

வகைகள்

கர்கடக பக்நம்—எலும்பின் நடுபாகத்தில் அடிவிழுவதனுல் அவ்விடம் நசுங்கி அதன் இருபுறங்களும் உயர்ந்து தோன்றுதல்

அச்வகர்நம்—எலும்பின் மத்யபாகம்வரை நசுங்குவதாலேற்படும் கோளாறு.

விசூர்ணிதம்—எலும்பு பொடியாகுதல்.

பிச்சிதம்—எலும்பு நன்ருக நசுங்கிவிடுதல்.

அஸ்தி சல்லிகா.—எலும்பின்மேல் பாகத்திலுள்ள மெல்லிய தோலின் சிதைவு.

காண்ட பக்னம்— எலும்பு இரண்டு துண்டுகளாகப் போதல்.

அதிபாதிதம்—துண்டுகள் நன்ருக ஒடிந்து ஒன்றின்மீதொன்று ஏறிக்கொள்ளல்.

மஜ்ஜாகதம்:— எலும்பினுள்ளிருக்கும் சோறு வெளிவருதல்.

ஸ்புடிதம்.—அடியினுல் எலும்பில், சிறிய பிளவு ஏற்படுதல்.

வக்கிரம்—எலும்பு வளைந்து போதல் (Green Stick Fracture).

சின்னம்—எலும்பின் நீளவாட்டத்தில் ஏற்படும் பிளவு.

## பாத வன்மீக ரோகம் (கால்ப்புற்று) Cancer.

கபப்பிரதானமான தேசங்களில் வாசம் செய்தல், மலஜலம் ஊறிய பதார்த்தங்களைப் புசித்தல், கபத்தை வ்ருத்தி

செய்யக்கூடிய பதார்த்தங்களைப் புசித்தல், அதிகமான ஸ்திரி ஸங்கம் முதலியவைகளினுல் தொடையில் கபம் விருத்தி யாகும். பின்பு சிறுகச் சிறுக வாதபித்தங்களும் அதனுடன் ஒன்று சேர்ந்து துர்மாம்ஸத்தை வளர்க்கும். அவ்வாறு மாம்ஸம் விருத்தியாகும்போது, அரோசகம் முதலான குறி களும் ஏற்படும் இதனுலேற்படும் புண்கள் எளிதில் ஆறுது.

## பவுத்திர ரோக வகைகளும் குறிகுணங்களும்

(யூகிமுனி வைத்ய சிந்தாமணியிலிருந்து)

### ஆசனப் பவுத்திரம்

உடம்பு இளைக்கும். குதத்தில் அரிப்பு உண்டாகும். லேசாக ஜ்வரமடிக்கும். பின்பு ஆஸன வாயினருகில் குத்து வலியுடன் சிறு கொப்பளமுண்டாகும். உடம்பில் நடுக்கலும், மயக்கமும் ஏற்படும். மலத்துடன் இரத்தமும் சீழும் விழும்.

### கோடிப் பவுத்திரம்

சடையைப்போல் குதப்பிரதேசத்தில் வீக்கம் உண்டாகும். அதன் அடிகனத்துப் புண்ணுகி அங்கு பருத்திக் கொட்டைப் பிரமாணமுள்ள மாம்ஸ முளையேற்படும். உடம்பில் வெளுப்பு நிறமும், துர்நாற்றமும், அதிகமாகும்.

### பக்கப் பவுத்திரம்

ஆண்குறியின் விதைகளுக்கிடையேயுள்ள நரம்பு (ஸீவனி) சம்பந்தப்பட்டு வலப்பக்கமோ அல்லது இடப் பக்கமோ தடித்துப் பழுத்து உடைந்து செந்நிறமுள்ள நீர்க் கசிவை வெளிப்படுத்தும். அதன் வழியே சிறுநீரும் கசியும்.

### மூலப் பவுத்திரம்

ஆஸனத்வாரம் பெரிதாகிப் பொருக்கமுடியாதபடி குத்துவலி யேற்பட்டு நரம்புகள் புடைத்துக் கருணைக்கிழங்கின்

குருத்தைப்போல் முளையேற்படும் இதிலிருந்து செந்நிற முள்ள நீர் முதலில் கசியும். பின்பு முளையுடைந்து துர் நாற்றமுள்ள நீர் வெளிவரும்.

## கிரந்திப் பவுத்திரம்

ஆஸனத்தில் கடுப்பு அதிகமாகிக் கட்டியேற்பட்டுப் பழுத்து உடையும். பவுத்திரத்தினுள் கொடிகள்போல் புரைகள் ஏற்படுவதுடன் ஆண்குறியிலும் புண்கள் உண்டாகும். உடம்பில் நாற்றத்துடன் வியர்வைத்துளிகள் காணும். ஆண்குறிக்கடியில் விக்கமும் உண்டாகும்.

## மேகப் பவுத்திரம்

விதைகளில் நீர் சுரந்து பின்பு அது உடைந்து பனிநீர் போன்று வெளியாகும். சிறிது நாட்கள் சென்றால் சீழாகவும் அது மாறும். குளிர்ஜ்வரம் அன்னத்வேஷம், கைகாலெரிவு, உடம்பு இளைப்பு, மதமதப்பு முதலான தேகசம்பந்தமான குறிகளும் காணும்.

## ஆசனக் கண்டமாலை

ஆஸனத்தில் அம்பு குத்துதலைப் போன்ற வலி, தேகத்தில் பீதி, ஜ்வரம் முதலானவைகளுடன் மலத்வாரத்திற்குச் சமீ பத்தில் பற்பல கண்களுடன் புண்களேற்படும். அதன் வழியே மலமும் சிறுநீரும் வெளிவரும். அரிப்பும் எரிச்சலும் உண்டாகும். சிவப்பு நிறமான கசிவும் ஏற்படும்.

## சரக் கண்டமாலை

கருணைக்கிழங்கின் குருத்தைப்போல் பற்பல முளைகள் ஏற்பட்டு அவைகள் பழுத்து உடைந்து சீழும் இரத்தமும் பெரும் அளவில் வெளியாகும். அம்புக்குத்தலை யொத்த வலியும் வீக்கமும் உண்டாகி அங்குள்ள மாம்ஸம் அழுகி நாற்றமெடுக்கும்.

## யோனி கந்த நிதானம்

யோனித்திரி, யோனிலிங்கம் முதலியவைகளை ஆயுர் வேதத்திலுள்ள யோனிகந்தம் என்ற வியாதியில் சேர்ப்பது மிகப் பொருத்தமாகும்.

ஸ்திரீகள் பகலில் அதிகமாகத் தூங்குவதனுலும், அதிக மான கோபத்தினுலும், அதிக தேகப்பயிற்சியினுலும், அதிக மான புணர்ச்சியினுலும், மர்மஸ்தானத்தில் நக தந்தாதிகளினு லேற்படும் காயங்களினுலும், வாதாதி தோஷங்கள் பிரகோப மடைந்து எலுமிச்சங்காய்ப் பிரமாணமுள்ள சீழும் இரத்தமும் கலந்த கட்டியை யோனியில் உண்டாக்கும்.

### வாத யோனிகந்தம்

விக்கம் ருக்ஷமாகவும் கறுப்பு நிறமாகவும், சொரசொரப் பாகவும் மடிப்புள்ளவைகளாகவும் இருக்கும்,

### பித்தஜ யோனிகந்தம்

கட்டி அழற்சியையும், செந்நிறத்தையும் பெற்று ஜ்வரத் துடனே இருக்கும்.

### கப யோனிகந்தம்

அரிப்புடன் கூடியதாகவும், காசாம் பூ போன்ற நிறம் (நீலம்) உள்ளதாகவும் இருக்கும்

### ஸந்நிபாத யோனிகந்தம்

மேற்கூறிய வகைகளில் காணப்படும் குறிகள் எல்லாம் சேர்ந்து காணும். இது அஸாத்யமானது.

# குஷ்டரோக நிதானம்.

(யூகிமுனிவைத்ய சிந்தாமணி)

இந்நோய் 18 வகைப்படும்.

## புண்டரீக குஷ்டம்.

உடம்பில் தாமரையிதழைப்போல் சுற்றிலும் சிவந்து நடுவில் வெளுத்தோ அல்லது சிறு கறுமை நிறத்துடனோ மேலெழுந்த தடிப்புகள் ஏற்படும். இதில் அரிப்பு இருக்கும். சொறிந்தால் சிவப்பு நிறமுள்ள துர்நீர்க்கசிவு வெளிவரும்.

## விஸ்போட குஷ்டம்.

சரீரம் முழுவதிலும் முதலில் அரிப்பு உண்டாகிப் பின்பு பாளம் பாளமான வெடிப்புகளேற்படும். சின்னாட்கள் சென்றபின் அவை நல்லபாம்பின் படம்போல வெளுப்பு நிறமுள்ள தடிப்புகளாக மாறும். அவைகளைச் சொறியும்பட்சத்தில் சிவப்பு நிறமாக ஆகும். மிகுந்த மனக்கிலேசத்தையுண்டாக்கும்.

## பாமா குஷ்டம்.

தேகத்தில் அரிப்புடன் வெளுப்பு நிறமான சீழுள்ள கொப்பளங்களேற்படும் உடம்பு இளைக்கும். எரிச்சலும் ஏற்படும். உடம்பு முழுவதும் சொறிகளுண்டாகித் தோல் பாம்பின் சட்டையைப்போல் உரியும். விக்கத்துடன் கை கால்களும் குன்றிவிடும்.

## ஏக குஷ்டம் (கஜசர்மம்)

உடம்பு மிகுந்த கறுநிறத்தையடைந்து, தோல் உரிந்து சிவப்பு நிறமடையும். பின்பு 'வறு' 'வறு' என்று இழுத்து சருமத்தில் வெடிப்புகளை உண்டாக்கும். அரிப்பு அதிகமா

யிருக்கும். கால்விரல்கள் பருமனாகும். உடம்பில் குத்துவலி யும் ஏற்படும்.

### கர்ண குஷ்டம்.

சருமத்தில் வெடிப்புடன் பொறிப் பொறியான தடிப்பு ஏற்பட்டு மிகுந்த வேதனையைக் கொடுக்கும். வாதாதி மூன்று தோஷங்களும் பிரகோபித்து உடம்பில் மதமதப்பை உண் டாக்கும். காக்கணப்பூவின் நிறமுள்ள வீக்கங்கள் ஏற்படும். மனக்கவலையும் அதிகமாகும்.

### சர்மதள குஷ்டம்.

உடம்பு வெளுத்து அரிப்பு ஏற்படும். பின்பு தேகம் கறுமை நிறமடைந்து தடித்துப் புண்ணாகிச் சீழ் வெளியாகும். வயிறு, பின்புறம் முதலான இடங்களில் அரிப்பு அதிகமாகும். தேகத்தில் எரிச்சல் மிகும். வயிற்றுவலியும் ஏற்படும்.

### கருங்குஷ்டம்.

தேகமுழுவதும் கறுத்துச் சருமம் தடிப்பாகும். துர்நாற் றமும் அதிகமாக வீசும். உஷ்ணமும் அதிகரிக்கும். உடம்பு வலி, முக்யமாகப் புறங்காலுக்குக் கீழ் அதிகமாக இருக்கும். தலைச்சுற்றலும் உண்டாகும்.

### ஔதும்பர குஷ்டம்

அத்திக்காய்ப் பிரமாணமுள்ள பற்பல கட்டிகள் உடம் பின் மேலேற்படும். இவை பெரியதாகிப் பழுத்து அழுங்கும். சருமத்தில் சுருக்கங்களேற்பட்டுத் தொங்கும். தேகத்தில் மத மதப்பும் உண்டாகும். சொறிந்தால் சிவப்பு நிறமுள்ள நீர்க் கசிவும் ஏற்படும். அடிக்கடி மயக்கமும் வரும்,

## அபரிச குஷ்டம்

தேகத்தில் வலியுண்டாகி, இரத்தமும் கறுமை நிறத்தை யடையும். சிற்சில சமயங்களில் வலி பொறுக்கமுடியாதபடி அதிகமாகும். வீக்கமும் ஏற்பட்டுச் சருமம் வெடித்துப் புண்களேற்படும்.

## மண்டல குஷ்டம்

தோலின்மேல் பச்சை அல்லது சிவப்பு நிறமுள்ள தடிப்புகள் இருக்கும். தலையில் வெளுப்பு அதிகமாகும். அரிப்பு, சொறி முதலியவைகள் அதிகமாயிருக்கும். சிவப்பான துர்நீர்க்கசிவும் ஏற்படும்.

## விசர்ச்சிகா குஷ்டம்

இது வாதம், பித்தம் இவ்விரு தோஷங்களினால் ஏற்படும் வகையைச் சேர்ந்தது. எண்ணெய்ப் பசையுடன் கூடிய வெளுப்பு நிறமுள்ள தடிப்புகளேற்படும். அரிப்பு, வலி முதலியவைகள் உண்டாகிச் சொறிந்தால் அவ்விடம் சிவந்து அதன் தோல் கடினமாகும். அந்நோய் கால்களில் எரிச்சல், வயிற்றுப் பொருமல், சோம்பல் முதலானவைகளுடன் வெகு சீக்கிரத்தில் பரவுந்தன்மையும் உள்ளது. கபில நிறத்துடன் அதிக துர்நாற்றமுள்ள நீர்க்கசிவுடன் கூடியதாகவும் இருக்கும்.

## விபாதிகா குஷ்டம்

கபமும் பித்தமும் இவ்வகையில் கோளாறடையும். உடம்பில் வெடிப்புகள் ஏற்படும். காற்று அடித்தால்கூட பொறுக்கமுடியாதபடி வலி உண்டாகும். அப்புண்கள் நெருப்புச் சுட்ட புண்களைப்போலாகிச் சருமத்தையும் தின்னும். அதிகமான எரிச்சலேற்படும். கைகள், கால்கள், கழுத்து முதலிய அவயவங்கள் மிகவும் அழன்றுவிடும். உடம்பு வீங்கி,

நல்ல பாம்பின் நிறத்தையடையும். சில நாட்களில் இவைகள் கறுமை நிறமடையும். பாதங்களிலும் கைகளிலும் வெடிப்புகளேற்படும்.

## கிடிப குஷ்டம்.

சரீரம் பசுமை நிறமடையும். சருமம் யானைத் தோலைப் போலக் கனமாகும். காரணமின்றி அதிகமான அரிப்பு ஏற்படும். அடிக்கடி சிறுநீர் வெளியாகும். உடம்பிலிருந்து துர்நீர் கசியும். நோயாளியின் சமீபத்தில் நெருங்கமுடியாதபடி துர்நாற்றம் வீசும். உடம்புமுழுவதும் வீங்கும். காய் காய்த்திருப்பதுபோல் பரிசிப்பதற்குச் சுரசுரப்பாக இருக்கும்.

## சர்மதல குஷ்டம். (முன்கூறியது 'சர்ம குஷ்ட'மாகும்)

உடம்புவலி அதிகரிக்கும். உடம்பு முழுவதிலும் வெடிப்புகள் ஏற்பட்டு எரிச்சல் அதிகரிக்கும். பின்பு அவ்விடத்தில் தடிப்புகளேற்பட்டு சிவப்பு நிறமடையும். அரிப்பு அதிகரிக்கும். மயக்கம், அசதி, வயிற்றுவலி முதலான தேகசம்பந்தமான குறிகளும் காணும். மேலும் கொப்புளங்கள் சிதைந்து உதிர்வதனால் இவ்வகைக்குச் 'சர்மதளம்' என்ற பெயர் உண்டாயிற்று.

## தத்ரு குஷ்டம்.

தேகத்தில் சிவப்பு நிறமுள்ள தடிப்பான வட்டங்களுண்டாகி அரிப்பு ஏற்படும். நன்றாகச் சொறிந்தால் வெண்மை நிறமடையும். மயிர்க்கால்கள் வளைந்து அவை ஒரே உருண்டையாகும். பித்தமும், கபமும் விருத்தியாகும். உடம்பு வீங்கி மதமதப்பு ஏற்படும்.

## ஸித்மா குஷ்டம்.

வாதமும், பித்தமும் பிரகோபிப்பதாலேற்படும் வகையாகும். சுரைப்பூவைப்போல் வட்டம் வட்டமான மங்

சன் நிறமுள்ள தழும்புகள் சரீரத்தில் ஏற்படும். தேகத்தில் மதமதப்பு உண்டாகித் துர்நீர் கசியும். உடம்பு பளபளப்பாக ஆகும். மறதி அதிகமாகும். வியாதியுள்ள இடங்களைச் சொறிந்தால் பொடிபொடியான புறணிகள் உதிரும்.

### சதாரு குஷ்டம்.

சிவப்பு, பச்சை, வெண்மை முதலான நிறங்களுடன் கூடிய தடிப்புகளேற்பட்டு, எரிச்சலும், அரிப்பும் அதிகமாயிருக்கும். இந்நோய் வாதம், கபம் இவ்விரு தோஷங்களின் பிரகோபத்தினுலேற்படும். அத்தடிப்புகள் கரடுகட்டிப் புண்ணுகும். உரித்த பாம்புச் சட்டையைப் போலவுமிருக்கும். மூக்கு காதுகள், கன்னம் முதலானவிடங்கள் தடிக்கும்.

### ச்வேத குஷ்டம்

தடிப்பான வட்டங்கள் உடம்பிலேற்பட்டுத் தேகமும் ஒருவாறு வெண்ணிறமடையும். தேகத்திலுள்ள ரோமங்கள் வெளுத்துவிடில் இது அசாத்யமாகும். உதடு, உள்ளங்கைகள், ஆஸனவாய், முதலான இடங்கள் நெருப்புச்சுட்ட புண்களைப் போலவாகும். அவ்விடங்கள் சிவப்பு நிறத்தையுமடையும். உடம்பில் வெடிப்புகளேற்பட்டு, வெளுப்பாகி வீக்கமுமேற்படில் இதற்கு ‘வெண் குஷ்டம்’ எனப்பெயர்.



## ஸப்த தாதுக்களையும்பற்றிய குஷ்டங்களின் இலக்ஷணங்கள்.

### சர்மத்தை ஆச்ரயித்தால்

ஆங்காங்கு நிறவேறுபாடும், வரட்சியும், தொட்டால் உணர்ச்சிக் குறைவும், அடிக்கடி மயிர்க்கூச்சலும், வியர்வை அதிகமாகவும் இருக்கும்.

### இரத்தத்தைப் பற்றினல்

உடம்பில் அரிப்பு உண்டாகி, விரணங்களேற்பட்டுச் சீழும் அதிகமாக வடியும்

### மாம்ஸத்தைப்பற்றிய குஷ்டத்தில்

விரணங்கள் தேகத்தில் அதிகமாகத் தோன்றல், வாய் வரளுதல், தோல் கடினமாதல், கட்டிகள் உண்டாதல், குத்தல் வலி, கொப்பளங்கள் அதிகமாதல், குஷ்டம் ஸ்திரமாக ஆகிவிடுதல் முதலிய குறிகளுண்டாகும்.

### மேதஸைப்பற்றினல்

கை, கால்கள் குறைவடைதல், கால்நடை தடையுறுதல், அவயவங்களில் தாங்கமுடியாத வலி, ஒரு இடத்தில் விரணம் உண்டாகி அது மற்ற இடங்களில் பரவுதல், சருமம், இரத்தம், மாம்ஸம் முதலானவிடங்களிலும் புண்கள் அதிகமாய் உண்டாகி மற்ற குறிகளும் காணும்.

### அஸ்தியையும், மஜ்ஜையையும் ஆச்ரயித்நால்.

மூக்கு உள்ளடங்கல், கண்களில் சிவப்பு நிறம், விரணங்களில் கிருமிகள் உண்டாதல், குரல் கம்மல், பேசமுடியாமை முதலான குறிகளுண்டாகும்.

### சுக்லத்தைப்பற்றினல்

ரோகியின் ஸந்ததிகளுக்கும் இந்நோய் தொடரும்.

## குஷ்டம் உண்டாகக் காரணங்கள்.

அதிகமான உஷ்ணத்தினுலும், அல்லது அதிக குளிர்ச்சியினுலும், பசியின்மையினுலும், வாந்தி அதிகரித்தாலும், அமித ஸ்திரீசேர்க்கையினுலும், மனக்கவலை அதிகரிப்பதாலும்

சாப்பிடும் சாதத்தில் மண், மயிர், தவிடு இவைகள் இருந்து அவை தவறுதலாக உட்செல்வதனாலும், குஷ்டரோகம் ஸம்பவிக்கும். இவையன்றி குரு நிந்தனை, தெய்வ நிந்தை, படித்தவர்களை தூஷித்தல், அதிகமான கோபம், பரஸ்திரீ கமனம், பிறர் பொருளைக் கைப்பற்றுதல், பரதேசியைத் தூஷித்தல் முதலானவைகளும் இந்நோய்களுக்குக் காரணங்களாகும். பூர்வ ஜன்மத்தில் செய்த தீவினைகளினாலும் உண்டாவதும் உண்டு.

## குஷ்டரோக ஸம்ப்ராப்தி.

மேற்கூறிய காரணங்களினால் வாதாதி தோஷங்கள் திடீரென தூண்டப்பட்டு சரீரத்தில் குறுக்கு நெடுக்காய் ஓடும் ஸிரைகளில் பிரவேசித்துச் சர்மம், நிணநீர், இரத்தம், மாம்ஸம் முதலானவைகளைத் தூஷித்துப் பின்பு தேகத்திலுள்ள தோலின்மேலும் பரவி, தோஷங்கள் நிற மாறுபாட்டையுண்டாக்கும். எவ்விதமான குஷ்டரோகமும் தக்க சிகித்ஸை செய்யப்படாமல்போனால் அது நாளாவட்டத்தில் ஸர்வ சரீரத்தையும் சுருக்கி ஒடுக்கிவிடுந்தன்மையுடையதாகவிருப்பதால் இதற்குக் "குஷ்டம" என்று பெயர். மேலும் தோஷங்கள் ஸர்வதாதுக்களிலும் வ்யாபித்து அவைகளைத் துர்நீரால் கசிவடையச் செய்து, வியர்வை, நிணநீர் இவற்றை அதிகமாக வெளிப்படுத்தும். கடைசியில் க்ருமிகள் தேகத்தில் விருத்தியாகி ரோமம், சர்மம், ஸ்நாயு, தமனீ, தருணாஸ்தி முதலியவைகளைத் தின்று வரும். ஆகவே இவைகளுக்கு வெகு சீக்கிரத்திலேயே சிகித்ஸை செய்தல்வேண்டும்.

---

## ரோக அகராதி.

கீழ்க்காணும் ரோகங்களின் குறிகள் வைத்திய க்ரந்தங்களில் திட்டமாகக் காணப்படாததால் அவைகளின் இலக்ஷணங்களை கூடியவரை யூகித்து விளக்கப்பட்டிருக்கின்றன.

அகுவை—அரையாப்புக்கட்டி.

ஊமசிங்கன்—(ஊமக்கட்டி) பொன்னுக்கு வீங்கி போன்ற முகங்கொள்ளாக் கட்டி.

எழுச்சி—சிறுகட்டி, அநேகமாக காதிலுண்டாகும் வகைக்குக் கூறப்படும் பெயர்.

ஒட்டியபுண்—புண்கள் உள்ளவர்களிடம் நெருங்கிப் பழகுவதால அவர்களிடமிருந்து மற்றொருவருக்கு ஏற்படும் புண் வகைகள்.

கழலை—முகமில்லாக் கட்டி வகைகள் (Lymph adenitis)

காளான்—புற்றுநோய். (2) தேகத்தில் பூச்சி வகைகளால் பெரும் அளவிலேற்படும் புண்கள் (Fungus).

கால் ஆணி—உள்ளங்காலில் சிறுசிறு வட்டமான சதையினுலேற்பட்ட தழும்புகளுக்கு ஆணி என்று பெயர். இது உள்ள ரோகி கால்களை நன்கு படியவைத்து நடக்கமுடியாமல் தவிப்பான். குத்துவலி அதிகமாக இருக்கும்.

குதிப்புற்று—குதிகால்களிலேற்படும் வியாதி. அவ்விடத்தில் துர்மாம்ஸம் வளர்ந்து, சீழும் இரத்தமும் ஒழுகும். தாங்கமுடியாதபடி எரிச்சலும், வலியும் கொடுக்கும்.

குரு, மரு முதலியவைகள்—பாலுண்ணி போன்ற சிறு சிறு மாம்ஸமுளைகள் சருமத்தின்மேல் ஏற்படும். வலிஇராது.

சிலந்தி—கிரந்திப்புண்களுக்கும், பருவுக்கும் பெயர்.

நாக்குச் சிலந்தி—நாக்கின் மேலேற்படும் புண்.

தண்டுநோக்காடு—ஆண் குறியில் வலி உண்டாதல்.

துடைவாழை—துடையிலுண்டாகும் கண்களுடன் கூடிய கட்டி.

தோடகச் சிறங்கு—கொப்பளமான சிறங்கு.

பஞ்சை—சிலந்திகளுக்குப் பெயர்.

படர்தாமரை—தேகத்தில் வெகு எளிதில் பரவும் ஒருவகைத் தேமல்.

படுவன்—கிரந்திப்புண்கள்.

பல்லரணை—பற்களில் மாசுபடியும் ஒருவகை நோய்.

பற்குத்து—பற்களினடியில் உள்ள ஈறுகளில் வீக்கம் ஏற்பட்டுக் குத்துவலி எடுத்தல்,

பித்தவெடி—உள்ளங்கால்களில் பாளம் பாளமான வெடிப்புகளேற்படுதல். துர்நீர் கசியாது. கால்களை ஊன்றி நடக்க முடியாது,

மேகவெடி—உடம்பிலும் கைகால்களிலும் வெடிப்புகளேற்பட்டு அதிலிருந்து ஊன்தண்ணீர் கசிதல்.

---

## சூத்திர விதி.

(இவைகளின் மூலச்செய்யுட்கள் 25 செ. சுவடியிலிருந்து எடுக்கப்பட்டவை. பிறைக்குறிகளுள் காணப்படும் பாடபேதங்கள் அகஸ்தியர் 2000-த்திலிருந்து கொடுக்கப்பட்டிருக்கின்றன.)

---

### காப்பு.

சூத்திரமாகிய கொடுவினைதுருசறு
நித்திரைதனிலு முன்திருசரணமும்
பத்தொரு கரமுமென் மனதில் மறந்திலென்
சத்திரவிதி சொல வந்தருள்செய்வாய்.

## 16 வகை சத்திரங்களின் பெயர்

கத்திசத்திரமொரு குரும்பிதனை வாங்கியுங்
கருமூக்குவாதனை னுடன்கடுமுள் ளுவாங்கி(யும்)
(கொடுமாழுகோலுங் கதித்திடுமடுத்த
புரையுந்தத்துகத்திரி கைபற்கைவாங்கி)
மூக்குச்சலாகையு மொழி(மு)ப் பொட்டுடன்தகு
மட்டக்கோலூசி மிகுசெப்புக்குழையோடு
சலாகைவட்டகையுமிக வேகுத்துமொருபஞ்ச
முகஞ் செப்புச் சலாகையுங் கூறுகாயக்கோலுமே
குலவுமொருதெண்டுச்ச லாகைநயனக்கத்தி
கூடுமிவ்வகையானதே பத்துடன் பதினாறு
வகையானதாயுதம் பார்மீது பண்டிதற்குப்
பரமசிவனருளினூ லுண்டான திவ்வகை-
-பகுத்தறிந்திவை செய்வாரே. (க)

## கத்தியின் இலக்ஷணம்.

கத்தி(கதித்த) மூவிரலி(ல) லங்குல மூன்றரை
மெத்துகூறுமோர(ரதுக்கு)துவு மொ(மோர)ங்குலஞ்
சித்தமாமிவை செப்பிடும்போதுதான்
வைத்தவட்டமயிர்க கத்திகாணுமே. (உ)

## சத்திர இலக்ஷணம்

அண்டுமஙகுல மாருகு(மாறி)மளவு வேப்பிலைதான் காம்பு
உண்டெடை அறு(உரு)க்கும்போது உகந்தநற் பிளவை தன்னை
கண்டமாய் வட்டமொக்க வறுத்து அச்சத்திரத்தால்
உண்டெனக் கட்டீர்பாள முறுவினையறுமதென்றே (ங)

### குறும்பிவாங்கி

அங்குல மேழதாகும் மதனிறை யரைக்கழஞ்சு
பொங்கிய குறும்பிவாங்கி யதிமுலேருதிர்ந்து மெய்யிற்
செங்கைதா னசைவில்லாமற் செப்பமாய் யாகத்தானே
பங்கமில் லாமற்றுனே பழுதற வாங்குதன்றே. (௪)

### முகவாதனன்

நிறையது முக்கழஞ்சு நேரிய கவருமூன்று
வுறையுமா வளவுநீள மங்குலம் பத்திரண்டே
அறையுமிவ்வகையினுலே ஆகியவிதிதப்பாமல்
பொறையிலா நோய்தனக்குப் போதநீரட்டைபோடே.
(ரு)

### முள்ளூவாங்கி

இருமுனை நடுவேதானே ஏற்றமா முறுவலென்ப
தொருகழஞ் சொக்கக் கொண்டுகந்தது வளமையாக
வருவினை யறுக்கக்கீற வளர்நகம் வாங்கச்சீவக்
குருமொழி முள்ளுவாங்கிக குணமிது கூறினே
(றுவோ)மே (சு)

### ஆழிக்கோல்

பருமமா மாழிக்கோலே பலமதுமரையதாகும்
பொருமிய வளையம்பாதி பொருந்திய கரத்தில்பாதி
விரிவுள்ள அங்குலந்தான் விளம்பவே பத்துமாகும்
மருவிய ஞேய்தனக்கு மகிழ்ந்துநீ ரெட்சைபோடே (எ)

### பிறைக்கோல்

ஈ(ன்ற)ண்ட மூன்றங்குலங் காம்பெழுத் தாணிபோல
நீண்ட(நின்று)தன் பிறைக்கோ லங்குல மொன்பதாய்க்
காண்டிடு மிதனுட காம்பின் பருமையால்
தாண்டிடும் வியாதியின் துன்ப மறுக்குமே (அ)
j

## கத்திரிகை

மன்னியஅங்குல மெட்டரை யதிலிறை
பன்னிய காற்பலம் பிந்திதியகால்(கூ'க)ரி
மின்னிய கண்ணிரு வாய்திறம் வியாதியைக்
கன்னிய மயிர்களைக் கத்திரிக்(கோல)கையிதே (௬)

## பரகரைவாங்கி

*எட்டிரண் டங்குல மிசைந்தபரகரை
வெட்டிதாய் முனை(னை)யொரு கொள(ள்)ப்பருப்பாகவே
நட்டமா யித்திலே தெந்தந்தன்னிலே
குட்டமாய் வருபிணி விளக்கிடுங் கூறவே (௭)

## முச்சலாகை

பொருமுனைதடித்த வாய்(யா)க்கொடு புடைப்பதா
மருவிய சத்தமும் வகுப்பு முள்ளதாம்
அருவிய நாற்கழஞ் சங்குலமேழதாம்
வருவினை யுள்ளதை வாங்கு தண்டாயுதம் (௮)

## ஓட்டுக்கோல்

தண்டிய அங்குலம் பதினொன்று நீலகுழந்
சண்டிய நீள மு மரைப்பல மாகிடும்
கண்டுறு போட்டுக் கோல்கடியாயுத
முட்டெனப்போடவே உறுவினையறுமதே (௯)

## அட்டக்கோல்

அட்டக்கோலது பதினெட்டங்குல
தட்டித்தகடாய் அகலம்புளியிலை
மட்டுப்பாத்து வலியவியாதியைக்
கொட்டிக்கொட்டிக் குறுகப்போடுமே (௰)

---

* 'எட்டிரங்குல மிசைந்த பலமரை' என்னும் பாட பேதம்.

## நயனக்கத்தி

அண்டிய அங்குல மூன் றதனிறையரைமாவென்ன
மிண்டியகண்ணுமொன்றே விளங்கியமுனையுமொன்றே
... ... ... ... ... ... ... ... ... ... ...
கொண்டுநீயூசியாலே நயனத்தில் குத்திவாங்கே (௰௪)

## செப்புக்குழல்

ஒருசாணரைப்பல மோலேக்கனமாய்
விரிவாய்த்திரட்சியாய்க் குழலாய்ப்புண்விட
வருவாயங்குல மாளுமிதுவே
திருவேசெப்புக் குழலின் செயலே (௰௫)

## செப்புச் சலாகை

சாணரைக்கழஞ்சாஞ் செப்புச்சலாகை
ஊனுருபுண்ணில் துவாரத்திலோட்டியே
ஏனுறுதலையிற் கீறிவெதுப்பியே
காணுறக்காரங் கட்டுவதிண்ணே (௰௬)

## தனிகை (சலாகை)

பன்னிருகழஞ்சா மங்குலம்நாலு
மின்னியநெற்பிர மாணமதாகும்
நன்னியநாலு முலேக்கண்ணின்புறம்
உன்னியதனிகையை உரைத்திடுமுண்மையே (௰௭)

## இரும்புச் சலாகை

கருதிற்பெருமை கழஞ்சரைசாணும்
மருவிச்சருவி வருவினைப் புண்களைக்
கருதித்துவாரத்திற் சலாகையைமூட்டியே
வெறுவக்கீறுவ திருப்புச்சலாகையே (௰௮)

## LXXVI

### பஞ்சமக்கோல் அல்லது பஞ்சமுகச்செப்புச்சலாகை

அஞ்சுகண் ணறுகழஞ் சங்குலம் பதினொன்று
விஞ்சிய நோயெனும் வீக்கஞ் சூலையை
தஞ்சம தாகவே சக்கரம் போலவே
பஞ்சமக் கோலினு லாடசை போடவே (௰௧)

### சலாகை (வேறு)

ஒன்றரைக் கழஞ்சா யொன்ப தங்குலம்
மன்றல்சேர் மன்னரில் மருவு நோய்தனைக்
குன்றுறப் பார்த்துக் கொள்வெதுப்பிடு
தண்ணுறச் சொன்னதோர் சலாகையானதே (உ௰)

### கொம்பு

மாலுறு வாழைக்குருத்தெனப் போட்டாய்
மேலுறுகொம்பு வளையம்ரெண் டங்குலம்
சாலப் போட்டுத்து வாரமொன் றுமது
மேலுறு கொம்பால் வீக்கம் வாங்குமே (உ௧)

### அபானக்குழல்

நாலிரண் டங்குலம் மூன்று பலமரை
ஆலஅபானத் துவாரத் தளவிற்று
மேலுறு துளையாய்க் குழல்தனை யேற்றி
சாலவே தீப்புகை யெழத்தீய்க்குமே (உ௨)

### சலாகை (வேறு)

நாலுமூன் றங்குலம் நாற்கழஞ் சொன்றரை
வீறுதெண்டாற்புதம் வினைசெய் வாதமும்
வாலுநற் பிளவையும் வண்மைசேர் கிருமியும்
கூறிய வியாதியைக் கொல்சலாகையே (உ௩)

## LXXVII

### புத்துமண் பத்து

உருவிலாப் புத்துமண் ணு முற்றதேயிருகழஞ்சு
தருமிருகாந்தங்கூட்டிச் சதைத்தரைத் துருட்டிபட்டு
இருவிரற் பருமையாக யிசைந்தவங்குலங்க ளேழாய்
வருமொரு சூலைவாதம் வாங்கிடரட்சை போடே (உச)

### தண்டுச் சலாகை

அண்டிடு மொன்பதே அங்குலம் கழஞ்சரை
தண்டிய திரட்சிதா னீற்கும்போலவாம்
மிண்டிய தெண்டுப் பிளவையைத் தீய்த்திடத்
தண்டிய தெண்டுச் சலாகைய தாகுமே (உரு)

### பிறுமாவின் குணம்

பிறுமாவென்னும் வீறுசத்திர மதுவே யங்குலமஞ்ச
தாகும்
நிறையே கால்பலம் முனையே ஒருமாத்
தருமேவாய்க் குறுகதுமையாகவே
பாதிப்பினப்பிறமொரு அங்குலமகலம்
சாதிச்சத்திரம் பிடிமூவங்குலம்
பாதிச்சத்திரம் விடுநீர்ப்பிளவையில்
கோதிக்குத்தி யிரண்டங்குலம் விடு
போதப் பிளவையில் பார்த்துவித்ததையே
மாரப் பிடித்து மூவங்குலம் விடு
சாலப் பருத்த பச்சையினுல் விரல்
கீரிக்கடிகையி லோரங்குலம் விடு
காலில் துடைதனில் வரளைக் கஞ்சங்குலம்
மேவிச்சதை தனில் பாதிப்பக்கப்
பிளவைக் காரங்குலம் ஊழிக்குச்சிப்
பிளவை தன்னையு மோதிச்சத்திரங்
கொண்டிரண்டங்குலம் காதிற கீழ்வரும்

## LXXVIII

கன்னப் பிளவையைக் கீறிக்குணம்பார்த்து
விடு மோரங்குலம் உளிற்பொருந்திய
நாசியிற்பீடத்தை உளித்திரவிடு
ஒருமாவங்குலம் வாயிற்புத்தை
வடுவாய்க் கீறிடு சாலசயனத்
தருவிசனத்தைக் நேசிச்சுண்டு
விடுசத்திரத்தாற் காவிற்கரட்டில்
வருகள்வன் தன்னைச் சோதித்துள்ளூறு
சதைபறும்மென காலிற் சந்தில்
வருவெப்புருதியை ஆரத்திற்விடு
மங்குலம் நாலே மேனிதன்னில்
விளைசிலந்தியைத் தோலைக்கீறிடு
மொருமா வங்குலம் சாலத்தே நதந்
தனிலெழு வெட்டியை பூரித்துருண்டு
புடைத்தவிடத்தில் கீறிடு ஒருமா
வினையறுமெனகா லுடம்பிற் கழலை
தன்னைக் காரியமுறவரு சத்திரத்
தாலே கீறிடு சதையறு வினையறு
மென்னக் கூறினேம் பிறமாக் குணச்சத்
திரத்தை மேல்வரு குட்டக் கிரந்திகள்
திரவே பண்டிதா கேளுமிச் செய்கை
யாமங்கலவர் அவர் தொழிலாமே (உஎ)

---



# அகஸ்தியர் சஸ்திர விதி.

ஸ்ரீ அமிர்தலிங்கம் பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பட்ட 'அகஸ்தியர்—நயனவிதி 500' என்ற புஸ்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.

கத்திசத்திரம் கவின்குறும்பி வாங்கியும்
முகவா தனனுடன் முள்ளுவாங்கியும்
ஆழிக்கோலு மடுத்த பிறையுடன்
கத்திரிக்கையுடன் பரகரை வாங்கியும்
முச்சலா கையொடு முனிமொழி யோட்டும்
மட்டக்கோலும் மாறும் ஊசியும்
செப்புக் குழையும் சீரிய சலாகையும்
வட்டகை தன்னுடன் வளர்பஞ் சமுகமும்
செப்புச் சலாகையும் கொம்புங் குடோரியும்
வெங்கலக் குழலும் ஈயச் சலாகையுங்
காயக் கோலுங் கல்கத்தி தண்டும்
இவையிவை யாயுத மிருபத் தாறுஞ்
சிவனவ னருளால் திகழ்சத்ரா யுதமே.

## 26 வகைச் சஸ்திரங்களின் உருவங்கள்

அறைதருங் கத்தியா றங்குலநீளம்
அகலமோ ரங்குலம் ஆம்முனைவட்டம்
மயிர்க்கத்தி போன்று வழங்குமென்பர்.

சத்திரநீளஞ் சாற்றிறு றங்குலம்
வேப்பிலைபோலும் விளங்கும் பல்பல்லாய்
நிறைகழஞ்சாறு நெடியதோர் பிளவை
கட்டி யிவற்றைக் கண்டமா யறுக்க
மெத்தவும் பயனும் மேதினி மிசையே.

# LXXX

குறும்பி வாங்கியின் கூறே ழங்குலம்
நிறையரைக் கழஞ்சு நெடுங்கைப்பிடி யோ
ரையைந்தே யங்குல மாமெனப் பகர்வார்.

முகவாதனனே முந்நான் கங்குலம்
முக்காற் கழஞ்சு நிறையென மொழிவார்

முள்வாங்கி நீளம் மூவிரண் டங்குலம்
அகலமோ ரங்குலம் அணிநிறை கழஞ்சொன்
றறுக்கவுங் கீறவும் அவிர் நகம் வாங்கவும்
பயனும் என்று பணித்தனர் மேலோர்.

ஆழிக்கோல் பத்தோ அங்குலம் நிறையோ
ரரைப்பலமாகுமென் றறைந்தன ரறிஞர்.

பிறைக்கோ லென்பது பேசின்மூ வங்குலம்
நிறைமூன்று கழஞ்சு நிகழெழுத் தாணிபோல்
நீண்ட பிறைக்கோல் மத்தியில் நிலவுறும்.

கத்திரிகைச்சீர் கழஞ்செட் டோடரை
அங்குலம் நிறைகாற் பலமேயாகும்.

பரகரைவாங்கியோ பதினாரங்குலம
நிறையரைப் பலமென நிகழ்த்துவ ருணர்ந்தோர்.

முச்சிலாகைச்சீர் மொழியினே ழங்குலம்
நிறைநான்கு கழஞ்சே நிலவதன் வடிவோ
ஒரு மூன்று தகட்டுவா யுள்ளது பாரே.

முனிமொழி யென்பதோர் முக்யகருவியே.

ஒட்டுக்கோ லங்குலம் ஒன்றொடு பத்தே
தலையொரு கழஞ்சரைப் பலமுடல் நிறையே.

அட்டக்கோ லீரொன் பானங்குலமே
காசெடையெட்டென கழறுவ ருரியோர்.

## LXXXI

ஊசி மூவங்குலம் உரை நிறையரைமா.

செப்புக்குழை தான் திரட்சியாங் குழலே
ஒருசாணளவின் துயர் நிறை யரைப்பலம்
தகடோ லேக்கனம் சார்புண்ணில் விடுவது.

சலாகை அங்குலந் தாமொரு நான்கே
அன்றியைந் ததன்நிறை யாறிருகழஞ்சே.

வட்டகை யென்பதோர் வகையா யுதமே.

பஞ்சமுகமுமப் பரிசின தாமே.

செப்புச்சலாகை சிறந்ததோர் கருவியே.

கோம்பீரைந்தாங் குலமாம் வாழையின்
குறுத்தொப்பதுபூண் குலவிரண் டங்குலம்
மேனிவீக்கத்தை வீட்ட வல்லதே
கீறிக் கட்டியைக் கெட்ட செந்நீரை
வெளியிடத் தக்கமிகுபய னுயதே.

குடோரியே முரையங் குலம்நிறை காற்பலம்

வேண்கலக்குழல்தான் மேவுமெட் டங்குலம்
நிறைபலம் மூன்றோ டரையென நிகழ்த்துவர்.

ஈயச்சலாகை யியம்பின்மூ வங்குலம்
நிறையோ நான்கு கழஞ்செசன நிலவிடும்.

காயக்கோல் நீளம் கழறினே ழங்குலம்
நிறையிரு கழஞ்சு நெடிய பருமனே
இரண்டங் குலமென விசைத்தனர் பெரியோர்.

தேண்டுசலாகை கொண்டவங்குலமோ
ஒன்பதங் குலம்நிறை யோரரைக் கழஞ்சே
ஈர்க்குப் போலும் எழில்கனம் வாய்ந்ததே.

k

நயனக் கத்தியின் நலமூ வங்குலம்
நிறையொரு பணவெடை நிகழ்முனை ஊசியே.

இன்னசத் திரத்தி னேற்ற முணர்ந்து
அமுத நிலையினை யாய்ந்தறிந் தினிது
பண்டிதஞ் செய்யப் பழகிய ஒருவனே
சத்திரப் பண்டித ராமெனத் தக்கோர்
தண்கட லுலகிற் சாற்றின ரம்மா.

மேற்கூறிய மூன்று விதமான சஸ்திரவிதிச் சுவடிகளி களிலிருந்தும் தமிழ் வைத்ய முறைப்படி ஆயுதவகைகள் 26 என்று புலனுகிறது. இருந்தபோதிலும் அவைகளின் உருவம் உபயோகம் முதலியவைகளை ஷெ செய்யுட்களிலிருந்து அறிந்துகொள்ளமுடியவில்லை. ஆனால் இவைகள் ஒரு காலத்தில் பழக்கத்திலிருந்திருந்தால் அவைகளின் உருவங் களைச் சொல்லத் தேவையில்லை என நம்பி விட்டுவிட்டனர் போலும்! காலவேறுபாடுகளினுலும், பழக்கவழக்க வேறு பாடுகளினுலும், இவை நாளடைவில் சீர்குலைந்து இப்போது அக்கருவிகளைக் கற்பனைசெய்யக்கூட முடியாத நிலைக்கு வந்து விட்டோம். ஆயினும், கருவிகள் இலக்ஷணங்கள் பின் வருமாறு.

## 1. கத்தி

மூன்று விரற்கிடை அகலமுள்ளதாகவும், 3½ அங்குல நீளமுள்ளதாகவும் அதன் நுனி வட்டமாக இருத்தல் வேண்டும். இதில் மற்ருெருவகை 6 அங்குல நீளத்திலும் 1 அங்குல அகலத்திலும் க்ஷவரக்கத்திபோன்றிருக்கும்.

## 2. சத்திரம் (சிறிய ரம்பம்)

6 அங்குல நீளமுள்ளதும் வேப்பிலையின் ஓரத்தில் காணும் பற்களைப்போன்று, சிறு சிறு பற்களுள்ளதாக இருக் கும். இதனுல் பிளவைகளைத் துண்டம் துண்டமாக அறுக்

கலாம் மேலும் இதனுல் வட்டம் வட்டமாகவும் வேண்டாத மாம்ஸங்களைத் துண்டிக்கலாம். இதன் நிறை 6 கழஞ்சாகும் (சுமார் ¾ பலமாகும்). கட்டிகளையும் அறுக்கலாம்.

## 3. குறும்பிவாங்கி

7 அங்குல நீளத்தில் 1¼ வராகனெடை எடையில் ஒரு பக்க நுனியில் கரண்டிமாதிரி குழிவு ஏற்படுத்தி வழவழப் பாகச் செய்யவும். இதற்கு 5 அங்குல நீளமுள்ள மரத்தினு லான கைப்பிடி இடவும்.

## 4 முகவாதனன்

இக்கருவியின் நிறை 3¾ வராகனெடையாகும். 12 அங்குல நீளமுள்ளதாகவும், மூன்று சலாகைகளையுடைய தாகவும் இருத்தல்வேண்டும் ஒவ்வொரு சலாகையும் வகைக்கு ¾ கழஞ்சு எடையிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## 5. முள்ளூவாங்கி

இருமுனைக்கு நடுவில் ஒரு முள்ளுபோல் கூருன தட்டை யானதுமான ஆணியை வைக்கவும். இதன் நிறை 1¼ வராக னெடை இருத்தல்வேண்டும். இதனுல் கட்டிகளின் வாயை அறுக்கவும், கீறவும் உபயோகிக்கலாம். நகங்களையும் அறுக்க உபயோகிக்கலாம். இரண்டாவதான வகையில் இதன் நீளம் 6 அங்குலமும், அகலம் 1 அங்குலமும் உள்ள கருவி. நிறை 1¼ வராகனெடை இருத்தல் வேண்டும்.

## 6. ஆழிக்கோல்

இதன் நீளம் 10 அங்குலமாகும். இவ்வகை ஆயுதத்தின் நிறை ⅓ பலம். இதில் வளையம் உள்ள பாகம் 5 அங்குலமும், மற்ற பாகம் கைக்குள்ளடங்கும் வண்ணம் பிடியுடன் கூடிய தாக 5 அங்குலமும் இருத்தல் வேண்டும்.

## 7. பிறைக்கோல்

இது 9 அங்குலமுள்ள ஆயுதமாகும். அதன் கூருன பாகம் மாத்திரம் எழுத்தாணியைப்போல் 3 அங்குல நீளம் இருத்தல் வேண்டும். அதன் கனமான தலைபாகத்தை அர்த்த சந்திரன் வடிவமுள்ளதாகச் செய்துவிடவும். இதன் நிறை 3¾ வராகனெடையாகும்.

## 8. கத்திரிகை

இதன் நீளம் 8½ அங்குலமும், நிறை ¼ பலமும் இருத்தல் வேண்டும். மயிர் முதலியவைகளைக் கத்தரிக்க உதவும்.

## 9. பரகரைவாங்கி (பற்கைவாங்கி)

16 அங்குல நீள முள்ளாகச் செய்யவும். அதன் முனையில் துவரம்பருப்பு உட்செல்லும்படியான ஒரு குழிவு இருக்க வேண்டும். இவ்வாயுதத்தின் நிறை ½ பலமாகும்.

## 10. முச்சலாகை (மூக்குச்சலாகை)

ஏழு அங்குல நீளமுள்ள மூன்று அலகுகளை (இரும்புத் தகடுகளை) உடையது. இக்கருவியின் நிறை 5 வராகனெடையிருத்தல்வேண்டும்.

## 11. முனிமொழி

இக்கருவிக்கு "மொழிப் பொட்டு" என்றும் பெயராகும். இதுவும் உபயோகமுள்ளதாகும்.

## 12. அட்டக்கோல்

இது 18 அங்குல நீளமுள்ளதாகவும் 8 வராகனெடை நிறை உள்ளதாகவும் இருக்கவும். இதனை புளிய இலை கனமுள்ள தகடாகத் தட்டி வைத்துக்கொள்ளவும்.

## 13. செப்புக்குழல்

ஒரு சாண் நீளமுள்ள செம்பு உலோகத்தினாலாகிய குழா யாகும். இதன்நிறை ½ பலம் இருக்கும். செப்புத்தகடு ஓலையின் பருமனுள்ளதாக இருத்தல் வேண்டும். இக்குழாயைப் புண் களில் விட்டுத் துழாவலாம். இதன் துவாரத்தின் வழியே எண் ணெய் முதலானவைகளையும் இடலாம்.

"ஒரு சாணரைப்பல மோலைக்கனமாய்
விடவாயொக்கத் திரட்சியாகக்
விட மேயெண்ணெய் நிலவேயாறுங்
குணமேசெப்புக் குழலைதன்செயலே"

என்று 43 செ. சுவடி "வைத்தியத் திரட்டில்" கூறப்பட் டுள்ளது.

## 14. ஊசி வகைகள்

இவைகள் 3 அங்குல நீளமுள்ளதாக இருத்தல்வேண்டும். ஒவ்வொரு ஊசியின் கனமும் அரை மா (சுமார் 8 குன்றிமணி எடை) இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## 15. சலாகை

இவ்விடத்தில் 'தளிகைச் சலாகையை' எடுத்துக்கொள்ள வேண்டும். இதன் நீளம் நான்கு அங்குலம் இருக்கும். இதன் நுனிபாகம் நெல்லின் கனம் இருக்கவேண்டும். அதன் நுனி கூர்மையாக இல்லாமல் மொட்டையாக இருத்தல் நல்லது. மேலும், இலையே 5 அங்குல நீளத்திலும் செய்து வைத்துக் கொள்ளலாம். கட்டிகளின் ஆழத்தைத் தெரிந்துகொள்ளப் பிரயோஜனமுள்ளதால் "தளிகைச் சலாகை" யெனப் பெயர் வந்தது.

## (b) இருப்புச்சலாகை (Director)

20 குன்றிமணி யெடையில் ஒரு சாண் நீளமுள்ள இரும் பினாலானச் சலாகை. புண்களின் துவாரத்தினுள் விட்டு மேலே அறுக்கலாம்.

### (c) சலாகை (வேறுவிதம்)

60 குன்றிமணி நிறையில் 9 அங்குல நீளமுள்ள சலாகை யாகும். இதனால் சூடுகள் போட உதவும். இதற்கு ஆதாரம் 43 செ. சுவடியில்

"கண்ணுறப் பார்த்துக் கருதி வெதுப்பிடு
சொன்னவை சொன்ன சலாகைதன் செயலே"

என்று காணப்படுகிறது.

## 16. வட்டகை

இது ஒரு வகைக் கருவி. உருவம், நிறை முதலியவைகள் காணப்படவில்லை,

## 17. பஞ்சமுகச் சலாகை

இதற்குப் "பஞ்சமக்கோலெ"ன்றும் வேறு பெயர். பதி னேறு அங்குல நீளத்தில் ஒரு செம்பினால் சலாகை தயாரித்து அதன் நுனியில் 5 கண்கள் (முளைகளைப் பொருத்தி) வீக்கம், சூலை முதலியவைகளின்மேல் வைத்துச் சக்கரம்போல் சுழற்ற வும். இதன் நிறை 7½ வராகனெடை இருத்தல் வேண்டும்.

## 18. செப்புச்சலாகை

ஒரு சாண் நீளத்தில், அரையேயரைக்கால் வராகனெடை யில் (20 குன்றிமணி நிறை) செம்பு உலோகத்தைக்கொண்டு இச்சலாகையைச் செய்து வைத்துக்கொள்ளவும். இதைப் புண்களின் துவாரத்தினுட் செலுத்தி அதன் ஆழத்தைத் தெரிந்துகொள்ளலாம். தலையில் கீறி, அதனுள் இச்சலாகை யைக்கொண்டு காரத்தை உட்செலுத்தலாம். (இம்மாதிரிப் பிரயோகங்கள் ஜன்னியிலும், பாம்பு முதலான விஷ ஜந்துக் கள் கடித்து மயங்கியவர்களுக்கும் பயன்படும்).

## 19, காயக்கோல்

இதன் நீளம் 7 அங்குலமாகும். இதன் நிறை ⅛ பலமாகும். இரண்டு விரல் பருமனுள்ளதாகச் செய்யப்பட்ட சலாகையாகும்.

## 20. தெண்டுச்சலாகை

ஈர்க்கின் பருமனுள்ளதாகவும் 9 அங்குல நீளமுள்ளதாகவும் செய்யப்பட்ட கருவி. இதன் நிறை 20 குன்றிமணியெடை இருத்தல் வேண்டும். இது பிளவைப் புண்களைத் தீய்த்துவிட உபயோகமாகும்.

## 21. நயனக்கத்தி

இதன் நீளம் 3 அங்குலந்தானிருக்க வேண்டும். நிறை 3⅕ குன்றிமணியாகும். அதன் முனை கூராக இருத்தல்வேண்டும்.

இவ்வித நயனக் கத்தியைக் கண்களுள் குத்தும்போது குத்தும் பாகம் ஒரு நெல்லளவிலிருக்கும்படி விட்டு. கத்தியின் மற்ற பாகங்களை நூலினால் சுற்றிவிடவும். அப்போதுதான் இச்சஸ்திரத்தினால் நேத்திர காசரோகத்தைக் குத்துகையில், அதிக ஆழத்திலுள்ள உருப்புகளை குத்தாமல் பாதுகாக்கும்.

"பத்திநெல்லெடை விட்டப்பால் பலப்பட நூலால்சுற்றி
சித்திரமாகக் குத்தி சிறந்தம்தார் சலாகைவிட்டு
சுத்தியே மூன்றுகாலஞ் சுழிதனில் நீலம்பாரில்
வெத்தியாய்த்தெளிந்து நன்றாய் விரைவுடன் வெளி
யதாமே''

(அக. நயனவிதி செய். 79)

## 22. ஓட்டுக்கோல்

இதன் நீளம் 11 அங்குலமாகும். இக்கருவியின் தலையின் நிறை 1¼ வராகனெடை இருக்கவேண்டும். இதன் உடலின் நிறை ½ பலமாகும்.

## 23. கொம்பு

10 அங்குல நீளத்தில் காளைமாட்டின் கொம்பைப்போல் அடிபாகம் விரிந்து நுனியில் வரவரச் சிறுத்தும் இருக்கவேண்டும். இதற்கு வாழைக்குருத்தைப் போல ஒரு பூண் பித்தளையினால் இடவேண்டும். அதன் நீளம் 2 அங்குலம். சரீர வீக்கம், கட்டி முதலானவைகளைக் கீறி இரத்தத்தை வெளிவரச் செய்து இக் கொம்பை வைத்து உறுஞ்சவும்.

## 24. வெண்கலக்குழல் (Brass flatus tube)

இதற்கே அபானக்குழல் என்ற பெயரும் உண்டெனத் தோன்றுகிறது. இது 8 அங்குல நீளமுள்ள உலோகத்தினுலான குழலாகும். அபானத் துவாரத்திற்குள் நுழையும் வண்ணம் இருத்தல்வேண்டும். இதன் நிறை $3\frac{1}{2}$ பலமாகும். இதைக்கொண்டு ஆஸன த்வாரத்திற்குள் புகை பிடித்துக் கொள்ளலாம்.

## 25. க்ஷயச்சலாகை

இது மூன்று அங்குலமுள்ள ஒரு ஆயுதம். இதன் நிறை 5 வராகனெடையாகும். இதனுல் பிளவைகளையும் கிருமியுள்ள புண்களையும் ஆற்றிவிடலாம்.

## 26. குடோரி

இது $7\frac{1}{2}$ அங்குல நீளத்தில், $\frac{1}{4}$ பலம் நிறையில் (கோடாரி போன்ற) ஒரு ஆயுதமாகும்.

இவைகளையன்றி பிறுமா என்று பெயருள்ள ஒரு ஆயுதம் உண்டென்றும், அதன் நீளம் 5 அங்குலம் என்றும் கூறுகிறுர். அக்கருவியின் நிறை $\frac{1}{4}$ பலம் என்றும் காணப்படுகிறது. அதன் பிரயோஜனங்களைக் கூறும் செய்யுட்களின் பொருள் நன்ருக விளங்கவில்லை. மேலும் இச்சத்திரத்தை வைத்துக்கொண்டே முன் காலங்களில் பற்பல சஸ்திர சிகித்ஸைக்குச் சாத்யமான வியாதிகளையும் குணப்படுத்தியிருக்கிறுர்கள் என்றும் தெரிகிறது.

---

ஓம் :

# சரபேந்திரர் வைத்ய முறைகள்.

## விரணரோக சிகித்ஸை.



### 1. விரணங்களுக்குப் "பாடாண எண்ணெய்."

சலாசத்து மரைப்பலம் பாடாண
மொருபலமுஞ் சம்பிரநீர்
உலாவரைத்துத்த மொருதுட்டிடையை
நேகவரைத் துரைசரக்கி
னிலாங்கவசம் பொதிந்துமிரண்டுமண்
சேலைசெய்து மிதைமணற்குட்
கலாவிவை மேல் வரளிநெருப்பிட்டு
மண்கருகக் கண்டெடுத்தே. (க)

எடுத்தபின் பொடிசெய்து மொருநாழி
முத்தினெண்ணெயி திலும் போட்டு
அடுத்துரவிப் புடத்தில் வைத்தெடுத்துப்
புண்சிலந்தி யழுகுணிக்கும்
படு(மூ)த்துடையாக் கட்டிவரை புரைகளுக்கு
முதலான பலபுண்ணுக்குங்
கொடுத்திடு மேற்றடவச் சரபோசி
மகராசன் கூறுவாரே. (உ)

(இதன் பொருள்)

சுத்திசெய்த சிலாசத்து ½ பலம்
,, வெள்ளைப்பாஷாணம் 1 பலம்

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச் சாறு விட்டு நன்ருக (4 சாமங்கள் அரைத்து), ஒரே வில்லையாகத் தட்டிச் சுத்தி செய்த துத்தம் 1 வராகனெடையை ஷை சாறு விட்டு அரைத்து வில்லையின்மேல் பொதிந்து காயவைக்கவும்.

மறுநாள், வில்லையை எடுத்து அதற்கு சீலைமண் இரண்டு தடவை செய்துகொண்டு காயவைத்து, ஒரு வாயகன்ற பாத்திரத்தில் மணலை நிறப்பி, அதற்குள் மேலே சொன்ன வில்லையை வைத்து மூடிவிடவும்.

பிறகு, பாத்திரத்திலுள்ள மணலுக்குமேல் வரளிகளை யடுக்கித் தீமூட்டவும். பாத்திரத்திலுள்ள **மண் கருகியவுடன்** தீயை யணைத்து, வில்லையையெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடி செய்து,

சுத்தமான ஆமணக்கெண்ணெய்—1 படியுடன் குழப்பி, வெயிலில் வைக்கவும். 10 நாட்கள் சென்றபின் இந்த எண்ணெயை எடுத்து,

| | |
|---|---|
| புண் | சிலந்தி |
| அழுகுணிப்புண் | பழுத்து உடையாத கட்டி |
| புரை | |

முதலிய பற்பல விரணங்களுக்கும் மேலே தடவக் குணம் ஏற்படும்.

---

## 2. புண்ணிற்குக் "காரச்சீலை மருந்து"

மஞ்சள் நன்ருய்ப் பொடிசெய்து மெலுமிச்சம்
பழச்சாறு வார்த்துநேக
மிஞ்சவரைத் ததைச்சீலை மேலூட்டி
யும்நிழலில் விரித்துலர்த்தி

வஞ்சமிலாதிதை வைத்துப் புண்புரைக-
டனிற்போட வாறிப்போகும்
தஞ்சைநகர் பெருமானுஞ் சரபோசி
மகராசன் சாற்றுமாறே. (௩)

(இ-ள்)

மஞ்சளை வேண்டிய அளவெடுத்துக் கல்லுரலிலிட்டு இடித்து, வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இத்தூளைக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நன்ருக மைபோலரைத்து, ஒரு வெள்ளைத்துணியில் ஊட்டி, நிழலில் காய வைக்கவும்.

இத்துணியை புண், புரை முதலியவைகளின்மேல் வைத்துக் கட்டவும் அல்லது உள்ளே செலுத்தவும். புண்களும் ஆறிவிடும்.

---

## 3. மற்றொரு 'காரச்சீலை'

துரிசியதைப்பொடிசெய்து மெலுமிச்சம்
பழச்சாறுஞ் சொல்முசுக்கைக்
கரிசாலை நாயுருவி யிலைச்சாற்றி
லுலரைத்துச்சீலை மேலூட்டி
விரிநீழ லுலத்திட்டு மிச்சீலைக்
காரமதை விரணந்தீர
எரிபுண்ணில் மேற்றடவ நீர்வற்றும்
பின்சேர்வை யிடலாம் பாரே. (௪)

(இ-ள்.)

துரிசை (1 பலம்) கல்வத்திலிட்டுப் பொடிசெய்து கொண்டு,

எலுமிச்சம்பழச்சாறு
முசுமுசுக்கைச்சாறு
கையாந்தகரைச்சாறு
நாயுருவியிலைச்சாறு

இவைகளை விட்டுத் தனித்தனியே (ஒவ்வொரு) நாளரைத்து ஒரு வெள்ளைத் துணியிலூட்டி நிழலில் காயவைக்கவும்.

இச்சீலையினால் புண்களைக் கட்டவும். இதனால் நீர்வடிதல் நிற்கும். பின்பு சேர்வை (பிளாஸ்திரி)களை இடலாம்.

---

## 4. புண்களுக்கு 'வெள்ளறுகு நெய்'

வெள்ளறுகுமிடித்தண்ணீ ராங்குறுணி
பழந்தின்னி மேற்பாலைத்தோல்
எள்ளில்பல மெண்ணான்கு மிடிபதக்கு
நீர்வார்த்து மெட்டொன்றாக
வள்ளியதாய்க் காய்ச்சிவடி முன்சாறு
நாழிநெய்யு மதில்நாழிப்பால்
நள்ளிவிட்டதிமதுரம் பாலைகுமி
ழிலாமிச்சு நன்னாரிவேரே. (ரு)

வெட்டியவேர் கழந்தில்வேர் குங்குலியம்
பொன்மெழுகு மிகுந்த கோட்டங்
கொட்டியதின் கிழங்குசந்தங் கச்சோல
முந்திரி கோரைக்கிழங்கும்
மட்டியல்லி மூலந்தாமரை வளையம்
வெள்ளறுகு வனக்கச்சோலம்
இட்டிடந்த வகையொன்றுக் கிரண்டு கா-
செடையரைத்திடு கலந்தே. (சா

முத்தினங்கள் சிறுகொதியா யிட்டெரித்து
நாலாநாள் முறைவடித்து
இத்தையிரு காசெடை கொளிருநேரம்
புண்ணிலிடு மேகமாம் வீக்
கத்திலிடும் வைசூரிபுண் ரத்தபித்தங்
கிரந்தித் திக்காயத்திற்கும்
பித்தசீதம் புரைகளாருத
புண்களெல்லாம் பெயர்ந்துபோமே. (எ)

(இ-ள்.)

வெள்ளறுகுச்சாறு 1 மரக்காலுடன்,
பழந்தின்னிப்பாலைப்பட்டை 32 பலத்தை எடுத்துக்

கல்லுரலிலிட்டிடித்து 2 மரக்கால் ஜலம்விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிக்கட்டிய கஷாயத்தையும் கலந்துகொள்ளவும். இதனுடன்,

| | | |
|---|---|---|
| பசுவின் பால் | 1 நாழியும் | (பட்டணம் படி ¼) |
| ,, நெய் | 1 நாழியும் | ,, |

விட்டு ஒன்று கலந்து,

| | |
|---|---|
| அதிமதுரம் | பாலைப்பட்டை |
| குமிழம்வேர் | இலாமிச்சம்வேர் |
| நன்னாரிவேர் | வெட்டிவேர் |
| கழந்தில்வேர் (கழற்சி) | குங்கிலியம் |
| பொன்மெழுகு | கோஷ்டம் |
| கொட்டிக்கிழங்கு | சந்தனத்தூள் |
| பூலாங்கிழங்கு | திராக்ஷைப்பழம் |
| கோரைக்கிழங்கு | அல்லிக்கிழங்கு |
| தாமரையிலைச்சுருள் | வெள்ளறுகு |
| *அடவிக்கச்சோலம் | |

* மலையாள மருந்துக் கடைகளில் கிடைக்கும்.

இவைகளை வகைக்கு 2 வராகனெடை வீதமெடுத்து மேற் சொன்ன கஷாயம்விட்டு நன்ருகவரைத்து, நெய்யுடனே குழப்பி, அடுப்பின்மேலேற்றி 3 நாட்களுக்குச் சிறுகச்சிறுக எரிக்கவும். 4-வது தினத்தன்று நெய்யைப் பக்குவப்படுத்தி அடுப்பின்மேலிருந்து இறக்கி வடிக்கட்டிப் பத்திரப்படுத் தவும்.

இந்நெய்யைத் தினம் 2 வேளை இருகாசெடை (½ தோலா) வீதம் உட்கொண்டு, வீக்கம், வைசூரிப்புண், இரத்தபித்தம், கிரந்தி, நெருப்புச்சுட்ட புண்கள், சீதபித்தம், ஆருத புண் முதலியவைகளுக்கும் மேலே பூசவும். குணமுண்டாகும்.

---

## 5. புரை, புண்களுக்கு "எண்ணெய்"

கொடிவேலி வேரரைத்துச் சர்க்கரையுந்
தான்கலந்து கொள்பிசைந்து
அடைதட்டி நல்லெண்ணெயிலிதைப் போட்டுப்
பொன்னிறம் போலாயெரித்து
வடியிதை புண்களுக்கும் புரைக்குள்ளு
மெண்ணெய் விட்டு வாட்டத்தீரும்
படிபுகழுஞ் சரபோசி மகராச
னிம்முறையும் பகருந்தானே. (அ)

(இ-ள்.)

நரம்பைநீக்கிய கொடிவேலிவேர்
சர்க்கரை (வெல்லச் சர்க்கரை)

இவ்விரண்டையும் தண்ணீர்விட்டுக், கைபடாமல் அரைத்து, அடைதட்டிக் காயவைத்துக்கொண்டு, அதிலொன்றை நல்

லெண்ணெயிலிட்டு அடுப்பின்மேல் வைத்து, எரித்துப் பொன் னிறமாகியவுடன் இறக்கி வடிக்கட்டிக்கொள்ளவும்.

இந்த எண்ணெயை புண், புரை இவைகளுக்கு இடவும். குணமுண்டாகும்.

---

## 6. புரை, புண், கடுப்பிற்கு மருந்து.

பாதரதமிருபலமபினரைப்பலம்
பூரம் பலமரைதான்
ஓது பொரியரிசிமாவு மூக்குடனல்ல
வெல்லமொரு கொட்டைப்பாக்
கிதம்மியிடையில் வைத்துமிரதத்தாற்
குழம்பாக்கி யிதில்பின்ருனு
சிதகர்ப்பூராதியரை பொரிமாவு
முறவாகச் சேர்த்தரைத்தே. (௬)

இருபத்திரு ஒருண்டை யிருவேளைக்
கிரண்டுங்கொள்ளிது முன்ஞன்கு
வருநாட்கள் பதிமூன்ரும் தினமாறப்
போட்டுமுத்தின் வார்க்குமெண்ணெய்
பெருகவே தலைதேய்த்து மரப்பிட்டு
வெந்நீராற் பெய்து மூழ்கு
முருங்கைக் காயிலைச்சாறு மிளங்கீரை
யரைக்கீரை முழிநெய்க்கோலே. (௰)

கருவாடு மீருளியு மிவையெல்லா
முப்பிலியே கண்டுமுட்கொள்
இருபத்தியத்துடனுஞ் சுடுநீரி
லுங்குளிக்க விருவேளைக்கும்

இருபது நாளிப்படியே கொடுத்துவரப்
புண் கடுப்பு மேகவீக்கம்
இருசூலைப் புரையோடு மிவைதீரச்
சரபேந்திர னியம்பினரே. (௰௧)

(இ-ள்.)

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | 2 பலம் |
| ,, அபின் | ½ பலம் |
| ,, கர்ப்பூரம் | ½ பலம் |
| பொரியரிசிமா | ஒரு உழக்கு |
| வெல்லம் | கொட்டைப்பாக்களவு |

இவைகளை யெடுத்துக்கொள்ளவும். முதலில் வெல்லத்தை அம்மியின் நடுவில் வைத்து, அதன்மேல் பாதரஸத்தைச் சிறிது சிறிதாகவிட்டு அரைக்க அது குழம்பாகும். பின்பு அபின், கர்ப்பூரம், மா முதலியவைகளை ஒன்றன்பின்னொன் றாகச் சேர்த்து நன்றாக மசியும்வரை அரைக்கவும்.

இம்மருந்தை 24 உருண்டைகளாகச் செய்துகொண்டு, தினமும் காலையில் ஒரு உருண்டையும், மாலையில் ஒரு உருண் டையுமாக உட்கொள்ளவும். இவ்வாறு 12 நாள் உட்கொண்ட பிறகு 13-வது நாளன்று ஆமணக்கெண்ணெய் தேய்த்து, அரப்பிட்டு வெந்நீரில் ஸ்நானம் செய்யவும்.

**பத்தியம் :**

முருங்கையிலை. முருங்கைக்காய், இளங்கீரை. அரைக் கீரை, கருவாடு (இரா, நெற்றலி முதலிய மீன் வகைகள்) ஈர வெங்காயம் முதலியவைகளைக் கூட்டிக்கொள்ளவும்.

உப்புச் சேர்க்காமலிருக்கவும். தினம் 2 வேளை வெந் நீரில் ஸ்நானஞ்செய்யவும். இப்படி 20 நாளைக்குச் செய்யவும்.

தீரும் வியாதிகள் :

புண், கடுப்பு, மேகம், வீக்கம், சூலை, புரை முதலியவை.

---

## 7. விரணம், சிலந்திக்கு "உருண்டை"

சித்திரமூலமிரண்டு பலமைந்துபலம்
பரங்கிசேர்ந்த பட்டை
மூத்துபுளியம்புராணி சுட்டக்கரி
யொன்றேகால்மொழி பலந்தான்
வைத்த பெருங்கரந்தைச் சாறிட்டரைத்துக்
கடுக்காயின் மட்டுருட்டி
உத்திதனைக்கொள் சகலபுண் சிலந்தி
போம் பத்தியமொழிந்துதானே. (கஉ)

(இ-ள்.)

பாலில் வேகவைத்த

| | | |
|---|---|---|
| | கொடிவேலி வேர்ப்பட்டை | 2 பலம் |
| ,, | பரங்கிப்பட்டை | 5 பலம் |
| | புளியம்புராணி சுட்டகரி | $1\frac{1}{4}$ பலம் |

இவைகளைக் கல்வத்திலிட்டுப், பெருங்கரந்தைச்சாறுவிட்டு, நன்றாக (4 ஜாமங்கள்) அரைத்துக் கடுக்காய்ப் பிரமாண முள்ள உருண்டைகளாக உருட்டி வைத்துக்கொள்ளவும்.

தினமும் ஒரு உருண்டை வீதமுட்கொள்ளவும்.

புண், சிலந்தி இவைதீரும். இச்சா பத்தியமாக இருக்கவும்.



---

# 8. புண் களிம்பு.

அரிதாரம் நவச்சாரம் வங்காளப்
 பச்சைகெந்தியாம் வெங்காரந்
துரிசிந்த வகையொன்றுக்கைந்து வரா
 கனெடை தானரைக்கரைத்துப்
பெரியசம்பீரமதைக் குடைந்துள்ளே
 புகமூடிப் போணிவைத்துத்
தரிமூன்று சீலமண் செய்மூவரளிப்
 புடமிட்டுத் தானெடுத்தே. (கரு)

எடுகல்வத்திடு தாளியிலைகையா
 னிலைவேலியின் பருத்தி
யடையிந்த மூன்றுவகைச் சாற்றையிட்டு
 மிருசாம மரைத்துத் தாலத்
திடுபுறம்பேவை பசுவின் வெண்ணெயிட்டு
 மிழைத்துப்பின் சிமிழிலிட்டுத்
தொடுபுண்கள் புரையோடல் தன்னிலிடக்
 காய்ந்துவிடுஞ் சுகந்தாமே. (கச)

(இ-ள்.)

| | |
|---|---|
| சுத்திசெய்த தாளகம் | சுத்திசெய்த கெந்தகம் |
| நவச்சாரம் | பொரித்த வெங்காரம் |
| வங்காளப்பச்சை | சுத்திசெய்த துரிசு |

இவைகளைவகைக்கு 5வராகனெடை வீதமெடுத்துக் கல்வத்தி லிட்டுத் தூள் செய்துகொண்டு, ஒரு பெரிய எலுமிச்சம்பழத் தைக் குடைந்து, அதற்குள்ளடைத்து, 3 தடவை சீலமண் செய்யவும். காய்ந்த பின்பு 3 வரளிகளை யடுக்கி அதனுள் இதை வைத்துப் புடமிடவும். ஆறியபின் புடத்தை விலக்கி, எலுமிச்சம்பழத்தை யெடுத்துக் கல்வத்தில்வைத்து,

தாளியிலைச்சாறு
கையாந்தகரைச்சாறு
வேலிப்பருத்திச்சாறு

இவைகளைத் தனித்தனியே விட்டு. 2 ஜாமங்கள் வீதமரைத்துக் கல்வத்திலொரு புறம்பில் வைத்து. வேண்டிய அளவு (சரிபாகம்) பசு வெண்ணெய் கூட்டி மறுபடியும் ஒன்று சேரும்படி அரைக்கவும். இக்களிம்பை யொரு சிமிழில் பத்திரப்படுத்திப்

புண்கள், புரையோடும் புண்கள் முதலியவைகளுக்கு மேலே தடவும். இரணங்கள் காய்ந்து சுகமுண்டாகும்.

---

## 9 புண், நூலைகளுக்கு 'இடி லேகியம்'

கொடிவேலிவேர் சேங்கொட்டைக் கருஞ்சீர
ஓமமுள்ளி கொப்பரைக்காய்
குடிவெல்லம் வகையொன்று பலமொன்றாய்ச்
சேகரித்துக் கொண்டிதெல்லாம்
இடிலேகியம் போலேசெய்து கொட்டைப்
பாக்களவா யெடுத்துட்கொள்ளும்
படி புளிப்புப்புகைதள்ளி யிருபதுநா-
ளுண் சூலைபல புண்போமே. (கரு)

(இ-ள்.)

சுத்திசெய்த கொடிவேலிவேர்ப்பட்டை
,, சேராங்கொட்டை
ஓமம் பூண்டு
கருஞ்சீரகம் கொப்பரைத்தேங்காய்
வெல்லம்

முதலிய சரக்குகள் வகைக்கு ஒரு பலம், வீதமெடுத்துக் கல்லுரலிலிட்டுப் பூணில்லா உலக்கையினுல் மையாக இடித்து, லேகியம்போலச் செய்து வைத்துக்கொள்ளவும்.

இதிலொரு கொட்டைப் பாக்களவெடுத்துத் தினம் ஒரு வேளை வீதம் 20 நாளைக்கு உட்கொள்ளவும்.

**பத்தியம் :**

புளி, புகையிலை இவற்றை நீக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

சூலை, புண்கள் முதலியன. கைகண்டது.

---

# 10. புண்களுக்கு "எண்ணெய்"

கள்ளியினீர் வசுவாசி நறுந்தாளி
  தாளிசிறு கத்திரியாகு
முள்ளவிலை தனிற்சாறு முத்தினெண்ணெய்
  வேம்பினெண்ணெ யும்கலந்தே
துள்ளு கொதித்திட்டபின்பு சாதியின்காய்
  வத்லநாபி துரிசுதாளும்
உள்ள செங்கதாரித்தோல் வகைக்கோர்கிட்-
  கந்தாளு மிட்டிறுத்தே. (கசு)

(இ-ள்.)

இலைக்கள்ளிச்சாறு (1 உழக்கு)
ஆடாதோடையிலைச்சாறு ,,
நறுந்தாளிச்சாறு ,,

நல்லதாளிச்சாறு (1 உழக்கு)
சிறுகத்திரிச்சாறு ,,
வேப்பெண்ணெய் ,,
ஆமணக்கெண்ணெய் ,,

இவற்றை யொன்று கலந்து, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கிச்,

சாதிக்காய் வத்ஸநாபி
துரிசு செங்கதாரிப்பட்டை

இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை வீதமெடுத்துத்தூள் செய்து எண்ணெயுடன் போட்டுக் குழப்பிக் கொள்ளவும்.

* இந்த எண்ணெயைப் புண்களுக்குப் போடவும். புண் களும் ஆறும். புழுவும் சாகும்.

---

## 11. மேகப்புண்ணிற்கு 'மருந்து'

வசம்புள்ளி யுழலத்தி யிலை மூன்றுந்
தன்னிலொக்க வாங்கரைத்து
நிசங்கரைத்துக் குடிக்கப்போமிருதார
சிங்கியுந்தானிட்கங்கூட்டி
வசந்துரிசந்தளவாய் நல்லெண்ணெயைக்
குத்தியிட்டு மசியரைத்தே
நிசம்பூசப் புண்புரைகள் காய்ந்தும்போ
மிம்முறையும் நேர்த்தியாமே. (௧௭)

---

* செய்யுளில் இந்த விஷயம் காணப்படாவிடினும் 72செ.சு வடியில் காணப்படுகிறது.

(இ-ள்)

(1) உள்ளுக்கு.

ஊமத்தை இலை வசம்பு
பூண்டு

இம்மூன்றையும் சமனெடுத்து, அம்மியின்மேல் வைத்து, அரைத்துத், தண்ணீருடன் கலக்கிக் குடிக்கவும்.

(2) மேலுக்குப் பூச.

சுத்திசெய்த மிருதாரசிங்கி 1 வராகனெடை
,, துரிசு 1 ,,

இவைகளை நன்றாக நுணுக்கி நல்லெண்ணெய் (¼ சேர்) விட்டு நன்றாக மைபோல் அரைத்து அதனுடன் குழைத்து வைத்துக் கொள்ளவும்.

இதை மேலுக்குத் தடவப் புண், புரைகள் முதலியவை காயும்.

---

## 12. சிரங்குக்குச் 'சேர்வை' (பிளாஸ்திரி)

*துடிபூரஞ் சாம்பிராணி மஞ்ஞேசிலை
யோர்வகைக்கோர் துட்டெடைக்குப்
பொடிசெய்து மொன்றரைச் சேர் நறுநெய்யிற்
கலந்திட்டு போடக்கேளு
படிதவலைக்குள்ளிட்டுக் கிட்டிகட்டிக்
காய்ச்சிடுந் தீப்பத்தும் பின்பு
வடிகுண்டுச்சட்டிதனில் நிறையநீர்
இட்டதிலும் வாற்றிடாயே. (கஅ)

---

*த்ருடி என்னும் வடமொழிச் சொல்லின் திரிபு.

வாற்றிதனை யாறவிட்டுப்பின்வழித்து
வைத்திடுவாய் வலிசிரங்கின்
மேற்றடவி நாற்கடிகையூறவிட்டுப்
பின்குடித்து விடுவாய்மீளச்
சாற்றுதின மிருமூன்றுமிப்படியே
செய்திடுவாய் தடவிக்கொண்டு
மாற்றிடநீர்க் குளித்திடப்போஞ்சிரங்கு குண
மாமிது மகிழ்ந்துசெய்யே (கக)

(இ-ள்)

| | |
|---|---|
| ஏலக்காய் | ஆலத்திக்கர்ப்பூரம் |
| சாம்பிராணி | சுத்திசெய்தமனோசிலை |

இவைகளை வகைக்கு ஒரு துட்டெடை எடுத்துக் கல்வத்தி லிட்டு நன்றாகப்பொடிசெய்து,

பசுவின்நெய் 1½ சேருடனே குழப்பிக்கொண்டு, ஒரு தவலைக்குள் ஊற்றி, அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைத்து வைத்து, ஒரு கிட்டியினால் கிளறவும். அது எரியவாரம் பிக்கும்.

ஒரு குண்டுச்சட்டியில் குளிர்ந்த தண்ணீரை நிரப்பி அதில் மேலே சொல்லப்பட்டமருந்தை ஊற்றவும்.

சிறிதுநேரஞ்சென்ற பின்பு அது நன்றாக ஆறியவுடன், வழித்து ஒரு பீங்கானில் பத்திரப்படுத்தவும்.

இதனைச் சிரங்குகளுக்குப்பூசி 4 நாழிகை நேரம் ஊற வைத்துப், பின்பு ஸ்நானம் செய்யவும். இவ்வாறு 6 நாளைக் குத் தடவிக் குளிக்கவும். சிரங்குகள் குணமாகும்.

---

## 13. புண், கிரந்திகளுக்குச் 'சாதிலிங்கச்சேர்வை'

20, 21-வது செய்யுட்கள் உள்ள ஏடு சுவடியில் காணப் படாததால் 72 நே சுவடியிலிருந்து எடுத்த அதற்கான உரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | | |
|---|---|---|
| துத்தம் | ½ | வராகனெடை |
| துரிசு | ½ | ,, |
| வெங்காரம் | ½ | ,, |
| வெள்ளைக்குங்கிலியம் | 1 | ,, |
| படிக்காரம் | ½ | ,, |
| மெழுகு | 3 | ,, |
| சாதிலிங்கம் | 2 | ,, |

**செய்முறை.**

*துத்தம், துரிசு, வெங்காரம், படிக்காரம், இந்நான்கையும் கரண்டியிலிட்டுப் பொரித்துக் கொள்ளவும். இவைகளை ஒரு அம்மியில் வைத்துவிட்டபின், அக்கரண்டியில் தேங்காயெண் ணெய் ஒரு உழக்கு வார்த்து, மெழுகைப்போட்டு தணலில் வைத்து உருக்கவும். ஒன்றான பின்பிதை அம்மியின் மேலுள்ள சரக்குகளுடன்விட்டு சாதிலிங்கத்தையும், குங்கு லியத்தையும் சேர்த்து, நன்றாக அரைத்துச் சிமிழில் பத்திரப் படுத்தவும். வேண்டும்போது ஒரு வெள்ளைத் துணியில் தட விப் புண்களில் போடப் புண்கள் ஆறும்,*

---

## 14. பொரி கிரந்திக்குப் புகை.

*சூதமிரு நிட்கம் வங்கமீரிரண்டு*
*நிட்கமிதிற் சொல்வங்கத்தை*
*யோதுகரண்டியிலிட்டு மூன்றுதிறம்*
*பூமியின்மேலுருக்கிச் சாய்த்து*

யீதிரண்டுங் கூட்டியபின் செம்பரத்தைப்
    பொடுதலையினிலை கரிப்பான்
மாதுளசிச்சாறும் வெவ்வேறாக விட்டுக்
    காய்ச்சியவுடமகா சத்தாமே. (உஉ)

சத்தியதாம் பின்னெடுத்துப் பதனஞ்செய்
    புண்ணினுக்குத் தக்கதாக
வித்தை முக்காலரைநிட்கம் பிரமாணஞ்
    சேலையிலே யிட்டுக்கட்டி
போத்து புளியந்தழலிலாறுதினம்
    பனிரெண்டுபொழுது தானுஞ்
சுத்துபுகை போட்டிடவு மந்திசந்தி
    மறவாமற் சொல்லக்கேளே. (உ௩)

குளிர்ந்தநீரதனில் மூழ்கியோருண்டை
    புகைக்காட்டிக்கொள் நீர்ச்சோறும்
புழுங்கன்ன மீருளியுமுப்பிலியா
    யசனஞ்செய் போதிரண்டுங்
குளிர்ந்த நீரத்னிலிருந்தைந்தாறு
    தினங்கழித்துக் கொட்டையெண்ணெய்
வளர்தலைக்கிட்டப்பால் முழுகிருபா-
    லுட்பத்தியமாகுந்தானே. (உச)

(இ-ள்.)

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | 2 வராகனெடையும் |
| ,, வெள்ளீயம் | 2 வராகனெடையும் |

எடுத்துக்கொண்டு, முதலில் வெள்ளீயத்தை ஒரு இரும்புக் கரண்டியிலிட்டுத், தணலில் வைத்து உருக்கி 3 முறை (மண்) தரையில் சாய்க்கவும். நாலாவதுமுறை இது உருகும்போது

பாதரஸத்தைவிட்டுத் தொந்திக்கவும். (குச்சியினால் கிளறி ஒன்ருகச் செய்யவும்.)

பின்பு, அக்கலவையைச்

செம்பரத்தைச்சாறு
பொடுதலைச்சாறு
கையாந்தகரைச்சாறு
துளசிச்சாறு

முதலான சாறுகளுடனே தனித்தனியாகக் காய்ச்சவும். நல்ல சத்தியாகும்.

பின்பு, இதை பத்திரப்படுத்திக்கொண்டு, புண்ணிற்குத தக்கபடி ¼ முதல் ½ வராகனெடைப் பிரமாணமெடுத்து, ஒரு வெள்ளைத்துணியில் முடிந்து புளியந்தணலில் போட்டுப் புகை பிடிக்கவும், இவ்வாறு 6 நாட்களுக்கு 12 பொழுது இடவும்,

குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தபின் உருண்டைகளைப் புகைக்கவும்.

**பத்தியம் :**

புழுங்கரிசி நீர்ச்சோற்(பழயது)றை இருவேளைகளிலும் உப்பில்லாமல் சாப்பிடவும். 5 அல்லது 6 நாட்கள் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தபின் ஆமணக்கெண்ணெயைத் தலைக்குத் தேய்த்து ஸ்நானம் செய்யவும். பின்பு 20 நாளைக்குப் பத்தியமாக இருக்கவும்.

**குறிப்பு:—**

72 செ. சுவடியில். திராய், புளித்த பருபாகலிலை, பாகற்காய் கூட்டவும் என்று காணப்படுகிறது.

---

## 15. சிரங்கிற்கு "எண்ணெய்"

எள்ளின்னெண்ணெய் காற்படியில் வாழையின்கா-
யிரண்டரைத்திடு கலந்துந்
தன்னுமன்ற பதமாகவேயெரித்துச்
சிரங்குபடர் தாமரைக்குங்
கள்ளவண்டு கடிதன்னிற் பூசிடப்போ
மிம்முறை கைகண்டதாகும்
பிள்ளைவண்டு சிரகாற்று மாலையணி
தோட் சரபப்பெருமான் சொல்லே. (உரு)

(இ-ள்.)

சுத்தமான நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி

எடுத்து, அதனுடன் (முற்றிய) வாழைக்காய் இரண்டை எடுத்து நன்றாக அரைத்துக் குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பதத்தில் வடித்து இறக்கவும் (மணல் பதம்). இந்த எண்ணெயைச் சிரங்கு, வண்டுகடி, படர்தாமரை முதலிய இரணங்களுக்கு மேலே பூசவும். மிக்க குணம் தரும். கைகண்டது.

---

## 16. சிரங்கிற்கு 'மருந்து'

அரிதாரங்கெந்தி ரசம்வகைக்கொரு
வராகனெடை யளவுமத்திற்
பரிசாறும் வாற்றரைத்து மெள்ளினெண்ணெய்
தனிற்போட்டுப் பருதிமுன்னம்
எரியாகப்புடமாக வைத்தெடுத்து
மேற்றடவியிடு மோரன்னம்
பரிதியிட்டுயேதிச்சாணம் பூசிமுத்-
தினங்குளிக்கப் படுபுண்போமே. (உசு)

(இ-ள்.)

சுத்திசெய்த ரஸம்
,, கெந்தகம்
,, தாளகம்

இவைகளை வகைக்கு ஒரு வராகனெடையெடுத்துக் கல்வத்தி லிட்டுப் பொடிசெய்து ஊமத்தையிலைச்சாறு விட்டு நன்ருக அரைத்து, எள்ளெண்ணெய் (½ சேரில்) குழப்பிச் சூரிய புடமாக வைக்கவும். (10 தினங்கள் சென்றபின்) இதை சிரங்குகளுக்குத் தடவி, மோர் சாதம் சாப்பிடவும், எருமைச் சாணி யிட்டுக் குளிக்கவும். இவ்வாறு 3 நாட்கள் செய்யச் சிரங்குகள் குணமாகும்.

---

## 17. புண், புரைகளுக்குப் 'புகை'*

பாதரதமூன்று நிட்கமவலெருக்கங்
கரியும் பாடாணந்தான்
ஓதியசேங்கொட்டை வகைக்கொரு நிட்க
மிடைகூட்டி யுற்றமேனி
மூதுசெருப்படிச்சாற்றை விட்டரைத்துப்
பன்னிரெண்டு முருட்டுருண்டை
யீதுவைத்து மந்திசந்தி யாறுதினம்
புகைபோட்டு மிருந்துகேளே. (உள்)

மீளொருநாள்விட்டு நன்னீர்தனில்மூழ்கி
மேற்குளிக்க வேழுநாட்டாற்
றுளுருபத்தியங்கேளும் பாகலிலை
திராயாகுந்தான் பாகற்காய்

---

*72-வது சுவடியில் இம்மருந்திற்குப் "புகை மருந்துச் சேர்வை" என்ற பெயர் காணப்படுகிறது.

நீறுபுளியிட்டுங் கொள்ளிதற்குப்புண்
　　கிரந்திகளும் நிணங்களாறுங்
கோளரியாய் பகையோட்டுஞ் சரபேந்திரன்
　　இம்முறையுங் கொடுத்ததாமே. (உஅ)

(இ-ள்.)

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | | 3 | வராகனெடை |
| ,, | வெள்ளைப்பாஷாணம் | 1 | ,, |
| , | சேராங்கொட்டை | 1 | ,, |
| வெள்ளெருக்கங்கரி | | 1 | ,, |
| அவல் | | 1 | ,, |

இவைகளைக் கல்வத்திலிட்டு, நசுக்கிக்,

குப்பைமேனிச்சாறு
செருப்படிச்சாறு

இவ்விரண்டையும் தனித்தனியே விட்டு (மூன்று ஜாமங்கள்) அரைத்துப் பன்னிரெண்டு உருண்டைகளாக உருட்டிவைத்துக்கொள்ளவும், காலையிலும், மாலையிலுமாகத் தினம் 2 தடவை இம்மாத்திரையைத் தணலிலிட்டுச் சிரங்கிற்குப் புகை பிடிக்கவும். இவ்வாறு 6 நாளைக்குச் செய்யவும்.

பின்பு, ஏழாவது நாளன்று ஒன்றும் செய்யாமலிருந்து, மறுநாள் குளிர்ந்த ஜலத்தில் முழுகி ஸ்நானம் செய்யவும். இவ்வாறு 7 நாளைக்கு முழுகிக் குளிக்கவும்.

**பத்தியம்:**

பாகற்காய், பாகலிலை, திராய் முதலியவைகளுடன் புளி சேர்த்துச் சமையல் செய்து சாப்பிடவும்.

இதனால் புண், கிரந்தி முதலியவைகள் ஆறும்.

# 18. புண்கள் ஆற மருந்து.

வெள்ளறுகும் நல்லறுகு பெரியபாச்-
சோற்றியிலை மேலிம்பூரா
உள்ளபுளியிலை கையாந்தகரைமாம்
பட்டையிவையோ ரொன்றுக்கு
விள்ளதிற்சாறுரி யெண்ணெய் நாழிவிட்டு
மிலாமிச்சம் வேரதிங்கம்
நன்ளுசேவகன்கிழங்கு கொடிவேலி
வேர்ப்பட்டை நாலுந்தானே. (உகூ)

ஓதிவைகள் வகையொன்றுக்கொருகாசி-
னெடையரைத்துட்கலந்து
போதடுப்பிலேற்றி யெரித்ததைப்பதமாய்
வடித்துப்பொன் போலவைத்து
மோதியபுண் கிரந்திகள் புரைகளுக்
கிடாறும் முறையைத்தானே
நீதிமுறை வழுவாத சரபோசி
மகராசன் நிகழ்ந்ததாமே. (௩௰)

(இ-ள்.)

| | |
|---|---|
| வெள்ளறுகு | நல்லறுகு |
| பெரும்பாச்சோற்றியிலை | இம்புரூமூலம் |
| புளி இலை | கையாந்தகரை |
| மாம்பட்டை | |

| | |
|---|---|
| இவைகளின் சாறு வகைக்கு | ½ படி |
| சுத்தமான நல்லெண்ணெய் | 1 படி |

இவைகளை யொன்று கலந்து, இதனுடன்,

| | |
|---|---|
| இலாமிச்சம்வேர் | அதிமதுரம் |
| சேவகனர் கிழங்கு | கொடிவேலிவேர்ப்பட்டை |

இந்நான்கும் வகைக்கு 1 வராகனெடை விதமெடுத்தரைத்து, ஒன்று கலந்து அடுப்பின்மேல்வைத்து, எரித்துப், பொன்நிறமான பதத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயைப் புண்கள், கிரந்திகள், புரைகள், முதலியவைகளுக்கிட அவைகள் ஆறிவிடும்.

---

## 19. புண்களுக்கு 'எண்ணெய்'

தென்னையெண்ணெயொரு நாழியூமத்தின்
சலம்நாழி சிறுபூநாகந்
தன்னிலுரி சேர்தெரித்துப் புண்சகலத்
திடத்திருந்தான் முத்தெண்ணெய்
யன்னதிலுங் காற்படியில் மயிற்றுத்த
மிருகிட்க மளவாயிட்டுப்
பின்னிய மூக்கரணை வேரிட்டெரித்துப்
புண்ணிலிடப் பறக்குந்தானே. (௩௧)

(இ-ள்)

(1) தேங்காயெண்ணெய் 1 படி
ஊமத்தையிலைச்சாறு 1 படி

இவைகளை யொன்றுகூட்டி,

மண்புழு ½ படியுங்கூட்டி

அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயைப் புண்களில் போட அவைகளாறிப்போகும்.

(2) ஆமணக்கெண்ணெய் ¼ படி
சுத்திசெய்த துருசு 2 வராகனெடை
மூக்கரட்டை வேர் 3 வராகனெடை

இவைகளை ஒன்று கலந்து அடுப்பின் மேல்வைத்தெரித்து, வடித்துப் புண்ணில்போட, புண்களாறும்.

---

# 20. புண்களுக்குப் "புகை"

பாதரதம் பலமூன்றுங் கருவங்க
    மதிற்பாதி பலமுறுக்கிச்
சூதமதைப் பின்னிட்டு நிலஞ்சாய்ந்து
    மரிதாரந்துரிசுதுத்தஞ்
சீதநெல்லிக் கெந்தகமுங் கெவுரியும்வெண்
    பாடாணந் தெரிந்தவாறு
மோதிரண்டு காசிடையாமசமோதங்
    கருஞ்சீரமொரு வகைக்கே. (நஉ)

காசிடையிம்மருந்தெல்லாம் பொடிசெய்து
    மொருமிக்கக் கலந்தெருக்கும்
வீசிடுபாலிட்டரைத்து மேழுருண்டை
    யாய்ப்பிடித்து மேலுருக்கிப்
பேசியகட்டியுமேழு பங்கெடுத்து
    மேழுமிடிப்பட்டதைத்தான்
கூசுபுளியந்தழலில் மூன்றுதினம்
    புகையிட்டுக்கொள்ளுநாளே (நந)

*குளிர்ந்தநீரதனில் மூழ்கியோருருண்டை
    புகைகாட்டிக்கொள் நீர்ச்சோறும்

---

* இச்செய்யுள் முன்னமேயே கூறப்பட்டுள்ளது. 17-ம் பக்கம் பார்க்க

புழுங்கன்ன மீருளியுமுப்பிலியா
  யசனஞ்செய் போதிரண்டுங்
குளிர்ந்தநீரிதனிலிருந்தைந்தாறு
  தினங்கழித்துக் கொட்டையெண்ணெய்
வளர்தலைக்கிட்டப்பால் முழுகிருபா
  ஞுட்பத்தியமாகுந்தானே. (௩௪)

(இ-ள்.)

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | 3 பலம் |
| ,, கருவங்கம் | 1½ ,, |

இவைகளை யெடுத்து முதலில் ஈயத்தை ஒரு கரண்டியிலிட்டு உருக்கி, பின்பு பாதரஸத்தை விட்டு, தொந்தித்துத், தரையில் சாய்க்கவும்.

| | |
|---|---|
| சுத்திசெய்த தாளகம் | 2 வராகனெடை |
| ,, துரிசு | ,, |
| ,, துத்தம் | ,, |
| ,, நெல்லிக்காய் கெந்தகம் | ,, |
| ,, கௌரீ பாஷாணம் | ,, |
| ,, வெள்ளைப் பாஷாணம் | ,, |
| கருஞ்சீரகம் | 1 காசெடை |
| ஓமம் | 1 காசெடை |

இவைகளைக் கல்வத்திட்டு நன்ருகப் பொடியாகும்படியரைத்து எருக்கம்பால்விட்டு மறுபடியும் அரைத்து 7 உருண்டைகளாக உருட்டிவைத்துக் கொள்ளவும்.

இம்மாதிரியே ஈயரஸக்கலவையையும் 7 பங்குகளாக உருட்டி மேல்சொன்ன உருண்டைகளுடனே சேர்த்து முடிச்சாகச் செய்துகொள்ளவும்.

3 நாளைக்கு (த் தினமொன்றுக்கு இருவேளை வீதம்) புளியஞ்சிராய் தணலில் முடிச்சுக்களைப் போட்டு ரணங்களுக்குப் புகைக்கவும்.

**பத்தியம் :**

குளிர்ந்தஜலத்தில் ஸ்நானம் செய்தபின் உருண்டைகளைப் புகைக்கவும்.

தண்ணீர்விட்ட புழுங்கரிசிச் சாதத்தை வெங்காயஞ் சேர்த்துக் கொண்டு உப்பில்லாமல் சாப்பிடவும். தினம் 2 வேளையும் குளிர்ந்தநீரில் ஸ்நானஞ் செய்யவும்.

5 அல்லது 6 தினங்கள் கழித்து ஆமணக்கெண்ணெய் தேய்த்துக்கொண்டு தலைமுழுகவும்.

---

## 21. புண், புரைகளுக்குப் "புகை"

கருவங்கமூன்று பலமந்தளவா
யிரதமிட்டுக் கலந்துருக்கித்
தரணிமேற்சாய்த்திட்டு நெல்லியின்காய்
கெந்தகமுஞ் சார்வங்காளம்
வரும்பச்சையொரு வகைக்கிருபலந்துத்
தங்காந்தமாமிரண்டில்
ஒருவகைக்கு முப்பலமாய்ப்பொடிசெய்து
மாறுருண்டை யுருட்டிடாயே (௩௫)

இடிமுடிந்ததைப் புளியந்தழலிற்
புகைமூட்டி யிடாறுவேளை
தொடுமொருநாட்கழித்து முத்தினெண்ணெ
யரப்பிட்டுத் துடைத்துவெந்நீரில்

கொடுமுழுகிப்பத்தியமீருள்ளியிராக்
கருவாடுங் கூனெற்றெலி
யடுமுருங்கையிலை காயுப்பிலிக்கஞ்சி
யிருபது நாளாகுந்தானே (௩௬)

(இ-ள்.)

சுத்திசெய்த பாதரஸம் 3 பலம்
,, காரீயம் 3 பலம்

இவ்விரண்டையும் ஒரு கரண்டியிலிட்டு உருக்கித் தரையின் மேல் சாய்க்கவும். அதனுடன்,

சுத்திசெய்த
நெல்லிக்காய் கெந்தகம் 2 பலம்
,, வங்காளப்பச்சை 2 பலம்
,, துத்தம் 3 பலம்
,, காந்தம் 3 பலமும் சேர்த்துக்

கல்வத்திலிட்டு நன்முக அரைத்து 6 உருண்டைகளாகச் செய்துகொண்டு புளியந்தணலில் போட்டுப் புண்ணிற்குப் புகையிடவும். இப்படி 3 நாளைக்கு 6 வேளை செய்யவும். நாலாவது நாள் ஒன்றுஞ் செய்யாமலிருந்து ஐந்தாவது நாளன்று ஆமணக்கெண்ணெய் தேய்த்துக்கொண்டு, வெந்நீரில் ஸ்நானஞ் செய்யவும் அப்போது தேய்த்துக்கொள்வதற்கு அரப்பை உபயோகிக்கவும்.

**பத்தியம்:**

வெங்காயமும், இராக் கருவாடு, நெற்றெலிக் கருவாடு, முருங்கையிலை, முருங்கைக்காய் முதலியவைகளைக் கூட்டவும். 20 நாளைக்கு உப்பில்லாமல் கஞ்சி குடித்து வரவும்.

# 22. வாய், நாக்கு, ஈறு முதலிய இடங்களில் வெந்த புண்ணிற்கு 'நெய்'

வசுவாசி கிராம்பேலமிலவங்கஞ்
 செண்பகப்பூ மாசிக்காயும்
நிசகோட்டஞ் சாதியின் காய்பத்திரியு
 மரிதகியுநேர் நாகப்பூப்
பசைதேற்ருன் வித்ததிங்கந் திப்பிலிநற்
 சீரகமும் பச்சைவெட்டு
முசந்துரை சந்தனங்களிலாமிச்சு
 சித்தமட்டி யூரவெட்டிவேரே (நஎ)

நன்ஞரிவேர்முதியார் கூந்தலிவை
 வேர்வகைகள் நற்பசும்பால்
தன்னிலொருபடி நெய்யுமளவொன்றுக்
 கொருநிட்கஞ் சரக்கில்வேரைக்
துன்னுபசும்பால தனலரைத்து நெய்
 தனில்போட்டுச்சொல் சரக்கை
மன்னுபொடிசெய்து வைத்துக்காய்ந்தநெய்யிற்
 றூவு கிண்டிமற்றுந்தூவே (நஅ)

கிண்டிவரவரவுந் தூள்முகிந்தபின்
 பதமாகக் கீழிறக்கிக்
கொண்டுநெய்யை யுள்ளினுக்குங் கொடுசிரத்தி
 னுந்தேய்த்துக்கொள் மற்ருனள்
கண்டுதலைமுழுகியே யிருநேரம்
 நெய்யதனைக்கணக்காய்த்தானும்
உண்டிடுநாளொன்றுவிட்டு மறுநாளிற்
 றலைக்கிடப்போ முட்டணந்தானே (நகூ)

(இ-ள்)

| | |
|---|---|
| ஆடாதோடை | கிராம்பு |
| ஏலக்காய் | இலவங்கப்பட்டை |
| செண்பகப்பூ | மாசிக்காய் |
| கோஷ்டம் | சாதிக்காய் |
| சாதிப்பத்திரி | கடுக்காய்த் தோல் |
| சிறுநாகப்பூ | தேத்தாங்கொட்டை |
| அதிமதுரம் | திப்பிலி |
| சீரகம் | ஈரச்சந்தனக் கட்டை |
| இலாமிச்சம்வேர் | சிற்றாமுட்டிவேர் |
| வெட்டிவேர் | நன்னாரிவேர் |
| முதியார்கூந்தல் வேர் | |

இவைகளை வகைக்கு 1 வராகனெடையளவெடுத்து இடித்துச் சூரணித்துக்கொள்ளவும், வேர் வகைகளைப் பசுவின் பால் விட்டரைத்துப்

| | |
|---|---|
| பசுவின் பால் | 1 படியுடனும் |
| பசுவின் நெய் | 1 படியுடனும் |

குழப்பி அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதமாகும்போது, கடைச்சரக்குகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்த மேலே சொன்ன தூளை நெய்யுடனே தூவிக் கிளரவும். தூள் முதிர்ந்து பக்குவமான்பின் நெய்யை இறக்கி வடிக்கட்டிக் கொண்டு,

உள்ளுக்குக் கொடுத்துத் தலையிலும் தேய்த்துக்கொண்டு மறுநாள் தலை முழுகவும்.

தினம் 2 வேளைகளிலும் நெய்யை உண்ணவும். ஒன்றை விட்டொருநாள் தலையில் தேய்த்து ஸ்நானஞ் செய்யவும்.

சகல உஷ்ணமுந் தீரும், கைகண்டது.

## 23. தீராத புண், புரைகளுக்குப் 'புகை'

இந்த முறையின் செய்யுட்கள் (40, 41) சுவடியில் காணப் படாததால் 72 நே சுவடியிலிருந்து அதற்கான உரை மாத்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

*சுத்திசெய்த நாபி 1 வராகனெடை*

*நசுக்கி நல்லெண்ணெய் 1 சேருடனே போட்டு, அடுப்பின் மேலேற்றிக் காயவைத்து, அதனுடன் தலைமயிர் ஒருநார்த்தங் காயளவு போடவும். மயிர் நன்றாகத் தீய்ந்தவுடனே எண் ணெயை அடுப்பின் மேலிருந்து கி ழி ற க் கி, அதனுடனே குழைத்துவைத்துக்கொண்டு புண்களிலிடவும்.*

*புண்கள் ஆறிப்போகும்.*

---

## 24. தீராத புண்கள், புரைகளுக்குப் 'புகை'

*வெள்ளெருக்குக்கரவீரங் கொடிக்கள்ளி*
*யிதுமூன்றும் வேரும்பட்டை*
*உள்ளதிதுமேற்புறணி சீவிநன்றாய்த்*
*தட்டிவகைக்கொரு விளாங்காய்*
*கொள்வாயெடுத்துவைத்துக் கொண்டிரத*
*மரைநிட்கங்கொடு சட்டிக்குள்*
*தள்ளுகுப்பை மேனியிலைச்சாறு விட்டு*
*முறித்தெடு முன்றட்டும்வேரே* (சஉ)

*மும்மருந்து முறித்திட்டவிரதத்திற்*
*பிரட்டொன்பான் மூட்டுபங்கு*
*தம்மிலொருசட்டியிலே வைத்துநிழ*
*லுலர்த்திட்டுத் தலைக்கெள்ளெண்ணெய்*

கம்முழுகச்சொல்லு மறுதினங்காற்றில்
    லாதுதிரை கட்டிக்கொண்டு
விம்முபுளியந் தழலிலடிப்போன
    குந்தாணி மேலும்வைத்தே (சங)

புகைத்திட்டுமொரு பங்கையுரலிட்டு
    நல்லபுகைப் போட்டுமூன்று
வகைத்தினங்களந்தி சந்திதூபமிட்டு
    நான்காளுள் வார்முத்தெண்ணெய்
சிகைமுழுகந்திசந்தி புகைகாட்டி
    யஞ்சாநாள் திகழ்வெந்நீரால்
மிமைமுழுகிப்புகைத்து மூன்றுநாளைக்
    கொருக்கால் வெந்நீரில்மூழ்கே (சச)

புழங்குவாயுட்குடிக்க வெந்நீராற்
    புகையுப்பும் புளிகள்தள்ளி
இளங்கிரைமுருங்கிலைக் காய்பிஞ்சாகும்
    பத்தியமாயிருந்துட் கொள்ளு
மிளகுதூட்கூட்டிடவும் பதினைந்து
    நாட்கழித்து மேற்புளிதான்
புழங்கிடப்புண்புரைபோஞ் சரபேந்திர
    னிம்முறையும் புகன்றதாமே (சரு)

(இ-ள்.)

வெள்ளெருக்கு அரளி
கொடிக்கள்ளி

இம்மூன்று சரக்குகளின் வேரும், பட்டையும் தனித்தனியே ஒரு விளாங்காய்பிரமாண மெடுத்துக்கொள்ளவும்.

ஒரு புதுச்சட்டியை யெடுத்து. அதில் ½ வராகனெடை சுத்திசெய்த பாதரஸத்தைவிட்டுக் குப்பைமேனிச் சாறுவிட்

டுச் சிறிது நேரம் வைத்திருக்கவும். பாதரஸம் முறியும். அதனுடன் முன்சொன்ன மூன்று மருந்துகளையும் போட்டுப் புரட்டி, 9 பங்குகளாகச் செய்துகொண்டு, நிழலில் உலர்த்தவும்.

நோயாளி முதல் நாளன்று நல்லெண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து மறுநாள் காற்றுப்படாமல் திரைகட்டிக் கொண்டு, புளியஞ்சிராயினால் தீயை உண்டாக்கவும். அதன் மேல் ஒரு அடிப்போன குந்தாணியை வைத்து, அதனுள்ளிருக்கும் தணலில் மேலேசொன்ன தூளைப்போடவும் உரலில் ஒரு பங்கையும போட்டுப் புகைக்கவும். அப்புகையை நன்றாகப் புண், புரைகள் இவற்றுள் செல்லும்படி பிடிக்கவும். இம்மாதிரி தினம் காலையிலும், மாலையிலும் செய்யவும். நான்கு நாட்கள் சென்றபின் ஆமணக்கெண்ணெய் தேய்த்துத் தலைமுழுகி முன் சொன்னபடிக்கு காலையிலும் மாலையிலும் புகைபிடிக்கவும். 5-வது நாளன்று வெந்நீரில் ஸ்நானம்செய்து மற்ற மருந்துகளையும் புகைக்கவும். இம்மாதிரி 3 நாளைக் கொருதரம் வெந்நீரில் ஸ்நானஞ் செய்யவும்.

**பத்தியம் :**

வெளிப்பிரயோகங்களுக்கும், உள்ளுக்கும் குடிக்கவும். வெந்நீரையே உபயோகிக்கவும், உப்பு, புளி, புகையிலை இவைகளைத் தள்ளிவிடவும். இளங்கீரை, முருங்கையிலை, முருங்கைக்காய், முருங்கைப்பிஞ்சு இவைகளைக் கூட்டலாம். 15 நாட்கள் சென்றபின் புளி சேர்த்துக்கொள்க. மிளகுபொடி கூட்டிக்கொள்ளலாம்.

**தீரும் வியாதிகள் :**

புண், புரை முதலியன.

---

## 25. புண், புளவை, கிரந்திக்குச் 'சேர்வை'

மலிதுத்தந்துரிசிருவகைக்கிரு
வராகனெடை வடிதூட்செய்தும்
அலகுபாக்கினளவாய் மெழுகிட்டு
நல்லெண்ணெயுமதி லோர்துளி
நலியவிட்டதையுருக்கொருசட்டி
தனிற்றண்ணீரால் நிரைத்துப்
பொலியவதிலூற்றி ஞலாடைநிகர்
மேல்மிதக்கும் பொழுதெடுத்தே (சசு)

எடுத்தமுன்றூளை மெழுகுடன் சேர்த்து
மொருகல்வத் திட்டரைக்கிற்
படுத்தரை படாதிருந்தாலப்போது
மருந்தையனற் படவுங்காய்ச்சி
யடுத்தரைநேகவழித் தொருசிமிழி
னுள்ளாகவடைத்து வைத்துக்
கடுத்தபுண்புரைமேலும் போட்டுப்புண்
ணோய்தீர்க்கக் கருதுவாயே (சஎ)

(இ-ள்.)

| | |
|---|---|
| துத்தம் | 2 வராகனெடை |
| துரிசு | 2 ,, |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுத் தூள்செய்து கொள்ளவும்.

மெழுகு ஒருபாக்குப்பிரமாணமெடுத்து நல்லெண்ணெய் ஒரு துளிவிட்டு ஒரு கரண்டியிலிட்டு உருக்கிச் சட்டியில் குளிர்ந்த ஜலம்விட்டு அதிலூற்றவும். மெழுகு ஆடைபோல் மிதக்கும்.

முன் சொன்ன தூளை அதனுடன் சேர்த்து, ஒரு கல்வத்திலிட்டு நன்ருக அரைக்கவும். அரைபடாமலிருந்தால் சிறிது அனலில் காட்டி இளக்கிக்கொள்ளவும். இம்மாதிரி நன்ருக அரைத்த விழுதை ஒரு சிமிழில் பத்திரப்படுத்திப்

புண், புரைகள் முதலியவைகளுக்கு மேலே போடவும்.

---

## 26. புண்கள், புரைகளுக்குச் 'சேர்வை'

முழிமஞ்சள் பொடிசெய்து வடிகட்டிக்
காசெடைதூள் முகந்தசூதங்
களஞ்சியரை வெற்றிலைநீரதனில் முறித்து
மதைச்சேர்த்துக் காணேரண்டத்
துளக்கெண்ணெய் விட்டரைத்துமிருபண
வெடைசுண்ணத்துடனுங்கூட்டி
யிளகரைத்தோர் சிமிழிலிட்டடைத்து
வெற்றிலை மேலிட்டுக்கட்டே. (சஅ)

கட்டொதியன்றங் கொழுந்துமாகும்பின்
றுளசியினீர் காணும்பட்டை
யிட்டகுடிநீரதனுற் கழுவிவிட்டுங்
கவிழ்தும்பையினிலையுமுள்ளி
நட்டவசம்பது கூட்டியரைத்தும்புண்
மேற்றடவு நல்லரம்பை
தொட்டபழத் தோலுலர்த்திச் சுடுநீருஞ்
சுண்ணமுட னெக்கக்கூட்டே. (சகூ)

கூட்டிநல்லநீரதனுற் குழப்பியோர்
சேலைதனிற் கொள்ளத்தானே
ஊட்டிடுவீக்கத்தின் மேற்போட்டுமொரு
சாமம்போயிராக்கழித்து

வாட்டுவெந்நீராற் கழுவியிப்படிமுத்
தினமிட்டுவாரும் வெந்நீர்
ஆட்டியும் புண்புரைதீருஞ் சரபேந்திர
னிம்முறையுமரைந்ததாமே. (௩௰)

(இ-ள்)

வரளி மஞ்சளை இடித்து வஸ்திரகாயஞ் செய்து அதில் ஒரு காசிடைத்தூள் எடுத்துக் கல்வத்திலிட்டுப்

பாதரஸம் 20 குன்றியும்

கூடவிட்டு, வெற்றிலைச் சாற்றினல் முறித்து, நன்ருக அரைக்கவும். பின்பு ஆமணக்கெண்ணெய் விட்டரைத்து கல் சுண்ணும்பு 2 வராகனெடை கூட்டி நன்ருக அரைத்துச் சிமிழில் பத்திரப்படுத்தவும்.

இதை ஒரு வெற்றிலையிலோ அல்லது ஒதியன் கொழுந்திலோ, தடவிக் கட்டவும்.

துளசிக் கஷாயத்தினல் கழுவிவிடவும்.

(2) கவிழ்தும்பை இலை பூண்டு
வசம்பு

இம்மூன்றையும் அரைத்துப் பூசவும்.

(3) வாழைப்பழத் தோலை உலர்த்திச் சுட்டு, நீராகச் செய்து, அதற்குச் சமன் சுண்ணும்பு சேர்த்துத் தண்ணீர்விட்டுக் குழப்பி ஒரு துணியில் ஒரே சீராகத் தடவி, வீக்கத்தின் மேல் போடவும். ஒரு சாமங்கழித்து வெந்நீரினல் கழுவிவிடவும். இவ்வாறு மூன்று நாட்கள் போட்டு வெந்நீர் வார்க்கவும்.

புண்கள், புரைகள் முதலானவை தீரும்.

51, 52 நெம்பர் செய்யுட்கள் சுவடியில் காணப்படவில்லை.

---

## 27. புண்களுக்குச் சேர்வை.

குங்கிலிய மிருகளஞ்சிரு கடுக்கா
　　யதன்றூட்கொண்டு துத்தந்
தங்குதுருசிரண்டுக்கு மிருகளஞ்
　　சிவைகள் பொடித்தானுஞ்செய்த
நங்கல்வத்திற் சூதமொருகழஞ்சு
　　துளசிவெற்றிலை நன்னீரால்
துங்கமுத்துவெள்ளையது கூட்டியரைத்
　　திடப் புண்கட்டுலைந்துபோமே. (ருரு)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| வெள்ளைக்குங்கிலியம் | 2 | கழஞ்சு |
| கடுக்காய்த் தூள் | 2 | ,, |
| துத்தம் | 1 | ,, |
| துருசு | 1 | ,, |
| பாதரஸம் | 1 | ,, |

இவைகளைக் கல்வத்திலிட்டு, நன்ருகத் தூள்செய்து, துளசிச் சாறு, வெற்றிலைச்சாறு இவைகளிஞல் தனித்தனியே ஒவ்வொரு ஜாமமரைத்து, முத்துவெள்ளையும் கூடச்சேர்த்து (2 கழஞ்சு) மறுபடியும் நன்ருக அரைத்துப்

புண்களுக்குப் போடவும். அவைகள் தீரும்.

---

## 28. புண், புரைகளுக்குக் 'காரக் களிம்பு'

துரிசுபச்சைக் கர்ப்பூர மனோசிலைவெண்
 பாடாணந்தாள வொன்றாரந்
தெரியுமிவையொன்று பணவெடையொன்று
 யிற்றுரிசியும் பாடாணம்
மரியெருக்கம்பழுப்பு ரசங்குத்திவறு
 தண்ணீர் வாற்றரைத்துப்
பிரியசித்திரவெண்ணெய்தனைவிட்டுக்
 குழப்பினதைப் பேணிவையே. (௨௪)

வைசிமிழிலெடுத்தடைத் தெந்தவகை
 யாணிகட்கும் வரைகண்டிப்பு
கைசிறுகப்பணம்போலு மருந்தினைத்
 தடவிட்டுக்கடிகை கேளு
மெய்த்தறுபான் கழித்திட்டு யெடுத்தெரிபின்
 முத்தெண்ணெய் மேலும்பூசு
செய்திடவேயாணி புண்கள் புரைவரை
 கண்டிப்புடன் றீருந்தானே. (௨௫)

(இ-ள்.)

| | |
|---|---|
| துரிசு | பச்சைக்கல்பூரம் |
| மனோசிலை | வெள்ளைப்பாஷாணம் |
| தாளகம் | |

இவைகள் தனித்தனியே 1 வராகனெடை

துரிசையும், வெள்ளைப் பாஷாணத்தையும் எருக்கம் பழுப்புச்சாறு ஊற்றி அனலில் வறுத்துக்கொண்டு, மற்ற சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்தில் வைத்து எருக்கம்பழுப் புச் சாறு விட்டு நன்றாக அரைத்துக்கொள்ளவும்.

பின்பு இவைகளை ஆமணக்கெண்ணெயுடன் (வேண்டிய அளவு) குழப்பிவைத்துச் சிமிழில் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

எவ்விதமான கால் ஆணிகளுக்கும் ஒரு பணம் அளவு இம்மருந்தை அவைகளுக்குத் தடவி, 60 நாழிகைகளூர வைத்த பின் இதைக் கழுவி விடவும்.

அவ்விடத்தில் ஆமணக்கெண்ணெய் பூசவும்.

குறிப்பு:—

இவ்விடத்தில் தாரம் என்பது அரிதாரமாகும்.

## 29. புண், புரை, சிரங்குகளுக்குச் 'சேர்வை'

துரிசுசுட்டதுஞ் சுன்னமஞ்சளின்றா
 ளிவைமூன்றுந் தொட்டுவெண்ணெய்
மருவிடப்போட்டரைத்து வழித்தெடும்
 புண்சிரங்கிலமலரப்பூசி
இருபின்புமிலுப்பரப்பின்கட்டித்
 தான்றேய்த்து மிட்டுமூழ்கி
வரும்போதிற்புண்சிரங்குங் காய்ந்துபோ
 மிம்முறையை மதித்துச் செய்யே. (ருசு)

(இ-ள்.)

பொரித்த துரிசு மஞ்சள்பொடி
சுண்ணும்பு

இம்மூன்றையும் கல்வத்தில் வைத்துப் பொடிசெய்து, சமனெடை வெண்ணெய் போட்டு நன்ருக அரைத்துச் சிமிழில் பத்திரப்படுத்தவும்.

வேண்டும்போது சிரங்குகளில் பூசி அரப்பினால் கழுவி ஸ்நானம் செய்யவும். அடிக்கடி கிளைக்கும் புண், சிரங்கு முதலானவைகள் குணமாகும்.

---

## 30. புண், புரை, சிரங்குகளுக்கு மருந்து.

ஆலம்விழுதரைத்தொரு பாக்களவு
கஞ்சாச்சாறதிலுழக்கும்
மேலு நல்லெண்ணெ யுழக்கிட்டதிலும்
வசம்பிரண்டும் வெள்ளையுள்ளி
கோலியொரு பூடுமிட்டு மிவைகூட்டி
வெயிலிலே கொள்ளவைத்துத்
தூலவுடல்தலைதேய்த்து மூன்றுதின
மரப்பிட்டுச் சுடுநீர்மூழ்கே. (௫௭)

(இ-ள்)

| | |
|---|---|
| கஞ்சாச்சாறு | 1 உழக்கு |
| நல்லெண்ணெய் | 1 ,, |

இவ்விரண்டையு மொன்றுகலந்து, அதனுடன்

| | |
|---|---|
| அரைத்த ஆலம்விழுது | 1 கொட்டைப்பாக்களவு |
| பூண்டு - | 1 பல்லும் |
| வசம்பு | 2 துண்டும் |

எடுத்து நன்றாக அரைத்து, ஒன்றாகக் கலந்து 3 நாளைக்கு வெய்யிலில் வைக்கவும்.

தலை, உடம்பு முதலியவிடங்களில் இந்த எண்ணெயை நன்றாக தேய்த்துக்கொண்டு வெந்நீரில் ஸ்நானம் செய்யவும். இவ்வாறு 3 நாளைக்குச் செய்யவும்.

---

58. 59 நெம்பர் செய்யுட்கள், சுவடியில் காணப்படவில்லை.

---

# 31. பரங்கிப் புண்களுக்கு 'மருந்து'

*கானபரங்கிப் பட்டையரைப் பலஞ்*
*சுக்குவராகனெடை கணித்திருபான்*
*ருனிரண்டுகுராசானி யோமம்வரா*
*கனெடையொன்பான் சார்கிராம்பு*
*மானஞ்சுவராகனெடைகரில்வரா*
*கனெடை யீராறுங்காமன்*
*மூன்றஞ்சுவராகனெடை சூரணிதே-*
*னிருபாளுள் மூட்டுவாயே.* (சுய)

*(இ-ள்)*

| | | |
|---|---|---|
| பரங்கிப்பட்டை | ½ பலம் | |
| சுக்கு | 22 வராகனெடை | |
| குராசானி ஓமம் | 9 | ,, |
| கிராம்பு | 5 | ,, |
| மிளகு | 12 | ,, |
| திப்பிலி | 15 | ,, |

*இச்சரக்குகளைக் காயவைத்துக், கல்லுரலிலிட்டு நன்ருக இடித்து, வஸ்திரகாயுஞ் செய்துகொள்ளவும்.*

*இச்சூரணத்தில் ஒரு மூவிரல் கொள்ளுமளவு எடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிடவும். இவ்வாறு 20 நாட்கள் சாப்பிடவும்.*

**குறிப்பு:—**

*72 நெ சுவடியில் இம்மருந்திற்கு கீழ்க்கண்டவாறு*

*உப்பு, புளி இவைகளை 40 நாட்களுக்குச் சேர்க்கக் கூடாது*

*என்று பத்தியம் கூறப்பட்டிருக்கிறது.*

---

## 32. ஒட்டிய புண், புரைகளுக்கு 'உருண்டை'

பாதரதந்திப்பிலியும் பாடாண
முடன்றுரிசு பகரின்னுன்கும்
ஈதுவகைக்கொன்று பணவெடையொன்றுங்
கடுக்காயு மிருமூன்றுகுங்
கோதகலுநல்லவெல்ல மருதாணிவெற்-
றிலைகீருங்கொடு ரசத்தை
நீதிபெறவேமூறித்துக் கூட்டியரைத்
துருண்டைசெய்து நிகழ்த்தக்கேளே. (௬க)

நல்லவெல்லந்தனிற்சேர்த்து முருட்டியிரு
நேரங்கொள் நாலுருண்டை
மெல்லவிழுங்கிதுதீர்க்குமொட்டிப்புண்
புரையெல்லாம் வேகமாற்றுஞ்
சொல்லவுப்பும் புளிப்புகையிவைதள்ளிப்
பத்தியமாய்த் தொடங்குந்தஞ்சை
எல்லைநிகர் கலிக்குறும்பினிருளோட்டுஞ்
சரபேந்திர னியம்பிதாமே. (௬உ)

(இ-ள்.)

| | |
|---|---|
| பாதரஸம் | திப்பிலி |
| வெள்ளைப்பாஷாணம் | துரிசு |

| | |
|---|---|
| இவைகள் வகையொன்றுக்கு | ஒரு பணவெடை |
| கடுக்காய்த்தூள் | 6 ,, |

இவைகளை யொருகல்வத்திலிட்டு,

மருதாணிச்சாறு, வெற்றிலைச்சாறு, வெல்லத் தண்ணீர் இவைகளைத் தனித்தனியே விட்டு ஒவ்வொருசாமம் அரைக்க

வும். ரஸம் நன்ருக முறிந்து ஒன்ருகியபின், நல்ல வெல்லத்துடன் சேர்த்து 4 உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ளவும்.

நேரம் ஒன்றுக்கு 2 உருண்டைகள் வீதம் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

இம்மருந்து ஒட்டிப்புண், புரை முதலியவைகளை வெகு எளிதில் குணப்படுத்தும்.

**பத்தியம்:**

உப்பு, புளிப்பு, புகையிலை முதலானவைகளை நீக்கிவிடவும்.

---

## 33. ஒட்டிய புண், புரைகளுக்கு மருந்து.

தூதுவளைவேர் குறிஞ்சாவேரசம-
    தாகமிவை சொல்மேனிச்சா
ருேதிரதமுறித்துருண்டைகூட் டெருமை
    வெண்ணெயிலு மூட்டிரண்டு
போதுவிழுங்கிடு கைப்பும்புளிதள்ளி
    ராமுள்ளி புரிநெற்றெலி
யோதுகுளத்துடகுறவை மீனதனைச்
    சுண்டியிட்டு மொன்பாஞளே. (சுரு)

பதிஞேருநாள் முழுகவுட்குடிக்கக்
    கொப்பளிக்கப்பாதங் கைகள்
இதின்சுத்திசெய்ய வெந்நீர்தொடலாகும்
    பத்தியமாயிரு மற்ருநாள்
அதிரெண்டு வேளைகளுமுழுகியிடும்
    புண்கரைகளாறிப்போகுஞ்

சதுரங்கசேனைபுடை சூழ்ந்துவரும்
சரபேந்திரன் தந்ததாமே. (கூச)

(இ-ள்.)

தூதுவளைவேர் குறிஞ்சாவேர்
ஓமம்

இவைகளைச் சமனெடை எடுத்துக் கல்வத்திலிட்டுத், தெளிந்த குப்பைமேனிச்சாறு விட்டு நன்றாக அரைத்த பாதரஸத்தையுஞ் சேர்த்து உருண்டைகளாகச் செய்துகொள்ளவும்.

இவைகளைத் தினம் இருவேளைக்கு, எருமை வெண்ணெயுடன் முழுங்கவும்.

*கசப்புப் பண்டங்களையும், புளிப்புச் சுவையுள்ள பதார்த்தங்களையும் தள்ளவும்.

ராமுள்ளி, நெற்றெலி, குளத்துக் குறவை முதலான மீன் வகைகளைச் சுண்டிச் (வேகவைத்து) சாப்பிடவும்.

இவ்வாறு 9 நாளைக்கு மருந்து சாப்பிடவும். பதினொன்றுவது நாளன்று ஸ்நானம் செய்யவும். மற்ற நாட்களில் இரண்டு வேளைகளிலும் ஸ்நானஞ் செய்யவும்.

மருந்து சாப்பிடும்போது, உள்ளுக்குக் குடிப்பதற்கோ, கொப்பளிக்கவோ, அல்லது கைகால்கள் கழுவுவதற்கோ, வெந்நீரையே உபயோகிக்கவேண்டும்.

புண்கள், புரைகள் முதலானவை ஆறும்.

---

* 'கார்ப்புப் பண்டங்களையும்' என்று 72 நெ. சுவடியில் காணப்படுகிறது. ஆகவே அதையும் நீக்குவது நல்லது.

# 34. ஒட்டுப் புண், புரைகளுக்குப் 'புகை'

நல்லசிறுகாஞ்சோரி வேரெருக்கம்வே-
ரிருகழஞ்சு நறுங்கொழிஞ்சி
சொல்லதுவேரிது மூன்றுந்தூளிடித்து
வடிக்கட்டிச் சூதந்தன்னை
வல்லதறுபங்கு செய்து புளிச்சிராய்
கொண்டுமொரு மண்சட்டிக்குள்
புல்லனலிலிட்டதனைத்தழலாக்கி
யதிற்சட்டி பொருந்தக்காய்ச்சே. (சுரு)

காய்ந்தசட்டி தனிலோருபங்கிரத
முப்புமிட்டுக் கஞ்சிகாய்ச்சி
மொந்துகுடித்ததன் பின்புமவனைமுக்காட்-
டால்மூடி மொழிமருந்து
வேய்ந்திடொருபங் கிரதமிடுகடிகை
தனிற்புகையும் மேலெழும்பும்
மீந்தரைநாழிகை சென்றுபின்புமந்தப்
பொடிதன்னை மீட்டுவாயே. (சாசா)

மீட்டிடுவாயிப்படியே மூன்றுவிசை
பொடியிட்டு மேல்முக்காடு
போட்டவனைப்படுக்கவை பின்பெழுந்திப்
படியைந்து போதுதானும்
மாட்டுபுகைப் போட்டிடவுங்காலையந்தி
தான்முழுகி வரவுங்கைப்புக்
கூட்டுபுளிதள்ளி யெட்டுத்தினம்பத்தி-
யம்நடத்தக் குணமாந்தானே. (சுஎ)

(இ-ள்.)

| | | |
|---|---|---|
| சிறுகாஞ்சோரி வேர் | 2 | கழஞ்சு |
| எருக்கம் வேர் | 2 | ,, |
| கொழிஞ்சி வேர் | 2 | ,, |

இம்மூன்று வகை வேர்களையும் வெயிலில் காயவைத்து, இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

பாதரஸம் (2 கழஞ்சு) எடுத்து 6 பங்குகளாகச் செய்து கொள்ளவும். புளியஞ்சிராயைத் தணலாக்கி யொரு சட்டிக் குள் போட்டு அதன்மேல் மற்றொரு சட்டியை வைத்து அதில் ஒரு பங்கு ரஸத்தைவிட்டு, உப்புப்போட்டுக் (அரிசி நொய்) கஞ்சி காய்ச்சிக் குடிக்கவும். பின்பு நோயாளியின் தேகத்தை ஒரு வஸ்திரத்தினால் நன்றாக மறைத்து, அப்புளி யந் தணலில் முன்கூறிய சூரணத்தையும், ஒரு பங்கு ரஸத் தையும் போட்டு புண், புரை இவைகளின்மேல் படும்படி புகைக்கவும், அரை நாழிகை கழித்து மறுபடியும் சூரணத் தைப் போடவும்.

இவ்வாறு மூன்றுமுறை முக்காடு போட்டுக்கொண்டு புகையைப் புண், புரைகளில் செல்லும்படி புகைக்கவும். பின்பு முக்காட்டை நீக்காமல் நோயாளியைப் படுக்கச் சொல்லி எழுந்திருக்கச் சொல்லவும். இப்படி 5 நாளைக்குப் புகையைப் பிடிக்கவும். காலையிலும் மாலையிலும் ஸ்நானம் செய்யவும்.

பத்தியம்:

கசப்புப் பண்டங்களையும், புளிப்புச் சுவையையும் நீக்க வும். இவ்வாறு 8 நாளைக்குப் பத்தியமாக இருக்கவும்.

## 35. புண்ணிற்குக் 'களிம்பு'

துத்தமுடன் துரிசுவகைக்கொரு
வராகனெடை தூக்கி ஏலம்
மெத்தவெள்ளைக்குங்கிலியம் வகைக்கரை
வராகனெடை வீதமஞ்சளைத்

துத்தமதைத்திருநீறுபோல் நீற்றுச்
சேர்த்திடு காசுக்கட்டித்தான்
ஒத்தபணவெடைகூட்டி மருந்தெல்லாம்
பொடிசெய்துமொன்றில் வைத்தே. (சுஅ)

புதுக்கொட்டாங்கச்சிதனிற் சூதமிட்டு
மேனிரசம் புரிதாம்பூலம்
இதுரெண்டுள்ளோரிலைச்சாறுவதிரு
துளிவிட்டுமேற்கமத்தித்
ததுசுண்ணக்கட்டிநிகர் பத்திவரும்
பக்குவத்தில தின்முற்றாளும்
புதுவெண்ணெயுடன் கூட்டியொருகையால்
மத்தியது பொருந்தோட்டுள்ளே. (சுகூ)

உள்பிடித்த பக்குவத்தில் வழிக்குமற்
றொருதண்ணீருற்றி நன்றாய்
வெளப்படவே கழுவுவாய் பின்வழித்தோர்
சிமிழிலிட்டு விரணந்தீர்க்கக்
கள்ளமில்லை யிக்களிம்பு நேர்த்தியதாங்
கைமுறையைக் காசினிக்குள்
வள்ளலெனத் தஞ்சைநகர் வந்தசர
பேந்திரன்சொல் வாய்மைதானே. (எய)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| காசுக்கட்டி | 1 | வராகனெடை |
| துத்தம் | 1 | ,, |
| துரிசு | 1 | ,, |
| வெள்ளைக்குங்கிலியம் | ½ | ,, |
| ஏலக்காய் | ½ | ,, |

இவைகளை எடுத்துக்கொள்ளவும்.

மயில்துத்தத்தை வரளிக்குவியலில் வைத்து எரித்து, வெண்மையாகச் செய்துகொண்டு, அதனுடன் மற்ற சரக்கு களையும் சேர்த்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும்.

ஒரு புதுக்கொட்டாங்கச்சியில் பாதரசத்தைவிட்டு, அத னுடன் குப்பைமேனிச் சாறு அல்லது வெற்றிலைச் சாறு 2 துளிகள் விட்டு நன்றாகக் குழைக்கவும். அப்போது ரஸம் சுண்ணாம்புபோல் ஆகிக் கொட்டாங்கச்சியில் ஒட்டிக்கொள் ளும். அதனுடன், முன்னே சொன்ன தூளைப்போட்டுப் புது வெண்ணெயும் (வேண்டிய அளவு) கூட்டி நன்றாகக் குழைத் துக் கொள்ளவும். தண்ணீர்விட்டு 2 அல்லது 3 தடவை கழுவவும். இக்களிம்பை ஒரு சிமிழில் பத்திரப்படுத்தி

ரணங்களில் தடவ, அவைகள் ஆறும்.

---

## 36. உடம்புகளில் புண், புரைகளுக்குப் ‘படோலாதி கிருதம்’

பேய்ப்புடலும் பிரமியுஞ்சமூலமா
யகிற்பட்டை பெருநாவற்றோல்
வேப்பமரத்தோலு மத்தியாலுமித்தி
யரசுமிவைமென் முகிழ்தான்
மூப்பிலக்தையடைமதுரங் கரிப்பாலை
வேர்காமன் மூலங்கூட்டி
தொப்பரம்பைத்தாமரையுங் கோரையிவை
யின்கிழங்குந் தொக்கலாமே. (எக)

தாமரையின்வளையங்கள் சிவதைவேர்
வகையொன்று தான்பலங்கள்

ஆமெட்டாங்கூட்டியிடி யெண்மரக்கா
னீர்விடுத்துமதை நாலொன்ருய்
வேமதனைக்காய்ச்சிவடி நாழிநெய்யுங்
குறுணிப்பால் விடுமருந்து
மாமதுரமரமஞ்சளிந்துசந்த
மாலமுகிழ் மஞ்சளாமே. (எஉ)

ஆனவெள்ளோத்திரந் தேவதாரநிம்-
பலகோடு மத்திமொட்டும்
மானசிறுமூலகமு மஞ்சிட்டி
தாமரையின் வளையந்தாதுந்
தீனிமுந்திரிகைப்பழங் கடுரோணி
நாகணந்தி திரிபலாதி
சீனக்காரமிலாமிச்சும் பெருங்குரும்பை
யுத்பலமுஞ் செய்யக்கேளே, (எஙு)

செய்கழஞ்சு கூட்டியும் பாலிட்டரைத்துக்
கலந்தும்பின் திகழ்மந்தாக்கினி
யெய்திடநாற்றினமெரித்து மஞ்சாநாள்
காய்ச்சிவடித் தெடுத்துவைத்து
உய்காலமோர்கஞ்சி யுட்குடித்து
நசியஞ்செய்துடலிற்பூச
மெய்ப்புடனுடல் வீக்கங்கபவீக்க
மண்டலத்துள் விட்டுப்போமே. (எச)

(இ-ள்.)

| | |
|---|---|
| பேய்ப்புடல்சமூலம் | பிரமிச்சமூலம் |
| அகில்பட்டை | பெருநாகப்பட்டை |
| வேப்பம்பட்டை | அத்திமொட்டு |
| ஆலமொட்டு | இத்திமொட்டு |
| அரசமொட்டு | இலந்தையடை |

| | |
|---|---|
| அதிமதுரம் | கரிப்பாலைவேர் |
| திப்பிலிமூலம் | வாழைக்கிழங்கு |
| தாமரைக்கிழங்கு | கோரைக்கிழங்கு |
| தாமரை இலைச்சுருள் | சிவதை வேர் |

இவைகளை வகைக்கு 8 பலங்கள் வீதமெடுத்துக் கல்லுரலி லிட்டிடித்து, ஒரு பாத்திரத்தில் போட்டு 8 மரக்கால் சுத்த ஜலம்விட்டு அடுப்பின்மேலேற்றி நான்கிலொன்றாக வற்றக் காய்ச்சவும். இக்கஷாயத்தை வடிக்கட்டி, அதனுடன்,

| | |
|---|---|
| பசுவின் நெய் | 1 நாழி (சின்னபடி ½) |
| ,, பால் | 1 மரக்கால் |

விட்டு ஒன்று கலந்து,

| | |
|---|---|
| அதிமதுரம் | மரமஞ்சள் தோல் |
| இந்துப்பு | ஆலமொட்டு |
| மஞ்சள் | வெள்ளிலோத்திப்பட்[டை] |
| தேவதாரு | வேப்ப ஈர்க்கு |
| அத்திமொட்டு | திப்பிலி |
| மஞ்சிட்டி | தாமரையிலைச்சுருள் |
| தாமரைத்தாது | திராக்ஷைப்பழம் |
| கடுகுரோகிணி | நாகணந்தி வேர் |
| கடுக்காய்த்தோல் | தான்றித்தோல் |
| நெல்லிவற்றல் | படிக்காரம் |
| இலாமிச்சம்வேர் | பெருங்குரும்பை |
| அல்லிக்கிழங்கு | சந்தனத்தூள் |

இச்சரக்குகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்து, இடித்துப் பசுவின் பால்விட்டுறவைத்து, நன்றாக அரைத்து, நெய்யுடனே குழப்பிக்கொண்டு, அடுப்பின் மேலேற்றி, மந் தாக்கினியால் 4 தினங்கள் எரித்து, 5-வது நாளன்று, பக்கு

வப்படுத்தி இறக்கவும். இதை வடிக்கட்டிக்கொண்டு, ஒரு ஜாடியில் பத்திரப்படுத்தி $1\frac{1}{4}$ வராகனெடை வீதம், தினம் காலையில் மாத்திரம் உட்கொண்டு, மூக்கிலும் நஸ்யமாக இட்டு, உடம்பிலும் பூசிவர

உடல் வீக்கம், கபவீக்கம் முதலானவைகள் 40 நாளில் தீரும்.

**குறிப்பு :—** நாகணந்தி—நேர்வாள வேர்.

---

## 37. பழம் புண், புரைகளுக்குக் 'களிம்பு'

சங்கினது வேரிரதந்தாக்கியரை
வழித்துமேற் றூனுங்கேளு
பங்கிடுடன்றடவு பத்துப்பதினைந்து
நாளினுட்குள் பழயபுண் ணுங்
தங்குகுழி விழுபுண் ணுஞ்சலக்கட்டுஞ்
சீழ்சொரிவுந் தடிப்புங்கூடப்
பொங்குபுரை யோடுதசைதுற்றன்முத
லானதெலாம் போகுந்தானே. (எ௫)

(இ-ள்.)

சங்கம் வேரைப் பாதரஸத்துடனே கூட்டி கல்வத்தி லிட்டு நன்றாக அரைத்து வைத்துக்கொண்டு ஒரு சிமிழில் பத்திரப்படுத்தவும்.

இம்மருந்தை 10 அல்லது 15 தினங்கள், குழிவிழுந்த புண்கள், சலக்கட்டு, சீழ்சொரியும் புண்கள், தடிப்பு, புரை, தசைவளர்ச்சி முதலியவைகளுடன் கூடிய புண்கள் முதலிய வைகளுக்கு இட்டுவர, அவைகள் குணமாகும்.

---

# 38. ஓடிப்பாயும் புண்களுக்கு.

ஓதிசங்கதாரியின் றேற்கொடிவேலி
யிண்டதின் வேறேதிச்சாறும்
மதிவெள்ளாட்டதினெய்யுஞ் சரிகூட்டி
வெள்ளையுள்ளி மணித்தக்காளி
யதன்வேரும்வசம்பு வெண்குங்கிலியம்
ரசங்கெந்தி யரிசனந்தான்
இதன்வகைக்கு மரைக்காசெடைகூட்டி
யுழக்காக்கி யெடுத்துவையே (எசு)

வைத்தநெய்யைப் புண்ணிலிட்டு நடந்துபார்
நாற்கடிகைமட்டிருந்தும்
ஓத்தெண்ணெய்க் குழாய்கொண்டூதிவிடு
சற்றுநடந்துடன் சுண்ணம்பில்
உத்தகல்லுப்புகைகாட்டப் பலதழையிட்
டுக்காய்ச்சி யுட்புகைத்தே
சுத்தவிராலித்தழையை யிடித்துவைத்
ததிற்கட்டுங் துளைப்புண்போமே. (எஎ)

(இ-ள்.)

சங்கதாரிப்பட்டை *கொடிவேலி வேர்
இண்டம் வேர் ஓதியம்பட்டைச்சாறு

இவைகளைச் சமனெடை யெடுத்து கல்லுரலிலிட்டு இடித்துப் பிழிந்த சாறு (வகைக்கு ஒரு உழக்கு) எடுத்துக்கொள்ளவும். இவைகளுக்குச் சமன்,

வெள்ளாட்டு நெய் (நான்கு உழக்கு) விட்டு, இதனுடன்,

பூண்டு மணித்தக்காளி வேர்
வசம்பு வெள்ளைக் குங்கிலியம்
பாதரஸம் கெந்தகம்

---

* பச்சைக்கொடிவேலி வேரைச் சாக்கிரதையாகக் கையாளவும்.

முதலான இச்சரக்குகளை ½ காசெடை வீதம் நிறுத்தெடுத்து, முதலில் இரஸத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு கஜ்ஜலி செய்து, பின்பு மற்ற சரக்குகளையும் போட்டு தண்ணீர் விட்டு நன்ருக அரைத்துச் சாறு கலந்த நெய்யுடனே குழப்பி, அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி வடிக்கவும்.

இந்த நெய்யைப் புண், புரை முதலியவற்றிற்குள்விட்டு நோயாளியை நடக்கச் சொல்லவும் 4 நாழிகை சென்றபின், எண்ணெய் குழல்கொண்டு ஊதியபின் மறுபடியும் சற்று நடக்கச்சொல்லவும்.

வெந்த சுண்ணும்புக்கல்லை ஒரு பாத்திரத்தில் போட்டு, அதனுடன் பலவிதத் தழைகளையும் கூடப்போட்டு, நெருப்பிவிட்டுப் புகைக்கவும். அதில் புண்களைக் காட்டவும்.

விராலித் தழையை அப்படியே இடித்துப் புண்களின் மேல் கட்ட அவைகள் ஆறும்.

---

## 39. புண்ணிற்கு 'மருந்து'

கருவேலின்பச்சிலையை யுலர்த்தியிடித்
தப்பொடியைக் கலைவடிகொள்
வருபுண்ணிலதைத்தூவித் தூவியெலு
மிச்சையிரு வளையங்கீன்றே
சுருளவே சுடவைத்து விரணத்தி
லொற்றி யொற்றித்துளி பிழிந்தால்
மருவிடப்பற்றி யடைபோறபற்றும்
புண்புரைகள் மாறிப்போமே. (எஅ)

(இ-ள்.)

கருவேலம் இலையை நிழலில் காயவைத்துக், கல்லுரலி லிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

இதைப் புண்களில் தூவித்தூவி, எலுமிச்சம்பழத்தை தணலில் வெதுப்பி, இருபாதிகளாகப் பிளந்து அதன் சாற் றைத் தூளின்மேல் ஒத்திட்டுச் சிறுகச் சிறுகப் பிழியவும். அடைபற்றினாற்போல் இம்மருந்து புண்களில் ஒட்டிக்கொள் ளும்.

புண்கள், புரைகள் தீரும்.

குறிப்பு:—

72 செ. சுவடியில் "8 நாளையில் திரும்" என்று கூறப் பட்டிருக்கிறது.

---

## 40. புண்ணிற்கு 'வரட்பாளக் கட்டு'

புண்ணைவளைய நெருக்கிப்பிடித்தாற்போற்
பாளமதைப் போட்டுக்கொண்டே
புண்ணின்வாய்ச் சரியாகச்சில்லிட்டுப்
பாளமதாற் போத்திக்கச்சாற்
றிண்ணிறுகக் கட்டிமேற் சீலைகத்-
திரித்துடன் சீழ்தனக்குந்தானே
நண்ணிவருந்தங்காது வங்குவளைப்
புண்முதலாய் நடுங்கிப்போமே. (எகூ)

(இ-ள்.)

புண்ணை வளையமாக நெருக்கிப் பிடித்தாற்போல் பாளத் தை மடித்து நெருக்கிப் போட்டுக்கொண்டு, புண் வாயை

மூடினாற்போல சில்லுப்போட்டு மேலேயும்பொத்தி கச்சாலே இழுத்துக் கட்டி மேல்சில்லைக் கத்திரிக்கோலினால் கத்தரித்துப் போடத் தனக்குத் தானே சீயுந் தங்காது, வங்கு, வளை வைத்த புண் முதலானவை ஆறிப்போகும். பத்துப் பதினைந்து நாளையிலே ஆறிவரும்.

குறிப்பு :—

வரட்பாளம் என்பது என்னவென்று புலப்படவில்லை. மேற்கூறிய பொருள் 72 நெ. சுவடியிலுள்ளபடி அப்படியே கூறப்பட்டுள்ளது (ஏடு நெ. 10)

---

## 41. உடையாத புண்களுக்கு.

பொடுதலையினிலையரைத்தாவி நெய்யைக்
கூடவிட்டுப் பொழிந்தன்னெய்யைப்
படுகிரந்திமேற்பூசிப் பின்மருந்தை
மேற்கட்டப் பரிந்துடைந்து
விடுமதுக்காமணக்கின் முத்தைமுலைப்
பாலிலரை மீட்டிப்புண்மேல்
இடுமாறுங்கிரந்திக்கும் வளையமாய்த்
தடவுசிலை யிடவொட்டாதே. (அம)

(இ-ள்.)

(1) பொடுதலை யிலையைப் பசுவின் நெய்விட்டு நன்றாக அரைத்து கிரந்திகளின்மேல் பூசி, அதன்மேல் கட்டிவிடவும். கிரந்திகள் பழுத்து உடையும்.

(2) *கொட்டைமுத்தை முலைப்பால் விட்டு அரைத்து புண்கள், கிரந்திகள் முதலானவைகளைச் சுற்றிலும் வளைய மாக இடவும்.

---

## 42. உடையாத புண்களுக்கு மருந்துகள்.

பசரிகேழ்வரகுமாக் களிகிண்டிக்
கட்டிடச்சீழ் பரிந்துடைக்கும்
நிசமதுவெட்பாலைப்பாற் குழிவிழுந்த
புண்மீது நிறையவிட்டு
வசமந்தவிலைதானே மேலுமிட்டு
மூன்றுதினம் வீழ்ந்திடாமற்
பிசகதிலாக்கட்டிட்டு மேற்றிறந்து
முடைந்துபோம் பின்னுந்தானே. (௮௧)

உடைந்தவாய்தனக்கந்தப் பாலைவிட்டு
மத்துளிரை யுறவேமூடி
தடைபந்தமாக விந்தப்படியைந்து
முறைகட்டதன் வாய்மூடி
யடைந்தாறிப்போஞ் சிலந்தியுடைந்துவாய்
மூடிவிட்டா லந்தப்பால்விட்
டிடைந்துத்தாமணிக் கொழுந்தரைத்தொருகுன்-
றியளவிதன்வாய்வையே. (௮௨)

வைத்துடன்மேற் போற்றியிட்டுக்கட்டிடுவாய்
திறந்துஞ்சீழ் வடிந்துபோகும்
மேய்த்திடுவேப்பங் கொழுந்துசற்றுமஞ்ச
ளுப்புடனே மிளகுதானும்

* கொட்டைமுத்தின் ஓட்டை உடைத்துவிட்டுப் பருப்பை மாத்திரம் உபயோகிக்கவும்.

பத்துவெந்நீர் வார்த்தரைத்துப் புண்ணடைவாய்
வைசேலைப்பாளம் போட்டுக்
கைத்தநலங் கட்டுபுண்வாய் திறந்துவெளி
சீழ்பறியுங் காய்ந்தும்போமே. (அரு)

(இ-ள்.)

(1) பசரி இலையையும், கேழ்வரகு மாவையும் ஒரு கரண்டியிலிட்டுச் சிறிது ஜலம் சேர்த்துக் களியாகக் கிண்டி புண், கட்டிகள் இவைகளின்மேல் வைத்துக் கட்டவும்.

அவை பழுத்து உடையும்.

(2) புண், கட்டிகள் இவைகளின்மேல் வெட்பாலைப் பாலை ஊற்றி, வெட்பாலை இலையையே மேலேயும் அரைத்து வைத்து மூன்று தினங்களுக்கு அவிழ்க்காமல் கட்டவும்.

கட்டிகள் திரண்டு, பழுத்து, உடையும். மறுபடியும் அந்தப் பாலையே உடைந்த துவாரத்தில் விட்டுத் துளிரை அரைத்து, 5 முறை கட்டவும். அதன் வாய்மூடிப் புண்ணும் ஆறிப்போகும்

(3) சிலந்தி உடைந்து வாய்மூடிவிட்டால், உத்தாமணிக் கொழுந்தை (வெட்பாலை)ப் பாலிலரைத்து ஒரு குன்றியளவு அதன் வாயில் வைத்து மேலே போத்திக் கட்டவும். அதன் வாய் திறக்கும். சீழும் சுத்தமாக வடியும்.

வேப்பங்கொழுந்து, சிறிது மஞ்சள், சிறிது உப்பு, பத்து மிளகு இவைகளை வெந்நீர் விட்டரைத்துப் புண்களின்வாயில் வைத்துப் பாளம்போட்டுக் கட்டப் புண்களின் வாய் பெருத்துச் சீழும் அதிகம் விழுந்து, புண்களும் ஆறும்.

---

# 43. புண் வாய்க்குக் 'காரத்திரி'

நீர்ப்புங்கம்வேர்வெட்டி மேற்றோற்சீவிப்போட்
டுச்சதையை நேரிழைத்து
மார்த்துவைத்துப் பிழிந்தாவின்பாலதுபோற்
காணுமதிலட்டு சுக்கும்
பார்த்துடனுஞ் சற்றுமஞ்சளுப்புமுத
லுலிலொன்று பசுநெய்கூட்டிப்
போர்த்தவங்கு வளைக்கெல்லாமத்தனைக்கத்
தனைத்திரியும் புகட்டிடாயே. (அச)

புகலக்கேளொருமாத மிருபாணு
ளந்தநீர்ப்புங்கு தன்னி
லிருதுளிர்மேற் பசுநெய்யைத்தடவிட்டு
மதிற்போட்டு விசித்துக்கட்ட
வகப்புண்போஞ் சீழ்ப்பரியாதடைத்திட்டா
லம்மூலமதை நசுக்கிப்
பகபுண்வாய்தனில் வைத்துக்கட்டிடச்சீழ்
பரிந்து வாய்படுத்துந்தானே. (அரு)

(இ-ள்.)

நீர்ப்புங்கம் வேரை வெட்டிக் கொண்டுவந்து, அதன் மேல்த்தோலைச் சீவி, அதனுடைய உட்சதையை ஒரு கல் லுரலிலிட்டிடித்துப் பிழியப், பசுவின் பால்போல் சாறு இறங் கும். இதனுடன்

கொஞ்சம் சுக்கும்
,, மஞ்சளும்
,, உப்பும்

சேர்த்து அரைத்து, இவைகளுக்கு நாலிலொன்று பசுவின் நெய்விட்டுக் குழைத்துக்கொள்ளவும். இதை ஒரு மெல்லிய துணித்திரியில் தோய்த்துப், புண், புரை முதலானவைகளுக்குள்ளே எவ்வளவு தூரம் செல்லுமோ அவ்வளவு தூரம் வரை உட்செலுத்தவும்.

அதற்குமேல் நீர்ப்புங்கம் துளிரைப் பசுவின் நெய்யுடன் துவைத்து அதன்மேல் கட்டவும். இவ்வாறு 20 நாட்களோ அல்லது 1 மாதமோ கட்டிவரவும்.

உள்ளிருக்கும் புண்கள் ஆறிப்போகும். அப்பொழுதும் சீழ் வடியாமல் உள்ளேயே தங்கிவிட்டால், நீர்ப்புங்கம்வேர்ச் சதையை நசுக்கிப் புண்வாயில் கட்டவும். வாயின் துவாரம் பெரிதாகிச் சீழும் வடியும்.

---

## 44. புண் வாய்க்குத் 'திரி'

நாயுருவியிலைமஞ்சள் மிளகிட்டு
மரைத்துமேரண்டெண்ணெய்தான்
றேய்வதுகுழப்பிட்டுத் திரியாக்கி
யதலேற்றத் துத்துமூடும்
மெய்தசைவளர்ந்து வருமிம்முறையைத்
தஞ்சையையாள் வேந்தர்வேந்தன்
றுயினு நற்றயவுள்ள சரபோசி
மகராச னறைந்ததாமே. (அசு)

(இ-ள்.)

நாயுருவி யிலை
மிளகு
மஞ்சள்

இம்மூன்றையும் சமமெடுத்து நன்றாக அரைத்து ஆமணக் கெண்ணெயுடன் குழப்பிவைத்துக்கொண்டு, திரியில் நனைத் துப் புண் புரைகளுக்குள் செலுத்தவும். அவைகளில் சதை மூடி தூர்ந்துவிடும்.

---

## 45. விரணாந்தகத் தைலம்.

ஆடாதோடைசிந்துவார முக்காவேளை
யூமத்துமமுக்கிராவேர்
பூடான தக்களியுஞ் செவ்வெருக்கும்
வச்சரவெ புட்கரமூலங்
தொடார்புங்குங் கரிசாலைபாகலின்வேர்
பெருமரத் தோற்றுன்றிக்காய்
நாடாதகாஞ்சோறி சாரணைசிறுகாஞ்
சோறிவேர் நாய்வேளையாமே. (எ)

தேவதாரமணித்தக்காளி கரில்சுக்கு
வெண்குன்றி தேர்ந்தவ்வேரும்
பூவ்வேலியின்பருத்தி யிவையெல்லாஞ்
சேர்த்திடித்துப் பொடியுஞ்செய்து
கூவிலையையிடிச்சாற்றிற் கொருபங்கு
நல்லெண்ணெயுங் கொச்சைநெய்தான்
ஆவிநெய்யுமிரண் டொன்றிலிருபங்குஞ்
சித்திரநெய்யாம் பங்கொன்றே. (அ)

இந்தவகைமூன்றினையுஞ் சாறுடன்சேர்
முற்பொடியு மிட்டுக்காய்ச்சி
வந்தபக்குவத்திறக்கி வடிகட்டிக்
கொண்டதிலுமனோசிலைதான்
கெந்தகமுமரிதார மயிற்றுற்ற
மடற்றுற்றங்கிளந்தநாபி
நிந்தியெலிப் பாஷாணஞ் சாதிலிங்க
மாட்சிகமு நேர்வாளமாமே. (அகூ)

நிமிளையும்பாடாண முமருந்திந்த
வகைகளிரு நிட்கந்தூக்கிக்
குமுறவேபொடிசெய்து கலந்திட்டுச்
சிலநேரங்கூர் நெருப்பில்
ஆமிரதமாய்க்காய்ச்சிடதை யழுத்தமா-
மொருபானை யதனுள்வைத்துத்
திமிர்விரணங்கிரந்தி தீரவிந்தத்
தைலமுமேற் றேய்த்திடாயே. (கூ௰)

(இ-ள்.)

| | |
|---|---|
| ஆடாதோடை | நொச்சி (வெள்ளை) |
| முக்காவேளை | ஊமத்தை |
| அமுக்கிராக்கிழங்கு | தக்காளியிலை |
| செவ்வெருக்கு | சதுரக்கள்ளிவேர் |
| புஷ்கரமூலம் | புங்கம்வேர் |
| கையாந்தகரை | பாகல்வேர் |
| பெருமரப்பட்டை | தான்றித்தோல் |
| பெருகாஞ்சோறிவேர் | சாறணைக்கிழங்கு |
| சிறுகாஞ்சோறிவேர் | நாய்வேளை இலை |
| தேவதாரு | மணித்தக்காளி இலை |
| மிளகு | சுக்கு |
| வெள்ளைக்குன்றிமணி வேர் | வேலிப்பருத்தி |

இவைகளைச் சமனெடை யெடுத்துக்கொள்ளவும். மருந்துச் சரக்குகளையும் வேர் வகைகளையும் காயவைத்து, இடித்துச் சூரணித்துக் கொள்ளவும். இலைவகைகளை அப்படியே இடித்துச் சாறு பிழிந்துகொள்ளவும். இச்சாற்றிற்குச் சம அளவு

சுத்தமான நல்லெண்ணெயும்
„ ஆமணக்கெண்ணெயும்

விட்டு ஒன்று கலந்து, சாற்றிற்கு இருமடங்கு பசுவின் நெய்யோ அல்லது வெள்ளாட்டு நெய்யோ விட்டு, எல்லாவற்றையு மொன்றுகலந்து அடுப்பின் மேலேற்றிச், சூரணங்களையும் போட்டுக் காய்ச்சவும். பக்குவத்தில் இந்த நெய்யை இறக்கி வடிக்கட்டிக்கொள்ளவும். பின்பு,

| | |
|---|---|
| மனோசிலை | நெல்லிக்காய் கெந்தகம் |
| தாளகம் | மயில்துத்தம் |
| மடல்துத்தம் | நாபி |
| எலிப்பாஷாணம் | சாதிலிங்கம் |
| நிமிளை (வெள்ளி) | நேர்வாளம் |
| ஸ்வர்ணமாக்ஷிகம் | வெள்ளைப்பாஷாணம் |

முதலான மருந்துகளை வகைக்கு 2 வராகனெடையளவு நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு, நன்றாகப் பொடிசெய்து, முன் கூறிய தைலத்துடன் குழப்பிவைத்துக்கொண்டு, மறுபடியும் சிறிதுநேரங் கொதிக்கவைத்து, ஒன்றாகிய பின்பிதை இறக்கவும். இத்தைலத்தை யொரு அழுத்தமான பாணையில் பத்திரப்படுத்தவும்,

விரணம், கிரந்தி முதலானவைகள் தீர மேலுக்கு உபயோகிக்கவும்.

---

# 46. புண்களுக்கு 'எண்ணெய்'

உசிலந்தோனயஞ்சீவி நல்லெண்ணெயுங்
குத்தியதை யுரப்பொரித்து
நசிபுண்ணிற்கட்டிடவு மாறியும்போம்
பாலொடுவி நல்லவுள்ளி
வசிசங்கதாரி கவுதும்பைவேம்
பாடமிது வகையிதின்வேர்
வசம்புகோடகசாலை கரிசாலை
கூட்டியெண்ணெய் வடித்திட்டாயே. (கூக)

(இ-ள்.)

(1) உசிலைப்பட்டையை மெல்லியதாகச் சீவி, ஒரு கரணடியிலிட்டு, நல்லெண்ணெய் விட்டுப் பொரித்துப், புண்களின் மேல் வைத்துக்கட்டவும். அவைகள் ஆறும்.

(2) பாலொடுவி வேர், பூண்டு, சங்கதாரி வேர், வேமபாடம் வேர், வசம்பு, கையாந்தகரை இலை, கோடகசாலை இவைகளை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிக்கவும்.

குறிப்பு:—

72 செ. சுவடியில் 2 செ மருந்தில் 'மூவிலை' என்ற சரக்கையும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

---

## 47. புண்ணிற்குக் 'கட்டு மருந்து'

தும்பையிலை மிளகுப்பு நறுக்கிட்டுப்
புண்ணில்வைத்துத் தூசாற்கட்டு
வெம்பியசீழ்ப்பிடிபடும்பின் குறிஞ்சாதன்
னின்முகிழ் விரியாதொட்டு
பம்புகொழுந்தை நறுக்கிப்புண்ணில்வைத்துக்
கட்டிடச்சீழ் பரிந்துகாயும்
பின்புசுண்ணும்பூமத்தை யிலைச்சாறுஞ்
சாரித்துப் பெரும்புண்கட்டே. (சுஉ)

(இ-ள்.)

(1) தும்பையிலை
மிளகு
உப்பு

இம்மூன்றைச் சிறிதளவு எடுத்து நசுக்கிப் புண்களில் வைத்துக் கட்டவும். சீழ் இரும்.

(2) (சிறு) குறிஞ்சா இலை
விரியாத (சிறு) குறிஞ்சாக்கொழுந்து

இவ்விரண்டையும் நசுக்கிப் புண்களில் வைத்துக்கட்டச் சீழ் வடிந்து ஆறும்.

(3) சுண்ணும்புடன் ஊமத்தை தயிலைச் சாறுவிட்டுக் குழைத்துப் பெரும்புண்களில் போட அவைகள் ஆறும்.

குறிப்பு:—

2-வது மருந்தில் சொல்லப்பட்ட இருசரக்குகளுடன் மஞ்சளையும் சுண்ணும்பையும் கூடச்சேர்த்துக் கட்டவேண்டும் என்று 72 நெ. சுவடியில் காணப்படுகிறது.

---

## 48. புண்களுக் கெண்ணெய்.

உத்தமதாளிக்கொழுந்து சாரணையின்
கொழுந்துதன்னி லொருபிடிதான்
வத்தநிரையாய்ப்பறித்து நல்லதண்ணீர்
விட்டவித்து வடித்துப்போட்டு
மித்ததிலுங்கடுகு மிளகிருவகைக்கொரு
காசுவீதம் பொரித்து
முத்தபொடிச்செய்து வெள்ளைப்பூடுமொரு
சிரங்கையா முன்னருக்கே. (கூ௩)

நலமாகநறுக்கிடு மரப்பொடி
யாழாக்கினை நன்கரைத்துத்
திலவெண்ணெயுழக்கதனிற் கனல்க்காய
வைத்தவித்துத் தீர்மருந்தும்
பலவரைத்தம்மருந்துங் கூட்டியிட்டுக்
கொதிப்பித்துப் பதத்திறக்கிச்
சிலமூன்று நாளருந்திப் புண்ணிலிடச்
சீழ்புரிந்து திருந்தானே. (கூ௪)

(இ-ள்.)

உத்தமதாளிக்கொழுந்து
சாரணைக்கொழுந்து

இவைகள் வகைக்கு ஒரு பிடி பறித்துச், சுத்த ஜலம்விட்டு ஒரு பாத்திரத்திலிட்டு அடுப்பின் மேலேற்றி மற்றொரு பாத்திரத்தினுல் கவிழ்த்து மூடி, அவித்துக்கொள்ளவும். இத்தண்ணீரை யிறுத்து அதனுடன்

| | |
|---|---|
| மிளகு | 1 காசெடை (விராகனெடை) |
| கடுகு | 1 ,, |

இவைகளை வறுத்துப் பொடிசெய்து போட்டு,

வெள்ளைப்பூண்டு ஒரு சிரங்கையும்

எடுத்துச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி அதனுடன் கலந்து, இரும்புத் தூள் ஒரு ஆழாக்கும் போட்டு, நல்லெண்ணெய் ஒரு உழக்கும்விட்டு அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைக்கவும். பதத்திலிதை யிறக்கி 3 நாளைக்குச் சாப்பிடவும். புண்களிலும் இடலாம்.

சீழ் வடிந்து புண்களும் ஆறும்.

---

## 49. புண், சூலே, கை, கால் முடக்குக்குச் 'சூரணம்'

சங்கதின்வேரிடையொன்று வெள்ளறுகு
காலிடையுந் தனிப்பரங்கி
தங்குப்பட்டை நாற்பலமும் பொடுதலைகா-
லிடையுஞ் சத்திரமருந்துங்

துங்கமிதுகாயவைத்து மிடிசேலை
வடிக்கட்டிச் சூரணத்தை
நங்கிதுகொள் போதிலவன் சிறுநீரில்
வெருகடித்தூளூட்டுவாயே. (கரு)

நாட்டியதுகுழப்பி டந்திசந்திபத்து
நாட்கொள்ள நலமதாகுங்
கூட்டிடும்போதடைப்புள்ளே காற்றதுப-
டாமலிரு கூறும்பத்தியம்
மூட்டியுப்பும் புளிதள்ளியிளங்கிரை
மிளகுத்தூள் முன்வெந்நீரும்
ஊட்டியசோறுங் கொள்ளலாஞ் சரபேந்தி
ரன்முறை யுரைத்ததாமே, (கசா)

(இ-ள்.)

| | | |
|---|---|---|
| சங்கங்கிழங்கு | 1 பலம் | |
| வெள்ளறுகு | $\frac{1}{4}$ | ,, |
| பரங்கிப்பட்டை | 4 | ,, |
| பொடுதலை | $\frac{1}{4}$ | ,, |

இம்மருந்துகளை வெய்யிலில் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து, வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

காற்று அதிகம் வீசாத ஒரு இடத்தில் இருந்துகொண்டு, நோயாளி தன்னுடைய சிறுநீரில், முன்தூளை மூவிரல் கொள்ளுமளவு போட்டுக் குழப்பிக் காலையிலும் மாலையிலுமாக 10 தினங்கள் சாப்பிடவும்

---

# 50. புநடக்கிரந்திக்கு மருந்து.

பொங்குபுண்ணின்றக் கனையாயொன்றிரண்டு
காசிடைனடை புதியவெள்ளைக்
குங்கிலியங்கொண்டுவந்து முத்திடனெண்ணெ
யாலரைத்துக் குருபதத்திற்
றங்கிரதத்தாலரைக்க வொன்றினுக்குக்
கடிகையரைத்தானுஞ் சென்று
நங்குவழித்தொரு சிமிழிலடை பச்சையுகின்
பழுப்பு நல்லாமணக்கே. (கஎ)

தளிராவதிற்றடவிக் கிரந்திப்புண்
வாயிலிட்டுத் தனிலிரத்தம்
இனியாமலரைநாழி புண்ணதின்வா-
யிருவிரல் மேலேறக்கட்டி
களிமற்றுநாள் வழித்துப்பின்கழுவிப்
பாரு சதைகட்டித்தூர்ந்து
நளியெட்டுநாளிற் புண்ணுறிவிடு
மிடியாது நலமாம்பாரே. (கஅ)

(இ-ள்.)

வெள்ளைக்குங்கிலியம் 2 காசெடை

யெடுத்துக் கல்வத்திலிட்டு ஆமணக்கெண்ணெய் சேர்த்து நன்றாக அரைத்து, பாதரஸம் ஒரு காசெடையும் சேர்த்து, மறுபடியும் ஒன்று சேரும்படி ஒரு சாமநேரம் அரைத்து, ஒரு சிமிழில் பத்திரப்படுத்தவும்.

இக்களிம்பை, ஆமணக்கொழுந்தில் தடவிக் கிரந்திகளின் வாயில்வைத்து இரத்தம் கசியாமல் ½ நாழிகை கட்டவும். இரு விரற்கடையளவு கட்டுக்கட்டவும்.

மறுநாள் இம்மருந்தை வழித்துவிட்டு கழுவிவிடவும்.

சதை வளர்ந்து புண்கள் தூர்ந்துபோம். 8 நாட்களில் குணமேற்படும்.

---

## 51. பெருஞ்சிரங்கு, சிறுசிரங்கு இவைகளுக்கு மருந்து.



அரிசியுழக்கூறவைத் திடிமாவிற்
பாதியடையாகத் தட்டிக்
கரியசீரகமுட னெல்லியின்காய்க்
கெந்தகமுங் காணற்சிரஞ்
சரியரைத்ததில்வைத்து முதற்பாதி
மாவையடைதனில் மருந்தைப்
பிரியாமல்மூடுழக்கு நெய்விடுத்து
வேகவைத்துப் பிறகெடுத்தே. (௬௬)

எடுத்தடையைப்பிளந்து நடுவைத்தமருந்
தைநெய்யிதிற் கலந்து
தொடுவெய்யிற்புடம்வைத்து மோருடன்சோ-
றுண்டுபின்னை சுட்டடைதின்
டடுத்தநெய்யுடற்றேய்த்து யுச்சியரப்
பிட்டுவெந்நீராதற் றண்ணீர்
விடுகுளித்திப்படி முத்தினஞ்செய்யச்
சிரங்கெல்லாம் விட்டுப்போமே. (௭)

(இ-ள்.)

அரிசி ஒருஉழக்கு எடுத்துத் தண்ணீர்விட்டுப் பிசரி ஊற வைத்து இடித்துக்கொள்ளவும். இதை இரு பங்கு(மொத்தை)களாகச் செய்து, ஒரு பங்கை அடையாகத் தட்டிக் கொண்டு, அதன்மேல்

சுத்திசெய்த நெல்லிக்காய்கெந்தகம்
சீரகம்
கருஞ்சீரகம்

இவைகளைச் சமஎடை எடுத்துத் தண்ணீர் விட்டரைத்து விழு தாக்கி வைத்து, பாக்கியுள்ள மாவினுல் வேறு அடைசெய்து இதன்மேல் மூடி, ஓரங்களை நன்ருகச் சேர்த்து ஒட்டிக் கொள்ளவும்.

ஒரு இரும்பு வாணுயில் பசுவின் நெய்யொரு உழக்கு விட்டு, அதில் மேலேசொன்ன அடையைப் போட்டுப்பொரித் துக் கொள்ளவும். நன்ருக வெந்தபிறகு இந்த அடையைப் பிளக்க, அது பெட்டியும் மூடியுமாக ஆகும். அடையைத் தின்றபின், உள்ளிருக்கும் சரக்குகளை அரைத்து, மீதியுள்ள நெய்யுடனே குழப்பிச் சூரிய புடம் வைக்கவும். இந்த நெய்யை நோயாளி உடம்பில் தேய்த்துக்கொண்டு, மத்தியான வேளையில் அரப்புத் தேய்த்துக்கொண்டு வெந்நீரிலோ அல்லது குளிர்ந்த ஜலத்திலோ ஸ்நானம் செய்யவும். இவ்வாறு 3 நாட்களுக்குச் செய்யவும்.

**பத்தியம் :—**

மோர் சாதம் சாப்பிட்டபின் அடையைச் சாப்பிடவும்.

---

## 52. சிறு, பெருசிரங்குகளுக்கு எண்ணெய்.

முத்தினெண்ணெயுழக் கடுப்பிற் புகையக்
காயவிட்டு மேலிறக்கி
யத்திலொரு பிடியுப்பும் போடவது
பொங்கிவருமதைக் கோலாலே
சுத்திநன்ருய்க் கலக்கிட்டு வடித்துக்கொள்
மோருடனே சோறுமுண்டு
பத்தியுடற்றனின்ற சோரவரப்பிட்டு
நாற்றினங்கள் படக்குளித்தே. (௱௧)

(இ-ள்.)

ஆமணக்கெண்ணெய் ஒரு உழக்கு எடுத்து அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைக்க அதிலிருந்து புகை யெழும்பும். அப்போது அதை அடுப்பின் மேலிருந்து இறக்கி, அதில் ஒரு பிடி உப்புப் போட்டாலது பொங்கும். அச்சமயத்தில் அதை ஒரு குச்சியினால் நன்றாகக் கலக்கவும். பின்பு வடிக்கட்டி, மோர் சாதம் சாப்பிட்டபின் இந்த எண்ணெயை உடம்பில் தடவிக்கொண்டு, அது உள்ளுக்குக்குச் சோரும்படி நன்கு தேய்க்கவும். ஸ்நானம் செய்கையில் அரப்பைத் தேய்த்துக் கொண்டு முழுகவும். இவ்வாறு 4 நாட்கள் செய்யவும்.

சிரங்குகள் ஆறும்.

---

## 53. சகல விரணங்களுக்கும் 'சங்கம்வேர் பற்பம்.'

சங்கத்தின்வேர் வெட்டிவந்து நிழலுலர்த்
திடி தூளைத்தானுங் கொச்சை
யங்கநெய்யிற் கலந்துண்ணச் சூலையுட
னிருமலும் போமதிற்றேன்கூட்டி
உங்கவிட மீளுடலும் பெருத்திடும்
பசும்பாலிலுண்ணும்போது
மங்கையர்கள் பெரும்பாடு மருந்திடுந்
தீரும் வெல்லமற்றும்பாலே. (௬௨)

கூட்டியுண்ணப்பித்தமும் போமேதிவெண்ணெ-
யுட்கொளவும் கூர்வாதம்போம்
ஈட்டிய தூட்டனைக்கொண்டு மழுவெடுக்க
லாம்பச்சை யிந்தவேரை

யோட்டியரை குழிப்புண்ணிற்கட்டிடப்போம்
வயிற்றுக்குள்ள கட்டிக்
காட்டியவேர் கல்லுப்புங்கொண்டந்திப்
பொழுதிலேயுங் கல்லுப்போடே. (௱௩)

*அரைத்துண்ணு மண்டலங்களரைதான்பத்
தியஞ்செய்ய கட்டின்கட்டி
கரைந்துபோம் புளிப்புகையிலைகைப்புந்
தள்ளிக்கொள் கடலடுத்த
தரையாளு மன்னவருஞ் சதுர்மறை
வீதிவேள்வித் தலைமையோரும்
வரையில்லாக்கலையோரும் புகழ்செங்கோற்
சரபேந்திரர் வகுத்ததாமே. (௱௪)

(இ-ள்.)

சங்கம்வேரை வேண்டிய அளவெடுத்து நிழலில் உலர்த்திக், கல்லுரலிலிட்டிடித்துத் தூள் செய்து, வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

## இருமல் தீரவும் சூலை தீரவும்:

(வெருகடிதூள்) எடுத்து வெள்ளாட்டு நெய்யில் சாப்பிடவும்.

## உடம்பு பெருக்க:

தேனில் குழைத்துச் சாப்பிடவும்.

## ஸ்திரீகளின் பெரும்பாடிற்கும் (அதிகமான மாதவிடாய்) மருந்தீடிற்கும்:

பசுவின் பாலில் சாப்பிடவும்.

---

* இந்த செய்யுள் சுவடியில் 137 நெம்பர் செய்யுளாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## பித்த ரோகங்கள் தீர:

பசுவின் பாலில் வெல்லம் போட்டுக்கொண்டு ரெ. தூளை யிட்டுப் பருகவும்.

## வாத நோய்கள் தீர:

எருமை வெண்ணெயுடன் குழைத்துச் சாப்பிடவும்.

இந்தப் பொடியை யுட்கொண்டு கொதிக்கும் இரும்பை யும் எடுக்கலாம்.

## குழிப் புண்களுக்கு:

இதன் பச்சை வேரை யெடுத்து அரைத்துக் குழிப்புண் களில் கட்ட அவைகள் ஆறும். ஒட்டிய புண்களுந் தீரும்.

## வயிற்றிற்குள் கட்டி இருந்தால்:

இந்த வேரைக் கல்லுப்புடனே காலை வேளைகளில் சாப் பிடவும். சாயங்காலத்தில் சங்கம் இலையைக் கல்லுப்புடன் அரைத்துச் சாப்பிடவும்.

இவ்வாறு ½ மண்டலம் (20 நாட்கள்) சாப்பிடவும். கட்டிகள் கரையும்.

பத்தியம் :—

புளிப்புப் பதார்த்தங்கள், புகையிலை, கசப்புப் பண் டங்கள், முதலியவைகளை நீக்கவும். கைகண்டது.

குறிப்பு:—

இம்மருந்திற்குச் 'சங்கம் வேர் பற்பம்' என்ற பெயருக் குப் பதில் 'சங்கம் வேர் கற்பம்' என்று இருந்தால் அது பொருத்தமாக இருக்கும்.

## 54. கிரந்திமுதற் குஷ்டத்திற்கு 'எண்ணெய்'

நாழிமுத்தினெண்ணெயிலுஞ் சின்னிசங்கங்
குப்பியின்வேர் நற்சங்கின்வேர்
கேழெலுமிச்சங்காயளவரைத்துக்
கூட்டியெரி கிண்டிவிட்டுத்
தாழியிலும்பிறுத்துவைத் துள்ளுக்குங்
கொடு விரணந்தனிலும்பூசு
வாழிதலையினுந்தேய்த்து மரப்பிட்டுங்
கழுவுவெந்நீர் வார்த்துக்கொள்ளே. (௱ரு)

பகல்முழுகிப் புளிப்புப்புங் கடுகுபூ-
சினிகசப்பும் பாலெய்மோரும்
புகையிலைதயிருடனுமிதுகள் தள்ளிப்
பத்தியஞ்செய் போதில்தீருந்
தகரைவிரையுரியுங் கார்போகவரி
சியுமுரியாய்த் தழைத்தவங்கம்
மிகவிரையுமுரியுந்தா னீரிலரைத்
தெண்ணெயிலும் விடவுங்கேளே. (௱சா)

*நாழியிற்குழப்பிச் சேங்கொட்டை
பலமொன்றை நறுக்கிநாலாய்
வேகப்போட்டெரித்து மெழுகுபத
மானவுடன் னிரண்டுநிட்கந்
தானுகுமரிதாரம் பொடிசெய்து
தூவுகிண்டித்தானிறக்கி-
மேனாளாம் பனிரெண்டும் பத்தியமாய்த்
தட்டிடடைகொள் வெம்மைக்கி நெய்யே. (௱எ)

*இது 104 செ. செய்யுளாகச் சுவடியில் காணப்படுகிறது.

(இ-ள்)

ஆமணக்கெண்ணெய் 1 படியுடன்,

சின்னிவேர் சங்கங்குப்பிவேர்
சங்கம்வேர்

இம்மூன்றையும் எலுமிச்சையளவெடுத்து அம்மியின்மேல் வைத்து நன்றாகவரைத்து எண்ணெயுடன் குழப்பிக்கொண்டு, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி, ஒரு பாத்திரத்தில் வடித்துக்கொள்ளவும்.

இந்த எண்ணெயில் ஒரு துட்டெடை யெடுத்து உள்ளுக்குக் கொடுத்துப், புண்கள் மேலும் பூசவும். மேலும் இந்த எண்ணெயைப் பகல் பொழுதில் தலையில் தேய்த்துக்கொண்டு, அரப்பிட்டு வெந்நீரில் ஸ்நானம் செய்யவும்.

அன்றையதினம், புளிப்புச்சுவையுள்ள பண்டங்கள், உப்பு, கடுகு, பூசினிக்காய், கசப்புப் பதார்த்தங்கள், பசுவின் நெய், மோர், புகையிலை, தயிர் இவைகளை நீக்கிவிடவும்.

(2) தகரைவிதை ½ படி
காரபோகரிசி ½ படி

இவ்விரண்டையும் தண்ணீர் விட்டரைத்து (ஆமணக்கெண்ணெய் 4 படியுடன் குழப்பி) அதனுடன்,

சுத்திசெய்த சேராங்கொட்டை 1 பலத்தை யெடுத்து அவைகள் ஒவ்வொன்றையும் நான்காய்ப் பிளந்து எண்ணெயுடன் போட்டு யாவற்றையும் ஒன்று கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்து, மெழுகு பதமாகும்போது சுத்திசெய்த தாளகம் 2 வராகனெடை எடுத்துக் கல்வத்திலிட்டு நுணுக்கி, அதனுடன் கலந்து, பதத்திலிறக்கவும்.

தினம் காலை வேளையில் ஒரு துட்டெடை வீதமெடுத்து 12 நாளைக்கு உட்கொள்ளவும்.

அதன் கடுகை புண்களின்மேல் பூசவும்.

உஷ்ணம் மிகுதியானால் பசுவின் நெய் கூட்டவும்.

குறிப்பு :—

72 நெ. சுவடியில் ' பத்தியம்—'அமுது மாத்திரம்' எனக் காணப்படுவதுடன் 'தகரை விதைக்குப்' பதில் ' கத்திரிநாயகம் விதை ' என்றும் காணப்படுகிறது.

---

## 55. உடரலை, கால், கைப் புண்களுக்கு எண்ணெய்.

ஒநிசெங்கத்தாரிநிம்ப மாவரைசங்-
கின்றோலோடுங் கார்த்தி
யதின்மூமருதின்றோ விலவங்கப்
பட்டையுடனவின் மருந்து
மதிகருஞ்சீரகமும் விடமூங்கி
விலைமூன்று வசம்புதானுந்
துதிவெள்ளை முப்பூண்டு மிதுவெல்லா
மோரளவாய்த் தூக்கித்தட்டே. (௱அ)

தட்டிடுநல்லெண் ணெயிலுமதைப்போட்டுப்
பொன்னிறமாந்தான் பதத்திற்
றெட்டிறக்கிக்கொண்டு புண்ணினளவுக்கோர்
சேலைகிழித் தோய்த்துப்போட்டு
விட்டரசஞ்சரகெண் ணெயிற்பொரித்துப்
புண்ணூற்று மேலிற்கட்டு
மொட்டுபறங்கிப் புண்ணுக்கிடுநாவி
நெறிவிடத்தி லூட்டிப்போடே. (௱க)

(இ-ன்)

| | |
|---|---|
| ஓதியம்பட்டை | செங்கதாரிவேர்ப்பட்டை |
| வேப்பம்பட்டை | ஆவாரம்பட்டை |
| சங்கம்பட்டை | கலப்பைக் கிழங்கு |
| மருதம்பட்டை | இலவங்கப்பட்டை |
| கருஞ்சீரகம் | விஷமூங்கிலிலை |
| வசம்பு | வெள்ளைப்பூண்டு |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) விதமெடுத்து அம்மி யின்மேல் வைத்துத் தண்ணீர் சேர்த்தரைத்து,

சுத்தமான நல்லெண்ணெய் (1 சேரில்) குழப்பி அடுப் பின்மேலேற்றிப் பொன்னிறமாகும்வரை எரித்து வடிக் கட்டிக்கொள்ளவும்.

இதில் ஒரு துணியைத் தோய்த்து புண்ணின்மேல் வைத்து அதற்குமேல் இந்த எண்ணெயிலே பொரித்த அரசந் துளிரையும் கட்டவும்

புண்கள் ஆறும். பறங்கிப்புண்களானால் நாபியையும் நிர் விஷத்தையும் இந்த எண்ணெயில் பொரித்துக் கட்டவும்.

குறிப்பு:—

கலப்பைக் கிழங்கு, நிர்விஷம், நாபி முதலான விஷ சரக்குகள் மேற்கூறிய எண்ணெய் வகைகளில் சேர்ந்திருப்பத ஞல் உள்ளுக்குச் சாப்பிடக்கூடாது.

---

## 56. கிரந்திக்குச் சேர்வை.

புனைகருஞ்சீதாரி பலமிரண்டுந்
தூட்செய்து புகல்கரண்டி
தனிலெண்ணெயிட்டதிலே தூளையிடு
கொதிகண்ட தருணந்தன்னில்

நளியொருபணவிடை தான்றுருசி
யிட்டதனை நல்லநீரில்
முன்னூற்றிப்பிலசந்திட்டால் வெண்ணெய்வரு
மதைச்சிமிழில் மூடிவையே. (௱ம)

வைத்திதனை நுணவிலிலையிற்றடவிப்
போடவுமே வரிகிரந்தி
உத்திதெல்லா மாறிவிடுங்கலப்புறத்திற்
சங்குகொண்டு மூமத்தின்னீர்
குத்தியிழைத்தோர் சிமிழிற்கொண்டுநுண
விலையிலிடக்குணமதாகும்
மத்திலாரையினீரிற் கலப்புறஞ்
செம்பிழைத்து வழித்திடாயே. (௱மக)

(இ-ள்)

கருஞ்சீதாரி (கருமை நிறமுள்ள செம்புளிச்சை)—2 பல மெடுத்துக் காயவைத்து, இடித்து வஸ்திரகாயஞ்செய்து, ஒரு இரும்புக் கரண்டியில் நல்லெண்ணெய்விட்டு, அதில் இத் தூளையிட்டுக் கொதிக்கவைக்கவும். அது நன்றாகக் கொதிக் கையில் துருசு ஒரு வராகனெடை சேர்த்து மத்தித்துக் குளிர்ந்த தண்ணீரில் விடவும். பின்பு தண்ணீரை வேகமாக அலசி வந்தால், அம்மருந்து வெண்ணெயைப் போலத் திரளும்.

இதை ஒரு சிமிழில் பத்திரப்படுத்தி வேண்டும்போது ஒரு நுணா இலையிலிதைத் தடவிப் புண்களின்மேல் போடவும்.

கிரந்திகளும் தீரும்.

(2) ஒரு வெங்கலப் பாத்திரத்தின் அடியில் ஊமத்தை யிலைச்சாற்றை விட்டு, ஊதுசங்கினால் இழைத்து, வரும் விழுதை ஒரு நுணா இலையில் தடவிக் கிரந்திகளுக்குப் போடவும்.

(3) மேல்சொன்னபடி கலப்புற்றதில் வல்லாரை இலைச் சாற்றை ஊற்றிச் செம்பினுலிழைத்து, வரும் விழுதை நுணு கிலையில் தடவிப் போடவும். குணம் தரும்.

---

# 57. ஆறாத அழுகுணிப் புண்களுக்கு மருந்து.

கூறியபேய்ப்பீர்க்கின் விரைபலமொன்று
 வறுத்துந் தாட்கூட்டுஞ் சுண்ணம்
பூரியவொட்டடைமுத்தி ணெண்ணெயிலுங்
 குழைத்தழி புண்ணிற்போடுந்
தீருமிது புளிதள்ளு மாவிலங்கின்
 வேர்பட்டை சேர்வசம்புந்
நூருள்ளியுரு யெள்ளெண்ணெய் தனிற்போட்டுத்
 திரிலவை தொடாமற்பூசே. (௱கஉ)

(இ-ள்)

பேய்ப்பீர்க்கம் விதை ஒரு பலம் எடுத்துச் சட்டியிலிட் டுக் கருக வறுத்துக்கொள்ளவும். இதற்குச் சரியெடை ஒட் டடையும், சுண்ணாம்பும் கூட்டி விளக்கெண்ணெய் வேண் டிய அளவு விட்டுக்குழைத்து வைத்துக்கொள்ளவும். வேண் டும்போது ஒரு துணியில் தடவி விரணங்களுக்குப் போட்டு அன்றையதினம் புளியின்றிச் சாப்பிடவும்.

புண்கள் ஆறும்.

(2) மாவிலங்கம்வேர்ப்பட்டை வசம்பு
 பூண்டு

இவைகளை நசுக்கி நல்லெண்ணெயுடன் கலந்து, சூரிய புட மாக வைக்கவும்.

இதைக் கோழி இறகினுல் புண்களுக்குத் தடவவும். புண்கள் ஆறிவிடும்.

---

# 58. கன்னக்கிரந்தி, காளான், கரப்பான் முதலியவைகளுக்கெண்ணெய்.

கருஞ்சீரமொதியந் தோற்பூதகரப்
பான்பட்டைக்கார்த்திழலை
மருதந்தோலவின் வெளிச்சைப்பிசினு
நீர்ப்பூலாவளரும்பட்டை
தருமிவைகடனே நேகமரைத்தெண்ணெய்
தனிற்கூட்டித் தானெரித்துப்
பருங்கன்னக் கிரந்திக்குங் கரப்பானுக்
கிடத்திரும் பண்பாய்த்தானே. (௭௰௩)

(இ-ள்)

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | ஓதியம்பட்டை |
| பூதகரப்பான்பட்டை | கலப்பைக்கிழங்கு |
| மருதம்பட்டை | அபின் |
| வெளுச்சைப்பிசின் | நீர்ப்பூலாப்பட்டை |

இவைகளை வகைக்குச் சரியெடை யெடுத்து நன்ருக அரைத்து நல்லெண்ணெயுடனே கூட்டி, ஒரு நாள் சென்றபின் அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

இத்தைலத்தைக் கன்னக் கிரந்திக்கும். கரப்பானுக்கும் தடவவும்.

குறிப்பு:—

(1) இத்தைலத்தில் கலப்பைக் கிழங்கு சேர்ந்திருப்பதால் வாயில் படாமல் சாக்கிரதையாக உபயோகிக்கவும்.

(2) சரக்குகள் 1 வராகனெடையானுல் எண்ணெய் 1 சேர் எடுத்துக்கொள்ளவும்.

(3) வெளிச்சைப் பிசினுக்குப் பதில் விளாம்பிசின் சேர்த்துக் கொள்ளவும்.

# 59. காளான், கன்னக்கிரந்தி, கரப்பானுக்கு எண்ணெய்.

எள்ளினெண்ணெய் வேம்பினெண்ணெயோரளவா
　　யிட்டதனிலிரதமொன்று
தள்ளுபச்சைநாபி யொருபணவெடையுங்
　　குங்கிலியந்தாக்கிடாறு
விள்ளுபணவெடையபினு மூன்றுபண
　　வெடையைந்து வெளுத்தைக்கண்டு
வெள்ளையுள்ளி முப்பூண்டுமைந்தலகு
　　பாக்குடனே மிளகைந்தாமே. (௱கச)

ஐந்துகடுக்காய் வசம்புமூன்ருகு
　　மேற்கிளுவை யாடாதோடை
நந்தவுரியாவரையுங் குன்றிமணி
　　தான்கொழுஞ்சி நவின்றவேர்கள்
முந்தரைத்து மெண்ணெயிலே கலந்திட்டுக்
　　காய்ச்சிபதமொழி மேகம்போல்
அந்தநிறமாயிறக்கி யுட்கொள்ள
　　விரணமெல்லாம் மாறிப்போமே (௱கரு)

(இ-ள்)

| | |
|---|---|
| சுத்தமான எள்ளெண்ணெய் | 1 சேர் |
| ,, வேப்பெண்ணெய் | 1 சேர் |

இவற்றை யொன்று கலந்து,

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | 1 பணவெடை |
| ,, நாபி | 1 ,, |
| குங்கிலியம் | 6 ,, |
| அபின் | 3 ,, |
| வெளிச்சைப்பிசின் | 5 ,, |

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டு | 3 (எண்ணிக்கையில்) |
| களிப்பாக்கு | 5 பணவெடை |
| கடுக்காய்த்தோல் | 5 ,, |
| லசம்பு | 3 ,, |
| இளுவை வேர் | |
| ஆவாரை வேர் | |
| ஆடாதோடை வேர் | |
| அவுரிவேர் | |
| குன்றிமணிவேர் | |
| கொடுஞ்சிவேர் | |

முதலில் கடைச் சரக்குகளைக் கல்வத்திலிட்டு (த் தண்ணீர்) விட்டு நன்றாக அரைத்து, பின்பு ரஸத்தைச சேர்த்து, எண்ணெய் வகைகளுடனே கலந்து, அடுப்பின்மேலேற்றிக் காய்ச்சவும். மேகத்தின் நிறம்போலான பின், எண்ணெயைக் கீழே இறக்கிவிடவும்.

இதனைத் தினம் ஒரு ஸ்பூன் உட்கொள்ள விரணங்கள் தீரும்.

குறிப்பு :—

(1) வேர் வகைகளையும் 3 பணவெடை எடுத்துக் கொள்ளவும்.

(2) இம்மருந்தில் நாபி சேர்ந்திருப்பதனால், இந்த எண்ணெயைக் குறைந்த அளவில் உடயோகிக்கவும்.

---

## 60. புண், கிரந்தி, சூலை, மேகவகை, கழிச்சல் முதலியவைகளுக்குக் கருங்கோழிச் சூரணம்.

ஒருபெரும்பானைதனிற் கானசதிரக்
கள்ளிதனை யுறுபாக்குப்போல்

அரியதைபுள்ளடைத் துப் பானையின்வாய்
வேடுகட்டியதனிற்கேநு
ரிரியல்சிரகஞ்சுக்கு மசமோதந்
திப்பிலியுமிவை வகைக்கு
மூரியரைப்பலவிதஞ் சாதியின்காய்
பத்திரியுமுது கிராம்பே. (௱கசு)

குரசானியோமமிவை வகைக்கோரு
வராகனெடை கோட்டத்தோடும்
பரவதிங்கந் கடுரோணி வகையொன்று
மூன்றுகிட்கம் பனிரெண்டுந்தான்
தரமிடித்துக் கருங்கோழி தன்குடல்கால்
மயிருடனே தலையும்போக்கிக்
கரமருந்ததில் வைத்துமிளையாடி
வேட்டதின்மேற் கலந்துவையே. (௱கஎ)

எரியிட்டுநாற்சாமம் வெந்தெடுத்து
மென்பதத்திலிடித்துலர்த்தி
பரியவடிக்கட்டிருபான் றினமுவெரு
கடியளவு படவுட்கொள்ளச்
சொரிசிரங்கரிகிரந்தி யரையாப்புப்
புரைபுண்ணுஞ் சூலைக்கட்டும்
பெரியமேகங்களிவை சகலமும்போ
மிம்முறையைப் பேணிச்செய்யே (௱கஅ)

(இ-ள்)

சதிரக்கள்ளியைக் (சுமார் ஒரு வீசை) கொண்டுவந்துச் சிறுசிறு பாக்களவாக அதை வெட்டி, ஒரு பெரும் பானையி லிட்டு, (சுமார் 3 மரக்கால்) ஜலம்விட்டு அடுப்பின்மேலேற்ற வும். பானையின் வாய்க்கு ஒரு வெள்ளைத் துணியினல் வேடு கட்டவும். பின்பு,

| | |
|---|---|
| மிளகு | சீரகம் |
| சுக்கு | ஓமம் |
| திப்பிலி | |

இவைகள் வகைக்கு ½ பலம்

| | |
|---|---|
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |
| கிராம்பு | குராசாணியோமம் |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

| | |
|---|---|
| கோஷ்டம் | அதிமதுரம் |
| கடுகரோகிணி | |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை வீதமும் எடுத்து எல்லாவற்றையுமொன்றுகலந்து, கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயம் செய்துகொள்ளவும்.

ஒரு கருங்கோழியைக் கொண்டுவந்து அதன் தலை, கால், மயிர். குடல் முதலான உருப்புக்களை நீக்கி, முன்சொன்ன சூரணத்தை அதன் வயிற்றினுள் திணித்துத் தைத்துவிடவும்.

பின்பு இதை மேற்கூறிய வேட்டின்மேல் வைத்துமூடி, அப்பானையை அடுப்பின்மேலேற்றி 4 ஜாமத்திற்கு எரிக்கவும். மாம்ஸம் நன்ருக வெந்தபின், எலும்புகளை நீக்கிவிட்டுச் சிறு சிறு துண்டுகளாக்கி, நிழலில் உலர்த்தவும். பின்பு, அத்துண்டுகளைக் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்,

இச்சூரணத்தில் தினம் மூவிரல் கொள்ளுமளவெடுத்து, உட்கொள்ளவும். இம்மருந்தை 20 நாளைக்கு உபயோகிக்க

| | |
|---|---|
| சொறி சிரங்கு, | கிரந்தி |
| அரையாப்பு, | புரை |
| புண், | சூலைக்கட்டு |

மேக ரோகங்கள் முதலியவைகள் தீரும்.

## 61 துருவிய கன்னக் கிரந்திக்கு மருந்து.

முருக்கிதமுங் கெந்தகமுந் திலவெண்ணெய்
    நிம்பவெண்ணெய் முற்கலந்தும்
எரியிட்டுப் பதத்திறக்கிப் புண்ணிலிடச்
    சேலையிலே யிட்டும் போடு
மரிபட்டும்பாரித்து வற்றியிடும்
    பின்னுலர்ந்து வருமேகங்கள்
அரிகிரந்தி கன்னப்புண் புரைதீர்ந்துஞ்
    சீராகுமடுத்துச் செய்யே. (௱கக௬)

(இ-ள்)

முருக்கிதழ் நெல்லிக்காய்க்கெந்தகம்

இவ்விரண்டையும் (வகைக்கு 1 பலமெடுத்துக்) கல்வத்தி லிட்டு நன்றாக அரைத்து

வேப்பெண்ணெய் ஒரு சேரும்
நல்லெண்ணெய் ஒரு சேரும்

எடுத்து ஒன்று சேர்த்து அதில் குழப்பி அடுப்பின்மே லேற்றி, எரித்துப் பதத்திலிறக்கி வைத்துக்கொண்டு, ஒரு சிறு துணியில் தோய்த்துப் புண்களில் போடவும். அவைகள் வற்றி உலர்ந்து போகும். மேகங்கள், அரிகிரந்தி, கன்னப் புண், புரைகள் முதலியவைகளுந் தீரும்.

## 62. கிரந்தி, சூலைக்கு 'வல்லாதி லேகியம்.'

பதின்பலம்வல்லகியுஞ் செங்கலின்றூள்
தனிலுநீர் பார்விடுத்தும்
அதிலு மறுபதுநாழி யூறவிட்டுப்
பின்னெடுத்து மலம்பிப்போட்டும்
இதையுலர்த்தாவின் பாலிரண்டுபடி
தனைவிட்டுமிதமாய்க் காய்ச்சும்
முதியகாற்படி நீரிற் சாதியின்காய்
பத்திரியு மூட்டுவாயே. (௱௨௰)

ஓமமில வங்கமிரு சீரகமுஞ்
சிறுலவங்கத்துள்ளபட்டை
மாமிளகுங் கத்தூரிமஞ்சளது
மேலமுடன் வாய்விளங்கம்
நாமமிதுவகையொன்று பலங்காலாய்
பசுவின்பானல் கரைத்து
நேமமிதுமுன்பாலிற் கலந்துக்கொள்
ளாறுபலம் நேர்பரங்கி (௱௨௧)

பட்டைசக்கைத் தூளிடித்துப்பாலிலிட்டு
பழவெல்லம் பலம் பத்திட்டு
சுட்டநெய்யுங் கூட்டிவிட்டு லேகியமாம்
பதங்கண்டு துப்புமிட்டுத்
திட்டமுடன் பாகஞ்செய் புன்னைக்கா
யளவாகத் தின்னும்போது
குட்டமுடன் சூலைகள் போமிருபதுநா
ளந்திசந்தி கூடத்தானே (௱௨௨)

(இ-ள்)

செங்கல் மாவு (1 படியில்) வேண்டிய அளவு எடுத்து ஒரு பாத்திரத்திலிட்டு அதில் (செங்கல் தூள் முழுகும்வரை)

தண்ணீர்விட்டு அதனுடன் மூக்குவெட்டிய சேராங்கொட்டை 10 பலத்தைப் போட்டு 60, நாழிகை ஊறவைக்கவும். மறு நாளதை எடுத்து நன்றாக அலம்பி உலர்த்திக் கொள்ளவும். பின்பு 2 படி பசுவின் பாலை அடுப்பின் மேலேற்றி கால்படி யாகுமட்டும் காய்ச்சிக்கொள்ளவும். இதனுடன்,

| | |
|---|---|
| சாதிக்காய் | சாதிப்பத்திரி |
| ஓமம் | கிராம்பு |
| சீரகம் | கருஞ்சீரகம் |
| சன்னலவங்கப்பட்டை | மிளகு |
| கஸ்தூரிமஞ்சள் | ஏலக்காய் |
| வாயுவிளங்கம் | |

இவைகள் வகைக்கு ¼ பலம் எடுத்துப், பசுவின்பால் விட்டு நன்றாக அரைத்து காய்ந்துகொண்டிருக்கும் பாலில் கலந்து, சுத்திசெய்த பரங்கிப்பட்டை 6 பலத்தை இடித்து வஸ்திர காயஞ் செய்து, அதிலிட்டுப் பழய வெல்லம் 10 பலமும் போட்டு, சேராங்கொட்டைகளின் விதைகளையும் நீக்கிவிட்டு, அம்மியிலிட்டு அரைத்து விழுதாக்கி அதனுடன் போட்டு, நெய்விட்டுக் கிளறி லேகிய பதத்திலிறக்கவும். ஆறியபின் வேண்டிய அளவு தேனைவிட்டுக் குழப்பி வைத்துக்கொள்ள வும்.

தினம் 2 வேளை (காலையிலும், மாலையிலும்) பின்னைக் கொட்டையளவெடுத்துச் சாப்பிடவும். 20 நாளைக்கு உட் கொள்ளவும்.

இதனால், குஷ்டம், சூலை முதலான ரோகங்கள் தீரும்.

குறிப்பு :—

பரங்கிச் சக்கையை இடித்துத் தூளாக்கிப் பசுவின்பா லில் புட்டவித்துக் கொள்ளவும்.

# 63. கிரந்தி, சூலைகளுக்கு 'வல்லாதி லேகியம்.'

வல்லகியும்பலம் பத்து மசமோதங்
கருஞ்சீரமர மஞ்சள்தான்
சொல்லுமெள்ளுங் குராசாணிகுடசரிசி
கொடிவேலி சூழ்க்கார்போக
நல்லரிசிவகையொன்றும் பலமொன்று
யிரும்புலக்கை நாட்டிடிக்கக்
கல்லுரலிற்பலமொன்றுங் கொப்பரைக்காய்
பனங்கட்டி கணக்காய்த்தானே (௱உ௩)

இருபதுங்கலந்திட்டு மையதனைப்
போலிடித்து மெடுத்துக்கொண்டு
தருமிச்சாப்பத்தியமாய்க் கழற்காயி
னளவந்திசந்திகொள்ள
மருவுத்தபுண்கிரந்தி சூலைபுரை
யரையாப்பு வரட்சியோடுங்
கருவுத்தவிரணமெல்லாந் தீர்ந்துவிடுஞ்
சரபேந்திரன் கணித்ததாமே. (௱உ௪)

(இ-ள்)

முன்கூறியபடி செங்கல்தூளில் ஊறவைத்துச் சுத்தி செய்து கொட்டை நீக்கிய சேராங்கொட்டை 10 பலம்

| | |
|---|---|
| ஓமம் | கருஞ்சீரகம் |
| மரமஞ்சள்தோல் | எள்ளு |
| குராசாணி ஓமம் | வெட்பாலையரிசி |
| கொடிவேலிவேர்பட்டை | கார்போகரிசி |

முதலிய சரக்குகள் வகைக்கு ஒரு பலம் வீதமும் எடுத்து, எல்லாவற்றையு மொன்றுகலந்து, கல்லுரலிலிட்டு, இரும்பு உலக்கையினால் நன்றாக இடிக்கவும். அதனுடன்,

| | |
|---|---|
| கொப்பரைத்திருகல் | 1 பலமும் |
| பனைவெல்லம் | 20 பலமும் போட்டு |

மறுபடியும் நன்ருக ஒன்று சேரும்படி மைபோலிடிக்கவும்.

இதில் கழற்சிக்காயளவெடுத்துத் தினம் காலையிலும், மாலையிலும் உட்கொள்ளப் புண்கள், கிரந்தி, சூலை, புரை, அரையாப்பு, வரட்சி, விரணங்கள், முதலியவைகள் தீரும்.

இச்சாபத்தியமாக இருக்கவும்.

---

## 64. கிரந்திக்கு மருந்து.

கூவிளைவேரிலை வெக்காவளைவேரும்
வசம்புள்ளிக்கூட்டி யெண்ணெய்
பாவனைசெய்பூதகரப் பானுமிட்டுக்
கொதிப்பித்துப் பணபாய்க்கொள்ள
நோவுகிரந்திகடருஞ்சங்கஞ்குப்
பியின்பட்டை நொருக்கிச்சாற்றில்
தாவசுவத் தெலும்பிழைத்துப் புண்ணிலிட
முத்தினத்திற் சாந்தமாமே (௱உ௫)

(இ-ள்)

| | |
|---|---|
| வில்வ இலை | வில்வவேர்ப்பட்டை |
| வெள்ளைவேளை வேர் | பூண்டு |
| வசம்பு | பூதகரப்பான்பட்டை |

இவைகளை நன்கு அரைத்து (நல்லெண்ணெயுடனே) கூட்டிக் குழப்பி, அடுப்பின்மேலேற்றிக் கொதிக்கவைத்துப் பக்குவத்திலிறக்கவும். இதில் ஒரு ஸ்பூன் அளவெடுத்துத் தினம் காலையில் உட்கொள்ளவும். கிரந்திகள் தீரும்.

(2) சங்கங்குப்பியின் பட்டையை எடுத்துக் கல்லுரலி லிட்டுச் சிறிது ஜலம்விட்டு இடித்துச் சாறுபிழிந்து, சந்தனக் கல்லிலிட்டு அதில் குதிரையின் எலும்பை இழைத்து விழு தாக்கிப் புண்களின்மேல் தடவவும். 3 நாளைக்குள் புண்கள் தீரும்.

குறிப்பு :—

நல்லெண்ணெய் 1 சேருக்கு, பச்சிலைச் சரக்குகள் ஒரு வராகனெடை யெடுத்துக் கொள்ளலாம்.

---

## 65. பர்சுடம்பிற் கிரந்தி, கரப்பான் முதலியவைகளுக்கு எண்ணெய்.

திருத்துழாய் குழிமீட்டான் தும்பையிண்டு
சங்குகம்பந் திராய் பாவட்டை
முருக்காடாதோடை வனமல்லிகையுந்
தூதளைசெம்முள்ளி கோழி
வருமவரைகோழிமுள்ளான் கஞ்சாங்கோ-
ரையுமிலைகள் வகைநறுக்கி
யிருசிற்ருமணக்கெண்ணெ யதனிலிட்டுக்
கருஞ்சீர மீருள்ளிநீரே (ரஉசு)

வசம்புள்ளிவெளுத்த பிசினிவைநறுக்கி
மேற்கலந்து வைத்து வெய்யில்
வசம்புடஞ் செய்தெண்ணெய் தனைநக்கக்
கிரந்திப்புண் வளர் கரப்பான்
நிசந்தீரும்வில்வயிலை காடியநீ-
ரால்நறுக்கி நேரெள்ளெண்ணெய்
வசம்புள்ளிபிசைந்திட்டு வெய்யில்வைத்துப்
புண்ணிலிட மாறுந்தானே (ரஉஎ)

(இ-ள்)

| | |
|---|---|
| துளசியிலை | நத்தைச்சூரியிலை |
| தும்பையிலை | இண்டங்கொழுந்து |
| சங்கு இலை | †கம்பந்திராய் இலை |
| பாவட்டை யிலை | முள்முருக்கிலை |
| ஆடாதோடையிலை | காட்டுமல்லிகை யிலை |
| தூதுவளையிலை | செம்முள்ளியிலை |
| கோழியாவரையிலை | *கோழிமுள்ளானிலை |
| கஞ்சாங்கோரையிலை | |

முதலான பச்சிலை வகைகளைச் சமனெடையெடுத்து நறுக்கி, சிற்றாமணக்கெண்ணெயில் ஊறப்போட்டு,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | பூண்டு |
| வெளுத்தபிசின் | வசம்பு |

இவைகளையும் கல்லுரலிலிட்டு இடித்து முன்சொன்ன, எண்ணெயுடன் சேர்த்துப் பிசைந்து, வெய்யிலில் வைக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு ஸ்பூன் எடுத்துத் தினம் ஒரு வேளை காலை வேளைகளில் உட்கொள்ள,

கிரந்தி, கரப்பான் முதலானவை தீரும்.

(2) வில்வ இலை, வசம்பு, பூண்டு இவைகளைச் சம எடை யெடுத்துக் கல்லுரலிலிட்டுக், காடிவிட்டு நசுக்கி, நல்லெண்ணெயுடன் சேர்த்து வெய்யிலில் வைக்கவும்.

---

† கம்பந்தராய் என்பது பம்பந்தராயாகும். இது தரையில் அதிகம் படராது. இதன் இலைகள் பெருத்திருக்கும்.

* கோழிமுளையான்—முக்குளிக்கீரை.

10 நாட்கள் சென்றபின் இதனைப் புண்களுக்கு இடவும்.

குறிப்பு :—

1. 2 செ. மருந்தில் பச்சிலை வகைகள், கடைச்சரக்கு முதலியவைகள் வகைக்கு 1 வராகனெடையானால் எண்ணெய் 1 சேர் எடுத்துக்கொள்ளவும்.

## 66. தீப்படும் புண்களுக்கு 'எண்ணெய்'

முன்னைநறுவலிக்கொழுந் தெண்ணெயிலுங்
கொதிப்பித்து மோதப்பூசுந்
தன்னிலுமாறுதபுண்ணிற் பேயத்தி
வேர்விட்டுணு தன்கிராந்தி
பின்மருதந்தோலுடனே மூன்றுமரைத்
திதைப்புண்ணிற் பேணிப்பூச
நன்னயமாயாறிவிடுஞ் சரபேந்திர
னிம்முறையை நவின்றதாமே. (௱௨௮)

(இ-ள்)

முன்னைக்கொழுந்து நறுவலிக்கொழுந்து

இவ்விரண்டையும் வகைக்கு (எலுமிச்சையளவெடுத்து) நல்லெண்ணெய் (2 சேருடன்) கூட்டிக் காய்ச்சிப் பதமாக இறக்கி, தீச்சுட்ட புண்களுக்கிட அவைகள் மாறும்.

(2) பேயத்திவேர் விஷ்ணுக்கிரந்திவேர்
மருதம்பட்டை

இவைகளைத் தண்ணீர் விட்டு நேகவரைத்து, ஆறாத புண்களின்மேல் பூசிவர அவைகள் ஆறும்.

# 67. தீப்பட்ட புண்களுக்கும், வைசூரிப்புண்களுக்கும் எண்ணெய் வகைகள்.

ஆலரசுமிரலியத்திப் பட்டையொரு
வகைபத்துமாம் பலந்தான்
மேலிடித்துநாலு மரக்காலிரிட்
டேகுறுணிவீதங் காய்ச்சி
யேலவடித் ததிமதுர மஞ்சிட்டி
பாலைமுகிழிலாமிச்சம்வேர்
கோலநன்னாரியிலவேரும் வெள்ளறுகுக்
கருஞ்சீரங் கொள்ளக்கேழே (௩௨௬)

கொள்ளுமிதுவேம்பாடந் தூள்வகைக்கு
நாற்கழஞ்சாய் கோர்த்தரைத்து
எள்ளினெண்ணெய்நாழியிலே கலந்தெரித்
ததையும்வடித் தெடுத்துவைத்து
உள்ளினுங்கொள் மேற்றடவிக்குளித்துவர
வைசூரிப்புண்ணுடன் றீப்பட்டுத்
துள்ளியபுண்டீருமுறை சரபோசி
மகராசன்றெருகுத்ததாமே. (௩௨௭)

(இ-ள்)

| | |
|---|---|
| அல் | அரசு |
| கொன்றை | அத்தி |

இவைகளின் பட்டைகளை வகைக்கு 10 பலம் வீதமெடுத்து, நன்ருக நறுக்கி யொரு பாத்திரத்திலிட்டு 4 மரக்கால் ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி 1 மரக்காலாக வற்றவைத்து, அதனுடன்

| | |
|---|---|
| அதிமதுரம் | மஞ்சிட்டி |

நன்னாரிவேர் | வெள்ளறுகு
கருஞ்சீரகம் | வேம்பாரம்பட்டைத்தூள்

இவைகள் வகைக்கு 4 கழஞ்சு (5 வராகனெடை) வீதம் எடுத்து, இடித்து, மேற்கூறிய கஷாயம் விட்டு நன்றாக அரைத்து

நல்லெண்ணெய்—1 நாழி ($1\frac{1}{4}$ சேர்) யும் விட்டு ஒன்று கலந்து, அடுப்பின்மேல் வைத்துப் பக்குவமாக வடித்து இறக்கவும்.

இந்த எண்ணெயை உள்ளுக்குங் கொடுத்து, மேலுக்கும் பூசி ஸ்நானம் செய்ய,

தீப்பட்ட புண்கள், வைசூரிப் புண்கள் முதலானவைகள் தீரும்.

---

## 68. புற்று வளர்ந்த புண்களுக்கு மருந்து.

சர்க்கரைகொடிவேலி வேரரைத்துப்
புண்ணிலிட்த்தானுந்தீரும்
வருசாதிக்காயதனைச் சுட்டெண்ணெயிலு
மதித்திட்டால் வளர்புற்றுப்போந்
தருமெலியின்புழுக்கை சிறுநீரிலுரை
தடவத்தளரும் புற்று
திருமதுரந் தேனிலிடப் பருத்திக்காய்ச்
சாற்றிலிடுந் திப்பிலிதானே (௱௩௧)

(இ-ள்)

(1) ஈரமான கொடிவேலி வேரைத் தண்ணீர் விட்டு ஒரு சந்தனக் கல்லில் கைபடாமலிழைத்து, அதனுடன் சரி

எடை சர்க்கரை (வெல்லச் சர்க்கரை) சேர்த்து ஒரு குச்சியி ளுல் குழைத்து புண்களில் போடவும். புண்கள் ஆறும்.

(2) சாதிக்காயைச் (ஒரு இரும்புக் கம்பியில் சொருகி விளக்கெண்ணெய் விளக்கில்) சுட்டு நல்லெண்ணெயில் குழைத்து புற்றின்மேல் பத்தாகப்போடக் குணமுண்டாகும்.

(3) எலிப் புழுக்கையை, கோமூத்திரத்திலுலரைத்து, புற்றுகளின்மேலே தடவ அவை தளரும்.

(4) அதிமதுரத்தைத் தேனிலிழைத்து மேலே பூசினு லும் குணமுண்டாகும்.

(5) திப்பிலியைப் பருத்திக்காய்ச் சாற்றிலுரைத்துப் போட்டாலும் புற்றுகள் தீரும்.

குறிப்பு :—

இவைகளைத் தவிர, 72 செ. சுவடியில்

| | |
|---|---|
| " சாணக்கிச்சாறு | ½ படி |
| குறிஞ்சாச்சாறு | ½ படியும் |

மிதுவாய் வாய் பேசாமலிடவுந் தீரும். கைகண்டது" என்ற முறை 6-வதாகக் கூறப்பட்டுள்ளது.

# 69. புண், புரை, வாய் விளங்காப் புண்களுக்கு மருந்து.

வாய்விளங்காப் புண்ணதனைக் கீழறுத்து
வெளியாக்கி வாயிற்சியுந்
தோயிரத்தக்கையதனுல் வழித்தெறிந்து
குங்கிலியத் தூளுழக்கு

மீயிரண்டு காசளவப்போது சுட்ட
சுண்ணமுடனெண்ணெயோர் கா
சாயளவு குத்திவிரலாலிழைத்துப்
புண்வளைகடன்னிலூட்டே (௱௩௨)

உள்ளினுக்குஞ் செலுத்திப்புண் வாய்நிரம்பத்
தடவிட்டுமுடனே கட்டிக்
கொள்மூன்று நாளவிழ்த்துப் பாரிரத்தஞ்
சீழ்வற்றிக்குணத்தி லாறும்
விள்ளிரத்தக் களிம்பிலே மருந்திட்டாற்
குணங்காட்டும் வெட்டுக்குத்து
நள்ளிரத்தக் களியிடவுஞ் சரபேந்திர
னிம்முறையும் நவின்றதாமே (௱௩௩)

(இ-ள்)

புண்ணின் வாய் ஊசித்வாரம்போல் காணப்படாமலிருந்தால், புண்ணின் அடித்தளம்வரை ஒரு கத்தியினால் அறுத்து வெளியாக்கிச் சீழையும், இரத்தத்தையும் கையினால் (பஞ்சினால்) வழித்துவிடவும். பின்பு,

| | |
|---|---|
| வெள்ளைக்குங்கிலியம் | ஒரு உழக்கும் |
| அப்போதே சுட்ட சுண்ணாம்பு நீறு | 2 காசளவும் |
| நல்லெண்ணெய் | ஒரு காசளவும் |

விட்டு நன்றாகக் குழைத்து, அப்புண்ணிலும், புரைகள் இருந்தால், அதற்குள்ளேயும் செலுத்தவும். புண்ணின் வாயிலும் சதும்ப விட்டு (ப் பஞ்சுவைத்துக்) கட்டிவிடவும். மூன்றாம் நாள் கட்டையவிழ்த்துவிட்டுப் பார்க்க இரத்தமும், சீழும் வற்றிப் புண்களும் ஆறியிருக்கும்.

இரத்தம் அதிகமாக வருகிற புண்களில் மேற்சொன்ன மருந்தை விட்டால் குணம் அதிசீக்கிரத்திலேற்படும். ஆகவே இது வெட்டுக் காயங்களுக்கு மிகவும் நல்ல மருந்தாகும்

## 70. வாய்ப் புண், வெடிகளுக்கு மருந்து.

புகையுறையைக் காடிநீர்க் கடாயமிட்டு
இந்துப்பும் பூந்தேன்விட்டு
நகைப்புண் வாயிற்றடவித் தேய்த்திடவு
மிப்படிச்செய் நான்குவாரம்
தகைபத்துத் தரமிட்டுக் கொப்பளிக்கப்
பட்சமொன்று தானேதீரு
முகையெள்ளுமதுரஞ் சுக்குடன்குடி
நீர்தேனுமுன்னிந்துப்பே (௱௩௪)

கூட்டிமுன்னைப் படிதேய்த்துக் கொப்பளிக்க
வாய்ப்புண்வெடி குணமாய்த்திருங்
காட்டியமஞ்சளுந் தேவதாரமுடன்
சரிகொண்டு கடாயமிட்டு
நாட்டியதேன் சைந்தவமுன்படி தேய்த்திடப்
போம் நாற்றம் வாய்ப்புண்
மீட்டியதிப்பிலி யேலஞ்சயிந்தவங்
கடுக்காய் கோமியத்தரைத்தே (௱௩௫)

(இ-ள்)

(1) புகைபடிந்த ஓட்டடையுடன் வேண்டிய அளவு காடிவிட்டு ஊரவைத்து, மறுநாளிதை அடுப்பின்மேலேற்றிக் கஷாயம் செய்யவும். இதனுடன், இந்துப்பும் தேனும் கூட்டிக் குழைத்து வாயிலிருக்கும் புண்களில் தடவவும். இதை யே தினம் நான்கு முதல் 10 தடவை வாயில்விட்டுக் கொப்பளிக்கவும். 5 நாட்களில் குணம் உண்டாகும்.

(2) அதிமதுரம் எள்ளு
சுக்கு

இம்மூன்றையும் ஒன்றிரண்டாக இடித்துத் தண்ணீர்விட்டுக் கஷாயம் செய்து, தேனும் இந்துப்பும் முன்போல் சேர்த்து, வாயிலுள்ள புண்களிலும் தேய்த்துக் கொப்பளிக்கவும். வாய்ப் புண்கள் தீரும்.

(3) மஞ்சள் தேவதாரு

இவ்விரண்டையும் சமனெடை எடுத்துத் தண்ணீர் விட்டுக் கஷாயஞ் செய்து, தேனும் இந்துப்பும் போட்டுப் புண்களில் தேய்த்துக் கொப்பளிக்கவும்.

வாய் நாற்றம், வாய்ப்புண்கள் தீரும்.

(4) திப்பிலி ஏலக்காய்
கடுக்காய்த்தோல் இந்துப்பு

இவைகளைச் சரியெடை யெடுத்துப் பசுவின் மூத்திரம்விட்டு அரைத்து வாயிலடக்கியிருக்கப் புண்களும், வாய் நாற்றங் களும் தீரும்.

---

## 71. மேக விரணங்களுக்குச் "சேங்கொட்டை எண்ணெய்"

வெள்ளையுள்ளி கருஞ்சங்கு நிலவாரை
புடபத்திரி மேல்வசம்பும்
வெள்ளைசங்கதின்மூலம் வகைக்கிரு
பலங்கொண் டவ்வேரும்பட்டை
கள்ளச்சேங்கொட்டையினு நஞ்செடுத்த
தைவெட்டிக் கண்டந்தன்னை
யுள்ளபடி யொன்றரையா யெண்ணெதனி
லிட்டடுப்பி லுடனேகாய்ச்சே (௱௩௬)

காய்ச்சிடுவாய் பக்குவத்திலிறக்கியே
யிதையருந்துங் காலைதன்னில்
வாய்ச்சதிலே குட்டமுடன் விஸர்ப்பிகளு
மேகவெடி வரட்சி தேகம்
பூச்சிவெடி யிரத்தங்கள் சீழ்களுடன்
விழுநோய்கள் புரைகள் புண்ணும்
போச்சுதென்று மூலகோராற் புகழ்சரபப்
பெருமானும் புகன்றதாமே (௱௩௭)

(இ-ள்)

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டு | கருஞ்சங்குவேர் |
| நிலவாரை | புடபத்திரி |
| வசம்பு | வெள்ளைச்சங்குவேர் |

இவைகள் வகைக்கு 2 பலம்

மூக்குகளை வெட்டிச் சுத்தி செய்த சேங்கொட்டை } 1⅛ படி (சுமார் 2⅛ சேர்)

இவைகளை அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்ருக அரைத்து

நல்லெண்ணெய் 10 சேரில்

குழப்பி அடுப்பின்மேல் வைத்து எரித்துப் பக்குவத்தில் இறக்கவும்.

இத்தைலத்தில் (காலணு அளவு) எடுத்துத் தினம் அதிகாலையில் சாப்பிட்டு வரக்

| | |
|---|---|
| குஷ்டரோகங்கள் | விசர்ப்பம் (அக்கி) |
| மேகவெடிப்பு | தேகவரட்சி |

பூச்சிகளினாலேற்பட்ட வெடிப்புகள்
இரத்தம், சீழ் முதலியவைகள் அதிகமாக வடியும்
ரோகங்கள்
புண்கள் புரைகள்

முதலான ரோகங்கள் தீரும்.

குறிப்பு :—

புடபத்திரி என்பது கிரைப்பாலை.

---

## 72. சிறங்குகளுக்கு மருந்து.

எருமைப்பாற் பச்சையிலு முறைக்குத்தி
நிலவாகையின் வேர்தன்னை
பெருமோனமாய்ப் பிடுங்கியரைத்துமுன்
ரேய்தயிரிற் பிசரிவெய்யின்
மருவவேபுடம்வைத்து மோருஞ்சோ
றும்நிரம்பவசனஞ் செய்தும்
இருமுடம்பிலிட்டாற வரவுங்தேய்த்
திடுபின்னுமியம்பக் கேளே (௱௩௮)

இயம்புச்சிவேளையிலு மரப்பிட்டுத்
தேய்த்துவெந்நீரில்லாவிட்டாற்
சுயம்புநீரதிற் குளித்திப்படியும்
நாலுதினஞ் சுகமுழுக்கு
வியஞ்சொறிசிறங்காதி யுதிர்ந்துபோ
மிந்தமுறை மேதினிக்கு
நயம்பெறவே யுதவிசெய்துவைக்கச்
சரபேந்திரன் நவின்றதாமே (௱௩௯)

(இ-ள்)

காய்ச்சாத எருமைப்பாலில், எருமைமோர் பிரைக் குற்றித் தோயவைக்கவும். பின்பு

நிலவாகை வேரை (இரு சுண்டைக்காயளவு) வாய் பேசாமல் பிடுங்கிவந்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டரைத்து முன் தயிரில் குழப்பி, வெய்யிலில் வைக்கவும். காலையில் வேண்டிய அளவு மோர்சாதம் சாப்பிட்டுவிட்டுத் தேகத்தில் சிறங்குகள் உள்ள இடங்களில், முன்சொன்ன மருந்தைத் தேய்த்து, மத்தியானம்வரை நன்றாக ஊறி, அரப்பிட்டு வெந்நீரில் ஸ்நானம் செய்யவும். வெந்நீர் கிடைக்காவிட்டால் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்யலாம், இவ்வாறு 4 நாளைக்குச் செய்யவும்.

சொறி, சிறங்குகள் தீரும்.

---

## 73. சொறி, சிறங்கிற்கு மருந்து.

பாதரதமொன்று பணவெடைகொண்டு
வெற்றிலைநீர்ப் படமுறித்துச்
சீதகெந்திகௌரீ பாடாணமுடன்
பொடிநேகச் செய்துபோட்டு
யீதிலுரிநல்லெண்ணெயும் விட்டுமத்தித்
திடுவெய்யிலிதைப் புடஞ்செய்
ஓதியநீரசனஞ்செய் தூண்டதின்பின்
எண்ணெய்தனையுடன் மேற்பூசே (ரசம்)

பூசியொருசாமமட்டும் வெய்யிலிலே
யிருந்தும்பின் பொலிம்ரக்கால்
நேசமுறத்தேய்த்திடவுங் குளிர்ந்தநீ
ருட்குளித்து நெடுமோரன்னம்

போசனஞ்செய்திப்படியே நாலுதினங்
குளித்திட்டாற் போஞ்சிரங்கு
மாசறவேபுண்புரைக டருமுறை
சரபேந்திரன் வரைந்ததாமே (௱௪௧)

(இ-ள்)

பாதரஸம் 3 பணவெடை (10 குன்றிமணி) எடுத்துக் கல்வத்திலிட்டு வெற்றிலைச்சாறுவிட்டு முறித்துக்கொள்ளவும். அதனுடன்

நெல்லிக்காய்க் கெந்தகம்
கௌரீ பாஷாணம்

இவைகளும் வகைக்கு 3 பணவெடை வீதமெடுத்து நன்றாகக் கூட்டியரைத்து, நல்லெண்ணெய் $\frac{1}{2}$ படியும் விட்டு (பட்டணம் படி $\frac{1}{8}$)க் குழப்பிச் சூரியபுடம் வைக்கவும்.

காலையில் பழயமுது சாப்பிட்டு, மேலேகூறிய எண்ணெயை உடம்பு முழுவதிலும் தேய்த்து, ஒரு சாமம் வெய்யிலில் நின்று ஊறிக் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்யவும். மறுபடியும் மோர் சாதம் சாப்பிடவும். இவ்வாறு நான்கு நாட்களுக்குச் செய்யச் சொறி, சிறங்கு முதலானவைகள் தீரும்.

## 74 புண் புரைகளுக்குத் திரிவகைகள்.

உப்புமொருமிளகுவேப்பங் கொழுந்துங்கூட்
டியரைத்துடன் புண்வாயில்
அப்பியதை வைத்திருக்க வங்கிடிந்து
வெளிகாணு மன்றிச்சேலை
வேப்புமுத்தாமணிப்பாலும் மூட்டுதிரி
தனையேற்ற வெளியுங்காணுந்
தப்புரையிலா முறையைச் சரபோசி
மகராசன்றந்ததாமே (௱௪௨)

(இ-ள்)

உப்பு ஒரு கல்
மிளகு ஒன்று
வெப்பங்கொழுந்து கழற்சியளவு

இவைகளை நன்றாக அரைத்து விழுதாக்கிப் புண்வாயில்கட்ட அதன் வாய் பெரிதாகும்.

---

## 75. புண், புரைகளுக்கு மற்றொரு திரிவகை.

நாயுருவி வேம்பமுத்தா மணிமேனி
நொச்சிலிவை நன்கொழுந்து
தோயரைத்து மிதைச்சேலை மேற்றடவித்
திரியாக்கித் துளையிலேற்று
நீயொருநாளிரண்டு நாள் தானெரிந்து
விடுமெரிவு நில்லாதாகிற்
றேய்திரியில் முத்திவெண்ணெய்ப் பசுவின்நெய்
தடவிவிடச் சுகமதாமே (௪௩)

ஆவாரையின் கொழுந்தரைத் தாவினெய்யிற்
குழைத்திட்டாலாங்குளுத்தி
மேவியதேனதைக் காய்ச்சக் கயறுபோ
லாகுமிதை விட்டேற்றப்புண்
தாவுடைய விடமெல்லாமேறிவிடும்
புரையோட்டந் தனக்குத்தானே
நோவுகரைந்தோடியும் போமிம்முறையைச்
சரபேந்திர னுவன்றதாமே (௪௪)

(இ-ள்)

(1) நாயுருவிக்கொழுந்து வேப்பங்கொழுந்து
குப்பைமேனிக்கொழுந்து உத்தாமணிக்கொழுந்து
நொச்சிக்கொழுந்து

இவைகளைத் தண்ணீர்விட்டு நேகவரைத்து, ஒரு வெள்ளைத் துணியில் ஒரே சீராகத் தடவித் திரியாகத் திரித்து வைத்துக் கொள்ளவும்.

இத்திரியைச் சிறு துவாரமுள்ள புண்களிலோ, புரைகளிலோ ஏற்றிவைக்கவும். இவ்வாறு நாள்முழுதுமோ அல்லது இரண்டு நாட்களோ அவ்விடத்திலே வைத்திருக்கப் புண் வாய் எரிந்து பெரிதாகும். எரிச்சல் தாங்க முடியாமலிருந்தால் திரியில் ஆமணக்கெண்ணெயோ அல்லது பசுவின் நெய்யோ தடவிப் பிறகு உட்செலுத்தவும்.

(2) ஆவாரைக்கொழுந்தைப் பசுவின் நெய்யில் குழைத்துப் புண்களில் தடவக் குளிர்ச்சியைக் கொடுக்கும்.

(3) சுத்தமான தேனை அடுப்பின்மேல் வைத்துக் காய்ச்சிவர, அது பாகாகி கயறுபோலிறுகும். இதைத் திரியாகத் திரித்து வைத்துக்கொண்டு, புண்கள், புரைகள் முதலியவைகளில் ஏற்றவும்.

புரைகள் தானகவே கரைந்து போகும்.

---

# 76. தோடகச் சிறங்குகளுக்கு மருந்து.

தென்னையின்காயுடைத் தொற்றைமூடிதனைத்
தலிப்பாலாய்த்திருகி வாங்கித்
தன்னிலுமே சுண்ணமிட்டுச் சாரித்துச்
சிரங்கதின்மேற் றடவிக்கொண்டு
பின்னையந்திதனில் வெந்நீராற் குளித்து
மொருமூடி பிழிந்துபாலைச்
சொன்னபுண்ணிற்றடவிந்தப்படி மூன்று
தினங்குளிக்கச் சுகமதாமே

(ரசரு)

(இ-ள்)

ஒரு முற்றிய தேங்காயை இரண்டாக உடைத்து, ஒரு மூடியைத் திருவிப் பால் பிழிந்து, சுண்ணாம்பு (சுண்டைக்காயளவு) சேர்த்து நன்றாகக் குழப்பிச் சிறங்குகளில் போடவும். சாயங்காலம் வெந்நீரில் ஸ்நானம் செய்யவும்.

மீதியிருக்கும் தேங்காய்மூடியைத் திருவிப் பால் பிழிந்து புண்களில் தடவி விடவும்.

இவ்வாறு 3 நாட்கள் செய்யச் சிறங்குகள் மாறும்.

---

## 77. சிறங்கு, சொறி, கடிவிடங்களுக்கு எண்ணெய்.

இலவெண்ணெய் கருஞ்சீராங் கார்போக
வரிசியுடன் றேங்காய்ப்பாலுஞ்
சலமெட்டிக்கொட்டைபத்தும் பொடிசெய்து
எண்ணெயிலுந் தாக்கிக்காய்ச்சி
நல்பதந்தனில் வடித்ததின்கடுகி
லிரதமோடு நல்லகெந்தி
பலவரிதாரமிவை வகைக்கொரு
வராகனெடை படவரைத்தே (௬௬௯)

அரைத்துமுத்தினெண்ணெயிலே யிட்டருணா
புடமாக்கி யதையெடுத்து
அருப்பமுடன் சோறுண்டு மதன்பிறகு
எண்ணெயிட்டு மந்திநேரம்
அரப்பிட்டுமிள வெந்நீரதில்மூழ்க
மூன்றுதின மப்படிச்செய்
சொறித்திட்டசிறங்காதி தீரமுறை
சரபேந்திரன் சொன்னதாமே (௬௭௦)

(இ-ள்)

| | |
|---|---|
| தேங்காய்ப்பால் | ½ சேர் |
| நல்லெண்ணெய் | ½ சேர் |
| கருஞ்சீரகம் | ½ பலம் |
| கார்போகவரிசி | ½ பலம் |
| *சலமெட்டிக்கொட்டை | 10 |

கடைச்சரக்கு வகைகளைத் தேங்காய்ப்பால் விட்டு நன்றாக அரைத்து எண்ணெயுடனே குழப்பி அடும்பின்மேலேற்றிப் பக்குவமாக வடித்துக்கொண்டு, அதன் கடுகை,

| | | | |
|---|---|---|---|
| சுத்தி செய்த | பாதரஸம் | 1 | வராகனெடை |
| ,, | கெந்தகம் | 1 | ,, |
| ,, | தாளகம் | 1 | ,, |

முதலிய சரக்குகளுடன் நேகவரைத்து, எண்ணெயுடனே குழப்பிச் சூரியபுடம் வைக்கவும்.

வேண்டும்போது நோயாளி மோர்சாதம் சாப்பிட்டபின், புண்களில் மேற்கூறிய எண்ணெயைத் தடவி, நன்றாக ஊறி, சாயங்கால வேளையில் வெதுவெதுப்பான வெந்நீரில் ஸ்நானம் செய்யவும்.

இவ்வாறு 3 நாளைக்கு ஸ்நானம் செய்ய சொறி, சிறங்கு முதலியவைகள் தீரும்,

---

* சலமெட்டிக்கொட்டை என்னவென்பது நிச்சயமாகத் தெரியவில்லை. நீரடிமுத்தாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது,

## 78. சொறி, சிறங்குகளுக்கு மருந்து.

துளபத்திலிலை யரைத்திரு நிட்கம்
பாதரதஞ் சேரவிட்டே
இளகரைத்தாவின் வெண்ணெயிதுகூட்டி
மத்தித்து மெடுத்துவைத்து
உள்புரைபுண்களிலுந் தடவந்தி
வேளையிலு முடல்வெந்நீரிற்
குளியாடச்சொறி சிறங்கனுகூல
மாய்த்தீருங் குணமாந்தானே (௱சஅ)

(இ-ள்)

துளசியிலை ஒரு எலுமிச்சையளவெடுத்து, அதனுடன் 2 வராகனெடை சுத்திசெய்த பாதரஸத்தை விட்டுக் கல்வத்தில் போட்டு நன்முக அரைத்து, எலுமிச்சையளவு பசுவின் வெண்ணெய் கூடச்சேர்த்துக் குழைத்து வைத்துக்கொள்ளவும்.

இக்களிம்பைப் புண்கள், புரைகள், சொறி, சிறங்கு முதலியவைகளுக்குப் போட்டுச் சாயங்கால நேரங்களில் வெந்நீரில் ஸ்நானம் செய்யவும். அவைகள் தீரும்.

---

## 79. புண், புரைகளுக்கு மருந்து.

சுடலையுள்ளெலும்பெடுத் ததைப்புளியந்
தழலிலுஞ் சுட்டுக்கொண்டே
உடன்கலத்தின் புறத்தி லெலுமிச்சம்
பழச்சாற்று லுரைத்துக்கொண்டு

இடவெண்ணெய் கூட்டியொரு சிமிளில்வைத்
 திதைப்புண்ணி விட்டாற்றிரும்
அடலாசரிகலடக்குஞ் சரபோசி
 ராசனுரை யாகுந்தானே (௱௪௧)

(இ-ள்)

சுடலேயில் கிடக்கும் ஒரு எலும்பை யெடுத்துப் புளியம் புரணிக்குள் வைத்துக் கொளுத்தி விடவும். பின்பு ஒரு உண்கலத்தில் (வெங்கலப் பாத்திரத்தில்) எலுமிச்சம்பழச் சாறு விட்டு, அதனுடன் எலும்பையுரைத்து விழுதாக்கிச் சரியெடை பசுவின் வெண்ணெய்கூட்டி, மத்தித்துக்கொள்ளவும். இதைப் புண்களிலிட அவைகள் ஆறும்.

## 80. புண்ணிற்கு மருந்து.

விடந்தீஞ்சாலிலேச்சாறுங் கெந்தகமும்
 பலமொன்றுமிதி நெல்லிக்காய்
யுடகெந்தியிருநிட்கம் பொடிசெய்து
 திலவெண்ணெயொரு வீசஞ்சேர்
அடவிட்டுக் கனலிலே துழாவிட்டுக்
 காய்ச்சியொரு வகலச்சட்டி
யிடந்தண்ணீர் தனிலூற்றி வழிபுண்ணிற்
 போடவும் புண்ணேகுந்தானே (௱௫௰)

(இ-ள்)

| | |
|---|---|
| விடந்தீஞ்சாலிலேச் சாறு விட்டு நன்றாக அரைத்த குழாய் கெந்தக விழுது | } 1 பலமும் |
| நெல்லிக்காய் கெந்தகத்தூள் | 2 வராகனெடையும் |

எடுத்து, நல்லெண்ணெய் வீசஞ்சேருடன் குழப்பி அனலில் வைத்துக் கெந்தகம் எரிந்துவிடாமல காய்ச்சவும். பின்பு அதை அப்படியே அகலமான வாயுள்ள ஒரு சட்டியிலிருக்கும் குளிர்ந்த ஜலத்தில் விட்டு அலசவும். அது வெண்ணெய் போலாகும். இதையொரு சிமிழில் வைத்துப் புண்களுக்குப் போடவும்.

புண்கள் வெகு எளிதில் ஆறிவிடும்,

குறிப்பு :—

விடந்திஞ்சான்—நஞ்சுமுறிச்சான்.

---

## 81. புண்களுக்குப் புகை.

கருவங்கழுப்பத்துப் பணவெடைதா-
ஞருக்கிக் கலக்குஞ்சூதந்
தருநாற்பான் பணவெடை தன்னில்விட்டுக்
கட்டிசெய்து அதன்பின்கேளு
துருசேழு பணவெடை யரிதாரம்
பணவெடை தூக்கிமூன்று
எருக்கதின்கரி முப்பான் பணவெடை
பாடாணந்தானிடு பன்மூன்றே (௱௩௧)

மிளகைவி யொருவகை பதிமூன்று
பணவெடை வீதங்கூட்டி
யுளவெல்லா மருந்திணைப் பருத்திச்சா
றிட்டரைத்து மொன்பதுண்டை
வளமாகச் செய்முழுப் புகைக்காட்ட
முக்காலா மாண்புகைக்கும்
அளவாறுவுண்டைபுகை கால்புகைக்கு
மூன்றுருண்டை யாகுந்தானே (௱௩௨)

யாகுமிதுபுகைக்கு நாட்டயிருந் சோ-
றுண்டு பின்னையாட்டிக்கொள்ள
லாகுநல்லசலத்தினுட கழுத்தளவு
புதையவே யதிற்குளித்து
வாகுபுகை காட்டிடவும் புண்கிரந்தி
முதலாக மாறிக்காய்ந்தும்
போகுமிதுமுறை நேர்த்திச் சரபோசி
மகராசன் புகன்றதாமே (௱௩௫)

(இ-ள்)

சுத்திசெய்த கருவங்கம் — 30 பணவெடை ($3\frac{1}{8}$ வராக னெடை) உருக்கி, அதனுடன் பாதரஸம் 40 பணவெடை ($4\frac{1}{7}$ வராகனெடை)யைத் தொந்திக்கவும். பின்பு, அதனுடன்,

| | | |
|---|---|---|
| துருசு | 7 | பணவெடை |
| அரிதாரம் | 3 | ,, |
| எருக்கங்கரி | 30 | ,, |
| வெள்ளைப்பாஷாணம் | 13 | ,, |
| மிளகு | 13 | ,, |
| கடுகு | 13 | ,, |

இம்மருந்துகளை ஒன்றாகச் சேர்த்துச் சிறுசிறு தூள்களாக்கிக் கல்வத்திலிடவும். பின்பு பருத்திக்காய்ச்சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு நன்றாக அரைக்கவும். அரைத்த விழுதை 9 பாகங் களாக்கி உருட்டிவைத்துக்கொள்ளவும்.

புகை பிடிக்கும் நாட்களில், நோயாளி தயிர்சாதம் சாப் பிட்டபின், குளிர்ந்த ஜலத்தில் முழுகிக் குளிக்கவும். பின்பு, புகையிடவும்.

உடம்பு முழுவதும் புகை காட்டவேண்டுமானால் 9 உருண்டைகளையும் உபயோகிக்கவும். முக்கால்வாசி உடம் பிற்குப் புகை பிடிக்கவேண்டுமெனில் 6 உருண்டைகளை உப

யோகிக்கவும். சொறி, சிறங்கு, புண் முதலியவைகள் மிகக் குறைவாக இருந்தால் கால்ப்புகை யிடவும். அதாவது 3 உருண்டைகளைப் புகைக்கவும்.

**குறிப்பு:— உடம்பு முழுவதும் புண்கள் இருந்தால் புகை பிடிக்கும் முறை:—**

ஒரு கட்டிலில் நோயாளியைத் துணியில்லாமல் படுக்க வைத்துத் தலையைத் தவிர மற்ற பாகங்களை நன்றாக மூடும்படியானதும், கட்டிலின் கீழ்ப்பக்கத்திலுள்ள வெளிகளை அடைக்கும்படியானதுமுள்ள ஒரு பெரிய துப்பட்டியினால் மூடிவிடவும். பின்பு, கட்டிலின்கீழே ஒரு குமுட்டியிலோ அல்லது அகலிலோ தணலைவைத்து அதில் புகை உண்டாக்க வேண்டிய மருந்துச் சரக்குகளைப் போடவும். இப்போது அம் மருந்துகளிலிருந்து எழும்பும்புகை கட்டிலின் துவாரங்களின் வழியாக வந்து நோயாளியின் உடம்பில் நன்றாகப்படும். குறிப்பிட்ட நேரஞ்சென்றபின் நோயாளியை எழுப்பி வெளிக்காற்று உடம்பில் படும்படியாக இருக்கச்செய்யவும். வியர்வை அதிகமாகக் காணும். புண்களும் தீரும்.

மேலேசொன்ன மருந்தில் பாஷாணம், இரஸம் முதலான சரக்குகள் இருப்பதனால், மருந்தைக் குறைந்த அளவில் உபயோகிக்கவேண்டும். மேலும் மேற்கூறிய புகை வேறொருவர் மேலும் படாதபடி பார்த்துக்கொள்வதும் அத்யாவசியமாகும்.

---

# 82. புண், புரைகளுக்கு எண்ணெய்.

தென்னையெண்ணெய் புங்கதின்பாற்கலந்துபூ-
நாகமிட்டுச் சேருஞ்சுதந்
தன்னையிளம் பருத்தியா மிலைச்சாற்றால்
முறித்தொக்கத் தாக்கெரித்துப்

பின்னைவடித்ததைப் புண்ணிற்றடவிடக்
 காய்ந்துவிடும் பெருந்தேங்காய்நெய்
தன்னில்வட விழுதரைத்தெரிவடி
 புண்ணிலிடச் சருகாய்ப்போமே (௱௫௪)

(இ-ள்)

தேங்காயெண்ணெய் (1 சேர்)
புங்கம்பால் (1 சேர்)
பூநாகம் (மண்புழு) } இவைகளை வகைக்கு
பாதரஸம் } (1 தோலா வீதம்)

எடுத்துக் கல்வத்திலிட்டுப் பருத்தியிலைச்சாறு விட்டு நன்றாக அரைத்து, மேற்கூறிய சாறுகலந்த எண்ணெயுடன் குழப்பி, அடுப்பின்மேலேற்றிப் பக்குவமாக எரித்து இறக்கவும்.

இந்த எண்ணெயைப் புண்களிலிட அவைகள் சீக்கிரமாக ஆறிவிடும்.

(2) ஆலம் விழுதைத் (சுமார் 1 தோலா) தண்ணீர் விட்டு நேகவரைத்துத் தேங்காயெண்ணெயுடன் (1 சேர்) குழப்பி அடுப்பின்மேலேற்றிப் பக்குவமாக எரித்து வடிக்கவும். இதையும் புண்களிலிட அவைகள் ஆறும்.

## 83. தீப்பட்ட புண்களுக்கு எண்ணெய்.

திலவெண்ணெயொரு நாழிகாயவைத்து
 நாரங்கத்தின் காய்மட்டாய்
தலைரோமமிட்டு நன்றாய்த்தீய்ந்துவரும்
 போதெடுத்துத் தானரைத்துச்
சொலுமெண்ணெ யுட்கலந்து தான்குழைத்து
 வைத்துந்திச்சுட்ட புண்ணில்
உலவிதுபோடப் புண்களாறிவிடுஞ்
 சரபேந்திர னுரையிதாமே (௱௫௫)

(இ-ள்)

நல்லெண்ணெய் 1 படியை

அடுப்பின்மேலேற்றிக் காயவைத்து, அதனுடன் தலைமயிர் ஒரு காரத்தங்காயளவெடுத்துப் போடவும். அது நெய்ந்து வரும் சமயம் பார்த்து அடுப்பின்மேலிருந்து சட்டியைக் கீழிறக்கி ஆறியபின், கல்வத்திலிட்டு நன்றாக ஒன்றுசேரும் படியாக அரைத்துவைத்துக் கொள்ளவும்.

இந்த எண்ணெயைத் தீச்சுட்ட புண்களின்மேல் தடவலை யிட, அவைகள் வெகு எளிதில் ஆறும்.

## 84. புண்களுக்கு மருந்து.

சூதம்வெள்ளைக்குங்கிலிய மரிதகிக்
காய்மிளகுஞ் சொல்லும்வேலி
ஓதுபருத்தியின் வேரும்பாக்களவு
சீவியதனுற்றிலைச்சாறு
ஈதரைத்துக்கொண்டெருமை வெண்ணெயிட்டு
மரைத்தம்மியிலும் பாலுண்ண
மோதிவழித்தோர் சிமிழிலூமத்திற்
றடவிடப்புண் மூடிப்போமே (௱௫௬)

கெந்திவெள்ளைக் குங்கிலியமிரதம் வங்கா-
ளப்பச்சைக் கேடில்குக்கில்
முந்திவெண்கலிவையொன்று கழஞ்சுகொண்டு
பொடிமேதி மொழிந்தவெண்ணெய்
தந்தரைத்துவழித்து வைத்தரசிலை
முருக்கிலைமேற் றடவித்தாலும்
நொந்தபுரைப் புண்ணிடவுமிந்தமுறை
சரபேந்திர னுவன்றதாமே (௱௫௭)

(இ-ள்)

சுத்திசெய்த பாதரஸம்
" குங்கிலியம்
மிளகு
கடுக்காய்த்தோல்
வேலிப்பருத்திவேர்ப்பட்டை

இவைகளை வகைக்கு ஒரு பாக்களவெடுத்துக் கல்வத்திலிட்டு வேலிப்பருத்தி இலைச்சாறுவிட்டு நன்முக அரைத்துக்கொள்ளவும். இதற்குச் சரியளவு எருமை வெண்ணெய் கூட்டி, மத்தித்துக்கொண்டு,

ஊமத்தையிலையில் தடவிப் புண்களில் போடவும். அவைகள் மாறும்.

(2) கெந்தகம் வெள்ளைக்குங்கிலியம்
பாதரஸம் வங்காளப்பச்சை
குக்கில் வெள்ளைப்பளிங்குக் கல்

இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து கல்வத்திலிட்டு நன்முக அரைத்து, சரியெடை எருமை வெண்ணெயும் கூட்டி அரைத்துக்கொள்ளவும்.

இதை அரசந்துளிர், முருக்கிலைத்துளிர் முதலானவைகளில் தடவிப் புண்கள், புரைகள் முதலியவைகளுக்குப் போடவும்.

---

## 85. புண், புரைகளுக்குப் பூச்சு மருந்து,

புலிதுடக்கித்தண்டின் மேற்புரணி
சீவிமஞ்சட் பொடித்தண்டுலம்
மலியரைபுரையோடு மிடத்தள
விட்டுப்புண் வாயைவிட்டு

நலிசுற்றிப் பூசிடுவாய்ப் புரைதூர்ந்து
காய்ந்துவிடு நாநிலத்திற்
கலிபோக்குங் கொடையாளன் சரபோசி
மகராசன் கண்டதாமே (௩௫அ)

(இ-ள்)

இண்டுத்தண்டைக் கொண்டுவந்து அதன் மேல்புராணி யைச் சீவிவிட்டு, மஞ்சளும், அரிசியும் சமனெடைப்போட்டு அரைத்து, புரைபோகிற அளவிற்கு, புண்ணின் வாயைவிட்டு சுற்றிலும் பூசவும். புரைகள் தூர்ந்துவிடும். கைகண்டது.

---

## 86. புண், புரைகளுக்கெண்ணெய்.

சித்தரத்தைவேம்பாடந் தோற்கொன்றைப்
பிசின்மூன்றுந் தெரிதூட்செய்து
வைத்திடு நல்லெண்ணெயிலுங் கொதிப்பித்துப்
புண்புரையின் வழியிலூற்றி
மத்திக்கவுஞ் சகலப்புண் புரையாறிப்
போகுமென்று மண்டலத்தில்
உத்தமனுக்குதவுஞ் சரபோசி
மகராச னுரையிதாமே (௩௫௯)

(இ-ள்)

சித்தரத்தை வேம்பாடம்பட்டை
கொன்னைப்பிசின்

இம்மூன்றையும் சமனெடை (வகைக்கு 1 தோலா) எடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து நல்லெண்ணெயுடன் (1 சேர்) குழப்பி, அடுப்பின்மேலேற்றிப் பக்குவமாக எரித்து இறக்கவும். இத்

தைலத்தை புண்கள், புரைகள் முதலியவைகளுள்ளே செலுத்தவும். அவைகள் நாற்பது நாட்களுக்குள் ஆறிவிடும். கைகண்டது.

---

## 87. புண், புரைகளுக்குப் புகை.

கருவேலின் பிசினழிஞ்சிலின்வேருஞ்
சிவன்வேம்புங்காண் சமூலம்
முருங்கைவேரெருக்கம் வேரிவையஞ்சுஞ்
சமனாக மூட்டிடித்து
நொருச்சூரணஞ்செய்து யெடுத்துவை
செந்தழலி னேக்கமாக
வெருகடிப்பிரமாணம் புகையிட்டுப்
பிடிக்கப்போம் விரணந்தானே (ராகூய்)

(இ-ள்)

கருவேலம்பிசின்
அழிஞ்சில்வேர்
சிவனார்வேம்புச்சமூலம்
முருங்கைவேர்
எருக்கம் வேர்

இவைகளைச் சமனெடை யெடுத்துக் காய்ந்தபின், சூரணித்து வைத்துக்கொள்ளவும்.

இதில் ஒரு வெருகடியளவெடுத்துத் தணலிலிட்டு, விரணங்களுக்குப் புகைபிடிக்கவும்.

விரணங்கள் ஆறிவிடும்.

---

## 88. ஆருந புண்களுக்கு எண்ணெய்.

தேங்காய்ப்பால் வேம்பினெண்ணெய் பொடுதலை
 கோடக்சாலை சிறுபுட்பாதம்
வாங்குவட்டக் கிலுகிலுப்பையின்சாறும்
 வடிமெழுகு மதுரந்தானும்
நாங்கூழும் பூதகரப்பான் பட்டை
 வேம்பாடம் நல்லபட்டைப்
பாங்குடனே கூடவடித்தாருத
 புண்ணிலிடப் பறக்குந்தானே. (௱௬௧)

(இ-ள்)

| | |
|---|---|
| தேங்காய்ப்பால் | (½ சேர்) |
| வேப்பெண்ணெய் | ,, |
| பொடுதலைச்சாறு | ,, |
| கோடகசாலைச்சாறு | ,, |
| சிறுபுள்ளடிச்சாறு | ,, |
| வட்டக்கிலுகிலுப்பைச்சாறு | ,, |

இவைகளையொன்று கூட்டி,

| | |
|---|---|
| அதிமதுரம் | நாங்கூழ்ப்பூச்சி (மண் புழு) |
| பூதகரப்பான்பட்டை | வேம்பாடம்பட்டை |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) கூட்டி இடித்து மேற்கூறிய சாறுகளில் ஏதேனுமொன்றை விட்டு நன்றாக அரைத்து, சாறுகலந்த எண்ணெயுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

இதை வடிக்கட்டி ஆருத புண்களிலிட அவைகள் வெகு எளிதில் ஆறும்.

## 89. புண், புரைகளுக்குக் 'காரச்சீலை'

மேனியிலையொருபிடி யிருபிடியூ-
மத்திலையு மேற்றுவைத்துந்
தானிதிநீர் கொள்களிம்பு பத்துகலஞ்
செம்புகொண்டுந் தணையிழைத்து
மானிருகச்செய்துகொண்டு சல்லாவல்
லதுபருமடியிற் றேய்த்து
வான்காயவைத்தெடுப் புண்புரைக
ளோடிடத்தில் வகையைக் கேளே (௱௬௨)

வகைபச்சைக் கோரையினுனிதனெடுத்துப்
புண்புரையின் வழிசோதித்து
மிகையளவிம்மாத்திர மென்றறிந்து
காரமடி மேற்கிழித்து
தகைச்சலாகைத் தலையிலோட்டியரைப்
புரைவழிக டன்னிலேற்றிப்
புகவிடுங்கோரையைத் தானெடுத்திடு
மூன்றுதினம் போடுந்தானே (௱௬௩)

போட்டிடவுநாள் வரையிற் புரைதூர்ந்து
வருங்காய்ந்து போகும்புண்ணுங்
கூட்டுடனேகுடியேகும் பத்தியமா
யிருந்திட்டுக் கூர்திருக்கை
கூட்டிடவுஞ் சுறுக்கருவாடு கொள்ளுங்
கைமுறையாங் குவலயத்தில்
நீட்டியசெங்கோன் முறைமை நெறிநாட்டுஞ்
சரபேந்திர னிகழ்ந்ததாமே (௱௬௪)

(இ-ள்)

| | |
|---|---|
| குப்பைமேனி இலை | ஒரு பிடி |
| ஊமத்தையிலை | ,, |

இவைகளை நசுக்கிச் சாறு பிழிந்து ஒரு களிம்பேறும் பாத்திரத்தில் (செப்புப் பாத்திரத்தில்) ஊற்றிவைக்கவும். 2 அல்லது 3 நாட்கள் சென்றபின் அக்களிம்பை மறுபடியும் வேறொரு செப்புப் பாத்திரத்திலிழைத்துக் கெட்டியாகச் செய்துகொள்ளவும். ஒரு சாண் அகலமும் ஒரு முழ நீளமும் உள்ள மெல்லிய வெண்மையான துணியில் அவ்விழுதைத் தடவிக் காயவைத்துக்கொள்ளவும்.

கோரைப் புல்லின் கொழுந்தை எடுத்து மெல்லியதாகக் கிழித்துக்கொண்டு, புரைகளுக்குள்ளே விட்டு அது எவ்வளவு தூரம் செல்லுமோ அவ்வளவு உட்செலுத்தவும். அதன் வழிக்குத் தகுந்தபடி மேற்கூறிய காரச்சீலையைக் கிழித்து ஒரு சலாகையினுல் புரைகளுக்குள்ளே நன்ருகச் செலுத்திக் கோரைப்புல்லை வெளியே எடுத்துவிடவும். இம்மாதிரி 3 தினங்கள் செய்யவும்.

குணமில்லையெனில், இன்னும் சில நாட்கள் செய்தால் புரைகள் தானுகவே தூர்ந்துவிடும். புண்களும் ஆறிவிடும்.

**பத்தியம் :—**

திருக்கைமீன், சுருக்கருவாடு இவைகளை வேண்டிய அளவு உபயோகிக்கவும்.

---

# 90. தீராத புண், புரைகளுக்கு 'எண்ணெய்'

சின்னமுத்திணெண்ணெயுரி யெருமுட்டைச்
சாம்பல்வடி சேலையிட்டுப்
பின்கலந்து கொதியிட்டுக் காய்ச்சிவைத்துச்
சேலையிலே பெய்துகொண்டு

சொன்னபுரை புண்களின் மேற்போடப்போந்
திரா தமெதாந்தப் புண்கள்
வின்னமுள புரைமாறு மிம்முறையைச்
சரபேந்திரன் விதித்ததாமே (௲௫)

(இ-ள்)

சிற்றாமணக்கெண்ணெய் ½ படியுடன்

வஸ்திரகாயஞ்செய்த எருமுட்டைச் சாம்பல் (துல்யமான விபூதி) ஒரு சிரங்கை கலந்து அடுப்பின்மேல் வைத்துக் கொதிக்கவைத்து இறக்கிக்கொள்ளவும்.

இத்தைலத்தில் துணியை நனைத்துப் புண்கள், புரைகள் முதலானவைகளுக்கும், ஆறாத விரணங்களுக்கும் போட, அவைகள் ஆறும்.

---

## 91. பறங்கிச் சிறங்குகளுக்கு மருந்து.

ஆயிலின்றேலெலுமிச்சங் காயளவா
மிதையரைத்தந் தண்ணீரிற்
றேய்வது கலந்திட்டு மொருசிரங்கை
யளவாகச் சுண்டித்தின்ன
மெய்யிந்தப்படியாகப் பன்னிருநாட்-
டின்றுகைப்பு மேற்புளிப்பு
நீயிகழ்ந்து தவிரன்னம் வெந்நீருங்
கொள்ளமுறை நேர்த்தியாமே (௲௬)

(இ-ள்)

ஆயில்யப்பட்டையை ஒரு எலுமிச்சங்காயளவெடுத்து, நசுக்கி அம்மியின்மேல் வைத்தரைத்துத் தண்ணீரில் குழப்

பிக் கொள்ளவும். பின்பு இதை ஒரு இரும்புக் கரண்டியில் விட்டு அடுப்பின்மேல் வைத்துக் கிண்டிக் காந்தாமலிறக்கவும். இம்மருந்தை அப்படியே உட்கொள்ளவும். இவ்வாறு 12 நாளைக்குச் சாப்பிடவும்.

**பத்தியம் :—**

கசப்புப் பதார்த்தங்கள், புளிப்புப் பதார்த்தங்கள் முதலானவைகளை நீக்கிவிட்டு வெந்நீர் சாதம் மாத்திரமே சாப்பிட்டு வரவும்.

(வியாதியுள்ள ஸ்திரீகளின் சேர்க்கையினாலுண்டான) பறங்கிப் புண்கள் தீரும்.

---

## 92. சிரப்புண், சிறங்குகளுக்கு 'எண்ணெய்'

அலரிவேர்ச்சிறிதாகச் சிவியுள்ளி
வசம்பிட்டுமதை நறுக்கித்
திலவெண்ணெய்தனிற் போட்டுப்பருதிமுன்
புடமிட்டுச் சிரத்திற்றேய்த்து
நலமூன்று நாளிருந்து மரப்பிட்டு
முழுகப்போம் நவில்பழுப்பை
பலசுட்டாமணக்கெண்ணெய் தனிற்குழைத்
தப்பரப்புப்பட முழுக்கே (௱௬௭)

ஆடுதின்னாப்பாளையது சமூலமு
நறுக்கியிட்டதிலும் வெள்ளைப்
பூடுவசம்பதுதட்டி நல்லெண்ணெயி-
லெரித்ததைப் பூசரப்பும்
போடுதலைமுழுகப் போங்கரிசாலை
சங்கங்குப்பிப் போதமேனி
ஓடுவெற்றிலையுமிவை சாறுகொண்டு
மரிசனமுமொக்கக் கூட்டே (௱௬௮)

கூட்டுவது மிளகின்றாணல் லெண்ணெயிற்
கலந்துமிதைக் கொண்டடுப்பின்
மாட்டியெரித்ததைவைத்து வருநாள்க-
ளன்றையன்று மாந்தலைக்கு
யாட்டிமுழுகிடத் தேய்த்து மிலுப்பரப்புக்
கட்டித்தானுகுமிட்டு
வாட்டிளவெந்நீரதனில் முழுகுவாய்
புண்சிறங்கு மாறிப்போமே (ஈசுக)

(இ-ள்)

அரளி (சிகப்பு) வேரைச் சிறிது சிறிதாகச்சீவி (1 வராகனெடை) எடுத்து, அதனுடன் வசம்பு, வெள்ளைப்பூண்டு இவ்விரண்டும் சரியெடை கூட்டி, நன்முக அரைத்து நல்லெண்ணெயுடன் குழப்பிச் சூரியபுடம் வைக்கவும்.

இத்தைலத்தைத் தலையில் தேய்த்து நன்முக ஊறி, ஸ்நானம் செய்யும்போது அரப்பை உபயோகிக்கவும். இவ்வாறு மூன்று நாளைக்குச் செய்யவும்.

(2) அரளிப் பழுப்பை அடுப்பில் சுட்டுக் கரியாக்கி ஆமணக்கெண்ணெயுடன் குழைத்து வைத்துக்கொள்ளவும். இதைப் புண்களின்மேல் பூசி, நன்முக ஊறியபின் அரப்பை உபயோகித்துக் கழுவிவிடவும்.

(3) ஆடுதீண்டாப்பாளைச்சமூலம்
வெள்ளைப்பூண்டு
வசம்பு

இவைகளைச் சரியெடை (1 வராகனெடை) எடுத்து நறுக்கிக் கல்லுரலிலிட்டுப் பஞ்சுபோலிடித்து நல்லெண்ணெய் (ஒரு சேரில்) குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்து, மெழுகு பதத்திலிறக்கவும். இதையும் புண், புரைகளில் தடவி ஊறிய

பின், அரப்பினுல் கழுவிவிடவும். தலையில் உள்ள புண்களுக்குத் தலையில் தேய்த்து முழுகவும்.

(4) கரிசாலங்கண்ணி
சங்கங்குப்பி
குப்பைமேனி
வெற்றிலை

இவைகளின் சாறு வகைக்கு (1 சேர்)
நல்லெண்ணெய் (1 சேர்)

இவைகளை யொன்றுகலந்து அதனுடன் மிளகுத்தூள், மஞ்சள் இவ்விரண்டையும் வகைக்கு 1 வராகனெடை வீத மெடுத்து அரைத்துக் குழப்பவும். பின்பு அதை அடுப்பின் மேலேற்றி எரித்து மெழுகு பதத்தில் வடிக்கவும்.

இத்தைலத்தைத் தினந்தோறும் தலையில் தேய்த்துக் கொண்டு அரப்பிட்டு வெந்நீரில் முழுகவும். புண், சிரங்கு முதலானவைகள் தீரும்.

---

## 93. புண்களுக்கு மருந்து.

திராய்வேரும் பருத்தியிலை பழம்புளி
யரைத்துநீர் சேர்த்தரைத்துப்
பராய்குடித்திடத்தீரும் பருத்தியிலை
வரட்சுண்டி பார் திராயும்
வராய்மூன்றுமரைத்துப் புண்டனிற்பூசு
மிதுதீருமதூமத்தின் காய்
தராயுமிக்காந்தலிலே சுட்டரைத்து
நெய்விழுதிற் றன்குழைத்தே (௭௭௰)

படுவன்புண்வாயில் வைக்கத்திருமெருக்
கத்திலுதிரும் பழுப்பரித்து
கடுகவறுத்துப்பிட்டு மோரூற்றிப்
பின்குடிக்கக் காய்ந்துபோம்புண்
இடுசாரைப் பாம்புலர்த்திக் கண்டமுடன்
கழல்வேருமிதன் கொழுந்தும்
தொடுமுள்ளி செம்பிட்டு மெண்ணெய்பண்ணி
நக்கிடும்புண் டுலைந்துபோமே (௱௭௧)

முத்தியதேங்கா யிளநீரூத்தியிட்டே
யெருக்கம்பால் மூட்டுழக்குங்
குத்துபுழுக்கரிசியோர் பிடியிட்டெண்
ணெளருவின் குப்பைமேட்டில்
உத்துபுதைத்ததை வைத்து மெடுத்தரைத்
திடனுருட்டி யுண்ணத்தீரும்
வித்தகஞ்சேர் சரபோசிமகராச
னிம்முறையை விதித்ததாமே (௱௭௨)

(இ-ள்)

திராய்வேர் பருத்தியிலை
பழம்புளி

இம்மூன்றையும் வகைக்குச் (சுண்டைக் காயளவெடுத்து) அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்ருக அரைத்துக் குடிக்கவும். புண்கள் ஆறிவிடும்.

(2) பருத்தியிலை வரட்சுண்டியிலை
திராய் இலை

இம்மூன்றையுஞ் சமமெடுத்து அம்மியின்மேல் வைத்து அரைத்து விழுதாக்கிச் சிறங்கு, புண்கள் முதலியவைகளின் மேல் போடவும்.

(3) ஊமத்தங்காயை உமிக்காந்தலில் சுட்டுக் கரியாக்கி, அம்மியின்மேல் வைத்து நுணுக்கி, நெய்யுடன் குழைத்துப் படுவன் என்ற புண்வகையின் வாயிலிடவும். அவை தீரும்.

(4) உதிர்ந்த எருக்கம்பழுப்பை ஒரு சட்டியிலிட்டு, அடுப்பின்மேல் வைத்து வறுத்துக் கரியாக்கி, உப்புச்சேர்த்துக் கீழிறக்கி, மோர்கூட்டிக் குடிக்கவும், புண்கள் காய்ந்து போம்.

(5) உலர்ந்த சாரைப்பாம்பின் மாம்ஸத்துண்டுகள்
கழற்சிக்கொடிவேர்
கழற்சிக் கொழுந்து
வெள்ளைப்பூண்டு
வசம்பு

இவைகளை (வகைக்கு 1 வராகனெடை) வீதமெடுத்து, நன்ருக அரைத்து நல்லெண்ணெய் 1 சேருடனே குழப்பி யடுப்பின்மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும். இந்த எண்ணெயில் ஒரு காலணு அளவெடுத்துத் தினம் ஒருவேளை சாப்பிட்டு வரவும். புண்கள் தீரும்.

(6) ஒரு முற்றிய தேங்காயைக்கொண்டு வந்து அதன் கண்ணைப்பொத்து இளநீரைக் கீழே ஊற்றி, அதனுள்ளே எருக்கம்பால் ஒரு உழக்கு விடவும். பின்பு, அதனுடன் புழுங்கலரிசி ஒரு பிடியும்போட்டு, தேங்காயின் துவாரத்தை ஒரு ஆப்பினுல் அடைத்து, எரு (எரு) சேர்ந்திருக்கும் குப்பை மேட்டிற்குள் 8 நாளைக்குப் புதைத்துவிடவும்.

9-வது நாளன்று அதை எடுத்து உடைத்துச் சரக்குகளைத் தேங்காயுடன் சேர்த்தரைத்துச் சுண்டைக்காயளவுள்ள மாத்திரைகளாக உருட்டி வைத்துக்கொள்ளவும்.

இதில் தினம் ஒரு உருண்டை வீதம் சாப்பிடப் புண்கள் தீரும்.

குறிப்பு :—

கடைசி மருந்தில் எருக்கம்பால் சேர்ந்திருப்பதால் வயிறு கழியும். ஆகவே அதை சாக்கிரதையாக உபயோகிக்கவும்.

# 94. புண்களுக்கெண்ணெய்.

ஆத்தியின்காய் சீவினதோல் வேம்பாட
வேர்முழல்வே ராகுமுள்ளி
போத்திய கோடகசாலை கரிசாலை
முத்தக்காசு புதுவசம்புஞ்
சேர்த்திடுவாய் நல்லெண்ணெயி லடுப்பேற்றி
யெரித்திட்டுத் தெளிபதத்தில்
ஆத்திவடித்திதைப் புண்மேற்றடவிடும்
விரணமெல்லா மாறிப்போமே (௱௭௩)

(இ-ள்)

ஆத்திக்காய் சீவினதோல்
வேம்பாரம்பட்டை
முழல்வேர் (கழற்சிக்கொடி வேர்)
வெள்ளைப்பூண்டு
கோடகசாலை
கரிசாரங்கண்ணி
கோரைக்கிழங்கு
வசம்பு

இவைகளை வகைக்கு 1 வராகனெடை விதமெடுத்து, அம்மியின்மேல் வைத்து நன்றாக அரைத்து, நல்லெண்ணெய் ($1\frac{1}{2}$ சேரில்) குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

இதைப் புண்களில் இடவும். அவை ஆறிப்போம்.

## 95. கிரந்திக்கு மருந்து.

மாட்டிறைச்சி நெய்யுடனே களிம்பு பற்
றிய செம்பில் வங்காள பச்சை
போட்டு மொரு காசெடையும் பதினைந்து
நாழிகைதான் போதரைத்து
கூட்டெலுமிச்சங்காயி னளவிட்டு
நெய்யதுதான் கொடும்புண் வாயில்
மூட்டுபத்திய மிருக்கக் குணமென்றுஞ்
சரபேந்திரன் மொழிந்ததாமே (௭௪௪)

(இ-ள்)

ஒரு களிம்பேறிய செப்புப் பாத்திரத்தில் மாட்டிறைச்சியைப்போட்டுச் சிறிது நெய் சேர்த்து, வங்காளப்பச்சை ஒரு வராகனெடையும் போடவும். பின்பு இதைக் கல்வத்திலிட்டு 15 நாழிகை (6மணி நேரம்) நன்றாக அரைத்து, கெட்டியான நெய் ஒரு எலுமிச்சங்காயளவு கூட்டி மத்தித்து வைத்துக் கொள்ளவும்.

இக்களிம்பைக் கிரந்தியின் வாயில் போடவும்.

அன்றையதினம் (பழையமுது, நல்லெண்ணெய், வாயு பதார்த்தங்கள்) முதலியவைகள் கூட்டாமல் இச்சாபத்திய மாக இருக்கவும்.

---

## 96. சோபமான கிரந்திக்கு மருந்து

வசுவாசி சடைச்சிவேர் சிறுவழு-
துணைவேரு மலியிம்பூரா
இசைவேரு மொருவகைக் கொருநாழி
நெல்லினெடை சங்கும்பாலை

பசுந்தூதுவளை வேரு மோரொன்றுக்
கொரு பலமாய் பதக்குத்தண்ணீர்
வசமிட்டுமிரு நாழியாய்க் காய்ச்சி
யிதில் தூதுவளை செம்முள்ளே (௱௭௫)

பாலையிலை வசுவாசி யிலைச்சாறு
வகை நாழி படவிடுத்தே
காலிதரு பாலு நெய்யும் வகைக்கோரு
நாழி விட்டுக் கதிரோன் வெய்யிற்
பாலுமொரு தினம் வைத்து நாலிலொன்றாய்க்
காய்ச்சு கற்கம் பாரதிங்கம்
ஏல நற்சீரக மாஞ்சிற் செங்கழுநீர்
சிறுதேக்கு மிடாத்தியாமே (௱௭௬)

கோட்டங்கற் கடசிங்கி கடுரோணி
திப்பிலியுங்கூற் வகைக்கு
நாட்டவொரு கழஞ்சாகப் பொடிசெய்து
பசுவின் னெய் நாழிக்குள்
மூட்டடுப் பிலெரி பதத்தில் வடித்துக்கொள்
கிரந்தியும் புண்முதல் மேகத்தால்
வாட்டு விரணங்கள் போகுஞ் சரபேந்திர
னிம் முறையும் வகுத்ததாமே (௱௭௭)

(இ-ள்)

ஆடாதோடை சிறுவழுதுணைவேர்
சடைச்சிவேர் இம்புறுவேர்

இவைகள் வகைக்கு நாழி நெல்லெடை (பேலம்)

சங்கம்வேர் தூதுவளைவேர்
பாலைவேர்

இவைகள் வகைக்கு ஒருபலம்

டி சரக்குகளைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டிக் கல்லுரலி லிட்டு ஒன்றிரண்டாக இடித்து, ஒருபாத்திரத்திலிட்டு 2 மரக் கால் சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி 2 படியாகும் வரை வற்றக்காய்ச்சவும். கஷாயத்தை வடிகட்டிக்கொண்டு அதனுடன்,

| | |
|---|---|
| தூதுவளைச்சாறு | 1 படி |
| செம்முள்ளிச்சாறு | 1 படி |
| பாலையிலைச்சாறு | 1 படி |
| *ஆடாதோடைச்சாறு | 1 படி |
| பசுவின் பால் | 1 படி |
| பசுவின் நெய் | 1 படி |

இவைகளை யொன்றுசேர்த்து, ஒரு நாள் முழுதும் வெய்யி லில் வைக்கவும். மறுநாள் இதை யடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைத்து, நாலிலொன்ருகச் சுண்டியபின்,

| | |
|---|---|
| அதிமதுரம் | செங்கழுநீர்க்கிழங்கு |
| ஏலக்காய் | கண்டுபாரங்கி |
| சீரகம் | ஆத்திப்பூ |
| ஜடாமாஞ்சில் | கோஷ்டம் |
| கற்கடசிங்கி | கடுகரோகிணி |
| திப்பிலி | |

இவைகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்து, இடித்து வஸ்திரகாயஞ்செய்து, அடுப்பின் மேலிருக்கும் சாறு கலந்த நெய்யுடனே குழப்பி, எரித்துப் பதத்தில் நெய்யை வடிக்கவும். இந்நெய்யில் ஒரு தேக்கரண்டி யளவெடுத்து (ப் பாலுடனே) சாப்பிட்டுவரக்

கிரந்தி, புண்கள், மேகவிரணங்கள் முதலியவை தீரும்.

---

* ஆடாதோடைச்சாறு—குறுணி என்று 72 செ. சுவடியில் காணப்படு கிறது.

## 97. கிரந்தி, இரதம், பாடாணம் முதலியவைகளுக்கு முறிவு மருந்து.

சார்பரங்கிப் பட்டைபல மிரண்டரை
திப்பிலியுந்தானும் பஞ்சம்
ஆர்திரவிய மிரண்டுமொரு பலமாய்க்
கூட்டியிடித்ததைச் சிமிழ்க்குள்
நேரடைத்துக்கொண்டு பெருங்கிரந்திக்குத்
திருத்துழாய் நீரோர்துட்டு
சேருட்கொள்குத முறிபாலாலும்
பாடாணந்தின் வெந்நீரே (ராஎஅ)

(இ-ள்)

| | |
|---|---|
| சுத்திசெய்த பரங்கிப்பட்டை | $2\frac{1}{2}$ பலம் |
| திப்பிலி | 1 பலம் |
| பஞ்சத்திரவியம் (அதாவது ஏலம், கிராம்பு, சீரகம், கோஷ்டம், சண்பகமொட்டு) | |
| இவைகள் வகைக்கு | 2 வராகனெடை |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து, சிமிழில் பத்திரப்படுத்தவும்.

**பெருங்கிரந்திக்கு :—**

துளசிச் சாற்றில் 1 வராகனெடைச் சூரணமுட்கொள்ளவும்.

**பாதரஸ முறிவுக்கெனில் :—**

பசுவின் பாலுடன் உட்கொள்ளவும்,

**பாடாணத்திற்கு முறிவானால் :—**

வெந்நீருடன் சாப்பிடவும். குணமாகும். கைகண்டது.

# 98. எல்லாக் கிரந்திகளுக்கும் பிட்டு.

கொடிவேலி மூலமதை வெந்நீரா-
　　லரைத்துமொரு கொட்டைப்பாக்கின்
வடிவளவெந்நீருள்ளுங் கரைகுறுவை
　　யரிமாவில் வார்த்துச் சேர்த்துச்
குடுவையின்வாய் வேடுகட்டி யதில்வைத்துப்
　　பிட்டாக்கிச் சுட்டெள்ளெண்ணெய்
நெடியபனங்கட்டியுடனி ரவுண்டு
　　வதிகாலநீர்ச் சோறுண்ணே (௱௭௬)

(இ-ள்)

சித்திரமூலவேர்ப் பட்டையையொரு கொட்டைப்பாக்களவெடுத்து அம்மியின்மேல்வைத்து, வெந்நீர்விட்டுக் கை படாமல் அரைக்கவும். இதைக் குறுவையரிசிமாவு (¼ படியுடன்) கூட்டி வெந்நீர்விட்டுப் பிசைந்து கொள்ளவும். ஒரு வாய் அகன்ற குடுவையில் தண்ணீர்விட்டு அதற்கு வேடுகட்டி அதன்மேல் முன் பிசைந்த மாவை வைத்து, அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைக்கவும். இன்னொரு பாத்திரத்தினால் ஆவி வெளியே போகாமல் மூடிவைத்துப், பிட்டாகச் சுடவும்.

பின்பு, குடுவையைக் கீழேயிறக்கி, மாவைத் தனியே ஆறவைத்து நல்லெண்ணெயும் பனைவெல்லமும் வேண்டிய அளவு கூட்டியிடித்து, நோயாளியை, இரவு நேரத்தில் சாப்பிடச் சொல்லவும், மறுநாள் அதிகாலையில் பழயமுது சாப்பிடவும். கிரந்திகள் தீரும்.

குறிப்பு :—

72. நெ சுவடியில் '8 நாட்களுள் கிரந்திப் புண்கள் தீரும்' என்று காணப்படுகிறது.

# 99. படுவனுக்கு மருந்து.

கொடிவேலி விழிசெங்கதாரிபொன்னாங்-
காணியிலை கூறுமூலங்
கடிநொச்சிற் கொழுந்துவெள் வெங்காய
முழிமஞ்சட் கத்தூரிமஞ்சட்
கொடிமிளகு செண்பகப்பூ வசம்பு
மிவைகூட்டிக் கோவினெய்தான்
யிடுவிருபங்கு முத்தினெண்ணெயொரு
பங்கிட்டு மெரித்திடாயே (ராஅ)

எரித்துள்ளுங்கொள் மேலூமத்தினிலை
யிற்றடவி யிட்டுங் கட்ட
வரிசிற்று மணக்கதன் பசுங்காயுஞ்
சங்குமிட்டு வளமரைத்தே
புரிவெண்ணெயிற் குழைத்துப் பருப்படு-
வன்முகத்திற் பூசிவைக்கப்
பெரியகட்டிசிலந்தி முதற்காய்ந்துபோ
மிம்முறையைப் பேணிச்செய்யே (ராஅக)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலி வேர் | விழிவேர் |
| செங்கதாரி வேர் | பொன்னாங்காணி வேர் |
| நொச்சிக்கொழுந்து | வெள்ளை வெங்காயம் |
| மஞ்சள் (வரளி) | கஸ்தூரி மஞ்சள் |
| மிளகு | செண்பகப்பூ |
| வசம்பு | |

இவைகள் வகைக்கு (½ பலமெடுத்து,) அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டு நேகவரைத்து,

| | |
|---|---|
| பசுவின் நெய் | 11 பலமும் |
| ஆமணக்கெண்ணெய் | 5½ பலமும் |

விட்டு, ஒன்றாகக் குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த நெய்யில் தினம் 1 தேக்கரண்டியளவெடுத்துச் சாப்பிடவும்.

இந்த நெய்யை ஊமத்தையிலையில் தடவிப் படுவனில் கட்டவும். குணமாகும்.

(2) சிற்றாமணக்கங்காய்
சுட்டசங்கு

இவ்விரண்டையுஞ் சமனெடை யெடுத்து அம்மியின்மேல் வைத்தரைத்து, பசுவின் வெண்ணெயுடன் குழைத்துப்

பரு, படுவன், பெரியகட்டி, சிலந்தி முதலானவைகளின் முகத்தில் பூசவும், அவை உடைந்து ஆறிவிடும்.

---

## 100. உண்ணாக்குக் கரைய மருந்து.

வெள்ளையுள்ளி வல்லகியின் றயிலமொன்றுங்
காற்பண வெடையிரண்டும்
உள்ளதொன்றாய்க் கலந்திட்டு விரற்கொண்டு
மூன்றுதின முண்ணாக்கிட்டால்
விள்ளாகரைத்துங் குணமாமுவரிமண்
ணெட்டடையும் வெண்சுண்ணாம்பும்
முள்ளாத்தா மணிரசத்தா லரைத்துண்ணாக்
கினில்வைக்க முளைத்திடாதே (௱௮௨)

(இ-ள்)

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டுத் தைலம் | ¼ பணவெடை |
| சேங்கொட்டைத் தைலம் | ¼ ,, |

இவ்விரண்டையுமொன்றாகக் கலந்து, விரலில் தோய்த்து, மூன்று நாளைக்கு, தினம் இருவேளை உள்நாக்கில் தடவவும். அது கரைந்துபோம்.

(2) உவர்மண்
வெள்ளைச்சுண்ணும்பு
ஓட்டடை

இம்மூன்றையுஞ் சமனெடை எடுத்துக் கல்வத்திலிட்டு, உத்தாமணிச்சாறு விட்டு நன்றாக அரைத்து, பஞ்சில் தோய்த்து உள்நாக்கில் வைக்கவும். அவை தீரும்.

குறிப்பு :—

(1) இரண்டாவதாகக் காணப்படும் முறை ஏற்கனவே சரபேந்திரர் சிரோ ரோக வைத்ய முறையில் கூறப்பட்டுள்ளது. அச்செய்யுள் கீழ்வருமாறு :—

உவருமண் சுண்ணும்பு ஓட்டடையும்
உற்பனவேலிப் பருத்திச் சாற்றைவிட்டு
கவனமாயரைத்து வுண்ணாக்குதனில்வைக்க
கனத்தவுண்ணாக்கது வளராதொருக்காலுந்தான்
அவனிதனிக் குபகாரமாகத்தானே
அருந்தவத்தோர் சொன்னமுறையவைகளெல்லாந்
தவமதனாற் சிவகிருபை பெறுகெம்பீரச்
சரபேந்திரன் நிச்சயித்த முறையிதாமே.

(சர. வை. மு., சிரோ. சிகி. பக்கம் 140, செய்யுள் 221.)

(2) சேங்கொட்டைகளைச் சுத்திசெய்து ஒரு பானையிலிட்டுக் குழித்தைலமாக இறக்கிக்கொள்ளவும்.

## 101. எழுச்சி, வீக்கம், புண்களுக்கு மருந்து.

புண்ணெழுச்சி வீக்கமுற்றூற் கரந்தையை
யாமணக்கிற் பிறந்தமுத்தின்
எண்ணெய்குத்தி யதைவாட்டிக் கட்டிடவும்
வாடிவிடுமில்லாவிட்டால்
மண்ணின் மணித்தக்காளி யினிலையரைத்
ததை மூன்றுவாரம்பூசக்
கண்ணுடைந்து வீக்கமெல்லாங்காய்ந்துபோ-
மிம்முறை கைகண்டதாமே (௱அந)

(இ-ள்)

(1) சிவகரந்தையிலையில் ஆமணக்கெண்ணெய் தடவி அனலில் காட்டி எழுச்சியின் மேலேவைத்துக்கட்டவும். வீக்கம் வாடும்.

(2) மணித்தக்காளியிலையைத் தண்ணீர் விட்டரைத்து எழுச்சி வீக்கத்திற்குமேல் 21 நாட்கள் பூசவும். அது உடைவதுடன் புண்களும் ஆறிவிடும்.

---

## 102. குதிப்புற்றுக்கு மருந்து.

புளியப்பட்டை பதக்கிட்டுத் தூணிநந்நீர்
வார்த்ததனைப் புழுங்கக் காய்ச்சி
களிகுதிப்புற் றதனிலுஞ் சுடவிட்டுப்
புளிச்சிராய்க் கனலுண்டாக்கி
யளியொரு காசினெடை துத்தமதைப்
பொடிசெய்து மதனிலிட்டுத்
தெளிபுகையதிற் காட்டத் தூணிதண்ணீர்
நாலுதினஞ் செய்புகைத்தே (௱அச)

(இ-ள்)

புளியம்பட்டைத்தூள் இரண்டு மரக்காலளவெடுத்து, 4 மரக்கால் ஜலம்விட்டு அடுப்பின்மேலேற்றி யொருபடியாகக் கஷாயமெடுத்து, குதிகாலிலுள்ள புற்றில் விடவும். பின்பு, புளியஞ்சிராய் தணலில் துத்தம் ஒரு காசளவு பொடிசெய்து போட்டு, அதன் புகையில் குதிகாலைக் காட்டவும். இவ்வாறு 4 நாளைக்கு 4 மரக்கால் கஷாயம் விடவும். புற்று குணமாகும்.

---

## 103. காதிற்குச் சமீபமாக உண்டான எழுச்சிக்கு மருந்து.

மேதிவெண்ணெய் மண்சுவரிலெறிந்திரு
  நாழிகைதாமித் தெடுத்தே
யோதுநிரை யெருக்கம்பாலூட்டி வெண்ணெய்
  சிக்கெனப் புண்ணுறுமெழுச்சி
மீதப்பத்தகடுசெய்தெருக்கிலை
  யேழடுக்கி மேலுங்கட்ட
சூதுதிறம் படுமூன்று முறைகட்டு
  மவிழாமற் சுகமதாமே (௱அ௫)

(இ-ள்)

எருமை வெண்ணெயை ஒரு எலுமிச்சங்காயளவெடுத்து சுண்ணும்படிக்காத மண்சுவரில் எறியவும், 2 நாழிகை (சுமார் ¾ மணி) சென்ற பின்பு அதை எடுத்து அதில் எருக்கம்பாலைக் கறந்து நன்றாக மத்திக்கவும். இதை எழுச்சிப்புண் இருக்குமளவும் ஒட்டப்பம்போல தகடாகத் தட்டி அதன்மேல் ஏழு எருக்கிலைகளை வைத்துத் துணியினால் கட்டிவைக்கவும்

மூன்று நாட்கள்வரைக் கட்டை அவிழ்க்கக்கூடாது. இவ்வாறு மூன்றுமுறை கட்ட எப்படிப்பட்ட எழுச்சிகளும் அமுங்கும்.

குறிப்பு :—

மருந்தை அப்பியவுடன், எழுச்சிக்குள்ளிருக்கும் இரத்தமெல்லாம் பட்டு நாறு தேள் கொட்டினைப்போலே கடுக்கும் என்று 72 நெ. சுவடியில் காணப்படுகிறது.

---

## 104. பித்தவெடி, வாய்ச்சூலைகளுக்கு மருந்து.

குங்கிலியமாம்பிசினு மெள்ளினெண்ணெய்
தனிலிட்டுக் கொண்டெரித்துப்
பொங்குபித்த வெடிப்புள்ளும் பூசிடப்போம்
வாய்ச்சூலை போக்கவெள்வேல்
நங்கருவேலெருக்க வேர்ப்பட்டையுடன்
றுளாய்கூட்டி நறுங்கடாயந்
தங்கிடா நாலாறுதின மடிக்கடி
கொப்பளிக்கச் சாந்தமாமே (௱௨௫)

(இ-ள்)

வெள்ளைக் குங்கிலியம்
மாம்பிசின்

இவ்விரண்டையும் சமனெடுத்து நல்லெண்ணெயுடன் கலந்து, அடுப்பின்மேல் வைத்துச் சிவந்த பதத்திலிறக்கவும். இதைப் பித்தவெடிப்புகளுக்குப் பூசவும். அவைகள் தீரும்.

(2) வாயில் புண்கள், வலி, முதலியவை இருந்தால்

வெள்வேலம்பட்டை
கருவேலம்பட்டை
எருக்கவேர்ப்பட்டை
துளசி

இவைகளைச் சமனெடையெடுத்து நசுக்கி கஷாயம் செய்து, தினம் 3 தடவை கொப்பளிக்கவும். இவ்வாறு 4 அல்லது 6 நாட்கள் செய்யவும். வாய்ச்சூலை முதலானவை தீரும்.

---

## 105. தொண்டைப்புண், வீக்கத்திற்கு மருந்து.

வெட்பாலையரிசி மஞ்சள்மரமஞ்ச-
ளிந்திளிப்பு மிளகிவ்வைந்தும்
ஒப்பாகவுங் கூட்டி வெந்நீரும்கழஞ்சு
மருவாளியுட னரைத்து
வெப்பாநீரதிலிரவிற் கொள்ளவும்போம்
கடுக்காயும் வேப்பம்வித்துஞ்
செப்பாத நற்கெந்தி தேனிலரைத்
துண்வீக்கந் தீருந்தானே (௱அ௭)

(இ-ள்)

(1) வெப்பாலையரிசி
மஞ்சள்
மரமஞ்சள்தோல்
இந்துப்பு
மிளகு

இவைகளைச் சமனெடை ($1\frac{1}{4}$ வராகனெடை) எடுத்துத் தூள் செய்து, அதனுடன் பச்சைக்கல்பூரம் $1\frac{1}{4}$ வராகனெடையும்

கூடப்போட்டுக் கல்வத்திலிட்டு, வெந்நீர் விட்டு நன்றாக அரைத்து இரவில் உட்கொள்ளவும்.

தொண்டைப் புண்கள் தீரும்.

(2) கடுக்காய்த் தோல்
வேப்பங்கொட்டை
சுத்திசெய்த நெல்லிக்காய் கெந்தகம்

இவைகளைச் சமனெடுத்துத் தேன்விட்டரைத்துட்கொள்ள தொண்டைக்குள் ளேற்படும் வீக்கம், புண், முதலானவைகள் தீரும்,

---

## 106. தொண்டைத் தூறுக்கு மருந்து.

புங்கதின்வேர்ப் பட்டை மஞ்சட்சரிதூட்செய்
தேனிலுணப் புண்களாறும்
புங்கவிதை யிருகாசினெடை வெந்நீர்
தன்னிலரை புகட்டத்தீரு
தங்குதொண்டைத் தூறினுக்கு முருங்கைத்தோற்
சிவன்வேம்புந் தனிவேம்பின்றோற்
சங்கதின்றோ லாதண்டைக் கடாயத்துள்
வெங்காரந் தாக்கிக்கொள்ளே (௱அ௮)

(இ-ள்)

(1) புங்கம்வேர்ப்பட்டை
மஞ்சள்

இவ்விரண்டையும் சரி எடை யெடுத்துச் சூரணித்துத் தேனிலுட்கொள்ளவும்.

தொண்டைப் புண்கள் ஆறும்.

(2) புங்கம் வித்து 2 வராகனெடை யெடுத்து வெந்நீர் விட்டரைத்து, உட்கொள்ளவும்.

(3) முருங்கைப்பட்டை
சிவனார்வேம்பு வேர்ப்பட்டை
வேப்பம்பட்டை
சங்கம்வேர்ப்பட்டை
ஆதண்டை

இவைகளைச் சரி எடையெடுத்து, ஒன்றிரண்டாக இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு ஜலம்விட்டு நாலிலொன்றாகக் கஷாயம் செய்து, அதனுடன் வெங்காரத்தைப் பொரித்துப் போட்டு, உள்ளுக்குச் சாப்பிடவும்.

குறிப்பு :—

72 ெ. சுவடியிலிருந்து பாக்கி பாகத்தைக் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

"இவ்வாறு 8 நாளைக்கு உட்கொள்ளவும். தொண்டைத் தூறு தீரும். கைப்பு, புளிப்புப் பதார்த்தங்களைத் தள்ளவும்."

---

## 107. துன்மாங்கிடங் கரைய நெய்.

நெருஞ்சிவேர் சிறுபூளை வேருமொன்றுக்
கைநான்காம் நிறைபலந்தான்
சரியிடிமுக்குறுணி நீருமிட்டு
நாழியதாய்த் தழலிற்காய்ச்சி
குருவடித்திதற்குமேல் வாய்விளங்கங்
கடுரோணி கூட்டிந்துப்பும்
புரிசுக்குச் சித்தரத்தை பேரரத்தை
சிறுமூலம் புகலொன்றுக்கே (ளசக)

பலங்காலா முன்குடிநீ ரிட்டரைத்து
 மிருளிநீர் பாரோர்நாழி
எலுமிச்சம்பழச்சாறு முரியானெய்
 படியொன்று மிவைகடாயங்
கலமெழுகாம் பதத்தில் வடித்ததி
 லிருநிட்கங்காண் வெங்காரம்
நலம்பொரித்துட்கலந்து துட்டிடைகொள்
 மாங்கிடங்கள் நசித்துப்போமே (ராகம்)

(இ ள்)

| | |
|---|---|
| நெருஞ்சிவேர் | 20 பலம் |
| சிறுபூளை வேர் | 20 பலம் |

இவைகளைத் துண்டுகளாக்கிக் காயவைத்துக் கல்லுரலிலிட் டிடித்து 3 மரக்கால் ஜலம்விட்டு, அடுப்பின் மேலேற்றி, 1 படியாகும்வரை வற்றக் காய்ச்சி இதை வடிக்கட்டிக்கொள்ள வும்.

| | |
|---|---|
| வாயுவிடங்கம் | கடுகரோகிணி |
| இந்துப்பு | சுக்கு |
| சிற்றரத்தை | பேரரத்தை |
| திப்பிலி | |

இவைகளை வகைக்கு ¼ பல வீதமெடுத்து, இடித்துச் சூர ணஞ் செய்து, மேற்கூறிய கஷாயம் விட்டரைத்து, அத னுடன்

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டுச்சாறு | 1 படி |
| எலுமிச்சம்பழச்சாறு | ½ படி |
| பசுவின் நெய் | 1 படி |

முதலியவைகளைச் சேர்த்து, கஷாயத்தையும் விட்டு, அடுப் பின் மேலேற்றி எரித்து மெழுகுபதத்திலிறக்கவும். இறக்கி

வடிக்கட்டியபின், பொரித்த வெங்காரம் 2 வராகனெடை கூட்டிக்கொள்ளவும். இந்நெய்யில் ஓர் துட்டெடையெடுத்துத் தினம் 2 வேளை உட்கொள்ள

அதிமாம்ஸ வளர்ச்சி தீரும்.

## 108. துர்மாங்கிடங் கரைய மருந்து.

நாணல்விதை பலகரை சுட்டபொடி
பொரிக்காரம் நலம்பொரித்துக்
காணுசமன் பொடிசெய்து பேரகத்தி
யிலையவி கடாயமாதற்
பூணெலுமிச்சம்பழ நீராதலரைச்
சிரங்கையிற் பொடியைக்கூட்டி
பூணுதுன்மாங்கிடக் கட்டுஞ்சலக்கட்டுங்
கல்லடைப்பு முடைந்துபோமே (ரசுக)

(இ-ள்)

நாணல் விதை
சுட்ட சங்கின் தூள்
சுட்ட வெங்காரம்

இவைகளைச் சமனெடை யெடுத்து, இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இதில் அரைச்சிரங்கைத் தூளெடுத்து,

பேரகத்தி இலையை வேகவைத்த தண்ணீரிலோ அல்லது எலுமிச்சம்பழச்சாற்றிலோ, குழப்பிச் சாப்பிடவும்.

மாம்ஸ அடைப்பினுலேற்பட்ட சலக்கட்டும், கல்லடைப்பும் தீரும்.

## 109. துர்மாங்கிடங் கரைய மருந்து.

ஒருத்தலைப்பூண்டது மூன்றொருபிடியு
மசமோத முயர்ந்தகாயம்
பருத்திவிற்றளவிட்டு மிதையெல்லாம்
வறுத்திட்டும் பண்ணுந்தூளாய்த்
திருத்தாவின் வெண்ணெய்தனிற் கலந்துண்ணத்
தசையடைப்புத் தெரித்துப்போகும்
வருத்துகலிக் கோர்குடை யானிழற்றுசர-
போசி மன்னன் வகுத்ததாமே (௱௯௨)

(இ-ள்)

| | |
|---|---|
| ஒருத்தலைப்பூண்டு | 3 (எண்ணிக்கையில்) |
| ஓமம் | ஒரு பிடி |
| உயர்ந்தரக பெருங்காயம் | ஒரு பருத்திக்கொட்டை யளவு |

இவைகளைச் சட்டியிலிட்டு, அடுப்பின்மேலேற்றிப் பொன் வறுவலாக வறுத்துத் தூளாக்கிப் பசுவின் வெண்ணெயுடன் கலந்து உட்கொள்ளவும்.

தசையடைப்பு நீங்கும்.

---

## 110 துன்மாங்கிடத்திற்கும் கருங்கோழிச்சூரணம்.

பிரண்டையைச் சமூலமாய்க் காயவைத்துத்
தூளிடித்துப் பின்வடிக்கொள்
அரைப்படியாம் பரங்கிப் பட்டைப் பல
மொன்றோம மரைப்பலங்கான்

பெருங்காயஞ் சாதியின்காய் பத்திரியும்
வகைக்கைந்து பெறவேநிட்கங்
கரில் சுக்கு வெள்ளையுள்ளி சிறு மூலம்
வகைக்கரை காண் பலந்தான் (௱௬௩)

மருந்தெட்டுஞ்சமன் கூட்டி வேம்பினிலை
நொச்சியிலை மலாவகந்தான்
பெருந்தும்பைக் கொழுஞ்சியிலை பொடுதலையிவ்
வகைச்சாறும் பிசைந்து வாங்கி
ஒரு குறுணி பாலையிட்டுச்சரக்கெல்லாஞ்
சேர்த்தரைத்து முரைக்கக் கேளுக்
கருங்கோழிக்குடல் போக்கி வயிற்றுள்ளே
யிடுதைத்துக்காண் சாற்றுள்ளே (௱௬௪)

போட்டடுப்பிலேற்றி யெரிபுகச்சாறு
வற்றியபின் புகல்பிரண்டை
யாட்டுபொடி தூவெள்ளெண்ணெயதுவிட்டுப்
பனங்கட்டியானதிட்டு
மூட்டுகிண்டி யெலும்பொதுக்கிப் பதனமா
யிதைவைத்து மொழிகழற்காய்
நாட்டளவுண் கோழிமுருங்கவரை தூ-
தளைப்பருப்பு நலமாய்க்கூட்டே (௱௬௫)

(இ-ள்)

பிரண்டையைக் கொண்டுவந்து சிறுசிறு துண்டுகளாக நறுக்கிக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து, வஸ்திரகாயஞ் செய்த தூள்—½ படியுடன்,

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த பரங்கிப்பட்டை | 1 பலம் | |
| ஓமம் | ½ பலம் | |
| பெருங்காயம் | 5 | வராகனெடை |
| சாதிக்காய் | 5 | ,, |
| சாதிப்பத்திரி | 5 | ,, |

| | |
|---|---|
| மிளகு | ½ பலம் |
| சுக்கு | ½ பலம் |
| வெள்ளைப்பூண்டு | ½ பலம் |
| திப்பிலி | ½ பலம் |

இவைகளை யொன்ருகக் கூட்டிக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். பின்பு, ஒரு கருங்கோழியைக் கொண்டுவந்து அதன் தலை, கால் முதலியவைகளையும் அதன் வயிற்றைக் கிழித்து குடல்களையும் நீக்கி, அதனுள் மேற்சொன்ன சூரணத்தைத் திணித்துத் தைத்துவிடவும்.

ஒரு வாயகன்ற சட்டியில்,

வேப்பிலைச்சாறு
நொச்சியிலைச்சாறு
பிண்ணாக்கிக்கீரைச்சாறு
பெருந்தும்பைச்சாறு
கொழுஞ்சியிலைச்சாறு
பொடுதலைச்சாறு

இவைகளை வகைக்கு 1 மரக்காலெடுத்து ஒன்று கலந்து, அக் கருங்கோழியை அதிலிட்டு அடுப்பின் மேலேற்றி, சாறுவற்றும்வரை கொதிக்க வைக்கவும். பின்பு, இதைக் கீழிறக்கி ஆறவைத்து, எலும்புகளை நீக்கிவிட்டுக் கல்லுரலில் இட்டிடித்து வேண்டிய அளவு பனவெல்லமும் நல்லெண்ணெய்யும் கூட்டி இடித்துக்கொள்ளவும்.

இதில் ஒரு கழற்சிக்காய் அளவெடுத்துத் தினம் ஒரு வேளை சாப்பிடவும்.

**பத்தியம் :—**

கோழிக்கறி, முருங்கைக்காய், அவரைக்காய், தூதுவளங்காய், துவரம்பருப்பு முதலியவைகளை வேண்டிய அளவு கூட்டிக்கொள்ளவும்.

# 111. பவுந்திரம், கழலை, உடையாத சிலந்திகளுக்குக் காரம்.

சவுட்டுமண் கொண்டுவந்தோ ரெலுமிச்சங்
காயளவா யதனைச்சுட்டு
தெவுட்டொரு பாக்களவு சுண்ணும்புங்
கூட்டிபொடி செய்துஞ்சட்டி
துவட்டுமரை மாகாணி முத்தினெண்ணெய்
விடுகொதித்துட லிறக்கு
பவுத்திரமாருத புண்ணுடையாத
கழலையிடப்பறந்து போமே (௱சுசு)

(இ-ள்)

உவர்மண் ஒரு எலுமிச்சங்காயளவெடுத்து, ஒரு இரும்புப் பாத்திரத்திலிட்டு, அடுப்பின்மேலேற்றிக் கருக வறுத்து, அதனுடன் கல்சுண்ணும்பு ஒரு பாக்களவும் போடவும். நன்ருக வறுபட்டபின் ஆமணக்கெண்ணெய் ஒரு மாகாணி (வீசம்படி) விட்டுக் கொதிக்கவைத்து இறக்கிக்கொண்டு

உடையாத கட்டிகள், பவுத்திரம் முதலியவைகளுக்குப் போடவும்.

---

# 112. உடையாத கட்டிகளுக்குப் பத்து.

பெருங்காய மஞ்சளுங் காசுக்கட்டி
சுண்ணம்விளாம் பிசினிவ்வைந்தும்
அரும்பொடிசெய்து வெள்ளைக்கருவிஞ
லொட்டியிட வாறிப்போகும்

பெருங்காயம் வெள்ளையுள்ளி சுண்ணம் வசம்-
பெருக்கின் பாற்பெய்தரைத்து
இருமூன்று பொழுதிட்டாற் கட்டியுடை
படுங்குணமா மிதற்குத்தானே (ம கா)

(இ-ள்)

(1) பெருங்காயம்
மஞ்சள்
காசுக்கட்டி
சுண்ணாம்பு
விளாம்பிசின்

இவைகளைச் சமனெடை யெடுத்துச் சூரணித்து, கல்வத்தி லிட்டு கோழிமுட்டையின் வெள்ளைக் கருவிட்டு நன்றாக அரைத்துக் கட்டிகளின் மேல் பத்தாகப் போடவும். அவை பழுத்து உடையும்.

(2) பெருங்காயம்
வெள்ளைப்பூண்டு
சுண்ணாம்பு
வசம்பு

இவைகளைச் சூரணித்துக் கல்வத்திலிட்டு எருக்கம்பால்விட்டு நன்றாக அரைத்து, தினம் 6 பொழுது இடவும். கட்டிகள் உடையும்.

---

## 113. உடையாத சிலந்திக்குப் பத்து.

அவின்காசுக் கட்டிகழற் கோடியிலை
பெருங்காய மாங்களிப்பாக்
கிவையைந்தும் வெண்கருவா லரைத்தாறு
பொழுதிட்டா லேகுங்கட்டி

நவமாவி லங்கந்தோற் கொண்டுவந்து
கட்டியின்மேற் நறுக்கிக்கட்ட
வலமாகும் புங்கதின் றேலிழைத்துப்
போடுகுணமாகுந்தானே (௱௬௮)

(இ-ள்)

அபின்
காசுக்கட்டி
கழற்கோடியிலை
பெருங்காயம்
களிப்பாக்கு

இவைகளைச் சமனெடை யெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்துத் தூளாக்கிக் கல்வத்திலிட்டுக் கோழிமுட்டையின் வெள்ளைக் கருவிட்டு நன்றாக அரைக்கவும்.

இம்மருந்தை கட்டியின்மேல் பூசவும். 6 வேளைகளில் கட்டிகள் குணமாகும்,

(2) மாவலிங்கம் பட்டை வேண்டிய அளவு எடுத்து நசுக்கிக் கட்டியின்மேல் வைத்துக் கட்டிவிடவும். அது பழுத்து உடைந்து விடும்.

(3) புங்கப்பட்டையைக் கல்லுரலிலிட்டிடித்து மிருது வாகச் செய்து, கட்டியின்மேல் போட அது வெகு சீக்கிரத்தில் உடைந்து ஆறும்.

---

## 114. குத்து, வெட்டுப் புண்களுக்கு மருந்து.

குத்துப்படுமுடனே வாய்க்குட்சேலை
விடுகுடைந்துங் குருதிதன்னைச்
சுத்தமதாய்த் துடைத்திட்டுத் தசையுள்ளே
தள்ளியெண்ணெய் சுடவுங்காய

வைத்தெலுமிச் சம்பழத்தா லொத்திடவுஞ்
சாறுமெண்ணெய் மதனஞ்செய்து
வித்தெரியிற்காய்ந்து சுடவாய்க்குள்விடு
மூன்றுதின மேலுங்கேளே (ரகசுசு)

மேலிலந்தை யாமணக்குந் தூதுவளை
யிலவங்கம் வேம்பாடஞ்சிற்
றேலமதிமதுர நன்னாரியிவை
வேருடனுந் தேர்கழஞ்சு
நாலுமிடுமேலரைத்து நாழியெண்ணெய்
தனிலிட்டு நலம்வடித்துச்
சேலையிற்றோய்ப் படுகாயந் தெரியாம
லிட்டிடவுந் திருந்தானே (உஏ)

(இ-ள்)

அடிபட்டவுடன் அக்காயத்தின் வாயைத் துணியினல் நன்ருகத் துடைத்து இரத்தம் கசிவதை நிறுத்தவும். பின்பு ஏதேனும் தசை வெளியே வந்திருந்தால் அதை உள்ளே தள்ளிவிடவும்.

ஒரு இரும்புக் கரண்டியில் நல்லெண்ணெய் ஒரு ஸ்பூன் விட்டுக் கொதிக்கவைக்கவும் ஒரு எலுமிச்சம்பழத்தை இரண்டாக அறுத்து, அந்தமூடிகளைக் கரண்டியிலுள்ள கொதிக்கும் எண்ணெயில் தோய்த்துப் பொறுக்கும் சூட்டில், காயத்திற்கு ஒத்தடமிடவும். பின்பு எலுமிச்சம்பழத்தின் சாற்றை எண்ணெயுடனே பிழிந்து ஒன்றுகலந்து, பொறுக்கும் சூட்டில் அக்காயத்தினுள்விட்டுக் கட்டிவிடவும். இவ்வாறு 3 நாளைக்குச் செய்யவும்.

(2) இலந்தைவேர்
ஆமணக்கம்வேர்
தூதுவளைவேர்
கிராம்பு

நன்னாரிவேர்
அதிமதுரம்
வெம்பாரம்பட்டை
ஏலக்காய்

இவைகளை வகைக்கு 4 வராகனெடை வீதமெடுத்து, இடித்துச் சூரணித்துத் தண்ணீர் விட்டரைத்து,

நல்லெண்ணெய் —1 நாழியுடன் கூட்டி அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும்.

இத்தைலத்தில் துணியைத் தோய்த்து வெட்டுக்காயத்தில் வைத்துக் கட்டவும்.

அவை வெகு எளிதில் ஆறும்.

---

## 115. வெட்டுக் குத்துக்கு மருந்து.

குங்கிலியம் வெள்ளையதாய்க் காயமட்டாய்ப்
பழச்சாறு கொண்டரைப்புத்
தங்கொருநாழிகை சென்றுவழித்துக்காற்
காசளவத் தனைமருந்தில்
நங்கெண்ணெயாற் சாரித் திடுவதனை
வேறொருத்தர் நன்கையிட்டுத்
தூங்கவெந்நீருந் தெளித்துக் கையோடுகை
யொருநாழி சுடவுந்தேயே (௨௱௪)

தேய்க்கையிலே சுவறிப்போங் கையதனைப்
பிடித்திட்டாற் சிறுகரண்டி
வாய்க்கிடமாயதை வழித்து நல்லெண்ணெய்
தன்னிலந்த மருந்தைப்போட்டு

ஆக்கியதிலொரு காசினளவுகுத்திச்
    சாரித்து மதைப்பிளந்த
வாய்க்கிரண்டு பக்கமிட்டு முலர்ந்தபின்
    மேலுமிட்டு வளையம்பூசே (உ௱.)

(இ-ள்)

வெட்டுக்காயத்திற்குப் போதுமான அளவு, வெள்ளைக் குங்கிலியம் எடுத்துக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்றாக அரைத்து ஒரு நாழிகை சென்றபின் அதை வழித்து ஒரு சிமிழில் பத்திரப்படுத்தவும். இம்மருந்தில் கால் காசளவு எடுத்து இடது உள்ளங்கையில் வைத்துக்கொண்டு, நல்லெண்ணெய் (ஒரு ஸ்பூன்) விட்டு, வெந்நீர் 10 துளி தெளித்து மற்றொரு கையினால் நன்றாகச் சூடு வரும்வரை, சுமார் 1 நாழிகை தேய்க்கவும். இப்படித் தேய்க்கையில் மருந்து கையில் சுவறிப்போம். பின்பு இருகைகளும் ஒட்ட வாரம்பிக்கும். அந்தப்பதத்தில் கையில் ஒட்டியுள்ள மருந்தை ஒரு கரண்டியினால் வழித்து ஒரு சிமிழில் வைத்து, நல்லெண்ணெயுடன் குழைத்து, வெட்டுக் காயத்திற்குள் போடவும். உலர்ந்தபின் காயத்தைச் சுற்றிலும் பிறவளயமிடவும்.

---

## 116. வெட்டு, அம்பு, குண்டு முதலானவை பட்டதற்கு எண்ணெய்.

சட்டி நெருப்பெழக்காய்ச்சி யெள்ளினெண்ணெய்
    விட்டெலுமிச் சம்பழத்தை
வெட்டியிரு பிளவாக்கிக் காயுமெண்ணெய்
    தனிற்றேய்த்து வெட்டுவாயைச்
சுட்டு விடுமெண்ணெய் குத்திப் புண்ணிலிட
    மேலிதற்குச் சொல்லிலந்தை
வட்ட நிலக்குமிழ் சூரை நாயுருவி
    கடுக்காயாவரை பலாவே (உ௱௬)

தூதுவளை சிறுகுறுஞ்சாச் செவ்வல்லிக்
கொடி கோட்டஞ் சொல் வேம்பாடம்
ஓது சிறு வழுதலை சதகுப்பை
யிலவங்க முடனேலங்கள்
சாதி மதுரங்களிது வோரொன்றுக்
கிருகழஞ் சாயிடித்து
மீதுபடி யெண்ணெய் விட்டு மெழுகு பதந்
தன்னில் வடி மேலும் போடே (உாச)

(இ-ள்)

ஒரு புதுச்சட்டியை அடுப்பின் மேலேற்றி நன்முகப் பழுக்கக் காய்ச்சி, அதில் நல்லெண்ணெய் சிறிது விடவும். ஒரு எலுமிச்சம்பழத்தை இருபாகங்களாகப் பிளந்து, அதைக் கொதிக்கும் எண்ணெயில் தோய்த்து, இரணத்தின் வெட்டு வாயை யொன்று சேர்த்து, அதில் பிழிந்து ஒத்தடமிடவும். புண்கள் ஆறும்.

(2) இலந்தை — நிலக்குமிழ்
கூரை — நாயுருவி
கடுக்காய் — ஆவாரை
பலா — தூதுவளை
சிறுகுறிஞ்சான் — செவ்வல்லிக்கொடி
கோஷ்டம் — வேம்பாரம்பட்டை
சிறுவழுதலை — சதகுப்பை
கிராம்பு — சிற்றேலம்
பேரேலம் — சாதிக்காய்
அதிமதுரம்

இவைகளை வகைக்கு 2 கழஞ்சு வீதமெடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்துத் தூளாக்கி, வஸ்திரகாயஞ்செய்து, அதனுடன் நல்லெண்ணெய் ஒரு படி விட்டுக் குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயைப் புண்களுக்குப் போடவும். குணமுண்டாகும்.

# 117. அடிபட்டு விழுந்த, எலும்பு முறிந்த காயத்திற்கு.

குமரிமேலெண்ணெயிட்டு மிதைவாட்டிக்
கட்டியபின் கோவின்மோரை
நிமிரடுப் பேற்றியதிநீர் சுருங்கக்
காய்ச்சிவெண்ணெய் நீற்றுஞ் சங்குந்
திமிரவே யரைத்தண்டங் கூட்டுபசை
பூசிடொரு சேலைதன்னில்
அமரத்திப் பாலூட்டி முறிந்ததைக்
கட்டெலும்பு மணுகுந்தானே (உ௱ரு)

உசிலையின் மேற்புரணி நறுக்கி நல்-
லெண்ணெய் விட்டு மூலகத்தோடும்
விசித்திடக் கட்டநய நீர்ப்பூலா
வேர்ச்சீவி விரிகற்றாழை
பசை மடலிலிடுகட்ட நலமாகு
மொருகம்பைப் பகிர்ந்து மூன்றாய்
மிசை சம் பீரப்பழத்தைப் பிளந்துவைத்
தெண்ணெய் நெய்யுமிட்டுக் காய்ச்சே (உ௱சு)

காய்ச்சதிலுந் தோய்த்திடொற்றுக் காட்டிடவுங்
கடுப்புவலிக் கட்டிரத்தம்
போச்சிதென்றும் வேலதின்தோற்-
றுவைத்ததை வடிக்கட்டிப்போங்
காய்ச்சிதைக் குழம்பாக்கி யொருசேலை
தனிலூட்டிக் கட்டிரத்தம்
பாய்ச்சலிட னுதிரத்தின் கட்டுநிற்கும்
பசைபோகும் பலமுண்டாமே (உ௱எ)

(இ-ள்)

சோற்றுக்கற்றாழை மடல் நன்கு முத்தியதாக எடுத்து அதன்மேல் நல்லெண்ணெய் தடவி, அனலில்வாட்டி அதன் சோற்றை எலும்பு முறிந்த இடத்தின்மேல் வைத்துக் கட்டவும்.

(2) பசுவின்மோரை யடுப்பின்மேலேற்றி, அதிலுள்ள நீர் முழுவதும் சுண்டும்வரை காய்ச்சி, அதனுடன் சங்கு பஸ்மம், பசுவின் வெண்ணெய் இவ்விரண்டையுஞ் சேர்த்துக் கோழிமுட்டையின் வெள்ளைக் கருவை விட்டுப் பசைபோலரைத்து ஒடிந்த எலும்பை யொன்றுகூட்டி, அதன்மேல் பூசவும். பின்பு, ஒரு வெண்மையான துணியில் அத்திப்பாலை பூட்டி, முறிந்த எலும்பு, அதன் மேலுள்ள மருந்து முதலானவை நழுவாமல் வைத்து, இறுகக் கட்டிவிடவும். முறிந்த எலும்புகள் கூடும்.

(3) உசிலம்பட்டையைச் சிதைத்து, நல்லெண்ணெயுடனே கூட்டி, முறிந்த எலும்புகளை யொன்று சேர்த்து அதன்மேல் வைத்துப் பின்பு, *சிம்புகளை வைத்து நழுவாமல் கட்டவும். குணமுண்டாகும்.

(4) நீர்ப்பூலா வேரையும், சோற்றுக்கற்றாழை வேரையும் ஒன்றுபடச் சிதைத்து வைத்தும் கட்டலாம்.

(5) ஒரு (மூங்கில்) கம்பை மூன்று பிளவாகப் பிளந்து, அதனுள் மூன்று பிளவாகப் பிளக்கப்பட்ட எலுமிச்சம் பழத்தை கொடுக்கவும். ஒரு கரண்டியில் நெய்யும், நல்லெண்ணெயும் சமபாகமாக ஒன்று கலந்து, அடுப்பின்மேலேற்றிச் சுடவைத்து குச்சியுடன்கூடிய எலுமிச்சம்பழத்தை அதில் தோய்த்துக் கடுப்பு வலி, இரத்தக்கட்டு முதலியவைகளுள்ள இடங்களில் ஒத்தடமிடவும். மிக்க குணமுண்டாகும்.

(6) கருவேலம்பட்டையைப் பஞ்சுபோலிடித்துச் சாறு பிழிந்து, அனலில் வைத்துக் குழம்பாகக் காய்ச்சி, அதை யொரு துணியில் தடவி, இரத்தக்கட்டு, இரத்தம் கசியும் இடம் முதலானவைகளின்மேல் போடவும். அவை தீரும்.

---

* 'வெச்சோடு கொண்டு கட்ட நலம்' என்று 72 செ. சுவடியில் கூறப்பட்டுள்ளது.

## 118. அம்புவிழுந்த காயத்திற்கு எண்ணெய்.

நிலக்குமிழ் வேரோடுவிவேரதின் ரூற்
றாதளைவேர் நிம்ப பஞ்சம்
இலந்தைவேரிலை யூமத் திலைவேருங்
கம்பிப்பிசினேர் வேம்பாடல்
நலசீதா செங்கழுநீர் மட்டியிவை
முக்கழஞ்சாய் நாட்டொன்றுக்குக்
கலந்து தாள் நாழியெண்ணெய் வடித்திட்டா
லம்புருண்டைக் காயம் போமே (உாஅ)

(இ-ள்)

| | |
|---|---|
| நிலக்குமிழ் வேர் | ஓடுவிவேர்ப்பட்டை |
| தாதுவளைவேர் | வேப்பமரத்தின் பட்டை |
| வேப்ப இலை | வேப்பம்பூ |
| வேப்பங்காய் | வேப்பம் வேர் |
| இலந்தை வேர் | இலந்தை இலை |
| ஊமத்தையிலை | ஊமத்தை வேர் |
| கம்பிப் பிசின் | வேம்பாடம்பட்டை |
| சீதாசெங்கழுநீர் | *அதிமதுரம் |

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு (3¾ வராகனெடை) வீதம் எடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து, அதனுடன்

நல்லெண்ணெய்—நாழி (5 சேர்)விட்டுக் குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயை அம்பினாலேற்பட்ட காயங்களுக்குப் போட அவை தீரும்.

* நீர்மட்டி என்ற சரக்குக்கு அதிமதுரம் என்ற பொருள் 72 செ. சுவடியில் காணப்படுகிறது.

# 119. குண்டு, கத்தி, அம்புக்குத்து, இவைகளினலேற்பட்ட காயத்திற்கு எண்ணெய்

வெடிகுண்டு கத்தி வெட்டு வம்புருகிக்
குத்துடல் மெத்தநொந்தால்
நெடி வேம்புமேற் புரணித்தூளிடித் துத்
தண்ணீரில் நிறம்பப் போட்டுத்
துடியலரக் காய்ந்திறக்கி யுடல் தங்கப்
பிடித்திட்டுத் துவளையிட்டு
விடுவெந்நீர் வலிதீருமலவாத
கரப்பானுய் விடுக்கும்பாரே (உாகூ)

நிலவேம்பு பொற்கடுக்காய் தூதுவளை
சிவன்வேம்பு நிலக்குமிழ்வேர்
நல்சிந்தில் சென்னக்காய் நெரிஞ்சிலது
சகல நன்னுரி வேரும்
பலமாகா ளிக்கிழங்கு நாயுருவி
வேம்பாடல் பருவெள்ளுள்ளி
சிலகூரை கோட்டமஞ்சள் சாதிக்காய்
அதிமதுரங் திரிபலாவே (உாய)

கரிலீது வேர்மருந்து வகையொன்று
முக்கழஞ்சாய்க் கலந்துகொண்டும்
அரையில்லாவிடிற் பொடியாகிலுஞ்செய்
வடிகட்டியதனை நாழித்
தரியெள்ளினெண்ணெய் விட்டு மடுப்பேற்றிப்
பதங்கண்டு தான்றுழாவி
எரிவடித்திடக் காயத்தெழுவாத
கரப்பானு மிராமற்போமே (உயக)

(இ-ள்)

வெடிகுண்டு, கத்தி, வெட்டு, அம்பு இவைகளினுல் விரணங்கள் ஏற்பட்டு ஆருமலிருந்து குத்துவலி உண்டானுல் அதற்கு மருந்தாவது:—

வேப்பமரத்துப் பட்டையின் மேல் புரணியைக் காய வைத்து இடித்துத் தூள்செய்து, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின்மேலேற்றிக் கொதிக்கவைக்கவும். நன்றாகச் சுண்டியபின் அக்கஷாயத்தை இறுத்து, பொறுக்கும் சூட்டில் குளுப்பாட்டவும். வலி முதலியவை தீரும். இல்லாவிடில் வாதகரப்பானாக ஏதுவாகும்.

(2) நிலவேம்பு
கடுக்காய்த்தோல்
தூதுவளைவேர்
செப்பு நெரிஞ்சில்
மாகாளிக்கிழங்கு
வெம்பாடம்பட்டை
சூரை
மஞ்சள்
அதிமதுரம்
மிளகின்வேர்
சிவனார்வேம்பு
நிலக்குமிழ்வேர்
சீந்தில்கொடி
நன்னாரிவேர்
நாயுருவி
வெள்ளைப்பூண்டு
கோஷ்டம்
சாதிக்காய்
திரிபலா

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு வீதமெடுத்துக் காயவைத்து, கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும் பின்பு இதனை நல்லெண்ணெய்—1 நாழியுடன் (5 சேருடன்) குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

கரப்பான் புண்களுக்கு இந்த எண்ணெயைப் போட அவைகள் ஆறும்.

---

## 120. யோனி சூலைக்குப் புகை.

நாகதுண்டங் குங்கிலியம் பொடிபண்ணிச்
சட்டியிலு நடுநெருப்பை
யாகவடியில்லாத வுரலின்கீ-
ழனலைவைத்த திற்றூளிட்டுத்

தோகையரையுரலிருத்திப் புகையிட்டால்
யோனிவருஞ்சூலை தானும்
போகுமுத்தின் கொட்டைநிம்ப விற்றிரண்டும்
வேம்பினிலைப் பொழியுஞ்சாறே (உ௰உ)

சாற்றிலரைத் துண்டை செய்து யோனியுள்ளும்
வைத்திடப் போஞ்சார மஞ்சள்
மூற்றகடிப்பகை தேவதாரம் வேம்
பதின்வைர மொழிசமன்றுன்
சேற்ற பசுமோரிலரை யோனியின்மேற்
பூசிடப் போந்திகழ் வெள்ளுள்ளி
யேற்ற புகையூறலும் பேய்த்திமிட்டிவேர்
வாய் விளங்கமிவை சரிக்கே (உ௰௩)

இடுகண்டங் கத்திரியின் சாற்றிலரைத்
துருண்டைபண்ணியிதை யோனிக்குள்
படுவைத்து மேலுமிட்டு பகச்சூலை
தீர்ந்துவிடும் பாவைமார்க்குத்
தோடுமலட்டுப் புழுவுஞ் செத்துவிழு
மேழுதினந் துடர்ந்து செய்யில்
அடுபிணி யெல்லாந்தீருஞ் சரபோசி
மகராசனரைந்ததாமே (உ௰௪)

(இ-ள்)

பாம்புக்கண்டம்
வெள்ளைக்குங்கிலியம்

இவ்விரண்டையும் சமனெடை யெடுத்துச் சூரணித்துக் கொள்ளவும். ஒரு அகலில் தணலையிட்டு, அதன்மேல், (அகல் உட்புகும்படியாக) அடியில்லாத இருபுறமும் துவாரமுள்ள உரலை மூடவும். பின்பு, அதனுள்ளிருக்கும் தணலில் மேலே சொல்லிய தூளைப்போடவும். அதிலிருந்து புகையெழும்பும்.

வியாதியுள்ள ஸ்திரியை உரலின் புறவாயிலிருத்தி அப்புகை யை மர்மஸ்தானத்தில் படும்படி செய்யவும். யோனிச் சூலை தீரும்.

(2) ஆமணக்கங்கொட்டை
வேப்பங்கொட்டையினுள்ளிருக்கும் பருப்பு

இவ்விரண்டையும் சமனெடை யெடுத்துக் கல்வத்திலிட்டு வேப்பிலைச்சாறு விட்டு நன்றாக அரைத்துச் சுண்டைக்காயள வுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திக்கொள்ள வும்.

இந்த உருண்டையை மர்மஸ்தானத்தினுள்ளே சொருகி வைக்க யோனிச்சூலை தீரும்.

(3) மஞ்சள்
தேவதாரம்
வேம்பின்வைரம்

இவைகளைக் கல்லுரலிலிட்டு, இடித்து வஸ்திரகாயஞ்செய்து, பசுவின் மோரிலரைத்து, மர்மஸ்தானத்தில் பூசவும். யோனி சூலை குணமாகும்.

(4) வெள்ளைப்பூண்டு
புகையூறல் (புகைக்கூண்டு)
பேய்த்திமிட்டி வேர்
வாயுவிடங்கம்

இவைகளைச் சரியெடை யெடுத்துத் தூள்செய்து, கண்டங் கத்திரிச் சாறுவிட்டு நன்றாக அரைத்து, சுண்டைக்காயள வுள்ள மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்திக்கொள்ள வும். இதை மர்மத்வாரத்தினுள்ளே வைத்து, அதையே மேலேயும் அரைத்துப் பூசவும்.

யோனிக்குலை திருவதுடன் மலட்டுப் புழுவும் விழும். 7 தினங்களில் மேலே சொன்னதைப் போல பற்பல பிணிகளும் தீரும்.

---

## 121. யோனிலிங்கம், வயிறு, மூக்கதிலிரத்தம், இறங்குதற்கு.

பருத்திப்பாலுழி சுக்குக்கரி லோமஞ்
 சிரகமும் பகரதிங்கந்
தருபூண்டு மரைத்துடன் பாறனிலுங்
 கரைத்திட்டுத் தணலிற் காய்ச்சி
மருகுழம்பாக வரும்போது பசு
 நெய்யையுரி வார்பதத்தில்
திருத்தி வடிகழஞ் சொன்று கொள்யோனிப்
 பிணியெல்லாந் தீர்ந்து போமே (உமிறு)

(இ-ள்)

பருத்திக்கொட்டையை ஊறவைத்து அரைத்துப் பிழிந்த பால்—ஒரு நாழி

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| ஓமம் | சீரகம் |
| அதிமதுரம் | வெள்ளைப்பூண்டு |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) வீதமெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்துத் தண்ணீர்விட்டு நன்றாக அரைத்து, மேலே சொல்லிய பருத்திக்கொட்டைப் பாலில் குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரிக்கவும், அது குழம்பாகுப்போது, பசுவின் நெய் ½ படி விட்டுக் கொதிக்கவைத்துப் பதத்தில் இறக்கவும்.

இந்நோயில் ஒரு கழஞ்சளவெடுத்துப் பசுவின் பாலி லூட்டிகொள்ள யோனிலிங்கம், வயிறு, மூக்கு முதலானவிடங் களிலிருந்து இரத்தம் கசிதல் முதலியவைகள் தீரும். ஈ கண்டது.

---

## 122. யோனித்திரிவிழ.

திரிவிழுமுதனு ழிலுடல்தலை
 தானுதையத்தி னெண்ணெய்யிட்டு
பரியவெந்நீர் முழுகு வேறுகறி
 தொடாமல் நெய் பாலுங்கூட்டி
அரிய போசனஞ் செய்து விராவன்னஞ்
 செய்யாம லன்றை வைகல்
புரிநந்தியாவட்ட வேருமிலை பூ
 வோரொன்று போடக்கேளே (உ௰சு)

எலிமிச்சங்காயள வாயரை நல்ல
 வெல்லமுடனிட்டுக் கொள்ள
மலிசாமைச் சோறரைத்து முடலேறப்
 பூசிவிட்டு வடிவ யோனி
யிலும்பூசி யுலரவிட்டுத் தொட்டியிலே
 குளிர்ந்த நீரிட்டதன்றுன்
நலமாகவிருக்கும் போதிரி விழு
 மிலைமற்றநாளுஞ் செய்யே (உ௰எ)

(இ-ள்)

மர்மஸ்தானத்திலுள்ள அதிமாம்ஸம் விழவேண்டுமா ளுல் அந்த ஸ்திரீ

சிகித்ஸை ஆரம்பிப்பதற்கு முதல்நாள், உடம்பு, தலை, முதலான இடங்களில் நல்லெண்ணெய் தேய்த்துக்கொண்டு

வெந்நீரில் ஸ்நானம் செய்யவும். ஸ்நானஞ் செய்த தினத்தன்று வேறு கறிகள் கூட்டாமல், பால் சாதமும், நெய் சாதமும் மாத்திரமே மத்தியானத்தி லுண்ணவும், இரவு யாதொன்றும் சாப்பிடாமல் பட்டினியாக இருந்து மறுநாளதிகாலையில்,

| | |
|---|---|
| நந்தியாவட்டையிலை | எலுமிச்சங்காயளவு |
| ,, வேர் | ,, |
| ,, பூ | ,, |

எடுத்து, ஒன்று சேர்த்து நன்ருக அம்மியின்மேல் வைத்து அரைத்து, நல்ல வெல்லம் எலுமிச்சங்காயளவும் கூட்டி, உட்கொள்ளவும். பின்பு சாமையரிசியைச் சமைத்துச் சோறு ஆக்கி (½ படி) அம்மியில் வைத்தரைத்து, உடம்பிலும், மற்றும் மர்மஸ்தானத்திற்குள்ளும் நன்ருகப் பூசி உலரவிடவும்.

ஒரு தொட்டியில் குளிர்ந்த ஜலத்தை யூற்றி அதில் அந்நோயாளியைச் சிறிதுநேரம் இருக்கச் சொல்லவும். யோனித்திரி விழும், அன்று விழவில்லையென்ருல், மறுநாளும் இவ்வாறு செய்யத் திரி விழுந்துவிடும்.

இது கைகண்டது. பத்தியமாக விருக்கவும்.

---

## 123. குரு, மறுக் கொப்புள மருந்து.

நீர்க்கடம்பின் வேரெலுமிச்சம் பழத்தி
    னளவு சிறு நீரிலாவ
தாரநீராகார மாவ தொருசேரிற்
    கலந்தரைத்ததைக் குடிக்கப்
பார் குரு வுமறுவுடன் கொப்பளிக்கும்
    படுவன்கள் பருவாறிப் போஞ்
சீர்முறையைச் சரபோசி மகராச
    னுயிர்க்கிரங்கிச் செய்ததாமே (உ௰அ)

குருவுக்கு மூன்றுதினந் தவசெனு
முருங்கையுட கொடுமிடித்துப்
பெருமருந்ததின் வேரைத் தரித்தொரு
கிரங்கையாம் பேணியுட்கொள்
திருமாலின் கரந்தை பூவரசிலைப்
பழுப்பீரஞ்சேர் வெங்காயங்
கருஞ் சீரமிவையாறுங் குடிநீரா
யிதுகொள்ளக் காய்ந்தும் போமே (உ௰௩)

(இ-ள்)

நீர்க்கடம்பின் வேர்—எலுமிச்சங்காயளவெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்துச் *சிறுநீர் அல்லது சோற்றின் நீராகாரம் இவற்றிலேதேனுமொன்றையொரு சேரளவெடுத்து, அதில் நன்றாக அரைத்துக்கொள்ளவும். பின்பு இதனைக் குடிக்கவும்.

குரு, மறு, கொப்பளிக்கும் படுவன் முதலியவை தீரும்.

(2) தவசுமுருங்கைக் குச்சி ஒரு சிரங்கை
பெருமருந்துவேர் ,,

இவ்விரண்டையும் நசுக்கி, அம்மியின்மேல் வைத்து நேக வரைத்துச் சாப்பிடவும். பின்பு,

விஷ்ணுக்ராந்தி
பூவரசம்பழுப்பு
ஈரவெங்காயம்
கருஞ்சீரகம்

இவற்றைச் சமனெடை யெடுத்து இடித்து, இதற்கு எட்டு மடங்கு சுத்த ஜலம்விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகக் காய்ச்சி இறக்கிக்கொண்டு, இக்கஷாயத்தை முன் சொன்ன மருந்திற்கு அனுபானமாகக் குடிக்கவும்.

படுவன் முதலியவை தீரும்.

---

*சிறுநீர்-உலகமறியாக் குழந்தைகளின் சிறுநீரை எடுத்துக்கொள்ளவும்.

# 124. பெருவியாதிக்கு மருந்து.

பேய்மருட்டிச்சாரணை கீழ்க்காய் நெல்லி
சேங்கொட்டைப் பெரியதுத்தி
யாயிவைவேர் சமன்கூட்டி யிடித்தொரு
பானைதனிலாட்டின் நீரை
நீயிடுவா மூரக்கதுவு மிதுகாய்ச்சு
நாலுதின நீளவிட்டுப்
போயுழக்கு வீதமெட்டு நாட்குடித்தேழ்
தினம் வெந்நீர் போம்மலுண்ணே (உஉ௰)

(இ-ள்)

| | |
|---|---|
| பேய்மருட்டி | 1 பலம் |
| சாரணைவேர் | 1 பலம் |
| கீழாநெல்லி | 1 பலம் |
| சுத்திசெய்த சேங்கொட்டை | 1 பலம் |
| துத்திவேர் | 1 பலம் |

இவைகளை வெய்யிலில் காயவைத்து, இடித்து ஒருபானையி லிட்டு, வெள்ளாட்டு மூத்திரம் 1 ஆழாக்குவிட்டூறவைத்து, அடுப்பின் மேலேற்றி 1 உழக்காகக்காய்ச்சி இறக்கிவைத்துக் கொள்ளவும். நான்கு தினங்கள் சென்றபின் இதைக் குடிக்க வும். இவ்வாறு தினம் ஒரு உழக்கு வீதம் 8 நாட்களுக்குச் சாப்பிடவும். 7 நாட்களுக்கு மறுபத்தியமிருக்கவும். தினமும் வெந்நீர் சாதம் மாத்திரமே உட்கொள்ளவும்.

குறிப்பு :—

1. இம்மருந்தில் சேங்கொட்டை சேர்த்திருப்பதால் அதிசாக்கிரதையாக உபயோகிக்க வேண்டும்.

2. 2 உழக்கு—1 ஆழாக்கு.

## 125. உடல் வெள்ளைக்கு மருந்து.

கொடிவேலி வேரதின் றேலெலுமிச்சம்
    பழச்சாறு கொண்டரைத்துள்
ளிடுவதோர் பாக்களவாயுடல் வெள்ளை
    காணிடத்தி லிதனைப்பூசிக்
கெடுமூன்று நாட்குடிக்கப் புளியுப்புத்
    தள்ளு வெள்ளைக் கெட்டுமாறுந்
தொடுபத்தி யங்காப்பா யிவ்வாறு
    மூன்று முறை தொடங்கித்தானே (௧௨௫)

(இ-ள்)

பச்சையான கொடிவேலிவேர்ப்பட்டை ஒருபாக்களவெடுத்துக் கொண்டு அம்மியின் மேல் வைத்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டுக் **கைப்படாமலரைத்து** உட்கொள்ளவும். இம்மருந்தையே வெள்ளை யிருக்குமிடங்களிலும் மேலே பூசவும்.

இவ்வாறு 3 நாட்கள் செய்யவும் உப்பு, புளி, முதலானவைகளை நீக்கிப்பத்தியமாக இருக்கவும். உடம்பிலேற்படும் வெள்ளை (White Patches) தீரும்

குறிப்பு :—

கொடிவேலிவேர், அதிகாரமுள்ள மருந்தாகையால் அதன் பிரமாணத்தை நிதானித்தறிந்து உட்கொள்ளவும்.

---

## 126. பெருவியாதிக்கு மருந்து.

நீரடிய தனில் முத்தை யொருதுலாங்
    கொடுவந்து நீரவித்தும்
ஏரண்டந்தா னூற்றும் வாறதுபோ
    லூற்றியதனெண்ணெய் வாங்கிப்

பார்கலசந் தனிலூமிதைவைத்துந்
துட்டெடையுள் பருகவிந்து
சார் வுடல மிருதாறு சிங்கின்றாள்
எண்ணெயிட்டுந்தடவுந்தானே (உஉஉ)

தடவிந்தப்படிக்கு நாற்பது தினமுட்
குடித்துத்தனை மேற்பூசும்
உடல் வெந்நீர்குளித்திட்டுப் புளிப்புப்பு-
கை தள்ளி யொருமையாக
நடவிது பத்தியமாய் வெந்நீருஞ்
சோறுமுண்டு நாட்கழித்தால்
அடல் பெரு வியாதிபோஞ் சரபேந்திர
னிம்முறையு மரைந்ததாமே (உஉந)

(இ-ள்)

நீரடிமுத்து— 5 வீசை கொண்டுவந்து ஒரு பெரும்பாத்திரத்திலிட்டுத் தண்ணீர்விட்டு அடுப்பின்மேலேற்றிக் கொதிக்கவைத்து, சிற்றுமணக்கெண்ணெய் ஊற்றுவதைப் போல, இதன் எண்ணெயை ஊற்றிக்கொள்ளவும். இத்தைலத்தை ஒரு பழகிய பானையில் பத்திரபடுத்திக்கொண்டு வேளைக்கு ஒரு துட்டெடை வீதம் உட்கொள்ளவும்.

இந்தயெண்ணெயை மிருதார்சிங்குடன் குழைத்து பெருவியாதினாலேற்படும் விரணங்களுக்கு மேலேபோடவும்.

இம்மாதிரி 40 நாட்களுக்கு மேலுக்கும் உள்ளுக்கும் உபயோகிக்கவும். தினமும் வெந்நீரில் ஸ்நானம் செய்யவும்.

**பத்தியம் :—**

புளி, உப்பு, புகையிலை முதலியவைகளை நீக்கிவிடவும் வெந்நீர்சாதம் மாத்திரமே சாப்பிடவும்.

**கொட்டைமுத்திலிருந்து எண்ணெய் வடிக்கும் முறை:-**

நன்றாக முற்றிய கொட்டைமுத்துக்களை எடுத்து ஒரு வாயகன்ற பாத்திரத்தில்போட்டு, கொட்டைமுத்துகள் நன்கு முழுகும்வரை தண்ணீர்விட்டு அடுப்பின்மேலேற்றி கொட்டைக்குள்ளிருக்கும் பருப்பு மிருதுவாகும்படி எரிக்கவும். பின்பு, பாத்திரத்தைக் கீழிறக்கி, மீதியுள்ள தண்ணீரை வடித்துவிட்டுக் கொட்டைகளையுடைத்துப் பருப்புகளை எடுத்துக்கொண்டு அம்மியின்மேல் வைத்து அரைத்தோ அல்லது கல்லுரலிலிட்டிடித்தோ மொத்தையாகச்செய்துகொள்ளவும்

ஒரு தவலையில் இவ்விழுதையிட்டு, அதன் விளும்புவரை தண்ணீர் விட்டுக்கொண்டு, அடுப்பின் மேலேற்றிச் சிறுதியாக எரித்தால் எண்ணெய் மேலே மிதக்கும். அதை ஒரு கரண்டியால் வழித்து வேறொரு பாத்திரத்தில் வடிக்கவும். இவ்வாறு அதிலுள்ள எண்ணெய் முழுதும் மேலே கிளம்பும்வரை எரித்துச் சேகரிக்கவும். பின்பு, இந்த எண்ணெயை அடுப்பின்மேல் வைத்து எரித்துக் கொஞ்சநஞ்சம் இருக்கும் தண்ணீரையும் நீக்கி எண்ணெயைப் பத்திரப்படுத்தவும்.

மேலே சொன்ன பிரகாரமே நீரடிமுத்திலிருந்து எண்ணெயைக் கிரகிக்கவேண்டும்

---

# 127. வெண்குஷ்டத்திற்கு மருந்து.

திருகுள்ள கள்ளிவெட்டிக் கண்டமதை
வெய்யிலிலே திகழுலர்த்தி
வருதூளாயிடிசேலை வடிகட்டி
யிருநாழி தானதின்பால்
யிருநாழி மேலெடுத்து ஒருபானை
தனில்மேதி யிட்ட சாணம்
வரும்தயிர்ப்போற் கரைத்து முதற்கள்ளிக்
கண்டமிட்டு வைத்துக்கேளே (உஉச)

வாயுதனிற் சேலைகட்டி நெல்லரிசி
நாழிமொச்சை வாங்குறித்தான்
றேயமதிலூ றவைத்து மாவிடித்து
வொருபங்குத்தூளை முன்போல்
மேயவிட்டுப் பிசைசேலை வேட்டில்வைத்து
சுடுபிட்டாய் வெந்தபோது
நீயிடுமுற் பொடிதன்னை வெருகடிப்
பிரமாணம் நினைவாய்த்தானே (உ௨௫)

தூளுமிட்டு வெள்ளையிலும் வேதுகாட்
டிதுதின்னத் தொட்டேழ் நாட்டான்
நீளுகைப்புப் புளியுப்புத் தள்ளியும்பத்
தியஞ்செய் நேர்வெண்குட்டங்
தாளுடலின் மேற்பூசக் காக்கணத்தை
யிடிசாற்றைத் தடவிக்கொண்டு
மீளுபுளியம்புரணி சுடுநெருப்பி
லுங்காய்ச்ச வெள்ளைபோமே (உ௨௬)

(இ-ள்)

திருக்குக்கள்ளியைச் சிறுசிறு துண்டுகளாக்கி வெய்யிலில் உலர்த்தவும். பின்பு இதைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திர காயஞ் செய்துகொள்ளவும்.

ஒரு புதுச்சட்டியில் எருமைச்சாணத்தைப் போட்டுத் தண்ணீர்விட்டு கெட்டித் தயிர்போல் கரைத்து, மேலே சொன்ன திருக்குக்கள்ளித்தூளை, அதிலிட்டு சட்டியின் வாயிக்கு ஒரு மெல்லிய துணியைக் கட்டவும். பின்பு,

அரிசி 1 படியும்
மொச்சைக்கொட்டை ½ படியும்

ஒரு பாத்திரத்திலிட்டுத் தண்ணீர் விட்டூறவைத்துக் கல்லுரலி லிட்டு இடித்துக்கொள்ளவும். இதற்குச் சரிஅளவு திருக்குக்

கள்ளிப் பாலைவிட்டுப் பிசைந்துகொண்டு, இதை மேலே சொன்ன வெட்டின்மீது வைத்துச் சட்டியை யடுப்பின்மே லேற்றி, அதற்குச் சரியான பாத்திரத்தினுல், ஆவி வெளியே போகாமல் மூடிப் புடடவியலாகச் செய்துகொள்ளவும், இளஞ்சூடாயிருக்கையில், இப்பிட்டில் ஒரு வெருகடித்தூள் உட்கொள்ளவும். இவ்வாறு 7 தினம் உபயோகிக்கவும்.

இத்தூளையே ஒரு மூட்டையாகக்கட்டி வெள்ளைக் குஷ் டம் இருக்குமிடங்களில் வேது பிடிக்கவும்.

**பத்தியம் :—**

புளி, உப்பு, கைப்பு முதலான சுவையுள்ள பதார்த்தங் களை நீக்கிவிடவும்.

(2) வெள்ளையுள்ள இடங்கள் மறைய வெள்ளைக் காக்கண இலையை யிடித்துச் சாறுபிழிந்து அதை மேலே பூசி வரவும். பின்பு புளியம் புரணியினுலுண்டான தணலில் மேற்சொன்ன இடங்களைக் காய்ச்சவும்.

**குறிப்பு :—**

பிட்டில் திருகுக்கள்ளிபால் சேர்ந்திருப்பதால் அது நன் ருக பேதியாகும். ஆகவே நோயாளியின் பலத்தை அறிந்து உபயோகிக்கவேண்டும்.

---

# 128. கருங் குஷ்டத்திற்கு மருந்து.

தென்னெயின்காய்ச் சிப்பிதனில்நெல்லையிட்டு
மெருக்கம்பாற் சேரவாங்கித்
தன்னிலெண்ணெய் சரிகூட்டிக் குழம்பாக
மத்தித்துந் தடவத்திருஞ்
சொன்னசுண்ணமுடன் வேலிப்பருத்தியுட
ஞறுதினந் தொட்டுத்தேய்க்க
வின்னகருங்குட்ட முதற்றீருமுறை
சரபேந்திரன் விதித்ததாமே (உஉஅ)

(இ-ள்)

தேங்காய்க் கொட்டாங்கச்சியில் ஒரு சிறிது நெல், போட்டு அதனுடன் எருக்கம்பாலைக் கறந்துகொள்ளவும், அதற்குச் சரிஅளவு நல்லெண்ணெய்விட்டு நன்ருக மத்தித்துக் கொண்டு, கருங்குஷ்டமிருக்கு மிடங்களில் பூசவும். அவை தீரும்.

(2) வேலிப்பருத்திச் சாற்றுடன் சுண்ணும்பைக்கூட்டிக் கருங்குஷ்டத்தில் தேய்க்கவும். 6 நாட்களுள் குணம் கிடைக்கும்.

குறிப்பு :—

ஒரு உத்தரணிச் சாற்றிற்கு சுண்டைக்காயளவு சுண்ணும்பு கூட்டிக்கொள்ளவும்.

## 129. பெருவியாதிக்கு மருந்து.

வடபாலின் பாலுமொரு பாக்களவு
சேலையிலே வார்த்துருட்டி
யிடவந்திசந்தி யிருவேளையினு
முட்கொடுக்கவிதில் முழுக்குப்
படமறுதினங் குப்பைமேனியுள்ளி
வசம்பிட்டுப்பார் துவைத்து
உடலதிற்றுவாலை செய்திடுமாறு
தினங்கருவூ மத்தைகொண்டே (உஉஅ)

வசம்புள்ளி யிடுதுவைத் திருநேரந்
துவாலைசெய் வகையுங்கேழு
பிசகாமலிருபது நாளளவுந்தா
ளடத்திப் பெரும்புளிப்புங்
கசந்தவைகளாகாது பத்தியமாய்
நடந்துவரக் கடும்வியாதி
நிசந்தீருமிம்முறையைச் சரபோசி
மகராச ஸிகழ்ந்ததாமே. (உஉகூ)

(இ ன்)

ஆலம்பாலை ஒரு சிறிய வெண்மைத் துணியில் வைத்து, இறுகிய பின்பு இதைத் தினம் 2 வேளை காலையிலும், மாலையிலும், ஒரு சுண்டைக்காயளவு (இவ்விறுகிய பாலை) சாப்பிடவும். மறுநாள்,

குப்பைமேனி பூண்டு
வசம்பு

இம் மூன்றையு மிடித்துத் தண்ணீர் விட்டரைத்து உடம்பில் தேய்த்து ஸ்நானஞ் செய்யவும்.

அதற்கடுத்த நாள்,

ஊமத்தையிலை பூண்டு
வசம்பு

இம் மூன்றையு மிடித்துத் தண்ணீர் விட்டரைத்து தினம் 2 வேளை, மேலே தேய்த்துக்கொண்டு ஸ்நானஞ் செய்யவும்.

இவ்வாறு 20 நாட்களுக்குச் செய்யவும்.

**பத்தியம்:—**

புளிப்பான பதார்த்தங்களையும், கைப்புச் சுவையுள்ள பதார்த்தங்களையும் அறவே நீக்கவேண்டும்.

---

## 130. பதினெண் குஷ்டத்திற்கும் ‘பிரண்டைச் சூரணம்’

பிரண்டையின் கணுநீக்கி யரிந்திட்டு
வறுத்திடித்துப் பின்வடிக்கொள்
தெரிபுதுக் கலசத்துள் வைத்துக்கொ-
ளுதையாதி தேலிற்கொள்ள

ஒருவெரு கடியளவந்தி வெந்நீர்
தனிலுண்ண வுத்தகுன்மஞ்
சொறிதேமல் விரைவாதங் குஷ்டம்போம்
பத்தியமாய்த் துய்க்கத்தானே (உ௩0)

(இ-ள்)

பிரண்டையைப் புதியதாகக் கொண்டுவந்து, அதன் கணுக்களை நீக்கி, மீதமுள்ள துண்டுகளை, ஒரு வாயகன்ற சட்டியிலிட்டு அடுப்பின்மேலேற்றி நன்ருக வறுக்கவும். பின்பு, இதனை இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு ஒரு புதுக்கலசத்தில் பத்திரப்படுத்தவும், இச்சூரணத்தில் மூவிரல்கொள்ளுமளவெடுத்துக் காலை வேளைகளில் தேனில் கலந்து உட்கொள்ளவும். சாயங்காலத்தில் முற்கூறிய அளவெடுத்து வெந்நீருடன் சாப்பிடவும்.

**தீரும் வியாதிகள் :—**

குன்மம், சொறி, தேமல், விரைவாதம், குஷ்டம், முதலியன.

---

## 131. கருங்குஷ்டம், காணக்கடிக்கு 'எண்ணெய்'

கொடிவேலி பிடிவேரும் பதினைந்து
சேங்கொட்டைகொள் நேர்வாளம்
இடுமிருபது நெல்லிக் கெந்தகமு
மோர்கழஞ்சு யிரதம்ரெண்டு
தொடுகழஞ்சு வாலுளுவை விதைமஞ்சள்
கருஞ்சீரம் சொற்கார்போகப்
படிமரிசிமிளகி தொன்றுக் கழக்கிட்டு
நேரரைத்துப் பவழக்குன்றி (உ௩க)

இலையும்வன் னெற்றிலையுங் காடிதெளித்
திடிசாறு மதிலுநாழி
நிலையுமுன் சேங்கொட்டை நறுக்கிட்டுக்
காயவைத்து நீள்மருந்தை
உலைகரைத்துட நாழியெண்ணெய் விட்டுக்
கள்ளியின் பாலுழக்குமிட்டு
குலைமெழுகாம் பதத்திற் சூதமிட்டுள்
மேற்பூசக் குஷ்டம்போமே (உ௩உ)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேர்ப் பட்டை | 1 பிடி |
| சுத்திசெய்த சேராங்கொட்டை | 15 (எண்ணிக்கையில்) |
| ,, நேர்வாளப் பருப்பு | 20 ,, |
| ,, நெல்லிக்காய் | 1¼ வராகனெடை |
| ,, பாதரஸம் | 2½ ,, |
| வாலுளுவையரிசி<br>மஞ்சள்<br>கருஞ்சீரகம்<br>கார்போகரிசி<br>மிளகு | வகைக்கு 1¼ வராகனெடை |

இச்சரக்குகளை எடுத்துக்கொள்ளவும்.

நத்தைச்சூரி இலையும், குன்றிமணி இலையும் வேண்டிய அளவெடுத்துக் காடி தெளித்துக் கல்லுரலிலிட்டிடித்துப் பிழிந்த சாறு—1 நாழி யெடுத்து, இதனுடன் முன்சொன்ன சேராங்கொட்டைகளை யெடுத்து ஊறவைத்து உலர்த்திக் கொண்டு, இடித்துக்கொள்ளவும்.

மேலே சொன்ன கடைச்சரக்குகளில் கூறப்பட்டுள்ள இரஸத்தையும், கெந்தகத்தையும் முதலில் கல்வத்திலிட்டு அரைத்துக் கஜ்ஜலி செய்து, பின்பு மற்ற மருந்துகளையும் இடித்துச் சூரணித்துக்கொள்ளவும். இதனுடன்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 1 படியும் |
| கள்ளிப்பால் | 1 உழக்கும் |

விட்டு, யாவற்றையு மொன்றுகலந்து, அடுப்பின் மேலேற்றி, எரித்து, மெழுகு பதத்திலிறக்கவும்.

இவ்வெண்ணெயை மேலே பூசிவரக் குஷ்டங்கள் தீரும்.

---

## 132. குஷ்டத்திற்கு 'வெள்ளீய வெட்டை'

வெள்ளீவங்கம் பலமொன்று மமுக்கிராக்
கிழங்கிட்டு விரைவாய்க்கிண்டி
மெள்ளவதை யெடுத்தொரு கலசத்தி
லடைத்திட்டு மேற்புடஞ்செய்
துள்ளம்மியிற் பொடிசெய் திப்படியு
மேழுபுடமுடனே போட்டுக்
கொள்ளுகுஷ்டஞ் சிறங்கிரும வீரடைப்பும்
பிரமேகங் குணமாய்ப் போமே (உருரு)

(இ-ள்)

சுத்திசெய்த வெள்ளீயம் — 1 பலத்தை ஒரு வாயகன்ற சட்டியிலிட்டு உருக்கி, அதனுடன் அமுக்கிராக்கிழங்குத் (இடித்து வஸ்திரகாயஞ் செய்த) தூளைச் சிறுகச்சிறுகப் போட்டு வறுக்கவும். வெட்டையானபின்பு இதை யொரு அகலில் வைத்து, வேறொரு அகலால் மூடிச் சீலேமண்செய்து, புடம்போடவும். இவ்வாறு 7 புடங்கள் போடச் சுத்தமான வெள்ளீய பற்பம் கிடைக்கும்.

இதில் ஒரு குன்றியளவெடுத்துத் (தேனிலோ, நெய்யிலோ) உட்கொள்ளச்

சிறங்கு, குஷ்டங்கள், இருமல், நீரடைப்பு, பிரமேகங்கள் முதலானவை தீரும்.

குறிப்பு :—

வெள்ளீயத்தை யொருகரண்டியிலிட்டு உருக்கி 7 தடவை இலுப்பெண்ணெயில் விடவும். சுத்தியாகும்.

---

# 133. குஷ்டத்திற்கு ‘வல்லாதி லேகியம்’

கரியசேங் கொட்டையொரு நூற்றிருபா
　　னிருநாழி கலந்தெள்ளுத்தான்
உரிமஞ்சட் பலமைந்து பழவெல்ல
　　மவ்வளவா யொக்கக்கூட்டி
நெரியவு மிடித்ததைப் பிசினைப்போ
　　லெடுவைத்தோர் நேரம்புன்னைக்
குரியகாயளவுங் கொள்ளிளங்கீரை
　　முருங்கையா முப்பாகாதே (௨௩௪)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த சேராங் கொட்டை | 120 | (எண்ணிக்கையில்) |
| எள்ளு | 2 படி | (பட்டணம் படி $\frac{1}{4}$) |
| மஞ்சள் | 5 பலம் | |
| நாட்பட்ட வெல்லம் | 5 பலம் | |

இவைகளைக் கல்லுரலிலிட்டு, நன்றாக மசியும்படி இடிக்கவும். பிசினைப் போலாகும். இதில் புன்னைக்காயளவெடுத்து காலையில் உட்கொள்ளவும்.

**பத்தியம்:—**

இளங்கீரை, முருங்கைக்காய் முதலியவைகளை சேர்த்துக் கொள்ளவும். உப்பை நீக்கிவிடவும்.

**குறிப்பு:—**

'மிளகு, துவரை முதலியவைகளையும் நிரம்ப உபயோகித்துப் புளியையும் நீக்கிவிடவும்' என 72 செ. சுவடியில் காணப்படுகிறது.

---

## 134. குஷ்டம் முதலானவைகளுக்குத் 'திரிபலாதி கிருதம்.'

திரிபலை முக்கடுகு கொடிவேலிவே-
ரதின்றோலை சிவதை வட்டத்
திருப்பி நில வாமணக்கு மரமஞ்சட்
கடுரோகிணி செம்பொற் கொன்றை
யுரிகாயு மஞ்சளதி விடையம் விழு-
லரிசி மொழி வகையொன்றுக்கு
நிறை மூன்று நிட்கமரைப் பசுவினெய்
நாழிதனி னோர்கரைத்தே (உ௫௫)

நெருழக்குக் கள்ளியின் பாலிட்டுஉடல்
பலமறிந்து நிட்கமொன்று
பாருமுண்டு விரேசனத் தைக்கருதி
யிருபானுட் பருகக் குஷ்டஞ்
சாருகுன்மம் விடபாகஞ் சூலைபித்தப்
பாண்டுமுதற் றனுசுவாதந்
தீருமெனச் சரபோசி மகராச
னிம்முறையைச் செய்ததாமே (உ௫௬)

(இ-ள்)

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கடுக்காய்த்தோல் |
| தான்றித்தோல் | நெல்லிவற்றல் |
| கொடிவேலிவேர்ப்பட்டை | நிலவாமணக்குவேர் |
| வெட்டத்திருப்பி | சிவதைவேர் |
| மரமஞ்சள் | கடுகரோகிணி |
| *செம்பொன்கொன்றை | மஞ்சள் |
| அதிவிடயம் | விழலரிசி |

இவைகளை வகைக்கு 3 வராகனெடை விதமெடுத்து இடித்துச் சூரணித்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டரைத்துப்

பசுவின் நெய் 1 படியுடன்

குழப்பி, திருகுகள்ளிப்பால்—ஒரு உழக்கும்விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

தேகத்தின் பலத்தையறிந்து ஒரு வராகனெடை நெய்யைப் (பசுவின் பாலுடனே) உட்கொள்ளவும் நன்கு பேதியாகும். இவ்வாறு 20 நாளைக்குச் சாப்பிடக்

குஷ்டம், குன்மம், விஷகடிகள், சூலை, பித்தபாண்டு, முதலான ரோகங்கள் தீரும்.

## 135. 18 வகைகுஷ்டங்கள், 14 வகைக்கிராணிகள் முதலியவைகளுக்குக் 'கெந்தக ரஸாயனம்'

கெந்தகமும் பலமாறு முக்கடுகுந்
திரிபலை கிராம்பு மேலம்
வந்தவில வங்கமுஞ்சேங் கொட்டையில-
வங்கப்பத்திரி வாய்விடங்கம்

* செம்மயிர்க்கொன்றையை யெடுத்துக்கொள்ளவும்.

முந்துசணல் விதையொன்றுக் கொருபல வீ-
   தங் கூட்டி முழுதிடித்துத்
தந்திடு சூரணந்தன்னைக் கொள்ளுகுட்டம்
   பதினெட்டுஞ் சாருமென்னே (உகள)

பதி ஞரு மாங்கிராணி யிருபத்தி
   நான்கென்னும் பைத்தியங்கள்
அதிமந்தாக்கினி பஞ்சகுன்மம் போந்
   தாது வ்ருத்தியாயு வ்ருத்தி
மதிதேக காந்திகளுமாமெபலமு
   முண்டாகும் பலவியாதி
சதிசெய்யாதிம் முறையைச் சரபோஜி
   மகராசன் தந்ததாமே (உகஅ)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த | நெல்லிக்காய்கெந்தகம் | 6 பலம் |
| ,, | சேராங்கொட்டை | 1 பலம் |

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கடுக்காய்த்தோல் |
| நெல்லிவற்றல் | தான்றித்தோல் |
| கிராம்பு | ஏலக்காய் |
| இலவங்கப்பட்டை | இலவங்கப்பத்திரி |
| வாயுவிடங்கம் | சணல் விதை |

இவைகள் வகைக்கு—1 பலம்

மேற்கூறிய சரக்குகள் யாவற்றையுமொன்று கலந்து, கல்லுரலிலிட்டு நன்றாகஇடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ளவும்

இதில் மூவிரல் கொள்ளுமளவெடுத்துத் தினம் 2 வேளை உட்கொள்ள

18 வகை குஷ்டங்கள்
24 வகை பித்தரோகங்கள்
5 வகை குன்மங்கள்
14 வகைக் கிராணிகள்
அக்கினி பலக்குறைவு

முதலியவை தீரும் தாது வ்ருத்தியும், ஆயுள் விருத்தியும் உண்டாவதுடன், தேகக்காந்தியும், பலமும் அதிகமாகும். பற்பல ரோகங்களும் அணுகாது

## 136. குஷ்டத்திற்கு மருந்து.

நிலவாரைச் சமூலமுங் கொடுவந்து
காடிகுத்தி நேரரைத்துக்
குலவுகூ ழதுகிண்டி நாற்பதுநா-
ளுண்டுவரக் குஷ்டமெல்லாம்
விலகிடு முறைதயாதி கொள்ளுவது
பத்தியமாய் மேவத்தானும்
பலநூலுங் கற்றறிந்த சரபோசி
மகராசன் பகர்ந்ததாமே (உ௩௬)

(இ-ள்)

நிலவாரையைச் சமூலமாகக் கொண்டு வந்து நன்றாக ஆய்ந்து, கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். அதில் ½ பலமளவெடுத்துக் காடிவிட்டு நன்றாக அரைத்து விழுதாக்கி ஒரு கரண்டியிலிட்டு அனலில் வைத்துக் கூழாகச் செய்துகொண்டு அதிகாலையில் சாப்பிடவும். இவ்வாறு 40 நாட்கள் உட்கொள்ள 18 வகைக் குஷ்டங்களுந் தீரும்.

---

## 137. குஷ்டத்திற்கு மற்றோர் மருந்து.

குமிழவேர்ப் பொடிசெய்து மாவுமுக்கூ-
றுகுமிளகொரு கூறுந்தான்
நிமிரவுங் கலதேனிற் குழைத்துண்ணு
மண்டலந் தானினமாங் குட்டஞ்
சமிபதினெட் டதும்போம் பத்தியமாய்
நடந்துகொள்ளத் தக்கதாகும்
தமிழாய்ந்து கோதகற்றுஞ் சரபோசி
மகராசன் தந்ததாமே (உ௪௰)

(இ-ள்)

| | |
|---|---|
| *குமிழம்வேர்ச் சூரணம் | 3 கூறு (குத்தளவு) |
| மிளகுச் சூரணம் | 1 ,, |

இவைகளை யொன்றுகலந்து தேனுடன் குழைத்துச் சாப்பிடவும், 40 நாட்களுள் 18 வகைக் குஷ்டரோகங்களுந் தீரும். பத்தியமாக விருக்கவும்.

## 138. குஷ்டத்திற்கு மருந்து.

அழிஞ்சில்வேர்ப் பொடிநாழி செம்பருத்தி
வேரதின்றாள் ளவ்விற் மட்டாம்
வழிவேலவேரதின் றாளாறு
நாழிமஞ்ச ளதின்மாவுமாம்
குழிபுற்றுஞ் சோறுமிவை கலந்தெல்லா
மொருகழற் கோடி நேராய்
பிழிதேனிற் குழைத்துண்ண மண்டலங்கள்
மூன்று குட்டம் பிரிந்துபோமே (உசக)

(இ-ள்)

| | |
|---|---|
| அழிஞ்சில்வேர்ச் சூரணம் | 1 படி |
| செம்பருத்திவேர்ச்சூரணம் | 1 படி |
| கருவேலம் வேர்ச்சூரணம் | 1 படி |
| மஞ்சட்பொடி | 1 படி |
| புற்றுஞ்சோறு | 1 படி |

இவைகளை யொன்றுகலந்து ஒரு புதுச்சட்டியில் பத்திரப் படுத்தவும். இதில் வேளைக்கு ஒரு கழற்சிக்காய்ப்பிரமாண

* பெருகுமிழ், சிறுகுமிழ், நிலக்குமிழ் ஆக இம்மூன்று வகைகளின் சூரணத்தையும் எடுத்துக்கொள்ளவும்.

மெடுத்துத் தேனில் குழைத்து உண்ணவும், இவ்வாறு மூன்று மண்டலங்கள் (4 மாதங்கள்) உட்கொள்ளவும்.

குஷ்டங்கள் தீரும்.

குறிப்பு :—

புற்றாஞ்சோறு—கரையான் புற்றுக்குள் வெண்மை நிறமானதும், புரைபுரையாகவும் உள்ள கட்டிகள் காணப்படும். அவற்றைக் கொண்டுவந்து மண் முதலியவைகளில்லாமல் சுத்தமாக எடுத்து உள்ளுக்குப் பிரயோகிக்கவும்.

---

## 139. கிரந்தி, சூலை, கிருச்சங்குன்மம் முதலியவைகளுக்கு 'வங்க தாளேச்வர பற்பம்'

பாதரதந் தாமிரத்தா ளரிதாரங்
கெந்தகமும் பகரொன்றுக்கு
விதைந்து ளராளெனடை யிடுசுத்தி
செய்து கொண்டு மெருக்கம் பாலாற்
போதவிட்டு முச்சாம மரைத்துமொரு
தகழியிலே பொருந்தவைத்து
ஓதிது மேன்மூடியுமண் சேலைசெய்து
காய்ந்த பிறகொரு மிடாவே (உசஉ)

மிடாவிலே மணலிட்டு மதன்மேலே
தகழிவைத்து விடுமணற்றான்
மிடாவின் வாய்ச்சட்டி கொண்டிடுசேர்ந்து
வாய்தனில் மேல்மண்செய்து
மிடாவடுப்பேற்றி வைத்துக் காலாக்கினி
நாற்சாம மேலெரித்தே
மீடாவாறியெடு கறுப்பா யிருக்குமந்-
தப்பற்ப மிட்டிடாயே (உசங)

முக்கடுகுஞ் சாதிபத்திரி யேலமிவை
 னெல்லிவெனடை மூன்றதாகத்
தொக்கவிவைப் பொடிசெய்து பற்பத்திற்
 கூட்டிவிட்டு சுவைத்தேன்விட்டுச்
சக்கியஞ் செய்துட்கொள்ளப் புண்கிரந்தி
 சூலைகுன்மஞ் சலக்கிரிச்சம்
மிக்கிதெல்லாந் தீருமுப்பும் புளிதள்ளிப்
 பத்தியஞ்செய் மிகவும் நன்றே (உசா)

(இ-ள்)

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | | 5 | வராகனெடை |
| ,, | தாமிரத்தூள் | 5 | ,, |
| ,, | தாளகம் | 5 | ,, |
| ,, | நெல்லிக்காய் கெந்தகம் | 5 | ,, |

இவைகளைக் கல்வத்திலிட்டு எருக்கம்பால்விட்டு நன்ருக அரைக்கவும். 3 ஜாமங்கள் (9 மணி நேரம்) அரைத்த பின்பு இதை வழித்து வில்லையாகத் தட்டி ஒரு அகலில் வைத்துக் காய்ந்தபின், வேறொரு அகலினல் பொருந்த மூடிச் சீலைமண் செய்யவும் பின்பு, ஒரு வாயகன்ற சாலில் பாதிவரை ஈரமில்லாத மணல்போட்டு, அதன் நடுவில் சீலைசெய்த அகலை வைத்து மேலேயும் மணல்நிரம்பப்போட்டு, சாலின் வாய்க்குத் தகுந்தபடி ஒரு ஓட்டினல் மூடிச் சீலைமண் செய்யவும்.

பின்பு, சாலை யடுப்பின்மேலேற்றிக் காடாக்னியினல் 4 ஜாமம் (12 மணி நேரம்) எரிக்கவும் தானகவே ஆறிய பின், உள்ளிருக்கும் அகலை வெளியே யெடுத்துச் சீலை மண்ணைப் பிரித்துப்பார்க்க கறுமையான பொடி கிடைக்கும். இதனுடன்,

சுக்கு
மிளகு
ஏலக்காய்
திப்பிலி
சாதிப்பத்திரி

இவைகளை வகைக்கு 2¼ சேர் எடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணத்தைக் கலந்துகொள்ளவும்.

இதில் மூவிரல் கொள்ளுமளவெடுத்துத் தேன்விட்டுக் குழப்பி உட்கொள்ளப்

புண்கள் கிரந்திகள்
சூலை குன்மம்
மூத்திரகிரிச்ரம்

முதலிய பற்பல ரோகங்கள் தீரும்.

**பத்தியம் :—**

உப்பு, புளிப்பு முதலிய சுவையுள்ள பதார்த்தங்களை நீக்கவும்.

---

# 140. கிரந்தி, சிறங்கு, கரப்பான் முதலியவைகளுக்கு எண்ணெய்.

கோவைசிறு குறட்டையின் கிழங்குள்ளி
 கருஞ்சீரங் கூர்வசம்புங்
காவெளுத்தப்பிசின் பூதகரப்பான்றே
 லீருளியுங் காணிதெங்லாங்
கூவுகோழி யினவரை யிலைச்சாற்று
 லரைத்திட்டுக் கொட்டையெண்ணெய்
பாவனைசெய் திதைநக்கக் கிரந்திகரப்
 பான்சிறங்கும் பறந்துபோமே (உசரு)

(இ-ள்)

கோவைத்தண்டு
சிறுகுறட்டைக்கிழங்கு
வெள்ளைப்பூண்டு

கருஞ்சீரகம்
வசம்பு
வெளிச்சைப்பிசின்
பூதகரப்பான்பட்டை
ஈரவெங்காயம்

இவைகளை வகைக்குச் சமனெடை யெடுத்துக் கல்வத்திலிட்டுக் கோழியாவாரையிலைச் சாறுவிட்டு நன்றாக அரைத்து

ஆமணக்கெண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவமாக இறக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு காலணு அளவு எடுத்துக் காலையில் சாப்பிடக் கிரந்தி, கரப்பான், சிறங்கு முதலான வைகள் தீரும்.

குறிப்பு :—

சரக்குகள் வகைக்கு 1 வராகனெடையானால் ஆமணக்கெண்ணெய் 1 சேர் எடுத்துக்கொள்ளவும்.

---

# 141. கிரந்தி, கரப்பான், சிறங்குகளுக்கு மருந்து.

எருக்கவேர் பாலுழக்கு வெக்காவேர்
வசம்புள்ளி யெண்ணெய்கூட்டி
வருக்கமா யெரித்திட்டுப் புண்கிரந்தி
தனிற்பூசி மத்தியானம்
பெருக்கரப் பதுதேய்த்துக் குளித்திடவும்
விரணங்கள் பேசாதோடுந்
திருக்கமலத் தாள்மார்பன் சரபேந்திர
னிம்முறையுஞ் செய்ததாமே (உசசு)

(இ-ள்)

| | |
|---|---|
| எருக்கம்வேர் | வெக்காவேர் |
| வசம்பு | பூண்டு |

இவைகளை வகைக்கு (1¼ வராகனெடை) யெடுத்து அம்மி யின்மேல் வைத்தரைத்து, நல்லெண்ணெய் 1 சேரும், எருக்கம் பால் ஒரு உழக்கும் விட்டு ஒன்று கலந்து, அடுப்பின்மே லேற்றிப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயைப் புண்கள், கிரந்திகள் முதலானவைகளின்மேல் பூசி, மத்தியான வேளை யில் அரப்புத் தேய்த்துக் குளிக்கவும்.

குறிப்பு :—

வெக்கவேர் என்பது என்னவென்று தெரியவில்லை. வெள்ளைக்காய்வேளையாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

---

## 142. கிரந்தி, கரப்பான், சிறங்குகளுக்கு மருந்து

கொடிவேலி யிருபலவேர் நாற்பதிடு
வெள்ளுள்ளி கொழுத்த பூண்டாய்
கடுஞ்சுக்கு விரல்நீளம் வசம்பளவு
மம்மட்டே கரிலரைக்கா-
சிடைகள்ளிப் பாலுமொரு கரண்டியா
யெள்ளினெண்ணெய் சேரக்கூட்டிக்
கொடுரக்கப் புண்கிரந்தி சிரங்குகளுங்
காய்ந்துபோங் குணமுண்டாமே (உசஎ)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | 2 பலம் |
| வெள்ளைப்பூண்டு | 40 (எண்ணிக்கையில்) |
| சுக்கு | ஒரு விரல் நீளம் |
| வசம்பு | ,, |
| மிளகு | ½ காசெடை |
| கள்ளிப்பால் | ஒரு கரண்டி (சுமார் ½ அவுன்ஸ்) |

இவைகளை ஒன்று சேர்த்து அம்மியின்மேல் வைத்து நசுக்கி, நல்லெண்ணெய் (4 சேருடன்) குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும்.

இதில் ஒரு காலறு அளவெடுத்துத் தினம் ஒருவேளை நக்கிவரப்

புண்கள், கிரந்திகள், சிறங்குகள் தீரும்.

குறிப்பு:—

இது பேதியாகும் குணமுள்ளதாகையால் குறைந்த அளவில் உபயோகிக்கவும்.

---

## 143 கிரந்திக்குச் சேர்வை.

வெள்ளைபெருங் குங்கிலிய மாமணக்கி
னெண்ணெய்தனை விட்டரைத்து
நள்ளவொரு பழுப்பிலே பூசிவிட்டுப்
போடுமறு நாளலம்பி
வின்னெட்டு நாள்பொறுத்துக் காலையுகி
னம்பழுப்பின் மேலும்பூசி
உள்ளகுழிப் புண்ணிலிட வேண்டினதிற்
குழிதூர்ந்து புலர்ந்து போமே (உசஅ)

(இ-ள்)

வெள்ளைக் குங்கிலியத்தைப் பொடிசெய்து, கல்வத்திலிட்டு ஆமணக்கெண்ணெய் விட்டு நன்றாக வரைத்துக் குழம்பாக்கி புளிமாவிலைப் பழுப்பிலே பூசிக் கிரந்திகளின்மேல் வைத்துக் கட்டிவிடவும். மறுநாள் காலையில் அம்மருந்தை எடுத்துவிட்டுப் புண்களைச் சுத்தமாகத்துடைத்து மறுபடியும் மருந்தைப்போடவும். இவ்வாறு 8 நாட்கள் கட்டிவரக் குழிப்புண்கள் தூர்ந்து உலர்ந்துவிடும்.

குறிப்பு:—உகினம்—புளிமாவிலை.

---

## 144. கிரந்திப் புண்களுக்கு வேது.

சாதிலிங்க மரிதாரம் கெந்தகந்
துரிசுமுள்ளிதனில் வித்தும்
ஓதுகண்டங் கத்திரியின் வித்திவைகள்
சமன்கூட்டி யுடன்றாட்செய்து
யிதையேழு பங்காக்கி யேழுதிரிச்
சேலைசெய்து மிருவேளைக்கும்
போதியொரு திரிகொண்டு யேழுதினம்
பசுநெய்யிற் புகட்டித்தானே (௨௪௯)

விளக்கேற்றி மேலூமுக்கா டிட்டுக்கொள்
மூன்றுதினம் வேதுங்கொண்டு
விளக்கெண்ணெ யால்முழுகு முத்தினங்கள்
மேலொருநாள் விட்டுத்தானே
குளித்திடக் கிரையுப்புப் பசுவினெய்
பாலுடனே கூட்டிக்கொள்ளு
இளப்பமில்லை பத்தியஞ்செய் புண்கள்போ-
யிம்முறையை யிசைந்து செய்யே (௨௫௰)

(இ-ள்)

| | |
|---|---|
| சாதிலிங்கம் | கெந்தகம் |
| தாளகம் | துரிசு |
| முள்ளிவிரை | கண்டங்கத்திரி விதை |

இவைகளைச் சமனெடை யெடுத்துக் கல்லுரலிலிட்டு நன்றாக இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இதனை 7 பங்குகளாக்கிச் சிறு சிறு வெள்ளைத் துணியில் பரப்பி, ஒரே சீராகத் திரித்துக் கொள்ளவும். இவ்வாறு செய்த 7 திரியையும் தினமொன்றுக்கு ஒரு திரி வீதமெடுத்துப் பசுவின் நெய்யில்

தோய்த்து ஓர் அகலிலிட்டு விளக்கேற்றித் தினம் காலைவேளையில் ½ திரியும் சாயங்கால வேளையில் ½ திரியும் உபயோகிக்கவும். அவ்வாறு விளக்கு எரிகையில் நோயாளியை யிதனருகில் இருக்கச் செய்து அவனை ஒரு வஸ்திரத்தினால் நன்றாக மூடி வேது பிடிக்கவும். 7 தினங்களுஞ் சென்றபின் விளக்கெண்ணெய் தேய்த்துக்கொண்டு 3 தினங்கள் சேர்ந்தாப்போல ஸ்நானஞ் செய்யவும். பின்பு ஒன்றைவிட்டொருநாள் ஸ்நானம் செய்யவும்.

**இதற்குப் பத்தியம் :—**

அரைக்கீரை, பசுவின்பால், நெய், உப்பு முதலியவைகள் கூட்டவும்.

புண்களாறும் கைகண்டது.

**குறிப்பு :—** முள்ளிவிதை—நீர்முள்ளிவிதை.

---

## 145. கிரந்தி, கன்னவாதத்திற்குப் பத்து.

முருங்கைவே ரெருக்கின்வேர் தூதளைவேர்
கருவேம்பின் மூலந்தானும்
எருமுட்டைப் புற்றுமண்ணும் வெருகமுக்
கிராக்கார்த்தி யின்கிழங்கும்
மருள்மூலங் கடுகுமிவை யரைத்துப்
பூசுகன்ன வாதந்தீரும்
குருகிரந்தி புரைபுண்கள் போகுமெனச்
சரபேந்திரன் கொடுத்ததாமே (உருக)

(இ-ள்)

முருங்கைவேர் எருக்கம்வேர்
தூதுவளைவேர் கருவேப்பிலை வேர்

| | |
|---|---|
| எருமுட்டைச்சாம்பல் அதாவது விபூதி | புற்றுமண் |
| கலப்பைக்கிழங்கு | அமுக்கிராக்கிழங்கு |
| கடுகு | மருளைக்கிழங்கு |
| | வெருகங்கிழங்கு |

இவைகளைச் சமனெடை யெடுத்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்றாகஅரைத்துப் பத்தாகப் போடவும்.

கிரந்திகள், கன்னவாதங்கள் தீரும்.

---

## 146. கிரந்தி, கன்னக் கிரந்தி, கன்ன வாதங்களுக்கு எண்ணெய்.

சிற்றவரை நீலியுப்ப கொண்டானுங்
கொடிவேலி சிவனார்வேம்பும்
உற்றகொன்றை பாக்கோவை பெருமருந்து
வனமல்லி யுயர்குறும்பை
பெற்றசெங்க தாரிவிளாவிரைமல்லி
வெள்ளறுகும் பின்குருந்து
மற்றகுன்றி பொன்முசுட்டை சாறணையுஞ்
சூத்தைகரில் வசம்புந்தானே (௨௫௨)

கான்குறிஞ்சிற் சிறுகுறிஞ்சில் கருஞ்சீர
மரிதகி கத்தூரிமஞ்சள்
தான்வெளுத்தைப் பிசின்பாம்புக் கண்டமுத்தி
னெண்ணெயுரி தனியெள்ளெண்ணெய்
யானெய்யவ் வளவுவிட்டுக் கூட்டியெரித்
ததைநக்க வரிகிரந்தி
வானகன்னக் கிரந்திமுதல் வாதங்க
ளறுமென வகுத்ததாமே (௨௫௩)

(இ-ன்)

| | |
|---|---|
| சிற்றவரை வேர் | அவுரிவேர் |
| உய்ய கொண்டான்வேர் (அதாவது கொய்யாவின் வேர்) | பாக்கோவை வேர் |
| கொடிவேலிவேர்ப்பட்டை | சிவனார்வேம்பு |
| கொன்றைவேர் | காட்டுமல்லிகை |
| குறும்பை | பெருமருந்து |
| செங்கதாரி | விளாம்பழத்திலுள்ளிருக்கும் விதை |
| மல்லிகைவேர் | வெள்ளறுகு |
| குருந்துவேர் | குன்றியின்வேர் |
| பொன்முசுட்டை | சாரணை |
| கூத்தைவேர் | மிளகு |
| வசம்பு | காட்டுக்குறிஞ்சான் |
| சிறுகுறிஞ்சான் | கருஞ்சீரகம் |
| கடுக்காய்த்தோல் | கஸ்தூரிமஞ்சள் |
| வெளிச்சைப்பிசின் | பாம்புக்கண்டம் |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) வீதமெடுத்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்றாக வரைத்து விழுதாக்கி, அதனுடன்

| | |
|---|---|
| பசுவின் நெய் | ½ படியும் |
| நல்லெண்ணெய் | ½ படியும் |
| ஆமணக்கெண்ணெய் | ½ படியும் |

விட்டுக் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயை வேளைக்கு ஒரு காலணா அளவு எடுத்து நக்கிவரவும்.

அரிகிரந்தி, கன்னக்கிரந்தி, வாதரோகம் முதலானவைகள் தீரும்.

குறிப்பு :—

குத்தைவேர் என்பது என்னவென்று புலப்படவில்லை.

## 147. கிரந்திக்குக் களிம்பு.

துரிசதனை மண்வெட்டி காயவைத்து
மதிலிட்டுத் தோய்புடஞ்செய்
பரிசம்பீ ரச்சாற்றி லரைத்துக்
கடுக்காய்த்தூட் பசுமஞ்சட்டூள்
ஒருகழற் கொடிகொழுந்து மரைசாந்து
மிவையெல்லா மொன்றாய்க்கூட்டி
மருவநல் லெண்ணெயிட்டு மரைத்திட்டு
மிடுகிரந்தி மாறுந்தானே (உருச)

(இ-ள்)

ஒரு புதிய மண்வெட்டியை அடுப்பின்மேல் வைத்துப் பழுக்கக் காய்ந்தபின் அதில் (½ பலம்) துரிசைப் போட்டுப் பொறித்து இறக்கிவிடவும். பின்பு அதனுடன் எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்றாக அரைக்கவும். இவற்றுடன்

| | |
|---|---|
| கடுக்காய்த்தூள் | (½ பலம்) |
| மஞ்சள்பொடி | (½ பலம்) |
| கழற்சிக்கொடிக்கொழுந்து | ,, |

இவைகளை வைத்து நன்றாக அரைத்து நல்லெண்ணெய் விட்டுக் குழைத்துக் களிம்பாகச் செய்துகொள்ளவும். இதைக் கிரந்திகளின்மேல் தடவிவரக் குணமுண்டாகும்.

# 148. பெருங்கிரந்தி, கண்டமாலைக்கு வாந்தி.

முற்றெருக்கம் பட்டைதனைத் தூளிகன்னி
    ற்றுவைத்து முரிபிர்நாழி
யுற்றபச்சைக் கொள்ளிடித்துப் பொடிதூளாய்
    முன்சாற்றி லுறக்கரைத்து
யற்றைவைக்கோல் வடிகொண்டு தெளிநீரைக்
    குடித்தாலுமாகும் சத்தி
ஒற்றைநுனி மஞ்சடனை யரைத்துநீ-
    ருட்குடித்தா லோங்குஞ்சத்தி (உருநு)

உடல்கொண்டு வயிரிழிந் தால்முசுட்டைப்
    பூவிலிலை யுண்மோருத்தி
யிடுதுவைத் தரமுட்டக் குடித்திட்டாற்
    சத்திசெய்யுமிசை பேய்ப்பீர்க்கின்
அடவுள காய் முப்பதனை வைக்கோலிற்
    றிரிட்டு மதனிற்போட்டுச்
சுடவெதும்பும் போதெடுத்து மிருநாழி
    சாறுபிழிந் தொருசட்டிக்குள் (உருசு)

கூவிளைவே ரழிஞ்சில்வேர் பொடிசிவி
    யதிலிட்டுக்கொள் பின்றியிற்
பாவனைசெய் துட்கடுகு கிரளவெடுத்
    தச்சட்டி பருகி முன்னர்
மெல்வைத்துப் பொடிசெய்து வெருகடிதா
    ளில்வெந்நீர் யிட்டிக் கொள்ள
கூவுசத்தி யாகுமிதிற் கிரந்திகண்ட
    மாலைகளுங் குணமதாமே (உருஎ)

(இ-ள்)

முத்தெருக்கப் பட்டையைக் கொண்டுவந்து கல்லுரலி லிட்டு நன்றாக இடித்து 4 மரக்கால் ஜலம் விட்டு அடுப்பின்

மேலேற்றி ½ படியாக வற்றக் காய்ச்சவும். பின்பு இதனு டன் பச்சைக்கொள்ளின் சூரணம் கொஞ்சம் போட்டு நன்றாகக் குழப்பி, வைக்கோல் பிரியை உபயோகித்து வடிகட்டித் தெளிந்த கஷாயத்தைப் பருகவும். வாந்தி உண்டாகும்.

(2) நுனிமஞ்சளை நன்றாக அம்மிமேல் வைத்து அரைத்துத் தண்ணீரில் குழப்பிச் சாப்பிட வாந்தியாகும்.

அதிகமான கழிச்சல் உண்டானால், மூசுட்டைப்பூவை, மோருடன் அரைத்துக் குழப்பி வயிறு நிரம்பக் குடிக்கவும். சத்தி ஏற்படும்.

பேய்ப்பீர்க்கங்காய் ஐம்பது எடுத்து வைக்கோலுக்குள் வைத்துக் கொளுத்தி நன்றாக வெதுப்பியபின், அவற்றை யிடித்துப் பிழிந்த சாறு சுமார் 2 படி எடுத்துக்கொண்டு ஒரு சட்டியிலூற்றி, அடுப்பின்மேலேற்றிக் கடுகு திரளும் வரை காய்ச்சிக்கொள்ளவும். இதனுடன், வில்வவேர்ச் சூரணமும், அழிஞ்சில் வேர்ச் சூரணமும்போட்டுக் கிண்டிப் பொடியானபின் சட்டியைக் கீழிறக்கி வெயிலில் வைக்கவும்.

இத்தூளில் மூவிரல் கொள்ளு மளவெடுத்து வெந்நீருடன் உட்கொள்ளவும். வாந்தி ஏற்படும்.

கிரந்திகள், கண்டமாலை முதலான ரோகங்கள் தீரும்.

---

# 149. கிரந்திக்குச் சேர்வை.

முளிமஞ்சட் பொடிசெய்து தெள்ளிவைத்துப்
பாதரத முரிக்கக்கேளு
வெளியவெற் றிலைச்சாற்றில் மேனியிலைச்
சாற்றிலொன்று விட்டுச்சுத்தி

குளி(மி)க்கல்லி லாட்டியரைக் கழஞ்சுங்கொள்
 கற்சுண்ணங் கூடப்போட்டு
ஒளியென்னெ யாலரைத்துக் கிரந்திக்கி
 நுணுவிலையி லொதியிற்போடே (உ௫அ)

(இ-ள்)

முளிமஞ்சளைக் கல்லுரலிலிட்டு நன்றாக இடித்து வஸ்திர காயஞ் செய்துகொண்டு, ஒரு கல்வத்திலிட்டு சுத்திசெய்த பாதரஸம் அரையேயரைக்கால் வராகனெடை விட்டு, வெற்றிலைச்சாறும், குப்பைமேனிச்சாறும் விட்டு நன்ருக அரைத்து முறித்துக்கொள்ளவும். பின்பு, கற்சுண்ணம்பு சரியளவெடுத்துக்கூட்டி, ஆமணக்கெண்ணெய் விட்டு நன்ருக அரைத்து மெழுகு பதத்திலெடுத்து, ஒரு சிமிழில் பத்திரப்படுத்தவும். இதை நுணுவிலையிலோ, அல்லது ஒதியம் இலையிலோ தடவிக் கிரந்திப் புண்களுக்குப் போட அவைகள் ஆறும்.

---

## 150 கிரந்திக்கு மருந்து.

கர்த்துபத்தின் காய்ந்தலெத்தி கொண்டுவந்தோர்
 புதுச்சட்டிக் கடைப்படிநீர்
குத்தெருவிட் டிருநிட்கங் கருஞ்சீர
 மரைச்சிரங்கை கொண்டருள்ளி
யித்தையுடை தன்னில்மூடிங் தச்சட்டி
 யுள்ளிட்டு மிரவிலூற
வைத்துதைய காலமெடுத் ததையங்ரா
 லரைத்துவழித் தெடுத்துக்கொண்டே (உ௫கூ)

கொண்டதனை யரைப்படி முந்நீரி
 னுட்கலந்து கொள்ளத்தானுங்
கண்டந்தி வேளையிலு மிப்படியே
 யேழுதினங் காலையாகும்

உண்டபுளிப் புப்புத்தள் ளிமறுபத்
தியஞ்செய் யோரேழ்நாட்டான்
அண்டாது கிரந்தியெலாந் திருமெனச்
சரபேந்திர னுரைந்ததாமே (உசுஙி)

(இ-ள்)

கழுதை லெத்தியைக் காய்ந்ததாக ஒரு குத்தளவு கொண்டு வந்து ஒரு புதுச்சட்டியிலிட்டு, ஒரு படி சுத்த ஜலம் விட்டு, அதனுடன்,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | 2 வராகனெடையும் |
| ஈரவெங்காயம் | அரைச்சிரங்கையும் |

எடுத்து ஒரு முட்டையாகக் கட்டி அத்தண்ணீருக்குள் ஒரு இரவு முழுவதும் ஊறப்போடவும். மறுநாள் காலை அம் முடிச்சை யவிழ்த்து, அத்தண்ணீரை விட்டு நன்றாக அரைத்துக்கொண்டு, மீதமுள்ள தண்ணீரிலே கலக்கிக், காலையில் அரைப்படி தண்ணீரும் மாலையில் அரைப்படி தண்ணீரும் குடிக்கவும். இவ்வாறு 7 நாளைக்குச் சாப்பிடவும்.

**பத்தியம் :—**

உப்பு, புளிப்புச் சுவைகளுள்ள பதார்த்தங்களை நீக்கி விடவும். மறுபத்தியம் 7 நாட்கள் பிடிக்கவும். கிரந்திகள் தீரும்.

---

# 151. கிரந்திக்குச் சூரணம்.

சார்பரங்கிப் பட்டையிரு பலஞ்சாதிக்
காய்கிராம்புஞ் சாதிப்பத்திரி
யோர்வகைக்கு நிட்கமொன்றுஞ் சிற்றரத்தை
முக்கடுகு மூடனதிங்கம்

பார்கடுகுரோகிணியுஞ் செங்கதாரி
யின்புரானி பகர்வகைக்கு
நேர்பலங்கால் பதினொன்றுஞ் சேர்த்திடித்து
வடிகொண்டு நிகழ்த்தக்கேளே (உசுக)

சூரணத்தை யொருவேளைக் கொருவெரு
கடியளவு தொட்டுப்பத்து
வாரங்கொள் ளக்கடுகடுப் பெடுத்தாலு
முத்தினெண்ணெய் வார்த்தென்னுக்
கோர்முழுக்குச் செய்திடவும் கிரந்திப்புண்
போம்பசுமோ ரொன்றுங்கூட்டி
யாறவெந்நீர் மெய்குளிக்க லாகுமென்றுஞ்
சரபேந்திர னரைந்ததாமே (உசுஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| சுத்திசெய்த பரங்கிப்பட்டை | 2 பலம் |
| சாதிக்காய் | 1 வராகனெடை |
| கிராம்பு | 1 வராகனெடை |
| சாதிப்பத்திரி | 1 வராகனெடை |
| சித்தரத்தை | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| அதிமதுரம் | கடுகரோகிணி |
| செங்கதாரிப்பட்டை | |

இவைகள் வகைக்கு ¼ பலம்

இவைகளை நன்றாகக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். தினம் ஒரு வேளை மூவிரல் கொள்ளுமளவெடுத்து (வெந்நீருடன்) உட்கொள்ளவும்

இவ்வாறு 10 நாட்கள் சாப்பிடவும். வயிற்றுக் கடுப்பு, ஏற்பட்டால் 8 நாட்களுக்கொரு தடவை ஆமணக்கெண்ணெய் தேய்த்துக்கொண்டு தலை முழுகவும்.

கிரந்தி, புண்கள் முதலியவை தீரும்.

**பத்தியம் :—**

பசுவின் மோருத்திச் சாதம் சாப்பிடவும். ஆறவைத்த வெந்நீரைக் குளிப்பதற்கு உபயோகிக்கவும்.

---

## 152. கிரந்திக்கெல்லாங் 'கருங்கோழிச் சூரணம்'

கருங்கோழி கொண்டுவந்து தலை குடல்
 லீரல்மயிர்க்காலும் போக்கிக்
குரு பரங்கிப்பட்டை யெழுபது நிட்கம்
 பாதரதங் கூட்டு மூன்றும்
தருசூத செந்தூர மிருநிட்க
 மொன்றுகுஞ் சாதிக்காய்தான்
மருவிடதின் வயிற்றுள் வைநூற்கயிற்றி-
 னற்றைத்து மண்டாழிக்குள் (உகரு)

தாழியிலு நாலுமரக் காணீரை
 யூத்தவ்வாய் தானைவேட்டிற்
கோழியைவை பெரும்பானை மூடியும்மண்
 பூசுவிற கொருசாதியாய்
ஊழியெரித் துங்குறுணி நீர்வத்திப்
 பின்னிறக்கி யுருப்பமாற்றிக்
கோழிதனை யுரலிட்டு நொறுங்கிடித்தாள்
 வடிசெய்துக் கொண்டுந்தானே (உகசா)

கொள் கலசந்தனில் வைத்துக் காலையொரு
 பிடியந்திக் கொரு பிடிதான்
விள்ளஞ்சு தினமுண்ணப் பத்தியமா
 யிருசாதம் வெந்நீருந்தான்

கொள்ளாருநாள் முத்திநெண்ணெய்தலை
யிட்டுசிலைக் கொழுந்தரப்பால்
உள்ள வெந்நீர் முழுகஞ்சு தினமறு
பத்தியத்திலுப்புக் கூட்டே (உகரு)

(இ-ள்)

ஒரு வியாதியில்லாத கருங்கோழியைக் கொண்டுவந்து, அதன் தலை, மயிர், கால்கள் முதலியவைகளை நீக்கி, அதன் வயிற்றைக்கீறிக் குடலையும், ஈரலையும் நீக்கிவிடவும்.

சுத்திசெய்த பரங்கிப்பட்டை 70 வராகனெடை (7 பலம்) எடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

ஒரு சுத்தமான கல்வத்தில்,

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த பாதரஸம் | 3 | வராகனெடை |
| ,, இரஸச் செந்தூரம் | 2 | ,, |
| சாதிக்காய் | 1 | ,, |

இம்மூன்றையும் இட்டு, நன்றாக அரைத்து, முன்சொன்ன பரங்கிப்பட்டைச் சூரணத்துடன் கலந்துகொண்டு, கருங் கோழியின் வயிற்றிற்குள் திணித்து நூல்கயிறுகொண்டு தைத்துவிடவும்.

ஒரு வாயகன்ற சட்டியில் 4 மரக்கால் சுத்த ஜலம்விட்டு, அதன் வாய்க்கு மெல்லிய வெள்ளைத் துணியினால் வேடுகட்டவும். அதன்மேல் கருங்கோழியை வைத்து, அச்சட்டிக்குத் தக்கபடி வாய்பொருந்தும் மற்றொரு சட்டியினால் மூடி, அதன் சந்துவாய்க்குச் சீலைமண் செய்து, அடுப்பின்மேலேற்றிக் கொதிக்கவைக்கவும்.

ஒரே ஜாதியான விறகினால் எரிக்கவும். சாலில் உள்ள ஜலம் 1 மரக்காலாக வற்றும்வரை எரித்து, பானையைக் கீழே

யிறக்கி, சிலைமண்ணைப் பிரித்து, கோழியை யெடுத்து நன்றாக ஆறவைத்து உரலிலிட்டு நொறுங்க இடித்து வஸ்திரகாயஞ் செய்து ஒரு புதுக்கலசத்தில் பத்திரப்படுத்தவும்

இதில் ஒரு பிடியளவெடுத்துத் தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும், இவ்வாறு 5 நாளைக்கு உபயோகிக்கவும்

**பத்தியம் :—**

தினந்தோறும் வெந்நீர்சாதம் மாத்திரமே சாப்பிடவும். 6-வது நாளன்று விளக்கெண்ணெய் தேய்த்துக்கொண்டு, உசிலம்பொடியிட்டு வெந்நீரில் ஸ்நானஞ் செய்யவும்.

மறுபத்தியம் 5 நாளும் பிடிக்கவும். உப்பை வறுத்து உபயோகிக்கவும். கிரந்திகள் தீரும்.

---

## 153. கிரந்திக்குக் களிம்பு.

வெத்திலைநீ ரோர்கலத்தில் விட்டிரண்டு
பணவெடையாய் வெண்சூதந்தான்
உத்திரண்டுங் குழப்பிட்டுத் துருசியொரு
பாக்களவாயுடன் கலந்து
மத்தி பசுவெண்ணெயு நாற் பாக்களவு
கூட்டுசெம்பால் மத்தனஞ்செய்
தொத்தவுட னேர்சிமிழி லடைபுண்ணி
லிடக்கிரந்தி யுலர்ந்துபோமே (உசுசு)

(இ-ள்)

ஒரு கல்வத்தில் வெற்றிலைச்சாறு விட்டு அதில் சுத்தி செய்த பாதரஸம் 2 பணவெடை கூட்டி, நன்றாக அரைத்துக்

கொள்ளவும். மசிந்தபின், சுத்திசெய்த துருசு- 1 பாக்களவும் பசுவின் வெண்ணெய் 4 பாக்களவும் கூட்டிச் செம்பு பாத்திரத்திலால் மத்தித்து வைத்துக்கொள்ளவும் இக்களிம்பை ஒரு புதுத்துணியில் தடவிப் புண்களிலும், கிரந்திகளின்மேலும் போடவும். அவைகள் ஆறும்.

குறிப்பு :—

72 செ. சுவடியில் 'இக்களிம்பைப் புண்களிலிடத் தண்ணீர் வடியும். மறுபடியும் போட அவை ஆறும்' என்று காணப்படுகிறது.

---

## 154. கிரந்திக்கு எண்ணெய்:

மாவிலுப்பை யொதிநெல்லி வேலழிஞ்சி
 விளையொறு வகையின்பட்டைப்
பாவியரை வசம்புள்ளி வேம்பாடம்
 அதிமதுரம் பகர்ந்த நாலுஞ்
சீவியரைத் திதையோர்சே ரெண்ணெயிலுங்
 கூட்டிவடித்திடக் கிரந்தி
யாவதெலாந் தீருமெனச் சரபோசி
 மகராசன் அரைந்ததாமே (உ சுள)

(இ-ள்)

| | |
|---|---|
| மாம்பட்டை | ஒதியம்பட்டை |
| இலுப்பைப்பட்டை | நெல்லிப்பட்டை |
| கருவேலம்பட்டை | அழிஞ்சில்பட்டை |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து, அம்மியின்மேல் வைத்து அரைத்து, இதனுடன்

| | |
|---|---|
| பூண்டு | வசம்பு |
| வேம்பாடம்பட்டை | அதிமதுரம் |

இவைகளையும் சேர்த்து நன்றாக அரைத்து நல்லெண்ணெய் ஒரு சேருடனே கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயைக் கிரந்திகளுக்கிடவும்.

குறிப்பு:—

சரக்குகளை வகைக்கு 1 வராகனெடை எடுத்துக்கொள்ளவும்.

---

## 155. கிரந்திக்குச் சேர்வை.

சுடுகாட்டிற் கனித்த வெள்ளெலும்புங்
காசுக்கட்டித் தூளாய்ச்செய்து
எடுகறைப்பற்றின மண்வெட்டிதனி
லிட்டு முத்தினெண்ணெய் விட்டுத்
தொடுசங்கு கொண்டிழைத்து வழித்துவை
புண்ணளவிற் றுணிகிழித்து
நடுவிட்டுப் போட்டிடவுங் காய்ந்துபோம்
விரணங்கள் நலமுமாமே (உசூஅ)

(இ-ள்)

சுடுகாட்டில் தகனம்பண்ணின (வெந்த) எலும்பும், காசுக்கட்டியும் சமனெடை யெடுத்து, ஒரு துருப்பிடித்த மண்வெட்டியில் வைத்து, ஆமணக்கெண்ணெய்விட்டு ஒரு சங்கினாலிழைக்கவும். பின்பு இதை வழித்து வைத்துக்கொண்டு, புண்ணினளவிற்குத் தக்கபடி ஒரு வெள்ளைத் துணியில் தடவிப் புண்களில் போடவும்.

அவை காய்ந்து போம் கைகண்டது.

---

## 146. கிரந்தி, புண், புரைகளுக்கு 'வீரமெழுகு'.

வீரமொரு நிட்கமதை வாழைமூலந்
துளையாக விட்டுக்கட்டி
சேரவைத்து மொருசாம மெரித்திட்டோர்
காசினெடை சிராவெண்ணெ
யாறவொரு கல்வத்தி லரைப்பதிலு
முக்கடுகு மதுவகைக்கு
நேரவிரு நிட்கமிட்டு மிளவறுப்பாய்த்
தாளிடித்து நிகழ் சேலைக்கே (உ௬௬)

வடிக்கட்டிமுன் மருந்திற் கலந்திட்டு
மரைப்பதிதை வழித்துவைக்கும்
படிசிமிழிலிடு கிரந்தி கொண்டவர்க்குக்
கொடுப்பதொரு பயறுமட்டாய்க்
கடிபுரை புண்விரண மெல்லாந்தீரு
மிந்தமுறை கைக்கண்டுந்தான்
குடிகாவற்பூண்ட செங்கோற் சரபோசி
மகராசன் கொடுத்ததாமே (உ௬எ)

(இ-ள்)

சுத்திசெய்த வீரம் — 1 வராகனெடை ஓரே கட்டியாக எடுத்து, வாழைக்கிழங்கைத் துளைத்து அதனுள்ளே வைத்து (சாணிக்கவசம் செய்து காய்ந்தபின்) அடுப்பிலிட்டு எரிக்கவும். பின்பு அவ்வீரத்தை யெடுத்துக் கல்வத்தில் வைத்துப் பசுவின் வெண்ணெய் ஒரு காசெடைகூட்டி நன்றாக அரைக்கவும். பின்பு இதனுடன்

| | |
|---|---|
| சுக்கு | 2 வீராகனெடையும் |
| திப்பிலி | ,, |
| மிளகு | ,, |

எடுத்துப் பொன் வறுவலாக வறுத்துச் சூரணித்து வஸ்திர காயஞ் செய்து, மேலே சொல்லிய விரணெண்ணெயுடன் கூட்டி யொன்றுசேரும்படி யரைத்து, ஒரு சிமிழில் பத்திரப் படுத்தவும். இதில் ஒருபயறள வெடுத்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

புண்கள், புரைகள், விரணங்கள் முதலியவை தீரும். கைகண்டது.

---

## 157. உடையாத சிலந்தி, உடைந்த சிலந்தி முதலியவைகளுக்கு மருந்து.

ஆமணக்கினுட் பருப்பை மாதர்முலை
யமுதத்தாலரைத்துக்கொண்டு
ஊமத்தை பெரும்பசளை துத்தியிலை
யிவையொன்றி லூட்டி வாட்டித்
தாமித்தையுடையாத சிலந்திகளிற்
போடுடைந்தாற் றண்டுளாயுங்
காமமிகு வெற்றிலை கற்பூரவல்லி
யென்றுமியக் காய்ந்துபோமே (உ௩க)

(இ-ள்)

ஆமணக்கங்கொட்டையினுள்ளே யிருக்கும் பருப்பை வேண்டிய அளவெடுத்துக் கல்வத்திலிட்டுத் தாய்ப்பால் விட்டரைத்து மெழுகாக்கி, ஊமத்தையிலையிலோ, அல்லது பெரும் பசளையிலையிலோ அல்லது துத்தியிலையிலோ ஒரே சிராகத் தடவி அனலில் வாட்டி உடையாத சிலந்திகளின்மீது போடவும். அவை உடைந்துவிடும்.

(2) வாய்ச் சிலந்திக்கு :—

வெற்றிலை, துளசி இலை, கற்பூரவல்லி இலை முதலான வைகளை மென்று உமிழவும். அவை தீரும்.

---

## 158. சிலந்தியுடன்கூடிய வியாதிக்கு எண்ணெய்.

திலவெண்ணெ யொருநாழி கருஞ்சீர
 முடனுடு தீண்டாப்பாளை
மலகரு நொச்சிசிறு சின்னியுஞ்
 சங்கங்குப்பி வகையொன் றுக்கு
இலையொரு பிடிகூட்டித் துவைத்துச்சா-
 றும்பிழிந்துமிதில் வெம்பாடல்
கலபூதக்கரப்பான் செங்கதாரி
 யிவைமூன் றுங் காணுந்தோலே (உ௬உ)

பொடிசெய்தும் போட்டெரித்துப் பதத்தில்வடித்
 துச்சிலந்திப் புண்ணுக்கெல்லாங்
கொடிவேலி வேரரைத்தோ ரெலுமிச்சங்
 காயளவு கோவின்பாலும்
படிநாழியிற் கரைத்துக் காய்ச்சியுறைக்
 குத்து கடைபட்ட வெண்ணெய்
துடிகோவையிலைப்பூசிப் புண்ணிலிட
 விரணங்கள் சுகமாய்ப்போமே (உ௬௩)

(இ-ள்)

சுத்தமான எள்ளெண்ணெய்— 1 படியுடன்,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | 1 பிடி |
| ஆடுதீண்டாப்பாளையிலை | 1 பிடி |

| | |
|---|---|
| கருநொச்சியிலை | 1 பிடி |
| சிறுசின்னி | 1 பிடி |
| சங்கங்குப்பி | 1 பிடி |

இவைகளைக் கல்லுரலிலிட்டு இடித்துப் பிழிந்த சாற்றைக் கலந்து, இதனுடன்

வேம்பாடம்பட்டை
பூதகரப்பான்பட்டை
செங்கதாரிப்பட்டை

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) வீதமெடுத்துப் பொடிசெய்து போட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

சிலந்திப் புண்களுக்குப் போடக் குணமாம்.

(2) பச்சையான கொடிவேலி வேரை ஒரு எலுமிச்சை யளவெடுத்துக் கைபடாமலரைத்து 1 படி பசுவின் பாலில் குழப்பி, அடுப்பின்மேல் வைத்துக் காய்ச்சிப் பிறை குத்தவும். மறுநாளிதைக் கடைந்து வெண்ணெயை யெடுத்துக் கோவை யிலையில் தடவிப் புண்களிலிட அவைகள் ஆறும்.

---

## 159. செவ்வாப்புக்கு மருந்து.

பாலருக்குச் செவ்வாப்புக் கட்டிகண்டாற்
றுத்தியிலை பருத்திதானுஞ்
சீலெண்ணெயிற் பிசைந்திடு பருதி
முன்னர் வைத்துச் சிறங்கிற்பூசு
ஆலமுண்டோன் வேம்பினில் வேரிடித்து
முத்தெண்ணெயிலு மதைப்பிசைந்து
காலவெயில் வைத்துளுங்கொள் மேலூட்டிடச்
செவ்வாப்புக் காய்ந்துபோமே (௨எச)

(இ ள்)

சிறு குழந்தைகளுக்குச் செவ்வாப்புக் கட்டிகளுண்டானா லதற்கு மருந்து :

பருத்தி யிலையும்
துத்தி யிலை

வகைக்கு (1பிடி) எடுத்து அரைத்து வேப்பெண்ணெயுடனே (1சேர்) குழப்பிவைத்துச் சூரிய புடமிடவும். இந்த எண்ணெ யைச் சிறங்குகளில் பூசவும்.

(2) சிவனார்வேம்பு வேரைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ் திரகாயஞ் செய்துகொண்டு ஆமணக்கெண்ணெயுடன் குழப்பி வெய்யிலில் வைக்கவும். இதனை உள்ளுக்கும் (காசெடை) கொடுத்து மேலுக்கும் போடவும். குணமுண்டாகும்.

---

## 160. செவ்வாப்புக்கு

மணிக்குட்டித்தக்காளி யுஞ்சாறு
நாயுருவி வளர்ந்த வேரும்
அணித்தரைத் தலைதப்பூசத் திருமிதைக்
கொதிப்பித்துள் ளருந்தக்கட்டி
பிணிதிருங் கிளிமூக்குக் கிழங்குநன்-
ஞரியின்வேர் பிரணரைத்துப்
பணித்தெண்ணெயிற் குழப்பிக் காலையிலும்
விழுங்கப்போம் படுசெவ்வாப்பே (உஎரு)

(இ-ள்)

(1) மணிக்குட்டித் தக்காளிச் சாற்றினால் நாயுருவி வேரை, அம்மியின்மேல் வைத்து நன்முகவரைத்துச் செவ் வாப்புக் கட்டிகளின்மேல் பூசவும். இதையே கொதிக்க

வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும். செவ்வாப்புக் கட்டிகள் தீரும்.

(2) நன்னாரிவேர்
கிளிமூக்குக் கிழங்கு

இவ்விரண்டையும் சமனெடை யெடுத்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்றாக அரைத்து நல்லெண்ணெ யுடன் குழப்பித் தினம் காலைவேளைகளில் சாப்பிடவும். செவ்வாப்புக் கட்டி தீரும்.

குறிப்பு :— கிளிமூக்கன்—கற்றாழை.

## 161. படுவனுக்கு மருந்து.

படுவனுக் கானபுளி நரளையி
னிற்கிழங்கைப் பரித்தெடுத்தும்
அடுபுளிரசத்தாலரை கரண்டியுட்
கொதிப்பித்து மதனிற்கட்டப்
படுமொரு வருடத்திறுமதி
சிலகட்டும் படுவன்றீருந்
தொடும்படி பத்துமுறை கட்டிடவு
மாறிப்புண் சுகமாய்ப் போமே (உஎசு)

(இ-ள்)

புதிய புளி
புளிநரளைக்கிழங்குச் சாறு

இவ்விரண்டையும் ஒரு இரும்புக் கரண்டியிலிட்டு அடுப்பில் வைத்துக் கொதிக்கவைக்கவும். இறுகிய பின்பு இதைப் படுவனில் மேல்வைத்துக் கட்டவும்.

ஒருவருடஞ் சென்றதோ, ஆறுமாதமான படுவன்களோ வெகு சீக்கிரத்தில் ஆறும். இவ்வாறு 10 முறைகள் கட்டவும்.

## 162. குடற்படுவனுக்கு மருந்து.

பன்னிரண்டு கிராம்புதிப் பிலியளவப்
படியாம் பருத்திக்கொட்டை
யினிற்பருப்பா வாரம்பூ வகைக்கொரு
நிட்காரிட்டு மிதையுழக்குத்
தனிநீரை வார்மருந்து தீயாம
லவியரைத்துத் தான குடிக்க
கனி துடற் படுவன்போ மிம்முறையைச்
சரபேந்திர னவின்றதாமே (௨௭௭)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| கிராம்பு | 12 | வராகனெடை |
| திப்பிலி | 12 | ,, |
| பருத்திக்கொட்டைப் பருப்பு | 1 | ,, |
| ஆவாரம்பூ | 1 | ,, |

இவைகளை அம்மியின்மேல் வைத்து, ஒரு உழக்குத் தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து ஒரு சட்டியிலிட்டு, அடுப்பின் மேலேற்றி மருந்து தீய்ந்துவிடாமல் கிண்டிவரவும். இதை இறுகிய பதத்திலிறக்கி உட்கொள்ளவும்.

குடற்படுவன் தீரும். கைகண்டது.

---

## 163. படுவன், பருவிற்கு மருந்து.

கொடிவேலி குளப்பாலை நீலியிது
மூன்றுநின்வோர் கொடுசமந்தான்
இடியாக மாயரைத்துக் கோதிபாலிற்
கலந்துள்ளே யியமுன்வேர

தோடிசமன் கூட்டியரைத் திருநாழி
கொச்சையின் பாற்றனைகரைத்து
விடுமிரி யசனஞ்செய்துப் படுவன்
மூத்தினத்தில் விழலாய்ப்போமே (உஎஅ)

(இ-ள்)

கொடிவேலி வேர்ப்பட்டை
குளப்பாலை வேர்
அவுரி வேர்

இம் மூன்றையுஞ் சமவெடை யெடுத்து, அம்மியின்மேல் வைத்தரைத்துச் சூடான பசுவின் பாலுடனே குழப்பியுட்கொள்ளவும்.

(2) முன்சொன்ன வேர்களையரைத்த விழுதை ஆட்டுப் பால் 2 படியுடன் கலந்து, அதில் அரிசி போட்டுச் சாதம் சமைத்துச் சாப்பிடவும். மூன்று தினங்களுள் படுவன் தீரும்.

## 164. பரு, படுவன்களுக்கு எண்ணெய்.

இலுப்பையிலைப் பட்டைகுன்றி யிலைசெருப்
படியரைத்தி லுப்பெண்ணெய்க்குள்
கலக்கிவைத் தெரியிட்டுப் பருப்படுவன்
றன்னிலிடக் காய்ந்துபோகுங்
குலப்பசு வெண்ணெயிலுங் குன்றியிலை
தானரைத்துக் குழைத்த புண்வா-
யிலுக்குமிட மாறிப்போ மதிவிடையங்
காடியினி லிழைத்துட்கொள்ளே (உஎக)

(இ-ள்)

இலுப்பைப்பட்டை குன்றிமணியிலை
இலுப்பையிலை செருப்படை

இவைகளைச் சமனெடுத்து அம்மியின்மேல் வைத்து நன்றாக வரைத்து இலுப்பெண்ணெயில் குழப்பி, அடுப்பின்மே லேற்றி எரித்துப் பதத்திலிறக்கி, பரு, படுவன் முதலியவை களுக்கு இடவும். அவை காய்ந்துபோகும்.

(2) குன்றிமணி இலையைப் பசுவின் வெண்ணெயுடன் கூட்டிக் களிம்பாகச் செய்து புண்களிலிடவும்.

(3) அதிவிடயத்தைக் காடியுடனரைத்துக் குடிக்கவும். படுவன் தீரும்.

குறிப்பு:—

கடைசியாக எழுதப்பட்ட முறை 'குடல் படுவனுக்கு' என்று 72 நெ. சுவடியில் காணப்படுகிறது.

---

## 165. பருப் படுவனுக்கு மருந்து.

நரிமல மிளகுந்தூட் செய்து குப்பை
மேனிரசந் தனில் கலந்து
சிரந்தடவப் பொற்கண்ணி வேரழிஞ்சில்
வேரரைத்துத் தேனுநெய்யிற்
கரந்திடு புண்முகத்திற் றலையிலும்
வைத்திடவுங் கசந்தவேம்பின்
முரிகொழுந் தெலுமிச்சங் காயளவா
யரைத்திட்டு மோரிற்கொள்ளே (உஅ)

(இ-ள்)

(1) நரிவிட்டை (காய்ந்தது)
மிளகு

இவ்விரண்டையுஞ் சமனெடுத்துச் சூரணித்துக் குப்பை மேனிச்சாறு விட்டு நன்றாகவரைத்துத் தலையில் தேய்த்துக் கொண்டு ஸ்நானஞ் செய்யவும்.

(2) பொன்னாங்காணி வேர்
அழிஞ்சில் வேர்

இவைகளை அம்மியின் மேல் வைத்தரைத்துத் தேனிலோ அல்லது நெய்யிலோ குழைத்துப் படுவன் புண்ணின் மேல் தடவவும். இதையே தலையிலும் தடவிக்கொள்ளவும்.

(3) வேப்பங்கொழுந்து ஒரு எலுமிச்சை யளவெடுத்து நன்றாக வரைத்துப் பசுவின் மோரில் குழப்பி உட்கொள்ள வும். பரு, படுவன்கள் தீரும்.

---

## 166. குஷ்டத்திற்கு மருந்து.

வேம்பதின்மேற் புல்லுருவி நாகரமுங்
கடுக்காயு மிகுநெல்லிமுள்ளிச்
சாம்புகளிப் பாக்குடனுந் தான்றிக்கா
யிவையிட்டுந் தணலிற்காய்ச்சிக்
கூம்புழக்குச் சாறுமா வெண்ணெயெள்ளி
னெண்ணெயுடன் குடிக்கத்திரும்
பாம்புமுடி மேற்சுமக்கும் பராபரிக்கும்
சரபேந்திரன் பகர்ந்ததாமே (உ௮௧)

(இ-ள்)

வேப்பமரத்தின் மேலுள்ள புல்லுருவி
சுக்கு
நெல்லிமுள்ளி
களிப்பாக்கு
தான்றிக்காய்த்தோல்

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து ஒரு பாத்திரத்தி லிட்டு 16 மடங்கு சுத்த ஜலம்விட்டு ஒரு உழக்காகும்வரைக் காய்ச்சவும். இக்கஷாயத்தை இறுத்து இதனுடன் (சுண் டைக்காயளவு) பசுவின் வெண்ணெயும், நல்லெண்ணெயும் (2 ஸ்பூன்) சேர்த்துக் குடிக்கவும். குஷ்டம் தீரும்.

---

## 167. குட்டத்திற்கு மற்றொரு மருந்து.

நாகமெனுந் தாளியின்வேர் நிழலுலர்த்-
திப்பொடிசெய் நலமாய்த்தானும்
பாகமிதிற் சாரணையின் கிழங்கின்றா-
ளதுகூட்டிப் பசுவினீரில்
ஆகவிட்டு மண்டலமுங் குடித்திட்டாற்
குட்டமெல்லா மாறிக்காய்ந்து
போகவிது கையில்வந்த முறையாகச்
சரபேந்திரன் புகன்றதாமே (உஅஉ)

(இ-ள்)

நாகதாளிவேரைக் கொண்டுவந்து சிறுசிறு துண்டுகளாக்கி, நிழலில் உலர்த்திக்கொண்டு, கல்லுரலிலிட்டிடித்து வஸ்திர காயம் செய்துகொண்டு, அதற்குச் சமனெடை சாரணைவேர்ச் சூரணம்போட்டு ஒன்று கலந்துகொள்ளவும். இதில் ஒரு குத் தளவெடுத்துப் பசுவின் மூத்திரத்துடன் 40 நாட்கள் உட் கொள்ளவும். குஷ்டரோகந் தீரும்.

குறிப்பு :—

சாரணை—வெள்ளைச்சாரணை.

---

# 168. குஷ்ட முதலானதற்கு மருந்து.

புலிதுடக்கி வேர்ப்பட்டை தனையுலர்த்
திடிதூளிற்புகலுங்கோட்டம்
நிலவேம்பு முக்கடுகு மஞ்சளுடன்
றிரிபலையு நேர் பொடித்துக்
கலந்திட்டு வேம்பினெய்யில் விழுங்கிடொரு
மண்டலந்தான் கருத்தகுட்டம்
புலந்தசெங் குட்டமுதற் றீருமெனச்
சரபேந்திரன் புகன்றதாமே (உஅங)

(இ-ள்)

இண்டம் வேர்ப்பட்டையைக் கொண்டுவந்து நிழலில் உலர்த்திக் கல்லுரலிலிட்டு நன்றாக இடித்து, அதனுடன்

| | |
|---|---|
| கோஷ்டம் | நிலவேம்பு |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | மஞ்சள் |
| கடுக்காய்த்தோல் | நெல்லிவற்றல் |
| தான்றிக்காய்த்தோல் | |

இவைகளை சமனெடை யெடுத்துக் கூடப்போட்டு இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இதில் மூவிரல் கொள்ளு மளவெடுத்து வேப்பெண்ணெயுடன் குழைத்து விழுங்கவும். 40 நாட்களுள்

கருங்குஷ்டம் செங்குஷ்டம்

முதலான ரோகங்கள் தீரும்.

## 169. பதினெண் குஷ்டத்திற்கும் மருந்து.

இலவமதின் வேருடன்றேற் கரில்பழுஞ்
சோடுசுட்டு மிவைதூளாக்கி
நல்லவெள்ளு முன்னருந்திப் பின்னையிந்தப்
பொடிதன்னை நற்றேன் றன்னிற்
புல்லிடவுங் குழைத்துள்ளே விழுங்கிடப்
பதினெட்டுப் புண்ணுங் குட்டஞ்
சொல்லவெருவியும்போகு மிம்முறையைச்
சரபேந்திரன் சொன்னதாமே (உஅச)

(இ-ள்)

இலவம்வேர்ப்பட்டை
மிளகு

இவ்விரண்டையுஞ் சமனெடை யெடுத்துக் கல்லுரலில் இட்டிடித்து வஸ்திரகாயஞ்செய்து கொள்ளவும். நோயாளி முதலில் எள்ளை வாயில் போட்டுக்கொண்டு மென்று தின்றபின், மேலே சொன்ன பொடியில் மூவிரல் கொள்ளுமளவெடுத்துத் தேனில் குழைத்து விழுங்கவும்

18 வகைக் குஷ்டங்களுந் தீரும். சுகமுண்டாகும்.

---

## 170. வெள்ளை, கறுப்பு, செங்குஷ்டங்களுக்கு மருந்து.

காரெள்ளெண் ணெய்நாழுழி பெருமுட்டிக்
சிறுகுறிஞ்சா காணீர்ப்பூலா
வோர்வகைக்குச் சாறுழக்காய் சேங்கொட்டை
நூற்றிருபா ஞெக்கக்கூட்டி

நீரெரித்துக் காய்ந்து வற்றி நாலுரி
யாகவடி நின்றெண்ணெய்க்குள்
சேரிரதங் கழஞ்சிருபான் கூட்டியுட்கொள்
குட்டமெலாந் திருந்தானே (உ௮௭)

(இ-ள்)

சுத்தமான நல்லெண்ணெய் 4 படி
பேராமுட்டி சிறுகுறிஞ்சா
நீர்ப்பூலா
இவைகளின் சாறுகள் தனித்தனியே ஒரு உழக்கு
சுத்திசெய்த சேராங்கொட்டை 120 (எண்ணிக்கையில்)

முதலியவைகளை ஒன்று கலந்து ஒரு பாத்திரத்திலிட்டு அடுப்பின் மேலேற்றிச் சாறுகள் வற்றும் வரை எரிக்கவும். பின்பு, எண்ணெயை வடித்துச் சுத்திசெய்த பாதரஸம் 2½ பலத்தை அதனுடனே போட்டுக் குழைத்து, வேளைக்கு, (10 துளிகள்) வீதம் (பசுவின் பாலுடன்) உட்கொள்ளவும்.

குஷ்டங்கள் தீரும்.

---

## 171. சொறி, குஷ்டம், கடிகளுக்கு மருந்து.

பாவட்டை யிலைச்சாறு முரிகாய்ச்சி
யுழக்காக்கிப் பருகத்தீரும்
மேவுமுத்த மாகாளி வேர்பசும்பா-
லிற்குடிக்க விடஞ்சிறங்கும்
பாவுசொறி குட்டமுதற் கிரந்திகுட்டம்
போங்கரிப்பான் பார்சமூலந்
தூவுலர்த்தி யிடிதூளை யெண்ணெய்நெய்யி
லுண்ணுகுட்டஞ் சொறிகள்போமே. (உ௮௯)

(இ-ள்)

(1) பாவட்டையிலைச்சாறு ½ படி

யெடுத்து, அடுப்பின்மேலேற்றி ஒரு உழக்காகும்வரை காய்ச்சிப் பருகவும்.

(2) மாகாளி வேரைப் பசுவின் பால் விட்டரைத்துக் குழப்பிப்பருக விஷகடிகள், சிறங்குகள், கிரந்திகள், குஷ்டங்கள் முதலியவை தீரும்.

(3) கரிசாலங்கண்ணியைச் சமூலமாக, எடுத்து, நிழலுலர்த்தலாக உலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திர காயஞ் செய்து கொண்டு, வேளைக்கு மூவிரல் கொள்ளுமளவெடுத்து நெய்யும், நல்லெண்ணெயும் விட்டுக் குழைத்துச் சாப்பிடவும்.

குஷ்டங்கள், சொறிகள் முதலானவைகள் தீரும்.

---

## 172. சொறி, குஷ்டம் தீர மருந்து.

சொறிகுட்டம் போமெருக்கின் பழுப்பின்சா-
    றொருபடியிற் சொல்லுங்கள்ளி
யெரிவெதுப் பிடுநீருஞ் சங்கிலைநீர்
    மாகாளியிவை யொன்றுக்கும்
விரியுழக்காயிதெலாங் கூட்டியெண்ணெய்
    எரித்திட்டு மேலிற்பூசக்
கரியகுட்டஞ் செங்குட்டந் தீருமென்று
    சரபேந்திரன் (ப)ணித்ததாமே (உஅஎ)

(இ-ள்)

| | |
|---|---|
| எருக்கம் பழுப்புச்சாறு | 1 படி |
| இலைக்கள்ளியை வெதுப்பிப் பிழிந்த சாறு | ஒரு உழக்கு |

| | |
|---|---|
| சங்கிலைச்சாறு | ,, |
| மாகாளிக்கிழங்கின் சாறு | ,, |
| நல்லெண்ணெய் | 1 படி. |

இவைகளை யொன்றுகலந்து, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயைக் கருங்குஷ்டம், செங்குஷ்டம், முதலியவைகளுக்கு மேலே பூசவும். அவைகள் தீரும்.

---

## 173. குஷ்டத்திற்கு மருந்து.

கருஞ்சீரந் தகரைவிற் றெருக்கின்வேர்ப்
 பட்டைகெந்த கங்கார்போகத்
தரிசிபேயத்தியின் றேல்மூலமுமா-
 விரம்பட்டை தன்னில்வேரும்
பருங்கொடி வேலியின்வேர் காவிளைவிற்
 றிவையெல்லாம் படுத்தூட்செய்து
கரியாலங் கன்றதின் சாறிட்டரைத்துஞ்
 சுண்டாங்கிக்களவு செய்தே (உஅஅ)

செய்துநிழ லுலர்த்தியொரு சுண்டாங்கி
 தனைக்கொச்சைத் தீம்பாலிட்டு
நொய்தரைத்து முட்குடிக்க மூன்றுமதி
 புளியுப்பு நோக்கம்விட்டு
மெய்மருந்து கொண்டபத்தா நாளிலந்த
 வெள்ளையின்மேல் விரணங்கண்டு
எய்துநிறம்பழஞ்சோறுண் பாலுஞ்சோ-
 றிட்டுண்டு மிருக்கலாமே (உஅகூ)

(இ-ள்)

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | தகரைவிதை |
| எருக்கவேர்ப்பட்டை | நெல்லிக்கெந்தகம் |

கார்போகரிசி
பேயத்திப்பட்டை
பேயத்திவேர்
ஆவாரம்வேர்
ஆவாரம்பட்டை
கொடிவேலிவேர்
காய்வேளை விதை

இவைகளைச் சமனெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து, வஸ்திர காயஞ்செய்து, கரிசாலங்கண்ணிச்சாறு விட்டு நன்றாக வரைத்துச் சுண்டைக்காயளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

தினம் ஒரு வேளை ஒரு மாத்திரை வீதம் வெள்ளாட்டுப் பாலுடன் அரைத்துப் பருகவும். மூன்று மாதங்களுக்கு உப்பு, புளிப்பு முதலிய சுவைகளுள்ள பதார்த்தங்களை நீக்கி விடவும். 10 நாட்களில் வெள்ளைக்குஷ்டமிருக்குமிடங்களில் விரணங்களுண்டாகும். பழயமுதும் பாலுஞ்சோறும் நிரம்ப உட்கொள்ளவும். அவை தீரும்.

## 174. பதினெட்டு குட்டத்திற்கும் மருந்து.

சிவன்வேம்பு மழிஞ்சிவே ராறுவே-
ரெருக்கின்வேர் செம்முள்ளிதான்
நல்மாவிலங்கதின்றோற் காஞ்சிரைவிற்
றப்பட்டை நற்புங்கின்றோற்
புவிவிளாந் தோனிம்பத்தோல் பிரண்டை
வெள்ளறுகு பொருவேர்தானும்
பலவுய்யகொண்டா நீர்வெட்டி முத்துக்
கான்குறிஞ்சாப் படம்பேய்ப்பீர்க்கே (உகூ)

பீசமுடன் பாலொடுவி கொடிவேலி
யகிற்பட்டை பெருநொச்சில்வேர்
மாசதுரச் கள்ளியின்வேர் வனக்கொட்டை
மிளகறணை வண்டுகொல்லி

நேசமுறும் பட்டைகட்டுக் கொடிமூலங்
　　கழல்வித்து நிலத்துவாகைப்
பேசிவைக டயிலஞ்செய் நெல்லெடையுட்
　　கொள்மேலும் பிரளப்பூசே. (உ௬௧)

(இ-ள்)

| | |
|---|---|
| சிவனார்வேம்பு | அழிஞ்சில் வேர் |
| ஆவாரைவேர் | எருக்கம்வேர் |
| செம்முள்ளி | மாவலிங்கம்பட்டை |
| எட்டிக்கொட்டை | எட்டிப்பட்டை |
| புங்கம்பட்டை | விளாம்பட்டை |
| வேப்பம்பட்டை | பிரண்டை |
| வெள்ளறுகு | கொய்யாவின் வேர் |
| நீரடிமுத்து | காட்டுக்குறிஞ்சான் |
| பேய்ப்பீர்க்கன்விதை | கொடிப்பாலை |
| கொடிவேலி வேர் | அகில்பட்டை |
| நொச்சிவேர் | சதுரக்கள்ளிவேர் |
| காட்டாமணக்கம் வேர் | மிளகறணை |
| வண்டுகொல்லிப்பட்டை | கட்டுக்கொடிவேர் |
| கழற்சிக்காய் | நிலவாகைப்பட்டை |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) யெடுத்து நன்றாக இடித்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டு நன்கு அரைத்து, நல்லெண்ணெயுடன் (3 சேர்)குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பதத்திலிறக்கவும்.

இத்தைலத்தில் ஒரு நெல்லெடை யெடுத்து (வெற்றிலையில் வைத்து) உள்ளே உட்கொள்ளவும். இதையே மேலுக்கும் பூசவும்.

குஷ்டங்கள் சீராகும். கைகண்டது.

குறிப்பு :—

இந்த எண்ணெயை ஒரு ஸ்பூன் முதல் 2 ஸ்பூன் வரையிலும் கொடுக்கலாம்.

---

## 175. வயிறு, வாய் நாற்றத்திற்குக் குடிநீர்.

செம்பரத்த மிலையாடா தோடையிலை
சீந்திலிலை சீராவின்பால்
உம்பரவக் கடாயஞ்செய் திலுப்பைப்பூ
மட்டியரைத் துடன்கரைத்து
நம்பசுவின் நெய்யுமிட்டு முட்குடிக்க
வெப்பிரத்த நாற்றம்போகுந்
தம்பசும்பா லுடன்பற்பா டகமுமரைத்
துடன்குடிநாற் றங்கள்போமே (உகூஉ)

(இ-ள்)

செம்பரத்தையிலை ஆடாதோடையிலை
சீந்தில் கொடியின் இலை

இவைகளை வகைக்கு (ஒரு கொட்டைப்பாக்களவெ)டுத்து நன்றாக அரைத்துப் பசுவின் பாலுடனே (1 சேர்) குழப்பி யடுப்பின்மேலேற்றிக் கொதிக்கவைத்து, அதனுடன் இலுப்பைப் பூ, அதிமதுரம், இவ்விரண்டையும் (1 வராகனெடை) எடுத்து, அரைத்து அப்பாலுடனே குழப்பியுட்கொள்ளவும்.

வாயிலிருந்து இரத்தம் வடிதல், வாய் நாற்றம் முதலியவை தீரும்.

உஷ்ணமும் வெட்கையுந் தணியும்.

---

## 176. வயிற்றுட் சீழ், புரை, புழுவுக்கு.

ஓமமொரு கழஞ்சிந்து காற்கழஞ்சு
திப்பிலியு மொத்தசுக்கும்
ஏமமொரு வகைகழஞ்சாய்க் கொடுக்காயின்
புளிதானு மிருகழஞ்சி
நேமமிள நீரைவிட்டு மரைத்திட்ட
விழுதிள நீரிற்கொள்ளத்
தாமமட்டிச் சீழ்புரைபுண் டொருமுறை
சரபேந்திரன் றந்ததாமே (உகூ௬)

(இ-ள்)

| | |
|---|---|
| ஓமம் | 40 குன்றியெடை |
| இந்துப்பு | 10 குன்றியெடை |
| திப்பிலி | 40 ,, |
| சுக்கு | 40 ,, |
| கொடுக்காப்புளி | 2½ வராகனெடை |

இவைகளைச் சுத்தமான அம்மியின்மேல் வைத்து, இளநீரை விட்டு நேகவரைத்து அதிலேயே கலக்கிச் சாப்பிடவும்.

வயிற்றிலுள்ள சீழ், புண்கள், புரைகள் முதலானவை தீரும்.

---

## 177. ஒடுவுக்கு எண்ணெய்.

கொடிவேலி மூக்கரட்டை முன்னைசத்திச்
சாறணைவேர் கோடசாலை
கொடுசாற ணைக்கிழங்குங் குழிமீட்டா
னன்னாரி குதிரைவாலி

தொடுஞ்சிறு புள்ளடிவன் னெற்றுடனு
முத்தெருக்கஞ் சொல்லுவேரும்
மொடுவசம் புள்ளியரைத் தெண்ணெய்வடித்
திடுநக்க வொடுவும்போமே (உகூ)

(இ ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | மூக்கரட்டை |
| முன்னைவேர் | சத்திச்சாறணைவேர் |
| கோடகசாலை | வெள்ளைச்சாறணைக்கிழங்கு |
| நத்தைச்சூரிவேர் | நன்னாரிவேர் |
| முதியார் கூந்தல் | சிறுபுள்ளடி |
| நத்தைச்சூரிவிதை | முத்தெருக்கஞ்செவி |
| வசம்பு | பூண்டு |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை)யெடுத்து அம்மியின் மேல் வைத்து நன்றாகவரைத்து நல்லெண்ணெய்(1½ சேருடன்) குழப்பி, அடுப்பின் மேலேற்றிப் பதமாக வடித்து இறக்கவும். இதிலொரு காசளவெடுத்துப் (பாலுடனே)நக்கி வர ஓடுவிப்புருதி தீரும்.

குறிப்பு :—

72 செ. சுவடியில் 'சிறுபாம்பு கடியுந் தீரும்' என்று காணப்படுகிறது.

---

## 178 ஒடுவுக்கெண்ணெய்.

சொறித்தவளை யைச்சுட்டுப் பொடிசெய்து
மெண்ணெயிலே தூவிக்காய்ச்சி
இறக்கொடு விடத்திரு மாட்டுப்பற்
சுட்டபொடி யெண்ணெய்தன்னில்

விரிக்குழைத் தொடுவிட்டாற் றிரும்வன்
னெற்றுமுன்னை வேர்வெள்ளருள்ளி
சூரிவசம்புங் குழிமிட்டான் சிறுபுள்ளடி
யெண்ணெய்வடித் தொடுவிற் பூசே (உகரு)

(இ-ள்)

(1) சொறித்தவளையைப் பிடித்து, அடுப்பிலிட்டுக் கறுக்கித் தூள்செய்து நல்லெண்ணெயுடன் தூவி அடுப்பின் மேல் வைத்துக் காய்ச்சிப் பக்குவத்திலிறக்கவும்.

இதை ஓடுவிகளுக்குப் போடவும். அவை தீரும்.

(2) மாட்டுப்பற்களை, வரளிகளுக்கிடையில் சொருகிக் கொளுத்திவிடவும். அது பொரபொரப்பாகும். இதைத் தூள்செய்து நல்லெண்ணெயுடன் குழைத்து ஓடுவிகளின் மேல் பூசவும்.

(3) நத்தைச்சூரிவேர் முன்னைவேர்
வெள்ளைப்பூண்டு வசம்பு
நத்தைச்சூரிவிதை சிறுபுள்ளடி

இவைகளைச் சமனெடை (1 வராகனெடை) யெடுத்துத் தண்ணீர் விட்டரைத்து நல்லெண்ணெயுடன் (1 சேர்) குழப்பி யடுப்பின்மேலேற்றிப் பக்குவமாக்கி இறக்கவும்.

இதை ஓடுவிகளுக்கிடவும்.

---

## 179. ஓடுவிக்கு எண்ணெய்.

சேவகனார் மூலமெண்ணெய் நெய்சமனுய்க்
குளவிந்தஞ் சேருமஞ்சள்
தூவுகுங் குலுப்பொடியுங் கூட்டியெரித்
தொடுவிட்டாற் றுலைந்துபோகும்

பாவனையா லொட்டியிலை முலைப்பாலிட்
டரைத்திட்டுப் பார்குழைத்து
மேவுமொடு தனைக்கிட்டாற் றீந்துவிடு
மிம்முறையை விரும்பிச்செய்யே (உ௬௬)

(இ-ள்)

நல்லெண்ணெயும், நெய்யும் வகைக்கு (½ சேர்) எடுத்து, ஒன்றுகலந்து அதனுடன்

சேவகனார்பூண்டின்வேர் (சிறுபுள்ளடி வேர்)
குளவிந்த மஞ்சள்
(கறி) மஞ்சள்

இவைகளை வகைக்கு (½ பலம்)வீதமெடுத்துத் தண்ணீர்விட்டு அரைத்துக் குழப்பிக்கொள்ளவும். இதை யடுப்பின்மேல் ஏற்றி எரித்துப் பதமானவுடன், வெள்ளைக் குங்கிலியத் தூள் (½ பலத்தை)ப் போட்டு, வடிக்கவும்.

இந்த மருந்தை ஒடுவிகளுக்கு மேலே பூசவும். அவை குணமாகும்.

(2) ஆடையொட்டி இலையை வேண்டிய அளவெடுத்து முலைப்பால்விட்டு அரைத்து ஒடுவியின்மீது பூசவும். அவை தீரும்.

---

# 180. அக்கிரோகத்திற்கு மருந்து.

மிதிபாக விலைதன்னை யரைத்தாவின்
வெண்ணெயிட்டு மேற்குழைத்துப்
பதியக்கி தனிற்பூசத் தீர்ந்துவிடு
முருங்கைவேர்ப் பட்டைதன்னை

யதியதைத் தொட்டடையும் பசுவெண்ணெ
யிட்டுமத்தித் தக்கிபூச
நிதிவெண்ணெய் பசளையரைத் துடனிட்டால்
அக்கியெலாம் நீங்கிப்போமே (உகள)

(இ-ள்)

(1) மதிபாகல் இலையை அம்மியின்மேல் வைத்து நேக வரைத்தும் பசுவின் வெண்ணெயுடன் குழைத்து அக்கியின் மேற் பூசவும்.

(2) முருங்கை வேர்ப்பட்டையும், ஒட்டடையும் சம மெடுத்து, தண்ணீர்விட்டு நன்றாகவரைத்துப் பசுவெண்ணெ யுடன் குழைத்துப் போட அக்கிகள் தீரும்.

(3) பசளையிலையைப் பசுவின் வெண்ணெயுட னரைத் துப் பூசவும். அக்கிகளெல்லாம் நீங்கும்.

---

## 181. வாய்ப்புத்துக்கு மருந்து.

வசம்புள்ளி நாகரமுஞ் சமன்கொண்டு
மூன்றுக்கு மட்டாய்த்தானே
இசைசிற்று மணக்கின்வேர்ப் பட்டையுடன்
நறுக்கிட்டு மெழுவாய்ப்புற்றின்
அசையாம லன்றுடங் கட்டிவைத்துத்
தீர்ந்தும்போ மதற்கின் னங்கேழ்
கசக்கும்பேய்க் கரும்பினீர் சினமிட்டுக்
கொப்பளித்தாற் காய்ந்துபோமே (உகஅ)

(இ-ள்)

வசம்பு வெள்ளைப்பூண்டு
சுக்கு

இம்மூன்றையும் சமனெடை யெடுத்து, இதற்குச் சரி எடை சித்தாமனைக்கம் வேர்ப்பட்டையும் சேர்த்துக் கல்லுரலிலிட்டு நசுக்கித் தினந்தோரும் வாய்ப்புற்றின்மேல் வைத்துக் கட்டி வரவும்.

**இதற்குக் கோப்பளிக்க மருந்து.**

பேய்க்கரும்பின் (கொழுத்தாடைச்) சாற்றில் சீனக்காரம் பொடிசெய்து போட்டு வாய்க் கொப்பளிக்கவும்.

வாய்ப்புற்றுகள் தீரும்.

---

## 182. அகுவைக்கு மருந்து.

பிரண்டைசிறு துண்டாக்கிக் கொடிவேலி
  வேர்ப்பட்டைப் பெருகச்சீவி
இரண்டையு மொருபானை தன்னிலிட்டு
  நீர்வார்த்து மெரித்துக்காய்ந்து
உரவுநீர் தானிறுத்து முக்கடுகோ-
  மங்கடுக்கா யுரைவெள்ளுள்ளி
யரைவகைக் கிருபலமுஞ் செங்கதாரி
  யின்பட்டை யாயிற்றேலே (உகக)

இவையெல்லா முந்நீரா லாட்டுக்கல்
  லிட்டரைத்து மெடுத்துக்கொண்டோர்
நவைசட்டி காயவைத்து மோருபடி
  யெள்ளினெண்ணெய் நயமாய்விட்டுக்
கவைபெருங் காயமொரு நிட்கமிட்டுப்
  பொங்களவிற் கரைமருந்தைத்
துவைபதங் கொண்டிறக்கித் தான்றியின்காய்
  தனைக்ககுவை துலையக்கொள்ளே (௩௰)

(இ-ள்)

பிரண்டையைப் புதிதாகக் கொண்டுவந்து, சிறுசிறு துண்டுகளாக்கி அதற்குச்சமன் கொடிவேலிவேர்ப்பட்டை எடுத்து, இவ்விரண்டையும் கல்லுரலிலிட்டிடித்து, ஒரு பானையிலிட்டு (8 மடங்கு) தண்ணீர்விட்டு, அடுப்பின்மேலேற்றி எட்டிலொரு பங்காகக் காய்ச்சி வடிக்கட்டிக்கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | ஓமம் |
| கடுக்காய்த்தோல் | வெள்ளைப்பூண்டு |
| செங்கதாரிப்பட்டை | ஆயில்பட்டை |

இவைகளை வகைக்கு 2 பலம் வீதமெடுத்து, முன் சொன்ன கஷாயம்விட்டு கல்லுரலிலிட்டு நன்றாக அரைத்து விழுதாக்கி, வைத்துக்கொள்ளவும்,

ஒரு புதுச்சட்டியை அடுப்பின்மேல் வைத்துக் காய வைத்து, அதில் நல்லெண்ணெய் 1 படி விட்டு, பெருங்காயம் 1 வராகனெடை போட்டுப் பொங்கும்போது முன்விழுதைப் போட்டுக் கிளறி, நீர்வற்றியவுடன் கீழே யிறக்கவும். இக் கடுகில் ஒரு தான்றிக்காயளவு எடுத்து உட்கொள்ளவும்.

அகுணை தீரும்.

குறிப்பு :—

72 செ. சுவடியில், 'உப்பு, புளி இவ்விரண்டையும் நீக்கி விடவும்' என்று காணப்படுகிறது.

---

## 183. வயிற்றுள் புழுவிற்கு.

சாயவே ருள்ளிரண்டுங் கடலையிற்
    பாதியிடுஞ் சார்வசம்புந்
தோயமுலைப் பாலிலரைத் துட்குடிக்க
    நுரைக் காணுந் துடர்நாள்ரெண்டு
பாய்ச்சிறு கக்கூட்டி யுட்கொடுக்கப்
    புழுசெத்துப் பாரில்வீழுந்
தூயதில வெண்ணெய்தனைத் தீண்டவொண்ணு
    திருதிர்ந்து சுகமதாமே (நாக)

(இ-ள்)

இம்புரல்வேர் வெள்ளைப்பூண்டு
கடலை வசம்பு

இவைகளை (வகைக்கு 1 வராகனெடை யெடுத்து) அம்மியின் மேல் வைத்து முலைப்பால் விட்டு நேகவரைத்துச் சாப்பிடவும். இதை இரண்டுநாள் சேர்ந்தாப்போல் கொடுக்க வயிற்றிலுள்ள புழு செத்துவிழும்.

**பத்தியம்:—**

ஆகாரங்களில் நல்லெண்ணெயே சேர்க்கக்கூடாது.

---

## 184. ஊமசிங்கனுக்கு மருந்து.

கருவேலி னிலைதன்னைப் பொன்வண்டின்
    நிறமாகக் காண்வறுத்து
மறுகிடப் பொடிசெய்து பசுநெய்யிற்
    குழைத்திட்டு வைசிமிழ்க்குள்

உருபுண்வாய் தனில்வைத்து ஊமத்தி-
னிலைவாட்டி யூடேபோடப்
பருசியும் பிடிபட்டுச் செம்புண்ணுஞ்
சீழ்வழிந்தாற் பண்ணக்கேளே (௩௱௨)

ஆனையெனும் பூச்சிதனி லிரண்டு
பிடித்தெண்ணெ யதனிலிட்டு
ஊனமுழி மஞ்சளுடன் குங்கிலிய
மருதின்றா ளொக்கக்கூட்டித்
தானெரித்து முபசிங்கின் மேலிடவு
மாறியும்போம் தரணியோற்கும்
ஈனநோ யாகிருளுக் கிளையரவி
சரபேந்திர னிசைத்ததாமே (௩௱௩)

(இ-ள்)

கருவேலம் இலையை ஒரு இரும்புச் சட்டியிலிட்டுப் பொன் வண்டின் நிறம்போல் வறுத்து, இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு, பசுவின் நெய்யுடன் குழைத்துச் சிமிழில் பத்திரப்படுத்தவும் இக்களிம்பைப் புண்களின் வாயில்தடவி ஊமத்தையிலையை வாட்டிக் கட்டிவிடவும்.

சீழ் வற்றி செம்புண்ணிடும். சீழ்அதிகமாக வடிந்தால்,

ஆனைப்பூச்சி 10 கொண்டுவந்து நல்லெண்ணெயிலிட்டு, சிறிது மஞ்சளும். குங்கிலியத் தூளும், மருதம்பட்டைத் தூளும் இட்டு, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்க வும். இந்த எண்ணெயை ஊமசிங்கனுக்குப்போட அவை ஆறும்.

குறிப்பு :— ஆனைப்பூச்சி—குழியானை.

# 185. தண்டு நொந்தால் மருந்து.

அழிஞ்சிவே ரெலுமிச்சம் பழச்சாற்றி
லிட்டரைத்து மதைத்தண்டின்மேல்
வழிபூசத் தீர்ந்துவிடும் வெள்ளலரி
மாதனையில் வகைச்சமூலங்
கழிநறுக் குலர்த்தியே சமனுக்கோர்
பானையிட்டுக் காணப்பூமி
குழித்தைலம் வாங்கியரைப் பணவெடையுண்
தண்டிவிடக் குணமதாமே (நாச

(இ-ள்)

(1) அழிஞ்சில் வேரை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத் துத் தண்டின் மேலே பூசவும்.

(2) வெள்ளரளி வேர் (காய்ந்தது)
மாதனை வேர் ( ,, )

இவ்விரண்டையும் சமனெடை யெடுத்துச் சிறுசிறு துண்டு களாக நறுக்கி யொரு துவாரமுள்ள பானையிலிட்டுச் சீலை மண் செய்து குழித்தைலமாக இறக்கிக்கொள்ளவும்.

இதில் ½ பணவெடை யெடுத்துச் (சர்க்கரையுடன்) சாப் பிடவும். இதையே தண்டின் மேலும் பூசவும். வலி தீரும்

# சரபேந்திரர் வைத்ய முறைகள்.

## (கரப்பான் ரோக சிகித்஬ை)

---

## 1. மண்டைக் கரப்பானுக்கு மருந்து.

குருந்தாடா தோடையோ டிருநொச்சில் புங்கு
கொடிவேலி மிளகரணை நிலவடம்பு
பரிந்த சிறுக்கீரை யுத்தாமணி யெருக்கிப்
பதிஞெருவே ருங்கருஞ்சீ ரகஞ்சிறுத்த
வரத்தையுங் கார்போகரிசி யிவைநேர் கூட்டி
யரைத்துக்கோ சலம்விட்டெண் ணெயிலெரித்துச்
சிரத்தினிற் பூசிடமண் டைக்கரப்பன் றீருந்
திவ்வியமா மிம்முறையைச் செய்துபாரே. (க)

(இ-ள்)

| | |
|---|---|
| குருந்து | ஆடாதோடை |
| கருநொச்சி | வெண்ணொச்சில் |
| புங்கு | கொடிவேலி |
| மிளகரணை | நிலவடம்பு |
| சிறுகீரை | உத்தாமணி |
| எருக்கு | |

இச்சரக்குகளின் வேர்கள் வகைக்கு 1 வராகனெடை,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | கார்போகரிசி |
| சிற்றரத்தை | |

இம்மூன்றும் வகைக்கு (1 வராகனெடை)

இவைகளைக் கல்லுரலிலிட்டு நன்ருக இடித்து, அம்மியின் மேல் வைத்தும் பசுவின் மூத்திரம் விட்டு நேகவரைத்து,

நல்லெண்ணெய் (1¼ சேருடன்) குழப்பி, அடுப்பின் மேல் வைத்து எரித்துப் பதத்திலிறக்கவும்.

இத்தைலத்தைத் தினந்தோறும் தலையுச்சியில் வைத்து வர, மண்டைக்கரப்பான் தீரும்.

---

## 2. சகல கரப்பானுக்கும் மருந்து.

நாய்வேளை சிறுகுறிஞ்சா வவுரிமுள்ளி
நற்கண்டங் கத்திரிதூ துவளைசங்கு
நெய்க்கொட்டான் றலைச்சுருளி மணித்தக்காளி
நண்ணியவிப் பத்துவேர் செங்கதாரி
வாய்ப்பாம்பொற் கொன்றையிள கரணைபுன்கு
நன்முருங்கை சென்னகை மென்றவாறி
னுய்ந்திடுமேற் பட்டைபெருங் குறும்பைகாய
மரத்தையொடு காட்டுச்சீ ரகம்வசம்பே (௨)

வசமான வெள்ளுள்ளி யிவைகளெல்லாம்
வகைதனக்கோர் கழஞ்சாகக் கூட்டிக்கொண்டு
பசுமையா மணக்கெண்ணெய் படியொன்றிற்றான்
பண்பாக வேகலந்து கழுதை யானை
யிசைவான விலத்தியில்வெள் ளாட்டுநீர்விட்
டேபிழிந்தோர் சாறுபடி யெடுத்தேவிட்டு
நசையாக வேகாய்ச்சி வடித்தீர்போது
நவிலிரண்டு காசெடைகொள் கரப்பான்போமே (௩)

(இ-ள்)

| | |
|---|---|
| நாய்வேளை | சிறுகுறிஞ்சான் |
| அவுரி | முள்ளி |
| கண்டங்கத்திரி | தூதுவளை |

| | |
|---|---|
| சங்கன்வேர் | பூந்திக்கொட்டை |
| பெருமருந்து | மனித்தக்காளி |

இச்சரக்குகளின் வேர் வகைக்கு (1¼ வராகனெடை)

| | |
|---|---|
| செங்கதாரிப்பட்டை | பொற்கொன்றை |
| மிளகரணை | புங்கம்பட்டை |
| முருங்கை | நாகப்பட்டை |

இச்சரக்குகளின் பட்டைகள் வகைக்கு (1¼ வராகனெடை)

| | |
|---|---|
| பெருங்குறும்பை | பெருங்காயம் |
| சிற்றரத்தை | காட்டுசீரகம் |
| வசம்பு | வெள்ளைப்பூண்டு |

இச்சரக்குகளை வகைக்கு 1¼ வராகனெடை விதமெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்துப் பின்பு

ஆமணக்கெண்ணெய்—1 படியுடனும் (5 சேர்),

| | |
|---|---|
| கழுதை இலத்தி | யானை இலத்தி |

இவ்விரண்டிலும் வெள்ளாட்டு மூத்திரம் விட்டு இடித்துப் பிழிந்த சாறு 1 படியுடனும் இவைகளைச்சேர்த்து, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். தினந்தோறும் 2 காசளவெடுத்துக் காலையிலும் மாலையிலும் (பாலுடனே) உட்கொள்ளவும். கரப்பான்கள் தீரும்.

---

## 3. படை, கரப்பான், கிரந்தி முதலியவற்றிற்கு.

கொடிவேலி வேரைப்பாக் களவரைத்துக்
குணமான தேனிலிட்டுக் குழைத்தருந்திற்
கடிதாமுள வியாதியோடு கண்டமாலை
கனமான புண்ணுடனே கிரந்திநோயும்

புடைகரப்பான் தீர்ந்தாரோக் கியமுண்டாகும்
புகழ்தரும் துளசேந்திர னீன்றபாலன்
வடிவாமதி லுயர்மதவே ளனையதிரன்
மால்சரபேந் திரன்வகுத்த முறையிதாமே (ச)

(இ-ள்)

வெடிபோலி வேர்ப்பட்டை ஒரு பாக்களவெடுத்துக் கைபடாமலரைத்துத் தேன் விட்டுக் கலந்து அருந்தவும்.

கண்டமாலை, நாட்பட்ட புண்கள், கிரந்திகள், கரப்பான் முதலான ரோகங்களை நீக்கி ஆரோக்யத்தையுண்டாக்கும்.

---

## 4. விரணங்கள், கிரந்தி, புடை கரப்பானுக்கு.

வெள்ளைக்குங் கிலியத்தைப் பொடித்தெடுத்து
வெங்கலத்தா லத்தினில்வைத் துக்குழித்தே
யெள்ளெண்ணெ யோடிரதம் தனிலிட்டேயி
யல்பாய்வே றொருகிண்ணி யாலரைத்து
மெள்ளவழித் தேசிமிழில் வைத்துக்கொண்டு
விரணங்கள் கிரந்திபுடைக ரப்பானோடே
யெள்ளியபுண் களுக்கிதனைப் போடத்தீரும்
இயல்பான முறையிதனை யெண்ணிப்பாரே (ரு)

(இ-ள்)

வெள்ளைக் குங்கிலியத்தைப் பொடிசெய்து ஒரு வெங்கலத் தாலத்தில் வைத்து அதன் நடுவில் குழிசெய்து அதில், நல்லெண்ணெயும், சுத்திசெய்த பாதரஸமும் விடவும். பின்பு இதை வேறொரு கிண்ணியினால் நன்றாக அரைக்கவும். களிம் பாகும். இதையொரு சிமிழில் பத்திரப்படுத்தி விரணங்கள், கிரந்திகள், புடைகரப்பான் முதலியவைகளுக்கிடவும்.

புண்களுந் தீரும்.

---

# 5. கரப்பானுக்கு.

நல்லெண்ணெய் மிளகுபழச் சாறுமூன்று
நலமாகச் சமன்கலந்து வெயிலில்வைத்தே
பொல்லாத கரப்பனுக்கு மூன்றுநாட்டான்
பூசிடவே யாறிப்போம் புதுமையாகச்
சொல்லியவிம் முறைதப்பா தாகையாலே
துரிதமதாய்ச் செய்திடுவீர் சுந்தரஞ்சேர்
வல்லவனுஞ் சரபேந்திரபூ பதியுணர்ந்தே
வழுத்தியநன் முறையிதனை மனதிற்கொள்ளே (கூ)

(இ-ள்)

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 1 உழக்கு |
| மிளகு | ,, |
| எலுமிச்சம்பழச் சாறு | ,, |

இவைகளை யொன்றுகலந்து (3 நாட்கள்) வெயிலில் வைக்கவும். கரப்பான் புண்களுக்கு 3 நாட்களுக்கு மேலே பூசிடவும். அவை ஆறிப்போம்.

---

# 6. மண்டைக் கரப்பானுக்கு.

வசம்புகோ டகசாலை மிளகோடுள்ளி
வகைநான்குஞ் சமபாக மாகக்கூட்டி
யிசைந்திடுநல் லெண்ணெய்தனிற் போட்டெரித்தே
யிருகாது தனிலேவிட் டதனைத்தானும்
பொசிந்துவெளி வாராமற் றுணியடைக்கப்
போகுமண்டைக் கரப்பனெல்லாம் பொய்மை [யன்று
நிசஞ்செய்து பார்த்தறிவீ ராயுர்வேத
நிலைகண்ட சரபேந்திர னிகழ்த்தும்வாறே. (எ)

(இ-ள்)

வசம்பு கோடசாலே
மிளகு வெள்ளைப்பூண்டு

இவைகளைச் சம (1 வராகனெடை) மெடுத்து நசுக்கி, நல்லெண்ணெய் (1 சேருடன்) கூட்டி எரித்துப் பதத்திலிறக்கவும். இத்தைலத்தை இரு காதுகளிலும் விட்டுப் பஞ்சினால் தைலம் வெளிவராமலடைக்கவும். மண்டைக் கரப்பான் தீரும்.

---

# 7. கரப்பானுக்கும் புண்ணுக்கும்.

பழச்சாற்றிற் றுருசியிட்டே யரைத்துநல்ல
பெரியவெள்ளைச் சேலைதனிற் றடவிக்கொண்டே
யெழுங்கரப்பான் புண்ணிற்குப் போட்டிராறு
லேகிவிடு மினிவாரா தென்றுஞ்சொன்னே
னுழ்ந்திதனைச் செய்துபார்த் தறிந்துகொள்விர்
வீணல்லவிம் முறையுண்மை யாகையாலே
கழிந்துமே புண்ணாறு மட்டுமிந்த
காரத்தைப் போட்டிடுவீர் கவமாய்த்தானே (அ)

(இ-ள்)

எலுமிச்சம்பழச் சாற்றில் துருசை ஊறவைத்து, அம்மியின்மேல் வைத்தரைத்து, ஒரு துல்யமான வெள்ளைத் துணியில் தடவிக் கரப்பான் புண்களின்மேல் போடவும். அவை தீரும். புண்கள் நன்றாக ஆறும்வரை இந்தக் காரமுள்ள மருந்தைப் போடவும்.

---

# 8. கரப்பானுக்கு எண்ணெய்.

ஈருள்ளி யுரிகிரந்தி நாயகச்சா
றிதிற்பாதி யாம்கம்பிப் பிசின்கறுத்தச்
சீரகங்கா செடையிரண்டு வகையொன் றுக்குச்
சேர்கடுக்காய் மூவைந்தே ரண்டத்தெண்ணெய்
நேர்நாழி யிதின்மருந்தை யரைத்தேயிட்டு
நினைவாய்ச்சூ ரியபுடம்வைத் தோர்கரண்டி
யிர்போது முண்டுவரக் கரப்பானேகு
மிதற்குப்பத் தியம்புளிப்புக் கைப்புநீக்கே. (க)

(இ-ள்)

| | |
|---|---|
| தோலுரித்த வெள்ளைப்பூண்டு | ½ படி |
| கிரந்தி நாயகச்சாறு | ¼ படி |
| கம்பிப்பிசின் | 1 காசெடை |
| கருஞ்சீரகம் | 1 ,, |
| கடுக்காய் | 15 (எண்ணிக்கையில்) |

கடைச்சரக்குகளைச் சாறுவிட்டு நன்றாக அரைத்து, ஆமணக் கெண்ணெய் 1 படி(பட்டணம் படி ½)யுடன் குழப்பிச் சூரிய புடமிடவும். இதிலொரு ஸ்பூனளவெடுத்துக் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

கரப்பான் தீரும்.

**பத்தியம்:—**

புளிப்புச்சுவை, கசப்புச்சுவை இவைகளுள்ள பதார்த் தங்களை நீக்கிவிடவும்.

## 9. கரப்பான், மேகவேடி முதலானவைகளுக்கு

ஒருபிடிவெட் பாலையிலை துவைத்தேரண்டத்
துண்மையாமணக் கெண்ணெயது சேரிரண்டுடன்
மருவியே மூன்றுநா ளூறவைத்து
மற்றைநா ளாநாள்கத் தூரிமஞ்சள்
கருஞ்சீர கங்கம்பிப்பி லிவசம்பு
கடுக்காய்கார் போகரிசி வெள்ளைபுள்ளி
பரங்கிப்பட் டையுமெட்டுச் சரக்கைக்கூட்டிப்
பரிவாக விரவிதளிற் காயவையே. (ய)

வைத்ததனைச் சூரணித்தெண் ணெயிற்கலந்து
வளமாக மெழுகுபதத் தெரித்துவாங்கிப்
பத்துநா ணெற்பானைக் குள்ளேவைத்துப்
பகர்சனிவா ரத்திலெண்ணெய் தேய்த்துமூழ்கிச்
சுத்தமாய் மறுநாள்முன் னெண்ணெய்தன்னைச்
சுடவைத்தே யுதையத்திற் காற்சேருண்க
வொத்தவந்தி வேளையரைக் காற்சேருண்க
வொழியாதிப் படிமூன்று நாட்கொள்வாயே (யக)

கொண்டதன்மேற் பத்தியம்பின் மூன்றுநாளாங்
குலவேழா நாள்கஞ்சி தேய்த்துமூழ்கிப்
பண்பாக வுப்பதனை வறுத்துக்கூட்டு
பத்தியந்தான் பகற்பச்சைப் பயற்றங்கஞ்சி
யுண்டிடுராத் திரிபசுவின் பாலுங்கூட்ட
லுப்பிலாப் பத்தியமா மாறுநாள்கை
கண்டமுறை மேகவெடி சூலைவாயு
கரப்பன்னரை யாப்பினோடு கிரந்திபோமே. (யஉ)

(இ-ள்)

வெட்பாலை இலை ஒரு பிடியெடுத்து ஆமணக்கெண்ணெய் 2 சேருடன் பிசைந்து 3 நாட்களுக்கு ஊறவைக்கவும். 4-வது தினத்தன்று,

| | |
|---|---|
| கஸ்தூரிமஞ்சள் | கருஞ்சீரகம் |
| கம்பிப்பிசின் | வசம்பு |
| கடுக்காய்த்தோல் | கார்போகரி |
| வெள்ளைப்பூண்டு | பரங்கிப்பட்டை |

முதலான சரக்குகளை (வகைக்கு 1 வராகனெடை) யெடுத்து வெய்யிலிலுலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ்செய்துகொண்டு, மேலே சொன்ன ஆமணக்கெண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதை யொரு சீசாவிலிட்டு மூடி (10 நாட்கள்) நெல்லுக்குள் வைக்கவும்.

சனிக்கிழமையன்று நன்றாக எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து, மறுநாள் உதையத்தில் ¼ சேரளவு முன்னெண்ணெயைக் குடிக்கவும். சாயங்கால வேளைகளில் ¼ சேர் சாப்பிடவும்.

இப்படி 3 நாட்களுட்கொள்ளவும்.

**பத்தியம் :—**

பகல் வேளைகளில் பச்சைப்பயறு கஞ்சி சாப்பிடவும். இரவு நேரங்களில் பசுவின்பால் சேர்த்துச் சாப்பிடவும். உப்பு இல்லாப்பத்தியமாக 6 நாளைக்கு இருக்கவும். 7-வது நாளன்று வடிகஞ்சியைத் தேய்த்துக்கொண்டு தலைமுழுகவும் அன்று உப்பு வறுத்துக் கூட்டிக்கொள்ளலாம்.

இது மேக்வெடி, சூலை. வாயு, கரப்பான், அரையாப்பு, கிரந்தி முதலிய ரோகங்களுக்குக் கைகண்ட மருந்தாகும்.

---

## 10. கரப்பானுக்கு.

செங்கதா ரிப்பட்டை கொண்டுவந்து
　　செம்மையாய்ப் பொடித்துவடிக் கட்டியேதான்
பங்கமிலாக் கலசத்தில் வைத்திர்போது
　　பண்பாக வோரளவா யெடுத்தருந்திற்

றந்துகரப் பான்முதல் நோய்கடருஞ்
சௌக்யமா மறிந்துகொள்வீர் தஞ்சைவாழு
மிங்கிரு வல்லாசமுள சரபபூப
னியற்கையா யறிந்துரைத்த முறையிதாமே (கங)

(இ-ள்)

செங்கதாரிப்பட்டையைப் புதியதாக எடுத்துக்கொண்டு வந்து, நிழலிலுலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்ளவும். இதில் மூவிரல்கொள்ளுமள வெடுத்து (வெந்நீருடன்) உட்கொண்டு வரக் கரப்பான் ரோகங்கள் தீரும்.

---

## 11. முழங்காற் கரப்பானுக்கு.

நிலப்பனையின் கிழங்கமுக் கிராக்கிழங்கு
நேராக நிழலுலர்த்திச் சூரணித்தே
நலத்தகல சத்தினிலே வைத்துக்கொண்டு
நாட்டோறு மிருபோது பசுவினெய்யிற்
சொலத்தகுங் கற்கண்டினுட் பொடியுங்கூட்டித்
துணிவாக வெருகடி யளவுட்கொள்ள
வலிக்குமுழங் காற்கரப்பன் வாராதென்று
மானிலத்தீ ரிம்முறையை மனத்துட்கொள்ளே
(கச)

(இ-ள்)

சுத்தி செய்த நிலப்பனைக்கிழக்கு
,, அமுக்கிராக்கிழங்கு

இவைகளைச் சமனெடுத்து, நிழலில் உலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து ஒரு பானையில் பத்திரப்படுத்தவும். இதில் தினந்தோறும் மூவிரல் கொள்ளுமளவெடுத்துக் கற்கண்டுப்பொடியுஞ் சேர்த்துப் பசுவின்நெய் விட்டுக் குழைத்து உட்கொள்ளவும். தினம் காலையிலும் மாலையிலும் சாப்பிடவும்.

வலியுடனே கூடிய முழங்கால் கரப்பான் தீரும்.

குறிப்பு :—

கிழங்கு வகைகளைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டிப் பசுவின் பாலுடன் வேகவைத்துக்கொள்ளவும்.

---

## 12. சடைக்கிரந்தி, கிரந்திக் கரப்பானுக்கு மருந்து.

கொடிவேலி வேர்குழிமிட் டான்சமூலங்
குணமான வுள்ளிவசம் பிவையொன்றுக்கே
யிடையைந்து காசாகு மிதைநறுக்கி
யெள்ளினெண்ணெய் சேரரையிற் போட்டெரித்தே
யடைவாய்நற் பதத்திறக்கி யேவடித்தே
யரியகல சந்தனில்வைத் ததைமேற்பூசச்
சடைக்கிரந்தி யுடன்சிலந்தி கரப்பான்றீருஞ்
சத்துவமா மிம்முறைகை கண்டதாமே (கரு)

(இ-ள்)

கொடிவேலிவேர்ப்பட்டை
நத்தைச்சூரிச்சமூலம்
பூண்டு
வசம்பு

இவைகளை வகைக்கு—5 காசெடை வீதமெடுத்து ரசுக்கி, நல்லெண்ணெய்—½ சேருடன் சேர்த்து, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பக்குவமாக வடிக்கவும். இதை யொரு புதுக் கலசத்தில் பத்திரப்படுத்திச் சடைக்கிரந்தி, கிரந்தி, கரப்பான் முதலிய புண்களின்மேலே பூசவும். அவைகள் தீரும்.

---

## 13. கழலை, கரப்பான், சிலந்திக்கு.

நல்லெண்ணெய் வாகையிலைச் சாறிரண்டு
 நயமாகச் சமன்கொடுக்கப் பெருங்கரப்ப
னில்லாமற் போமின்ன மொன்றுகேளு
 நிலையான புங்கிலைநன் னாரிவேருஞ்
சொல்லுகருஞ் சீரகமிம் மூன்றுங்காடித்
 தோயமதை விட்டரைத்துக் கொதிக்கவைத்து
கல்லான கழலைகரப் பன்சிலந்தி
 கண்டவுடன் மேற்பூசத் தீருந்தானே (கசு)

(இ-ள்)

நல்லெண்ணெய் (½ சேர்)
வாகையிலைச்சாறு ,,

இவ்விரண்டையுமொன்று கலந்து உள்ளுக்குக் கொடுக்கவும். அதிகமாக இருக்கும் கரப்பான் ரோகந் தீரும்.

(2) புங்கின் இலை
நன்னாரிவேர்
கருஞ்சீரகம்

இம்மூன்றையும் சமனெடை (வகைக்கு 1 வராகனெடை) யெடுத்துக் காடிவிட்டரைத்துக் கொதிக்கவைத்துக் கழலை, கரப்பான், கிரந்தி முதலியவைகளின்மேல் பூசவும். அவைகள் தீரும்.

---

## 14. சடைக்கிரந்திக் 'துக்குலு கிருதம்'.

துக்குலுநாற் கழஞ்சையொரு பாண்டத்திட்டுக்
குணமான வேப்பிலையின் சாறுநாழி
யொக்கவிட்ட பின்வேக வைத்தெடுத்தே
யுயர்வெள்ளைக் குங்கிலிய மிருகழஞ்சு
தக்கநெல்லிக் காய்கெந்தி யிருகழஞ்சு
தன்னுடனே மூவகைமுன் சாறுதன்னாற்
பக்குவமா யரைத்தாவி னெய்யோர்நாழி
பாங்காய்விட் டேபதமாய்க் காய்ச்சிவாங்கே (கள)

வாங்கியநெய் தனைக்கடுகி னுடனிரண்டு
வராகனெடை யருந்திடவே சடைக்கிரந்தி
யேங்கவரு கரப்பனெலா நீங்கிப்போகு
மிம்முறைகை கண்டதிதை யெளிதாய்செய்வாய்
பூங்கமல மாதுவளர் சோழநாடன்
பொன்னிந்தித் துறையாளன் பொன்னுறிஞ்சி
யோங்குமளை கைக்கதிபன் மன்னர்மன்ன
னுயர்சரபேந் திரபூப னுரைத்தவாறே (கஅ)

(இ-ள்)

துக்கில்— 4 கழஞ்செடுத்து (½ பலம்) ஒரு பாத்திரத்தி லிட்டு வேப்பிலைச்சாறு 1 படிவிட்டு, அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைக்கவும். சாறு சுண்டியபின்பதை யிறக்கிக், துக்கிலை அலம்பி அதனுடன்

சுத்திசெய்த வெள்ளைக் குங்கிலியம் 2 கழஞ்சு
" நெல்லிக்காய் கெந்தகம் "

இவைகளைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு வேப்பிலைச்சாறு விட்டு நன்றாகவரைத்து, பசுவின் நெய் 1 படியுடனேகூட்டி, அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து இறக்கவும்.

இதைக் கடுகுடனே (வண்டல்) 2 வராகனெடை அள வெடுத்துச் சாப்பிடவும்.

சடைக் கிரந்தி, கரப்பான் முதலானவை தீரும்,

---

## 15. விடக்கரப்பானுக்கு எண்ணெய்.

வெங்காயம் பூவரசு துளசிகுப்பை
மேனிகஞ்சாங் கோரையிலை பெருங்கரந்தை
சங்கங்குப் பியுங்கோழி யவரைகையாந்
தகரையாடா தோடைநற் பொன்னுங்காணி
மங்காத வுப்பிலியி னிலையும்புங்கும்
வட்டமெனுங் கிலுகிலுப்பை மணித்தக்காளி
பங்கமிலகொட் டைக்கரந்தை யவரையிந்தப்
பதினேழு வகையிடித்துச் சாறுவாங்கே (கக)

வாங்குவாய் வகைக்குக்காற் சேரதாக
வளமான மாவெண்ணெய் நெய்நல்லெண்ணெய்
யிங்கிவைமூன் றும்வகைக்கோர் சேரதாய்ச்சேர்த்
திரியசிந்திற் கொடியோட முக்கிராவேர்
பாங்காய்வெள் ளறுகுநில வேம்பினோடு
பகர்நஞ்சுண் டாறுமரைப் பலம்வகைக்கு
நீங்காமல் வெந்நீரி லரைத்தெடுத்து
நேர்மையா யெண்ணெய்தனிற் கலந்துகொள்ளே (உ0)

கலந்துகொள்வாய் முன்சாறு மெண்ணெய்தன்னிற்
கைபாக மாயடுப்பில் வைத்துக்காய்ச்சி
நலமான மெழுகினுட பதம்வந்தக்கா
லட்டமாய்ப் பார்த்திறக்கிக் கலசந்தன்னில்
நிலையாக வடித்துவைத்துக் கொண்டபின்பு
நிதமுதையந் தனிலொருகா செடையருந்தில்
விலகாத விடக்கரப்பான் வீக்கமெல்லாம்
விட்டோடிப் போகுமிது மெய்யதாமே (உக)

(இ-ள்)

வெங்காயச்சாறு
பூவரசந்தழைச்சாறு
துளசிச்சாறு
குப்பைமேனிச்சாறு
கஞ்சாங்கோரையிலைச்சாறு
பெருங்கரந்தைச்சாறு
சங்கங்குப்பிச்சாறு
கோழியவரைச்சாறு
கையாந்தகரைச்சாறு
ஆடாதோடையிலைச்சாறு
பொன்னாங்காணிச்சாறு
உப்பிலிக்கொடியின்சாறு
புங்கந்தழைச்சாறு
வட்டக்கிலு இலுப்பைச்சாறு
மணத்தக்காளிச்சாறு
கொட்டைக்கரந்தைச்சாறு
அவரையிலைச்சாறு

முதலானவைகளை வகைக்கு ¼ சேர் விதம் எடுத்துக்கொண்டு, அதனுடன்

| | |
|---|---|
| பசுவின் வெண்ணெய் | 1 சேர் |
| ,, நெய் | ,, |
| நல்லெண்ணெய் | ,, |

இவைகளை யொன்று கலந்து,

| | |
|---|---|
| சிந்தில் கொடி | அமுக்கிராக்கிழங்கு |
| வெள்ளறுகு | நிலவேம்பு |
| பெருமருந்து | சிலந்திக்கொடி |

முதலான சரக்குகளை வகைக்கு ½ பலமெடுத்து அம்மியின் மேலிட்டு, ஷை சாற்றிலேதேனுமொன்றை விட்டு நன்றாக

அரைத்து, சாறுகலந்த எண்ணெயுடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கவும். இந்த மருந்தை யொரு புதுக் கலசத்தில் வைத்துப் பத்திரப்படுத்தித் தினம் அதிகாலையில் 1 வராகனெடை சாப்பிடவும்.

நீண்ட நாளான விஷக்கரப்பான், விக்கம் முதலானவைகள் தீரும்.

**குறிப்பு :—**

98 ெக. சுவடியில் 'நஞ்சுண்டான்' என்பதற்குச் சிலந்திக் கொடி என்று பெயர் காணப்படுகிறது. அதற்குப் பதில் கிரந்திநாயகத்தை எடுத்துக்கொள்ளலாமென்று தோன்றுகிறது.

---

## 16. ஊதுகரப்பானுக்கு மருந்து.

*நெருஞ்சிவேர் சங்கின்வேர் கொழுந்துகீழ்காய்
நெல்லிவேர் காட்டுமல் லிகையுந்தண்டும்
பருங்குளரி யிலைதண்டு கோவைத்தண்டும்
பகரிலந்தை யிலைசிறுபுள் ளடியிதெல்லா
முரியபதக் குத்தண்ணீ ருடனடுப்பி
லுண்மையாய்க் காய்ச்சிநா ழியாக்கி
யருந்திடவே யூதுகரப் பன்கடீரும்
அருமையா மிம்முறையை யறிந்துபாரே (உஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| நெருஞ்சில்வேர் | சங்கம்வேர் |
| சங்கங்கொழுந்து | கீழாநெல்லிவேர் |
| காட்டுமல்லிகையிலை | காட்டுமல்லிகைத்தண்டு |
| குளரியிலை | குளரித்தண்டு |

| | |
|---|---|
| கோவைத்தண்டு | உப்பிலிக்கொடி |
| இலந்தையிலை | சிறுபுள்ளடி |

இவைகளைச் சமனெடை யெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து 2 மரக்கால் ஜலம்விட்டு, 4 படியாக (பட்டணம் படிக்கு ½)க் கஷாயம் செய்து சாப்பிடவும்.

ஊதுகரப்பான் தீரும்.

---

## 17. பித்த கரப்பானுக்கு.

ஏலமக்கி ராக்கார மிலாமிச்சம்வேர்
இலவங்கம் பழம்புளிநெற் பொரிவல்லாரை
சிலமுள வெட்டிவேர் வில்வத்தின்வேர்
சீரகங்கோட் டம்புளியா ரையுமேநெல்லி
கோலவதி மதுரமிவை சமமாய்க்கொண்டு
குணமான பசுவின்பா லாலரைத்துச்
சாலவரைப் படிபாலில் வேகவைத்த
சாரமுண்ணிற் பயித்தியமாங் கரப்பான்போமே
(உரு)

(இ-ள்)

| | |
|---|---|
| ஏலக்காய் | அக்கிராக்காரம் |
| இலாமிச்சம்வேர் | கிராம்பு |
| பழம்புளி | நெற்பொரி |
| வல்லாரை | வெட்டிவேர் |
| வில்வவேர் | சீரகம் |
| கோஷ்டம் | புளியாரை |
| நெல்லிவற்றல் | அதிமதுரம் |

இவைகளை வகைக்குச் சமனெடை யெடுத்து (1 வராகனெடை) அம்மியின்மேல் வைத்துப் பசுவின் பால்விட்டு நன்றாய் அரைத்து, ½ படி பசுவின்பாலில் கலக்கிக் கொதிக்கவைத்துப் பருகவும்.

பித்தகரப்பான் தீரும்.

---

# 18 செங்கரப்பான், விடக்கரப்பான் முதலானவைகளுக்கு.

கொடிவேலி மிளகரணை செங்கதாரி
கொன்றையுந்தா துவளைசிறு குறிஞ்சாசங்கோ
டடைவான பூவரசு பெருங்குருந்த
மாடாதோ டைகருவேல் சங்கங்குப்பி
திடமான குன்றிகழற் கொடிபாவட்டை
சின்னிபிராய் தழுதாழை வேம்புதேற்று
றுடனேயுத் தாமணிமுக் குருந்தமிண்டோ
டுயர்சத்திச் சாறடையு மின்னங்கேளே (உச)

இன்பமுறுங் காட்டுவிளா புலிதுடக்கி
யிசைந்தபெரு மரத்திலை டிவையின்வேரும்
பன்னுகருஞ் சீரகநீர் மேனெருப்புப்
பகராடு தீண்டாத பாலையோடே
மன்னுகருங் குங்கிலியங் கொல்லங்கோவை
மறுவியவிவ் வகைகளுக்கோர் பிடியதாகு
முன்னியபேய்க் கொம்மட்டிக் காயைந்தாகு
முதிரான கடுக்காயு மீரைந்தாமே (உரு)

சுருள்ளி யறுநாழி பெருங்கிழங்கு
மியலுங்கற் றாழையின்ற சருகுங்கோவை
நேர்கிழங்கிம் மூன்றுவிளாங் காய்மட்டாக
நீங்காதே யிடித்தரைத்தே ரண்டத்தெண்ணெய்

சேரெட்டிற் போட்டெரித்தே யளவாயுன்னிற்
செங்கரப்பான் விடக்கரப்பான் றேகந்தன்னிற்
சார்கொள்ளிக் கரப்பனோ டுங்கரப்பன்
றளர்கட்டுக் கரப்பனெலாந் தவிருந்தானே (உசு)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | மிளகரணை |
| செங்கதாரிப்பட்டை | கொன்றை |
| சிறுகுறிஞ்சாவேர் | சங்கம்வேர் |
| பூவரசம்வேர் | பெருங்குருந்து |
| ஆடாதோடைவேர் | சங்கங்குப்பிவேர் |
| குன்றி | கழற்கொடி |
| பாவட்டை | சின்னி |
| பிராய் | தழுதாழை |
| வேம்பின்வேர் | தேற்றம்வேர் |
| உத்தாமணி | முக்குருந்தைவேர் |
| இண்டு | சத்திச்சாறணைக்கிழங்கு |
| காட்டுவிளா | கற்றாழைவேர் |
| பெருமருந்து | தூதுவளை |
| கருவேலம்வேர் | |

இவைகளின் வேர்கள் வகைக்கு 1 பலம்

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | நீர்மேல்நெருப்பு |
| ஆடுதீண்டாப்பாளை | கருங்குங்கிலியம் |

இவைகள் வகைக்கு—ஒரு பிடி

முற்றிய பேய்க்கொம்மட்டிக்காய்—5 (எண்ணிக்கையில்)
,, கடுக்காய் 10 ,,
வெள்ளைப்பூண்டுச்சாறு 6 படி

| | |
|---|---|
| பெருங்கிழங்கு | கற்றாழைச்சருகு |
| கோவைக்கிழங்கு | |

இம்மூன்றும் வகைக்கு—ஒரு விளாங்காய்ப்பிரமாணம்

எல்லாச் சரக்குகளையுங் கல்லுரலிலிட்டிடித்து, அம்மியின் மேல் வைத்து நன்றாக அரைத்து ஆமணக்கெண்ணெய் 3 சேருடன் குழப்பி, அடுப்பின்மேலேற்றி யெரித்துப் பதத்தி லிறக்கவும்.

இதில் ஒரு (துட்டெடை) யெடுத்துப் பசுவின் பாலு டனே உட்கொள்ள

செங்கரப்பான், விடகரப்பான், கொள்ளிக்கரப்பான் ஓடுகரப்பான், கட்டுக்கரப்பான் முதலானவைகள் தீரும்.

---

## 19. கரப்பானுக்கு..

நன்னாரிவேர் நெருஞ்சில்வேர் சங்கம்வேர்நத்-
தைச்சூரி யின்வேர் சுரவேருள்ளி
வன்சிற்று விரையின்வேர் வசம்பிவ்வேழு
வகைசமஞ்சேர்த் தரைத்தெண்ணெய் தனியே
யன்பாக வடித்துண்ணிற் கரப்பனேகு [காய்ச்சி
மதனைமேற் பூசநல மாகுமுண்மை
பொன்மாது திலகமெனுஞ் சரபபூபன்
பூதலத்தோர்க் கிம்முறையைப் புகன்றவாறே
(உள)

(இ-ள்)

| | |
|---|---|
| நன்னாரிவேர் | நெருஞ்சில்வேர் |
| சங்கம்வேர் | நத்தைச்சூரிவேர் |
| பெருமருந்துவேர் | வெள்ளைப்பூண்டு |
| ஆவாரைவேர் | வசம்பு |

இவைகளை வகைக்கு (1 வராகனெடை) விதமெடுத்துத் தூள் செய்து, ஆமணக்கெண்ணெய் 1 சேரில் குழப்பி யடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதில் ஒரு துட்டெடை யுட்கொள்ள, கரப்பான் தீரும். இத்தைலத்தைக் கரப்பான் புண்களிலும் இடலாம்.

குறிப்பு :—

செய்யுளில் 7 வேர்வகைகள் என்று காணப்படினும், வாஸ்தவத்தில் 8 வகைகள் இருப்பதைக் கவனிக்கவும்.

---

# 20. விடபாகத்திற்கு.

கரிசாலை வேளைமுன்னை பொன்னாங்காணி
கரிப்பாலை யழிஞ்சிலிவ்வேர் பலம்வகைக்குச்
சரிபாக மாயரைத்தோர் சேர்வேப்பெண்ணெய்
தனிற்கலந்து காய்ச்சியரைப் பலமதாகப்
பரிவாக வேயிருபோ துண்டுவந்தாற்
பறந்தோடும் விடபாக மென்றதெல்லா
மரிதான விம்முறையை யுலகோருய்ய
வழகைவாழ் சரபேந்திர னருளிதாமே (உஅ)

(இ-ள்)

| | |
|---|---|
| கரிசாலங்கண்ணி | நல்லவேளை |
| முன்னை | பொன்னாங்காணி |
| கரிப்பாலை | அழிஞ்சில் |

இவைகளின் வேர்கள் வகையொன்றுக்கு ஒரு பலம் எடுத்து, அம்மியின்மேல் வைத்து நன்றாக அரைத்து, வேப்பெண்ணெய் 1 சேருடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

இதில் வேளைக்கு ½ பலம் தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

விஷபாகங்கள் தீரும்.

---

# 21. விடபாகத்திற்கு மற்றொரு மருந்து.

கற்றுவி னெய்நாழி பானுழி
கதித்தறு கஞ்சாறு நாழிதன்னில்
நற்பாலை முகிழ்கோட்ட மதுரமூன்றும்
நயமாயொவ் வொன்றுக்கோர் பலமரைத்தே
யுற்பனமா கக்கரைத்துக் காய்ச்சியுண்பா
யொருவேளைக் கொருவரா கனெடையாகத்
துர்பலஞ்செய் விடபாகம் நீங்கிப்போகுஞ்
சொற்பமல விம்முறையைச் செய்துபாரே (உகூ)

(இ-ள்)

| | |
|---|---|
| பசுவின் நெய் | 1 படி |
| பசுவின் பால் | 4 படி |
| அருகம்புல்லுச்சாறு | 1 படி |

இவைகளையொன்று கலந்து,

| | |
|---|---|
| நற்பாலைமொட்டு | கோஷ்டம் |
| அதிமதுரம் | |

இவைகளை வகைக்கு 1 பலம் விதமெடுத்துப் பசுவின் பால் விட்டரைத்து, சாறுகூட்டிய நெய்யுடனே கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவத்திலிறக்கவும்.

இதில் 1 வராகனெடை யளவெடுத்துப் (பசுவின் பாலுடனே) சாப்பிட விஷகரப்பான் தீரும்.

---

# 22. கரப்பானுக்கு மருந்து.

கொடிவேலி நிலக்கடம்பு செங்கதாரி
குணமான வாதண்டை புலிதொடக்கி
யடைவுளநன் ஞாரியும்வெள் ளறுகுஞ்சங்கு
மன்பான சென்னகர மீசன்மூலி
திடமான விலைபத்தின் வேர்களோடு
திருந்தியதோர் புளிநரளைக் கிழங்குஞ்சேர்த்தே
யெடைசமனாய்க் கொண்டிடித்து வடித்தெடுத்தே
யிதமாயெள் ளெண்ணெயிற்போட் டெரித்
[திடாயே (௧0)

எரித்தபின்பு மெழுகுபத மானவாறே
யெட்பொடிநற் றவிடிரண்டுஞ் சற்றுத்தூவி
யுரிமையுள பக்குவத்தி லிறக்கியேதா
னுண்மையாய் முலைப்பாலி னுடன்கலந்தே
யிருபோதும் புகட்டிடவே கரப்பானெல்லா
மேகிவிடுந் தேகசௌக் கியங்களுண்டாந்
தருமகுண வானளகைக் கதிபனெங்கள்
சரபபூ பதியுணர்ந்து சாற்றும்வாறே (௧௧)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | நிலக்கடம்பு |
| செங்கதாரி | ஆதண்டை |
| இண்டு | நன்னாரி |
| வெள்ளறுகு | சங்கம்வேர் |
| சென்னகரம் | பெருமருந்து |

இவைகளின்வேர் வகைக்கு (ஒரு பலமெ)டுத்து, அதனுடன புளிநரளைக்கிழங்கு (ஒரு பலமு)மிட்டு யாவற்றையும் கல் லுரலிலிட்டிடித்து, நல்லெண்ணெய் (5 சேருடன்) கலந்து அடுப்பின்மேலேற்றி யெரித்து மெழுகுபதமானபின்,

எள்ளின் தூள், தவிடு (வகைக்கு ஒரு பலம்) இவ்விரண்டையும் அதில் தூவிப் பக்குவமாக இறக்கவும். இந்த எண்ணெயில் 1 வராகனெடை யெடுத்து, முலைப்பாலுடன் குழைத்துக் குழந்தைகளுக்குப் புகட்டவும். கரப்பான்கள் தீரும். உடம்பும் நன்ருகத் தேறும்.

# 23. விடபாகம், வீக்கம், வாதக்கரப்பான் முதலானவைகளுக்கு.

முருக்கின்வேர் கழற்கொடி வேர்கீழ்க்காய்
நெல்லிமுதிர் வீழிவேரும் பாவட்டைவேருங்
கருவேப்பந் தண்டுசா றடைக்கிழங்கு
கனத்திடுமுத் தமதாளி வேரோரெட்டு
மொருபிடியாஞ் சுக்குபல மொன்றுங்கூட்டி
யொருங்காக நறுக்கிப்பா னையிலேபோட்டுத்
திறமாய்நாற் படிதண்ணீர் விட்டுக்காய்ச்சிச்
சிறுகவே யெட்டொன்று யிறக்கிக்கொள்ளே (௩௨)

இறக்கியந்தக் கடாயத்தை யந்திசந்தி
யிருபோது முண்டிடவா தக்கரப்பான்
குறையாத வீக்கம்விட பாகத்தோடு
கூறுமல சலபந்தங் குணமதாகு
மறைகின்ற விம்முறையின் படிதப்பாம
லாதரவாய்ச் செய்திடுவீர் தஞ்சையாளு
மிறைவனுஞ் சரபபூ பதியுணர்ந்தே
யிதமாக வருளியநன் முறையிதாமே (௩௩)

(இ-ள்)

| | |
|---|---|
| முருக்கின்வேர் | கழற்கொடிவேர் |
| கீழாநெல்லி | வீழிவேர் |
| பாவட்டைவேர் | கருவேப்பந்தண்டு |
| சாறடைக்கிழங்கு | உத்தாமணிவேர் |

இவைகளின் வேர்கள் வகைக்கு ஒரு பிடி

சுக்கு 1 பலம்

இவைகளைச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி, ஒரு பானையி லிட்டு 4 படி தண்ணீர்விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டி லொன்றாகக் காய்ச்சி இறக்கவும்.

இக்கஷாயத்தைத் தினம் இருவேளை காலையிலும் மாலை யிலும் (ஒரு அவுன்ஸ்) சாப்பிடவும்.

வாதக்கரப்பான், வீக்கம், விஷம், மலச்சிக்கல், நீரடைப்பு முதலியவைகள் தீரும்.

---

## 24. கரப்பானுக்கு.

செருப்படிவெள் ளறுகுசா றடைகற்றாழை
சீந்திலுடன் கிரந்திநா யகமகத்தி
கருணையின்ற கிழங்கவுரி துளவத்தோடே
கரிசாலை யிவைபதினோர் வகையொன்றுக்கே
யுரிசாறு கற்கங்கா ரெள்ளுங்கோட்டத்
துடன்மிளகு சுக்குத்திப் பிலிவசம்பு
கருஞ்சீர கம்பங்கம் பாலைநெல்லிக்
கடுக்காய்ச் சந்தனமேலந் தான்றிக்காயே (௩௪)

காய்ந்தகார் போகரிசி புழுகுசட்டங்
கனமான செவ்வல்லி தேவதார
மாய்ந்தவில வங்கப்பச் சிலையினோடே
யமுக்கிரா வேரிவையொவ் வொன்றினுக்கே
வாய்ப்பாயோர் கழஞ்சிடித்தெள் ளெண்ணெயானெய்
வகைக்குரிகூட் டிக்கலந்து வடித்தருந்தித்
தோய்ந்திடமே லினும்பூசக் கரப்பானெல்லாந்
தொலைந்துபோங் கைமுறையாய்த் தொகுத்துச்
செய்யே (௩௫)

(இ-ள்)

| | |
|---|---|
| சிறுசெருப்படி | வெள்ளறுகு |
| சாறடைக்கிழங்கு | கற்றாழை |
| சிந்தில்கொடி | கிரந்திநாயகம் |
| அகத்தி | கருணைக்கிழங்கு |
| அவுரி | துளசி |
| கையாந்தகரை | |

இச்சரக்குகளின் சாறுகள் வகைக்கு ½ படி வீதமெடுத்து ஒன்றுகலந்து,

| | |
|---|---|
| காட்டெள்ளு | கோஷ்டம் |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | வசம்பு |
| கருஞ்சீரகம் | ஆடுதீண்டாப்பாளை |
| நெல்லிவற்றல் | கடுக்காய்த்தோல் |
| சந்தனத்தூள் | ஏலக்காய் |
| தான்றிக்காய்த்தோல் | கார்போகரிசி |
| புனுகுசட்டம் | செவ்வல்லிக்கொடி |
| தேவதாரு | கிராம்பு |
| பச்சிலை | அமுக்கிராக்கிழங்கு |

முதலான சரக்குகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து, மேலே சொன்ன ஏதேனும் ஒரு சாறுவிட்டு நன்றாக அரைத்து,

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | ½ படியும் (2½ சேர்) |
| பசுவின் நெய் | ½ படியும் ,, |

விட்டு, எல்லாவற்றையு மொன்றுகலந்து அடுப்பின்மேல் ஏற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இம்மருந்தில் ஒரு ஸ்பூன் அளவெடுத்து உள்ளுக்குச் சாப்பிடவும். இதையே கரப்பான் புண்களின்மேலும் பூசவும். அவை குணமாகும். கைகண்டது.

# 25. கரப்பான், கிரந்திகளுக்கு 'அறுகு நெய்'

நண்பான வெள்ளறுகின் சாறுதானும்
நாழுமி பசுவினெய்பால் வகையொன்றுக்குப்
பண்பாக நாழியுரி கலந்துகாய்ச்சிப்
பாங்காகக் கூட்டுகற்கத் திரவியங்கேள்
செண்பகப்பூ விருவேலி மதுரங்கோட்டஞ்
செங்கழுநீர்க் கிழங்குடன்சந் தனநன்னாரி
திண்பாலை மரத்தின்வே ரிலாமிச்சம்வேர்
செய்யதா மரைவளைய மிவையீரைந்தே (௩௬)

ஈரைந்தும் வகையொன்றுக் கோர்கழஞ்சா
யிடித்தரைத்தெண் ணெயிற்கரைத்துக் காய்ச்சிக் [கொண்டு
சீராக வடித்துநல் கலசந்தன்னில்
சேர்த்துதையந் தனிலளவாய்ச் சுடவைத்துண்ணிற்
றீராத கிரந்தியொடு கரப்பானெல்லாந்
தீர்ந்துவிடுந் தேகசௌக் கியமுண்டாகும்
வீராதி வீரனெனுஞ் சரபபூபன்
மேதினியோர்க் கிம்முறையை விதித்தவாறே (௩௭)

(இ-ள்)

| | |
|---|---|
| வெள்ளறுகுச்சாறு | 4 படி |
| பசுவின் நெய் | $1\frac{1}{2}$ படி |
| ,, பால் | $1\frac{1}{2}$ படி |

இவைகளை யொன்றுகலந்து,

| | |
|---|---|
| செண்பகப்பூ | வெட்டிவேர் |
| அதிமதுரம் | கோஷ்டம் |
| செங்கழுநீர்க்கிழங்கு | சந்தனத்தூள் |
| நன்னாரிவேர் | பாலைவேர் |
| இலாமிச்சைவேர் | தாமரையிலையின் உட் [சுருள் |

இச்சரக்குகளை வகைக்கு 1¼ வராகனெடை விதமெடுத்துப் பசுவின் பால்விட்டரைத்துச் சாறு கூட்டிய நெய்யுடனே குழப்பி. அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதனையொரு புதுக்கலசத்தில் பத்திரப்படுத்தித் தினம் காலை வேளைகளில் 1 ஸ்பூனெடுத்துச் சுடவைத்துச் சாப்பிடவும்.

தீராத கிரந்திகள், கரப்பான்கள் முதலியவைகள் குண மாகி தேக சௌக்யமும் உண்டாகும்.

குறிப்பு :—

98 ந சுவடியில் பசுவின் நெய் என்பதற்கு பதில் பசு வெண்ணெய் என்று கொடுக்கப்பட்டிருக்கிறது.

---

## 26. செங்கரப்பானுக்கு.

செங்கதா ரியின்வேரு மெருக்கின்வேருஞ்
சிறுகுறிஞ்சா வேருநல் குறட்டைவேரும்
பங்கமிலாத் தலைச்சுருள் ளியின்வேராவின்
பாலிலரைத் துள்ளிவசம் பதுவுங்கூட்டி
யிங்கிதமாய் நல்லெண்ணெய் விட்டுக்காய்ச்சி
யியல்பாக வடித்தருந்தி மேலும்பூசிற்
செங்கரப்பன் றீர்ந்துவிடு நிறையறிந்து
செய்திடுவீ ரிம்முறையைத் திறமாய்த்தானே (நூ-அ)

(இ-ள்)

| | |
|---|---|
| செங்கதாரிவேர் | எருக்கம்வேர் |
| சிறுகுறிஞ்சான் | குறட்டைவேர் |
| பெருமருந்துவேர் | பூண்டு |
| வசம்பு | |

இவைகளைச் சமனெடுத்து (1 பலம்)ப் பசுவின் பால் விட்டு நன்றாக அரைத்து நல்லெண்ணெய் (1½ சேருடன்) கூட்டி,

அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயில் ஒரு ஸ்பூனளவெடுத்து உள்ளுக்குச் சாப்பிடவும். இதையே செங்கரப்பான் புண்களின்மேலும் பூசவும். அவை தீரும்.

---

## 27. பெருங்கரப்பான், ஓடுகரப்பானுக்கு.

நிலவேம்பு சிறுகுறிஞ்சா சிவனார்வேம்பு
　　நீர்முள்ளி யீசுரவேர் மணித்தக்காளி
நலமான வந்தரத்தா மரைகிரந்தி
　　நாயகமுத் தாமணிபேய்ப் பீர்க்கங்காயுஞ்
சொலுந்துளசி நன்னாரி யிவையின்வேருஞ்
　　சுகமான வசம்புள்ளி யிவையொன்றுக்கு
விலேகாசி னெடையரைத்து வைத்துக்கொண்டு
　　விரும்பியதேங் காயெண்ணெய் கூட்டிடாயே (௩௬)

கூட்டுவா யிலுப்பெண்ணெய் புங்கினெண்ணெய்
　　குணமான வெள்ளெண்ணெய் யிவையொன்றுக்கு
நாட்டமா யுழக்களவு சேர்த்தெரித்து
　　நயமாக வோர்காசி னளவுட்கொண்டு
வாட்டமிலா வோடுகரப் பான்புண்ணுக்கு
　　வளமாகப் பூசிடவே வாசியாகுந்
தாட்டிகனுஞ் சரபபூ பதியுணர்ந்து
　　சாற்றியவிம் முறையிதனை யறிந்துபாரே (௬௰)

(இ-ள்)

| | |
|---|---|
| நிலவேம்பு | சிறுகுறிஞ்சான் |
| சிவனார்வேம்பு | நீர்முள்ளி |

| | |
|---|---|
| பெருமருந்து | மணித்தக்காளி |
| அந்தரத்தாமரை | கிரந்திநாயகம் |
| உத்தாமணி | பேய்ப்பீர்க்கங்காய் |
| துளசி | நன்னாரி |

இவைகளின் வேர் வகைக்கு—1 வராகனெடை

| | |
|---|---|
| வசம்பு | பூண்டு |

இவ்விரண்டும் வகைக்கு 1 வராகனெடையும், எடுத்து இடித்துத் தண்ணீர்விட்டு நன்றாகவரைத்துத்

| | |
|---|---|
| தேங்காயெண்ணெய் | 1 உழக்கு |
| இலுப்பெண்ணெய் | 1 ,, |
| புங்கெண்ணெய் | 1 ,, |
| நல்லெண்ணெய் | 1 ,, |

முதலானவைகளுடன் ஒன்று கலந்து, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயில் ஒரு வராகனெடை யெடுத்து உட்கொண்டு, புண்களின் மேலேயும் போடவும்.

ஒடுகரப்பான் தீரும்.

---

# 28. கரப்பானுக்கு

நிலவேம்பா ணுப்பட்டை புங்கம்பட்டை
நெடியதா துவளையின்வேர் சிவனார்வேம்பு
நிலவாகை வேர்சங்கத் தாரிப்பட்டை
நிலைத்தகொடி வேலிவேர் மணித்தக்காளி
யிலையாறு முடக்கொத்தான் கண்டகாரி
யின்வேர்காத் தொட்டிவேர் நாவற்பட்டை
நலமான கற்குறட்டை வேர்கிரந்தி
நாயகம்பேய்ப் புடலுமிள கரணைவேரே (சக)

வேராகுந் தைவேளை சிறுகுறிஞ்சா
வேர்தவசு முருங்கைமா வலிங்கப்பட்டை
சீரான பெருமரத்தின் பட்டையோடு
சென்னகரப் பட்டைநரி விளாவின்பட்டை
சாரமுறு பொன்முசுட்டை வேரும்வெள்ளைச்
சாறடைவே ருடன்செப்பு நெருஞ்சியின்வேர்
நேராக விவைவகைக்கோர் பலத்தைக்கூட்டி
நிழல்தனி லுலர்த்தியிடித் தெடுத்துக்கொள்ளே (சஉ)

எடுத்தபொடி தன்னையே ரண்டத்தெண்ணெய்
யேற்றதோர் நான்குசேர் தனிற்கலக்தே
யடுப்பேற்றிப் பதமாகக் காய்ச்சிவாங்கி
யறியகல சத்தினிலே வைத்துக்கொண்டே
யெடுத்தளவா யுண்டுவரிற் கரப்பானெல்லா
மேகிவிடுங் கைகண்ட முறையீதாகுங்
கடற்குவலை யம்புரக்குந் துளசபூபன்
காதலனுஞ் சரபேந்திரன் கண்டவாறே (சங)

(இ-ள்)

நிலவேம்பு ஆவாரைவேர்ப்பட்டை
புங்கம்பட்டை தூதுவளைவேர்
மணித்தக்காளியிலை நிலவாகைவேர்
செங்கதாரிப்பட்டை கொடிவேலிவேர்
முடக்கொத்தான் கண்டங்கத்திரிவேர்
காத்தொட்டிவேர் நாகப்பட்டை
குறட்டைவேர் கிரந்திநாயகம்
பேய்ப்புடல் மிளகரணைவேர்
தைவேளை சிறுகுறிஞ்சாவேர்
தவசுமுருங்கை மாவலிங்கம்பட்டை
பெருமரப்பட்டை சென்னகரப்பட்டை
நரிவிளாப்பட்டை பொன்முசுட்டைவேர்
வெள்ளைச்சாறடைவேர் செப்புநெருஞ்சிவேர்
சிவனார்வேம்பு

இவைகளை வகைக்கு 1 பலம் விதமெடுத்து, நிழலில் உலர்த்திக்கொண்டு கல்லுரலிலிட்டிடித்துத் தூளாக்கி,

ஆமணக்கெண்ணெய் 4 சேருடன்

குழப்பி யடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதையொரு கலசத்தில் பத்திரப்படுத்தி, வேளைக்கு 1 ஸ்பூன் விதம் உட்கொள்ளக் கரப்பான்களனைத்துந் தீரும். கைகண்டது.

---

## 29. கரப்பானுக்கு.

ஏரண்டத் தெண்ணெயும்வெங் காயச்சாறு
யீனாத வெருமைச்சா ணுகப்பாலும்
நேராக வகைக்குநாற் சேருஞ்சேர்த்து
நினைவாகக் காய்ச்சியே பதத்திறக்கிச்
சீராக வொருகரண்டி யளவுண்டக்காற்
றீருமே கரப்பனெலாம் பத்தியங்கேள்
காரமாம் புகையிலையும் புளியும்நீக்குக்
கைகண்ட முறையிதைப்போற் கண்டிலேனே
(சச)

(இ-ள்)

| | |
|---|---|
| ஆமணக்கெண்ணெய் | 4 சேர் |
| வெங்காயச்சாறு | 4 சேர் |
| கன்றுபோடாத எருமைக் கிடாரியின் சாணியைப் பிழிந்தெடுத்த நீர் | 4 சேர் |
| எருமைப்பால் | 4 சேர் |

இவைகளையொன்று சேர்த்து, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதில் ஒரு கரண்டியளவு (1 ஸ்பூன்) உட்கொள்ளவும். கரப்பான்கள் தீரும்.

**பத்தியம் :—**

காரம், புளிப்பு முதலான சுவைகளுள்ள பதார்த்தங்களையும், புகையிலையையும் நீக்கவும். கைகண்ட மருந்தாகும்.

---

## 30. கர்ப்பிணி கரப்பானுக்கு.

வாதகரப் பான்பட்டை பரங்கிப்பட்டை
வசம்புகம்பிப் பிசின்கருஞ்சீ ரகம்வெள்ளுள்ளி
பூதகரப் பான்பட்டை வேப்பம்பட்டை
புகலுஞ்செங் கத்தாரிப் பட்டைமஞ்சள்
சீதமுள கொத்தமலி கடுகுரோணி
சீரகங்கத் தூரிமஞ்ச ளிவையீரேழு
மோதியவொவ் வொன்றுக்கோர் பலமதாகு
முயர்ந்தகடுக் காயிருப தாகச்சேரே (சரு)

சேர்த்திடுவாய் செருப்படிகொட் டைக்கரந்தை
சின்னியிலை கோவையிலை மணித்தக்காளி
யூரநொச்சி கிரந்திநா யகமிரண்டி
ளிலைகோழி யவரையிலை துளசிச்சாறுஞ்
சேரெட்டுப் பசுவின்பா லுன்குசேருஞ்
சேர்நான்கே யீரவெங்கா யத்தின்சாறு
மேரண்டத் தெண்ணெய்படி மூன்றுங்கூட்டி
யிதமாய்முன் மருந்ததனை யரைத்திடாயே (சசு)

அரைத்திடுவாய் குளிர்ந்தநீ ருட்டிக்கொண்டே
யதனைவழித் தெண்ணெய்நல் சாற்றிற்போட்டு
கரைத்திரண்டு நாளிரவிப் புடத்தில்வைத்துக்
கைபாக மாயடுப்பிற் சற்றுவைத்தே
யுரியவிளங் கொதியிட்டு வரும்பதத்தி
லுயர்கலசந் தனில்வடித்தே யுழக்குவீத
மருந்திடவிப் படியெட்டு நாளைக்கோர்நா
ளன்பாக நான்குமுறை கொடுத்திடாயே (சஎ)

கொடுத்திடுவாய் கர்ப்பிணிக்கும் பாலர்க்குந்தான்
குணமாகுங் கரப்பனெல்லா மாறிநன்காங்
கடுகுபூ சினிக்காய்கைப் புப்புளிப்புக்
கருதாமற் பாலன்ன மருந்தவேணுந்
திடமான விம்முறைகை கண்டதாகுந்
திருவளர்கா விரியுடைதென் னளகையாளுங்
கடிகமழ்பூந் தொடைமார்பன் சரபபூபன்
கண்டுணர்ந்து சாற்றுமுறை யிதுதப்பாதே (சஅ)

(இ-ள்)

| | |
|---|---|
| வாதகரப்பான்பட்டை | பரங்கிப்பட்டை |
| செம்பு | கம்பிப்பிசின் |
| கருஞ்சீரகம் | வெள்ளைப்பூண்டு |
| பூதக்கரப்பான்பட்டை | வேப்பம்பட்டை |
| செங்கதாரிப்பட்டை | மஞ்சள் |
| கொத்தமல்லிவிதை | கடுகரோகிணி |
| சீரகம் | கஸ்தூரிமஞ்சள் |

இச்சரக்குகள் வகைக்கு 1 பலம்

முற்றிய கடுக்காய் 20 (எண்ணிக்கையில்)

பின்பு

| | |
|---|---|
| செருப்படி | கொட்டைக்கரந்தை |
| சின்னியிலை | கோவையிலை |
| மணித்தக்காளி | நொச்சிலிலை |
| கிரந்திநாயகம்இலை | கோழியாவாரையிலை |

இவைகளின் சாறுகள் வகைக்கு 1 சேர்

| | |
|---|---|
| துளசிச்சாறு | 8 சேர் |
| பசுவின் பால் | 4 சேர் |
| ஈரவெங்காயச்சாறு | 4 சேர் |
| ஆமணக்கெண்ணெய் | 3 படி |

முதலானவைகளுள், கடைச்சரக்குகளை முதலில் இடித்து, அம்மியின்மேல் வைத்துக் குளிர்ந்த ஜலம் விட்டு நன்றாக வரைத்து விழுதாக்கிச் சாறுகூட்டிய எண்ணெயுடனே ஒன்று கலந்து ஒரு பெரும் பாத்திரத்திலிட்டு 2 நாட்களுக்குச் சூரிய புடமிடவும். பின்பு, இதை அடுப்பின்மேல் வைத்துக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொதிக்கவைக்கவும். பதமானபின் இதை வடித்துப் புதுக்கலசத்தில் பத்திரப்படுத்தவும்.

இதில் ஒரு உழக்கு எடுத்து 8 நாட்களுக்கொரு தடவை உட்கொள்ளவும். இவ்வாறு 4 முறை சாப்பிடவேண்டும்.

சிறு குழந்தைகளுக்கும், கர்ப்ப ஸ்திரிகளுக்கும் ஏற்படும் கரப்பான் தீரும்,

**பத்தியம் :—**

கடுகு, பூசினிக்காய், கசப்புப் பதார்த்தங்கள் முதலியவைகளை நீக்கிவிடவும். மருந்து சாப்பிட்ட தினத்தன்று பால் சாதம் சாப்பிடவும். கைகண்ட முறையாகும்.

---

## 31. ஊது கரப்பான் முதலானவைகளுக்கு.

வாகைமா விலுப்பையிவை மூன்றின்பட்டை
வளமான வெள்ளடம்பி னிலைநென்மாவிற்
பாகமாய்ச் சேர்த்திடித்துக் களியாய்கிண்டிப்
பருகிடவே திமிர்வாத நடுக்குவாதஞ்
சோகமுற வருமூது கரப்பனோடு
சொல்வாத கரப்பனெலாந் துலைந்துபோகுந்
தேகசௌக் கியமுண்டாஞ் சரபபூபன்
திறமாக வாய்ந்துரைத்த முறையிதாமே (சஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| வாகைப்பட்டை | இலுப்பைப்பட்டை |
| மாம்பட்டை | வெள்ளடம்பிலை |

இவைகளைக் கல்லுலுரலிலிட்டிடித்துச் சூரணஞ் செய்து, அரிசிமாவுடன் கலந்து தண்ணீர் விட்டு, அடுப்பின்மேல் வைத்துக் களியாகச் செய்து சாப்பிடவும்.

திமிர்வாதம், நடுக்குவாதம், ஊது கரப்பான், வாத கரப்பான் முதலியவைகள் தீரும். உடம்பும் நன்றாகத் தேறும்,

---

## 32. கரப்பான், கிரந்திகளுக்கு.

திரிகடுகங் கரியசீ ரகமிந்நான்கு
சேர்வகைக்கோர் பலங்குக்கில் பலமைந்தாகு
மரியதோர் வெள்ளறுகு பலமூன்றிந்த
வாறையுமே கூட்டியிடித் ததைத்தூளாக்கிப்
பரியநல் சேலைகொண்டு வடியுங்கட்டிப்
பாண்டத்தி லிட்டுவெரு கடியதாக
விருபோதுண் டிடக்கரப்பன் கிரந்தியெல்லா
மேகுங் குக்கிலாதிச்சூ ரணமதாமே (ரும)

(இ-ள்)

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கருஞ்சீரகம் |

இவைகள் வகைக்கு ஒரு பலம்

| | |
|---|---|
| சுத்திசெய்த குக்கில் | 5 பலம் |
| வெள்ளறுகு | 3 பலம் |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணஞ்செய்து, வஸ்காயஞ் செய்துகொள்ளவும். இதில் மூவிரல்கொண்ட அளவெடுத்துத் தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் (தண்ணீருடன்) உட்கொள்ளவும். கிரந்தி, கரப்பான் முதலானவைகள் தீரும்.

---

# 33. விடபாகம், விடவாயுவிற்கு.

சங்கிலையா டாதொடையு முக்காவேளை
சாற்றியவெண் ணொச்சியிலை நான்குங்கொண்டே
யங்கையா லோர்பிடியிட் டிடிக்கநற்சா
றதிலில்லா திருந்தால்வெள் ளாட்டுநீராற்
றங்காமற் பிழிந்துவைத்தே யிருமாகாணிச்
சாறதனிற் கடுகுரோ கணிபலங்கால்
பங்கமில்சுக் கொருபலந்திப் பிலியின்மூலம்
பலமரைநல் லோமமது பலமைந்தாமே (ருக)

பலமரைதிப் பிலிமிளகு மரைப்பலந்தான்
பதினைந்து கடுக்காயோ டிவையேழ்கொண்டு
நலமாய்முன் சாறதனு லரைத்தெடுத்து
நற்றேற்றம் பழத்தினள வுண்டையுஞ்செய்
துலர்த்திக்குப் பியினிலடைத் திட்டீர்போது
முறியதே னிற்பனைவெல் லத்திறுதல்
கலந்தனுபா னஞ்செய்தே யருந்தத்தீருங்
கனத்தவிட பாகமுடன் வாயுத்தானே (ருஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| சங்கிலை | ஆடாதோடாயிலை |
| முக்காவேளையிலை | வெண்ணொச்சியிலை |

இவைகளை வகைக்கு ஒரு பிடியெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்துச் சாறுபிழியவும். சாறு வேண்டிய அளவு கிடைக்காவிட்டால், வெள்ளாட்டு மூத்திரம் இரண்டு மாகாணிவிட்டு இடித்துப் பிழியவும்.

| | |
|---|---|
| கடுகரோகிணி | ¼ பலம் |
| சுக்கு | 1 பலம் |

| | |
|---|---|
| திப்பிலிமூலம் | ½ பலம் |
| ஓமம் | 5 பலம் |
| திப்பிலி | ½ பலம் |
| மிளகு | ½ பலம் |
| கடுக்காய் | 15 (எண்ணிக்கையில்) |

இவைகளை இடித்துச் சூரணித்துக் கல்வத்திலிட்டு, முன் சொன்ன சாறுவிட்டு நன்றாக (ஒரு நாள்) அரைத்துத் தேத்தாங்கொட்டைப் பிரமாணமுள்ள மாத்திரைகளாக உருட்டி வைத்துக்கொள்ளவும். இதை நிழலிலுலர்த்தி யொரு பாட்டிலில் பத்திரப்படுத்தி, வேண்டும்போது தினமிருவேளை தேனிலோ அல்லது பனைவெல்லத்திலோ சேர்த்துச் சாப்பிடவும்.

விஷபாகம், வாயு முதலியவைகள் தீரும்.

குறிப்பு:—

98 செ. சுவடியில் மூச்சு சுரமும் விடும் என்றுங் காணப்படுகிறது.

---

# 34. விடபாக வீக்கத்திற்கும், கரப்பானுக்கும்.

உய்யகொண் டான்வேரோர் பாக்கினேரா
　　யொருங்காக வரைத்துவெந்நீ ரிற்குழப்பித்
துய்த்திடுவா யொன்பதுநாட் காலைமாலை
　　சுட்டநீர் முள்ளிச்சாம் பலையானீரான்
மெய்வீக்கங் கரப்பனின்மேற் குழைத்துப்பூச
　　விலகுமவை யோர்நான்கு தினமேலன்றால்
வைய்யவீக் கங்கரைந்து நீரிறங்கு
　　மேலான விந்தபாகம் விரும்புவாயே (ருக)

(இ-ள்)

(1) எருமை முல்லை அல்லது கொய்யாவின் வேர் ஒரு பாக்களவெடுத்து, அம்மியின்மேல் வைத்து நன்றாகவரைத்து வெந்நீருடன் உட்கொள்ளவும்.

தினம் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும். இவ்வாறு 9 நாட்கள் செய்யவும்.

(2) நீர்முள்ளியைச் சமூலமாகயெடுத்து ஒரு புதுச் சட்டியிலிட்டு அடுப்பின் மேலேற்றிக் கறுக வறுத்துச் சாம்பலாக்கவும். இதில் ஒரு மூவிரல் கொள்ளுமளவெடுத்துப் பசுவின் மூத்திரத்துடன் குழைத்து

உடம்பு வீக்கம், கரப்பான் முதலியவைகளின்மேல் பூசவும். 4 நாட்களுள் வீக்கங்கள் குறைந்து சிறுநீருமிறங்கும்.

---

# 35. விடபாகம், வீக்கத்திற்குப் "பஞ்சதிரவ்ய நெய்"

பசுவின்பா லுழியுங்கோ மியங்கரைத்துப்
பாத்திரத்திற் றெளியவைத்த நீருநாழி
பசுவின்மோ ரிருநாழி தயிருநாழி
பாங்காய்கோ சலநாழி யிவையெல்லாஞ்சேர்த்
துசிதமுள தேவதா ரங்கிராம்பு
முய்யகொண் டான்வேருங் கடுகரோணி
யிசைந்திடுபூ தக்கரப்பான் முதிர்ந்தபட்டை
யினித்தவதி மதுரமிவை யரைத்திடாயே (ருச)

அரைத்திடுவா யொவ்வொன்றுக் கோர்கொட்டைப்
பாக்களவா கவாவினெய் நாழிகூட்டி
கரைத்திடுவா யிவையெல்லா மொன்றாய்ச்சேர்த்துக்
கைபாக மாய்க்காய்ச்சி வடித்துக்கொண்டு
சிரத்தினிற்பூ சிடவீக்கம் விடபாகங்கள்
தீர்ந்துசௌக் கியமாகு மிதன்பேர்பஞ்ச
திரவியநெய் முறையிதனை யுணர்ந்துசெய்வீர்
தீரன்சர பேந்திரமால் செப்பும்வாறே (ருரு)

(இ-ள்)

| | |
|---|---|
| பசுவின் பால் | 1 படி |
| பசுவின் மூத்திரம் | 1 படி |
| பசுவின் மோர் | 2 படி |
| பசுவின் தயிர் | 1 படி |
| பசுவின் சாணியைக் கரைத்துத் தெளிய வைத்த நீர் | 2 படி |

இவைகளை யொன்றுகூட்டி,

| | |
|---|---|
| தேவதாரம் | கிராம்பு |
| எருமைமுல்லைவேர் | கடுகரோகிணி |
| பூதக்கரப்பான்பட்டை | அதிமதுரம் |

முதலான சரக்குகளை வகைக்கு ஒரு பாக்களவெடுத்து, மேல் சொன்ன திரவங்களிலேதேனும் ஒன்றைவிட்டு நன்றாக அரைத்து,

பசுவின் நெய்—1 படியும் (5 சேர்) கூட்டி, எல்லாவற்றை யும் ஒன்றுகலந்து, அடுப்பின் மேலேற்றிப் பதத்தில் வடித் திறக்கவும். இந்த நெய்யைத் தலையில் தேய்த்துவர, வீக்கம், விஷபாகங்கள் முதலியவைகள் தீர்ந்து குணமுண்டாகும்.

குறிப்பு:—

98 நெ. சுவடியில் 'கற்கத் திரவியத்'தில் 'பெருங் குரும்பை' என்ற சரக்கும் காணப்படுகிறது.

---

## 36. விடபாகத்திற்கு.

அப்பையினற் கொடியரைத்தோ ரலகுபாக்கி
னளவாய்வெள் ளாட்டின்பா லிற்குழப்பித்
தப்பாம னுன்குதின மிருபோதுண்டு
சர்வாங்க மும்பூசப் பத்தியங்கே

ளப்பாலினுடனனமு மிளகின்றூள் சேர்த்திடு
மிளங்கீரைக் கறியா மருமையாகச்
செப்பியவிம் முறைப்படியே செய்யவென்றுஞ்
சேராது விடபாகந் தெரிந்துபாரே (௫௬)

(இ-ள்)

அப்பைக்கோவைக் கிழங்கின் கொடியைக்கொண்டு வந்து தண்ணீர்விட்டு நன்றாகவரைத்து அதிலொரு அலகு பாக்களவெடுத்து வெள்ளாட்டுப் பாலுடன் குழப்பி 4 நாட்களுக்குச் சாப்பிடவும். தினமும் காலையிலும் மாலையிலும் உண்ணவும். இதையே மேலுக்கும் பூசிவரவும்.

**பத்தியம் :—**

இளங்கீரையில், மிளகுபொடி கூட்டியுண்ணவும். விஷ பாகங்கள் தீரும்.

---

## 37. விடபாகத்திற்கு.

அப்பையினற் கிழங்கலகு பாக்கினேரா
யரியவெள் ளாட்டின்பாலி லரைத்துக்கொண்டே
யொப்புடனே யப்பாலிற் குழப்பிநன்று-
யோர்நான்கு தினமிருபோ துண்பீராகில்
எப்போது மணுகாது விடபாகங்க
ளிதமான விம்முறைகை கண்டதாகுந்
தப்பாமற் செய்திடுவீர் மன்னர்மன்னன்
சரபபூ பதியுணர்ந்து சாற்றும்வாறே (௫௭)

(இ-ள்)

அப்பைக்கோவைக் கிழங்கைக் கொண்டுவந்து, அம்மியின் மேல்வைத்து அரைத்து ஒரு அலகுபாக்களவெடுத்து வெள்

ளாட்டுப் பாலுடன் குழப்பித் தினம் இருவேளை, (காலையி லும், மாலையிலும்) சாப்பிடவும். இவ்வாறு 4 நாட்கள் சாப் பிடவும்.

விடபாகங்கள் திரும். கைகண்டது.

---

# 38. கிராணி, அக்கினிமந்தம், பாண்டுவிற்கு.

கொடிவேலி வேர்சுக்கு மிளகிந்துப்புங்
கூறுமிவை யோர்நான்குஞ் சமனிடித்த
பொடிநிறைக்குக் கடுக்காய்ச்சூ ரணித்துச்சேர்த்து
புளித்தமோர் காய்ச்சிக்கா செடைமருந்தை
யடைவாயிட் டருந்திவர வேகிராணி
யக்கினிமந் தம்பாண்டு மட்டகுன்மம்
விடபாக வாயுமுத லானநோய்கள்
விட்டுப்போஞ் சௌக்யங்குண மேவுந்தானே
(ருअ)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலி வேர் | சுக்கு |
| மிளகு | இந்துப்பு |
| இவைகள் வகைக்கு | 1 பலம் |
| கடுக்காய்த்தோல் | 4 பலம் |

இச்சரக்குகளைக் கல்லுரலிலிட்டிடித்து, வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ளவும். இதில் ஒரு வராகனெடை தூளெடுத் துக் காய்ச்சிய புளித்தமோருடன் கலந்து சாப்பிடவும்.

கிராணி, அக்கினிமந்தம், விடபாகம், வாயு, பாண்டு, அட்டகுன்மங்கள் முதலான ரோகங்கள் தீரும்.

---

# 39. விடபாக விக்கத்திற்கு.

முருக்கிலைவெங் காயமுநா கரம்வகைக்கு
முறையாகப் பலமிரண்டு சங்கின்பட்டை
முருங்கைப்பட் டையுமிரண்டு மொவ்வொன்றுக்கு
மொழிந்தபல மைந்திதெலா மிடித்துப்போட்டு
திருந்தவெரித் தடைகுடிநீர் வைத்துக்கொண்டு
தேகமறிந் தோரளவா யிரண்டுபோது
மருந்திடவே வீக்கம்விட பாகமேகு
மருமையுள விம்முறைகை கண்டதாமே (௬௧)

(இ-ள்)

| | |
|---|---|
| கல்யாணமுருங்கையிலை | வெங்காயம் |
| சுக்கு | |
| இவைகள் வகைக்கு | 2 பலம் |
| சங்கப்பட்டை | முருங்கைப்பட்டை |
| இவ்விரண்டும் வகைக்கு | 5 பலம் |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்துத் தண்ணீர்விட்டு அடைகஷாயமாகப் போட்டு, 2 வேளையிலும் நேரமொன்றுக்கு 1 பலம் அளவெடுத்து உட்கொள்ளவும். வீக்கம், விஷபாகங்கள் முதலானவை தீரும்.

குறிப்பு :—

அடைகஷாயம் என்பது தண்ணீர்விட்டு காய்ச்சாமல் ஊறவைத்து இறுத்த நீராகும்.

# 40. அரையாப்பு, துடைவாழை, கட்டு, வீக்கம் விப்புருதி, எழுச்சி முதலான வியாதிகளுக்கு எண்ணெய்ப் பூச்சு.

சங்கம்வேர் மிளகரணை வேருவாய்
வேர்சத்திச் சாரணைவேர்
செங்கத்தா ரியின்வேர்மா விலிங்கைவேர்
சாரணைவேர் சித்ரமூலி
பொங்கமிரு மாதண்டை வேருடனென்
பதுவகையும் பொருந்துங்கையாற்
றங்குமொரு சிரங்கைவசம் பொருபிடியுள்
ளித்தோலைத் தானும் போக்கே (சுய)

போக்கியொரு பிடியிதெல்லாம் நறுக்கியிரு
நாழியெள்ளின் புதியநெய்யிற்
றுக்கியடுப் பினில்வைத்துப் பொன்னிறமாய்க்
காய்ச்சியதைத் தானிறக்கித்
தேக்கிடவா மாக்கெண்ணெய் காலையந்தி
யிலுங்கொள்ளு தினமுந்தானே
வீக்கமதில் கடுகையரைத் தும்மிடு
பத்தியம்வெந் நீருஞ்சோறே (சுக)

வெந்நீரும் புழுங்கிளங் கீரைதனில்
மிளகுபொடி மேலேபோட்ட
தன்னையுங்கொள் ளிலவெண்ணெய் முழுதுங்கொட்
டரும்நோய் தானேகேளு
வின்னஞ்செய் யரையாப்புத் துடைவாழை
கட்டுநின்ற வீக்கமுந்தான்
இன்னமும்விப் புருதியெழு வியாதியது
உயர்ந்தார்விட் டேகுந்தானே (சுஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| சங்கம்வேர் | மிளகரணைவேர் |
| உகாய்வேர் | சத்திச்சாரணைவேர் |
| செங்கதாரிவேர் | மாவிலங்கம்வேர் |
| வெள்ளைச்சாறடைவேர் | சித்திரமூலவேர் |
| ஆதண்டைவேர் | |

இவைகளின் துண்டுகள் வகைக்கு ஒரு பிடி

வசம்பு ,,
தோல் நீக்கிய பூண்டு ,,

இவைகள் எல்லாவற்றையும் ஒரு கல்லுரலிலிட்டு நசுக்கி,

நல்லெண்ணெய் 2 படியுடன் ($2\frac{1}{2}$ சேர்)

கலந்து, ஒரு பாத்திரத்திலிட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து, சரக்குகள் பொன்னிறமாகியவுடன் அதைக் கீழிறக்கவும்.

தினந்தோறும் காலையிலும் மாலையிலும் ஒரு ஆழாக்கு எண்ணெய் உட்கொள்ளவும். எண்ணெயின் கடுகை அம்மியின்மேல் வைத்தரைத்துக் கரப்பான் வீக்கங்களின் மேல் பூசவும்.

**பத்தியம்:—**

வெந்நீர்சாதம் சாப்பிடவும். இளங்கீரையை மிளகுடன் சுண்டி உண்ணவும்.

இம்மாதிரி அந்த எண்ணெய் முழுவதையும் சாப்பிட,

| | |
|---|---|
| அரையாப்பு | துடைவாழை |
| கட்டுள்ள வீக்கங்கள் | விப்புருதி |

முதலான ரோகங்கள் தீரும்.

---

# 41. அரையாப்பிற்கு உருண்டை.

சீரகமுங் கொடிவேலிக் களிப்பாக்கு
மிவைமூன்றில் செய்யக்கேளு
சீருடனே யொருபலந்தான் றண்ணீர்வார்த்
தரைத்துநன்றாய் திகழெள்ளெண்ணெய்
சேருமொரு மாகாணி தனிற்போட்டு
மெழுகுபதத் திலிலேகாய்ச்சிச்
சாரமுள்ள நல்லவெல்ல மொருபலம்போட்
டிதையிறக்கித் தானும்வையே (௬௫)

வைத்துமுள்ளிக் காயளவு முண்டைபண்ணி
நிழலுலர்த்தி யதிலேதானே
நித்தமதி காலையந்தி யோருண்டை
கொண்டும்பார் நீயுந்தானே
பத்தியமுப் பும்புளிப்பு மாகாது
மரையாப்பும் பறந்தேபோகுஞ்
சுத்தமா யாறுநாள் பத்தியஞ்செய்
நோயகன்று சுகமதாமே (௬௬)

(இ-ள்)

சீரகம்
கொடிவேலிவேர்
களிப்பாக்கு

இவைகளை வகைக்கு 1 பலமெடுத்து இடித்து, அம்மியின் மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நன்றாக அரைத்து

நல்லெண்ணெய்—ஒரு மாகாணி (விசம்படியுடன்)

கூட்டி, அடுப்பின்மேலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கி அதில் ஒரு பலம் வெல்லத்தையிட்டுக் கரைக்கவும். பின்பு

இதனை *முள்ளிக்காய் அளவுள்ள சிறுசிறு உருண்டைக ளாகச் செய்து வைத்துக்கொள்ளவும். இதனை நிழலில் உலர்த்தித் தினம் காலையிலும் மாலையிலும் ஒவ்வொரு உருண்டையை உட்கொள்ளவும்.

**பத்தியம் :—**

உப்புச் சுவையுள்ள பதார்த்தங்களையும், புளிப்புச் சுவை யுள்ள பதார்த்தங்களையும் நீக்கவும். அரையாப்பு தீரும்.

6 நாட்களுக்கு இவ்வாறு பத்தியம் பிடிக்கவும்.

# 42. அரையாப்புக்கு.

கொடிவேலி வேர்நத்தைச் சூரியின்வே
ரிரண்டில்வகைக் கொன்றுக்குத்தான்
அடவுடனே கொட்டைப்பா களவரைத்து
யெள்ளெண்ணெ யதுகாற்சேரி
லுடனேமத் தித்துமதி காலைதனில்
மூன்றுநா ளுங்கொள்நீதா
னிடுமேலின் பத்துகொடி வேலிவேர்
தனையரைத்து மேலும்பூசே (கூரு)

பூசுமிப் படியாறு நாடாறும்
பத்தியமும் புசிவெந்நீர்சோறு
நேசமுட னேகொண்டால் அரையாப்புக்
கட்டியுமே நீங்கிப்போகுந்
தேசமன் பத்தாறு திவுதி-
வாந்திரமற் றேற்கும்போற்ற
வாசவன்போல் தஞ்சைநகர் தனையாளுஞ்
சரபேந்திரன் வகுத்ததாமே (கூசு)

*முள்ளிக்காய்—தண்ணீரில் வளரும் ஒருவகைக் கொடியின் காய். இதற்கு 2 முட்கள் எதிரும் புதிருமாக இருக்கும்.

(இ-ள்.)

கொடிவேலிவேர் ஒரு கொட்டைப்பாக்களவு
நத்தைச்சூரிவேர் ,,

இவ்விரண்டையும் நன்ருக அரைத்து, நல்லெண்ணெய் ¼ சேருடன் குழப்பி, அதிகாலையில் உட்கொள்ளவும். இவ்வாறு 3 நாட்கள் சாப்பிடவும்.

2. கொடிவேலிவேரைக் கைபடாமல், தண்ணீர் விட்டரைத்து அரையாப்புக் கட்டிகளின்மேல் ஒரு குச்சியினுல் போடவும். 6 நாட்கள் இவ்வாறு செய்யவும்.

பத்தியம் :—

வெந்நீர் சாதம் மாத்திரமே உட்கொள்ளவும். அரையாப்பு தீரும்.

---

## 43. அரையாப்பிற்கு அடை.

ஒருவடைதட் டிடும்புழுங்க லரிசிதனை
யூறவும்வைத் துக்கொண்டேதா
னூரமான கொடிவேலி வேருமதி
னுடன்கலந்து வொருமையாக
வரைத்துநன்ரு கவுமடுப்பில் சட்டியிலே
வேகவைத்த வடையைத்தானே
பருகுநித மொருவடையை யெள்ளெண்ணெய்
தனிற்ரேய்த்துப் பதமாய்த்தானே (சுஎ)

பதமாக மூன்றுநாள் மூன்றடைசுட்
டுத்தின்னும் பத்தியங்கேள்
யிதமான நல்லெண்ணெ யைத்தானே
சோற்றினிலே யிட்டுமுண்ணு

சதமாக வொன்பதுநா ளுப்புடனே
புளிப்புமது தாளுகாது
பதமாய்ப்பத் தாளுட்கஞ்சி தேய்த்தே
முழுகுபனி ரெண்டேநாள் (கூஅ)

பன்னிரண்டா நாடனிலே யெண்ணெய்தேய்த்
தேமுழுகிப் படிக்குத்தானே
ஒன்றைவிட்டோர் நாள்மூழ்கு பால்மோருந்
தயிர்நெய்யு முண்ணிரம்ப
தன்னிலே யரையாப்புக் கரைந்துவிடு
மேலேயொன்றுந் தான்போடாதே
யுன்னிதமா மருந்திதையுந் தென்னளகை
சரபேந்திர னுணர்ந்ததாமே (கூகூ)

(இ-ள்.)

ஒரு வடை தட்டுமளவிற்கு வேண்டிய புழுங்கரிசி சுமார் ஒரு சிரங்கை எடுத்துக்கொண்டு தண்ணீர் விட்டூறவைக்கவும். அதற்குச் சரியெடை கொடிவேலிவேர் சேர்த்து, ஊறின அரிசியுடன் கல்லுரலிலிட்டு ஒன்றாக அரைத்துக்கொள்ளவும். ஒரு சட்டியை யடுப்பின்மேல் வைத்து அதில் கொடிவேலி வேர் சேர்த்தரைத்த மாவையிட்டு அடையாகத் தட்டி எரிக்கவும். நன்றாக வெந்தபின் இதை இறக்கி நல்லெண்ணெயில் தோய்த்துச் சாப்பிடவும். இவ்வாறு தினமொன்றுக்கு ஒரு அடை வீதம் 3 நாட்கள் சாப்பிடவும்,

பத்தியம் :—

சாதத்தில் நிரம்ப நல்லெண்ணெய்விட்டுச் சாப்பிடவும். உப்பு, புளி முதலானவைகள் 9 நாட்களுக்கு ஆகாது. 10-வது தினத்தன்று வடிக்கஞ்சியைத் தலையில் தேய்த்துக் கொண்டு ஸ்நானஞ் செய்யவும். 12-வது தினத்தன்று நல்லெண்ணெய் தேய்த்துக்கொண்டு முழுகவும். இவ்வாறு ஒன்றுவிட்டொரு நாள் முழுகவும். பசுவின் பால், மோர்,

தயிர், நெய் முதலானவைகளைத் தாராளமாக உபயோகிக்க வும்.

அரையாப்புக் கட்டி தானாகவே கரைந்துவிடும். அரை யாப்புக் கட்டியின்மேல் ஒன்றும் போடக்கூடாது.

---

## 44. கரப்பான் வீக்கத்திற்கு மருந்து.

கல்லுப்பும் வேப்பிலையு மிடித்துவிளக்
　　கெண்ணெய்தனிற் கலந்துகொண்டு
வல்லுப்பி சத்தினரை யாப்பதனில்
　　நின்புண்ணில் வைத்துக்கட்டு
சொல்லுமந்த வீக்கமட்டும் பிசகாதே
　　கட்டிப்பார் துரிசாய்த்தானே
அல்லலற வறுபத்து நாழிதனிற்
　　கரைந்திடும் பரவத்தானே (எ௰)

தானேமறு படியுமொரு விசைகட்ட
　　வுங்கட்டோ டதுபோமிந்த
யினமிலா முறையதனை நந்தியுரைத்
　　தார்பொதிகை யின்முனிக்கு
ஆனமிலா மனிதருக்கா யுரைத்தமுறை
　　யைத்தினமு முணர்ந்துணர்ந்து
மானமான் றஞ்சையையாள் சரபேந்திர
　　னுணருமரை யாப்புப்பூச்சே (எக)

(இ-ள்.)

| | |
|---|---|
| கல்லுப்பு | (ஒரு பிடி) |
| வேப்பிலை | ,, |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு ஆமணக்கெண்ணெய்விட்டு நன்முக அரைத்து, அரையாப்புக் கட்டியைச் சுற்றிலும் வீக் கம் இருக்கும் அளவிற்கு அதன்மேல்போட்டுக் கட்டிவிடவும்.

24 மணி நேரத்திற்குள் வீக்கம் கரையும். இம்மாதிரியே மறுநாளும் கட்டவும். அவை தீரும்.

# 45. அரையாப்பிற்கு மருந்து.

நத்தைச்சூ ரியின்வேர்ப்பட் டையுமொரு
தலைப்பூண்டு நவில்வசம்புஞ்
சுத்தமாய்வ கைக்குமொரு வராகனெடை
சேர்த்தரைத்து துருசாய்த்தானே
வைத்துகரண் டியிலெள்ளின் னெண்ணெய்விட்டுச்
சிவந்தநிற மானவாறே
யத்தையிறக் கியுமருந்தை யெடுத்துளுக்குங்
கொள்மேலுக் கப்பால்கேளே (எஉ)

கேளந்த யெண்ணெய்தனை மேலிலே
தடவிப்பார் கெட்டியாக
நாளளவில் வந்தவரை யாப்பிருந்தா
லும்புண்ணும் நழுவிப்போகுந்
தானதிறு லோரடியா யளந்தநெடு
மால்சரபச் சக்கரவர்த்தி
நீளுமூல கத்தின்மனுக் காயுணர்ந்து
மிம்முறைநிச் சயித்ததாமே (எந)

(இ-ள்.)

| | | |
|---|---|---|
| நத்தைச்சூரியின் வேர்ப்பட்டை | —1 | வராகனெடை |
| ஒருதலைப்பூண்டு | —1 | ,, |
| வசம்பு | —1 | ,, |

இவைகளை ஒன்றிரண்டாக நசுக்கி, ஒரு கரண்டியிலிட்டு நல்லெண்ணெய் விட்டுச் சிவக்கக் காய்ச்சி இறக்கி, இம்மருந்தை யுட்கொள்ளவும்.

அந்த எண்ணெயை மேலுக்குத் தடவவும். அரையாப்புப் புண்கள் தீரும்.

## 46. படர்தாமரைக்குப் பூச்சு.

ஒருகூடை பேய்ப்பீர்க்கி னிலையரிந்து
கல்லின்மே லும்போட்டுத்தான்
அரிசியும்வா யினிலடக்கிக் காலினு
லேதுவைக்கவ் வரிசிதானும்
விரைவான வரிசிகசக் கிறமட்டு
மூன்றுநாள் மிதித்தாயானு
லுரமான படர்தாம ரையுமகலுந்
தப்பாம லுடனேசெய்யே (எச)

(இ-ள்)

ஒரு கூடை பேய்ப்பீர்க்கின் இலையைக் கொண்டுவந்து ஒரு அம்மிக்கல்லின்மேல் போட்டு, அரிசியை வாயில் போட்டுக்கொண்டு, அந்த நோயாளியை மிதிக்கச் சொல்லவும். தினந்தோறும் இவ்வாறு வாயிலுள்ள அரிசி கசக்கும்வரை மிதிக்கவும். 3 நாட்களுள் எப்பேர்ப்பட்ட படர்தாமரையும் அகலும்

---

## 47. மேகக்கட்டி, அரையாப்பு, கட்டி, புண்களுக்கு எண்ணெய்.

எலுமிச்சங் காயளவு சித்திரமூலி
யையரைத்தெள் ளெண்ணெய்தன்னில்
நலமுடைய பனங்கட்டி யுமதிறபா
தியும்போட்டு ரவியில்வைத்தே
வுலவுமொரு கிளிஞ்சியெண்ணெய் காலையந்தி
யுந்தானே யுள்ளுக்குங்கொள்
வலுவான மேகத்தின் கட்டியரை
யாப்புபுண்ணும் வாங்கிப்போமே (எரு)

போகுமே பத்தியமுப் பும்புளிப்பு
மாகாது பொரிமாதூவி
யாகுமிளங் கீரையொன்று புரைபுண்ணு
மிருந்தாலு மவ்வெள்ளெண்ணெய்
யூகமுட னரைப்படியி லெலுமிச்சங்
காயினள வுந்தான்கேளு
லாருளசித் திரமூலி யரைத்துபோட்
டிரவிதனில் வைத்திடாயே (எசு)

வைத்துமே லிலுந்தடவு புண்ணிலும்போ
டும்புரையில் வளமாயூத்தி
பத்திரமா யூதுகட்டிக் கரையும்புண்
ணுறும்புரை வளர்ந்தேயாறுஞ்
சத்தியவா சகன்தன்ம நெறிவழிசெங்
கோல்நடத்துஞ் சக்கிரவர்த்தி
யுத்தமனுந் தஞ்சைநகர் சரபேந்திரன்
நிச்சயித்த வுண்மைதானே (எஎ)

(இ-ள்)

கொடிவேலிவேர் அரைத்தவிழுது—ஒரு எலுமிச்சையளவு
பனைவெல்லம் —½ எலுமிச்சையளவு

இவ்விரண்டையும் நல்லெண்ணெய் 1 சேருடன் குழப்பி, கடும் வெய்யிலில் வைத்துக் கலக்கி வரவும். இதில் ஒரு சிறு கிளிஞ்சில் அளவு எண்ணெய் எடுத்துக் காலை வேளையிலும் சாயங்கால வேளையிலும் சாப்பிடவும்.

மேகக்கட்டி, அரையாப்பு முதலியவை தீரும்.

பத்தியம் :—

உப்பு, புளி இவ்விரண்டும் ஆகாது. இளங்கீரையுடன் மிளகுத்தூள் சேர்த்துச் சாப்பிடவும். பொரிமா சேர்த்துக் கொள்ளவும்.

36

புண், புரைகளிருந்தால், ½ படி நல்லெண்ணெயில், எலு மிச்சையளவு சித்திரமூல வேர் அரைத்த விழுதைக் கலந்து (2 நாட்களுக்கு) வெயிலில் வைத்துப் புண்களின் மேலேயும் போட்டுப் புரைக்குள்ளேயும் செலுத்தவும். கட்டிகள் கரைந்து புண்களும் ஆறும்.

---

## 48. படர்தாமரைக்குப் பூச்சு மருந்து.

தகரைவேர் நுணிமஞ்சள் சித்திரமூ
லங்கொன்னைத் தளிர்புங்கைவேர்
திகழ்வாழைக் கிழங்கனிச்சை வேருடனே
விழலரிசி யுங்கடுக்காய்
தகுநெல்லி முள்ளிவசம் புடன்கோட்டம்
பத்துவகை தனைச்சமன்கொள்
சுகமோமூத் திரம்வார்த்து நேகவரைத்
தேசெய்யுந் தொழிலைக்கேளே (எஅ)

கேளுபடர் தாமரைமேற் படருகிற
தையுஞ்சொறிந்து நிளறிப்பூசி
தாளுபத்து கடிகைமட்டு மிருந்துநா-
லஞ்சுநா டான்குளித்தால்
பீளுபடர் தாமரையுஞ் சருகுதிர்ந்தாப்
போலுதிரு மெய்ப்பதான
வேளினுயர்ந் திடுமெழிலான் சரபேந்திர
ராசனுணர் விந்தப்பூச்சே (எகூ)

(இ-ள்.)

| | |
|---|---|
| தகரைவேர் | சித்திரமூலவேர்ப்பட்டை |
| நுணிமஞ்சள் | கொன்னைக் கொழுந்து |
| புங்கைவேர் | வாழைக்கிழங்கு |
| காட்டுமல்லிகைவேர் | விழலரிசி |

கடுக்காய்த்தோல் நெல்லிமுள்ளி
வசம்பு கோஷ்டம்

முதலான சரக்குகளைச் சமனெடை யெடுத்து இடித்துப் பசுவின் மூத்திரம்விட்டு நன்றாக அரைக்கவும். படர் தாமரை (எச்சிற்றழும்பு)யைச் சொறிந்து அங்கு முன்சொன்ன மருந்தைப் பூசி, 10 நாழிகையளவு ஊறவைத்து ஸ்நானஞ் செய்யவும் இவ்வாறு 4 அல்லது 5 நாட்கள் செய்யவும்.

படர் தாமரைகள் பொரிந்து உதிர்ந்துவிடும்.

---

## 49. படர் தாமரைக்குப் பூச்சு.

தகரைவாய் விளங்கம்நெல்லிப் பருப்புகொடி
வேலிமஞ்ச ளுங்கடுக்காய்
மகிழுஞ்செங் கழுநீரின் கோட்டமுடன்
கார்போக வரிசிகூட
திகழ்செழும லர்க்கொன்றை புங்கம்விதை
பத்துஞ்சமன் சேர்த்துக்கொண்டு
வகையாவி னீரதனி லரைத்துநன்றாய்க்
குழப்பியதை வைத்துக்கொள்ளே (அ௰)

கொண்டுமேல் படருந்தா மரையைச்சொ-
றிந்துநீ குணமருந்தை
மொண்டுகையாற் பூரிபத்து நாழிமட்
டிருந்துமேல் குளித்துக்கொண்டு
கண்டிதமாய் நாலஞ்சு நாட்டடவிக்
குளிநீயுங் கணக்கதாக
மண்டியமே லின்படர்தா மரையுதிர்ந்து
தேகம்நல்ல வளமதாமே (அக)

(இ-ள்)

தகரைவிதை
நெல்லிப்பருப்பு
மஞ்சள்
செங்கழுநீர்க்கிழங்கு
கார்போகரிசி
புங்கம் விதை
வாயுவிடங்கம்
கொடிவேலிவேர்
கடுக்காய்த்தோல்
கோஷ்டம்
செழுமலர்க்கொன்றை

இவைகளைச் சமனெடையெடுத்து, அம்மியின்மேல் வைத்துப் பசுவின் மூத்திரம் விட்டு நன்றாகவரைத்துக் குழம்பாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

படர் தாமரையை நன்றாகச் சொரிந்துவிட்டு, முன் சொன்ன மருந்தைப் பூசி 10 நாழிகைவரை ஊறவைக்கவும். பின்பு ஸ்நானஞ் செய்யவும். இம்மாதிரி 4 அல்லது 5 நாட்களுக்குத் தடவிக் குளிக்கவும்.

படர்தாமரை உதிர்ந்துவிடும்.

குறிப்பு:—செய்யுளில் 10 சரக்குகள் என்று கூறப்பட்டிருப்பினும் வாஸ்தவத்தில் 11 சரக்குகள் உள்ளன.

---

## 50. படர் தாமரைக்கு மருந்தும், பூச்சும்.

இந்துப்பு நிலவாரை கொன்றையுட
தளிர்சொல்லு மிதுகள்மூன்றுஞ்
சந்தேக மில்லாமற் சேர்த்தாவின்
கோமியத்தி லுய்வேளை
யிந்திரண்டி லொன்றிலரைத் துப்பூசு
நாலுநா ளேதானேநீ
வந்தபடர் தாமரையு திர்ந்துநன்றாய்
மேனிநல்ல வண்மையாமே (அஉ)

(இ-ள்.)

இந்துப்பு நிலவாரை
கொன்றைத்துளிர்

இம்மூன்றையுஞ் சமமெடுத்துப் பசுவின் மூத்திரம் விட்டு நன்ருக அரைத்துப் படர் தாமரையின் மேல் பூசவும். 4 நாட்களில் அது தீரும்.

(2) நாய்வேளையைப் பசுவின் மூத்திரத்திலரைத்துப் பூசினாலும் படர்தாமரை 4 நாட்களில் மாறிப்போம்.

---

## 51. படர்தாமரைக்கு மருந்தும், பூச்சும்.

மருக்காரை வேர்விரையு மனிச்சம்வே
ரிம்மூன்று வகையுந்தானே
முருக்கெலுமிச் சம்பழச்சாற் விட்டரைத்து
நன்ருக மூன்றுருண்டை
சரியாகச் சிறுகொட்டைப் பாக்களவு
செய்துள்ளுக்குத் தானேகொண்டு
உரமான மேலுக்கும் பூசபடர்
தாமரையு முதிர்ந்துபோமே. (அரு)

(இ-ள்.)

மருக்காரைவேர் மருக்காரை விதை
காட்டுமல்லிகை வேர்

இம்மூன்றையும் சமனெடுத்து (வகைக்குக் கொட்டைப் பாக்களவு) அம்மியின்மேல் வைத்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்ருகவரைத்து 3 உருண்டைகளாக உருட்டி உள்ளுக்குச் சாப்பிடவும். இதையே மேலுக்கும் பூசவும். படர்தாமரைகள் தீரும்.

---

## 52. படர்தாமரைக்குப் பூச்சும், மருந்தும்.

தகரைவிதை யெருக்கம்வேர் பட்டையுட
னருகம்புல் லதனுட்பட்டை
வகைமூன்றுஞ் சிறுகவுமே நறுக்கிப்பசும்
பால்நாழி வார்த்துக்காய்ச்சி
தகுமான வுரைக்குத்தி காலமே
யத்தயிரைத் தானேகொள்ளு
புகுமந்த மருந்தெடுத்து மஞ்சளுங்கூட்
டியுமரைத்துப் பூசிடாயே (அச)

பூசிசொறிந் தேசொறிந்து மிருந்துமிப்
படிமூன்று போதுதானே
நேசமுட னுள்ளுக்குங் கொண்டுமே
லும்பூசி நீகுளித்தால்
வீசிபடர் தாமரையுஞ் சருகுதிர்ந்தாப்
போலுதிரும் விபுலைதன்னில்
ராசர்புகழ் சரபோசி ராசன்மனம்
நிச்சயித்த நன்மருந்தே (அரு)

(இ-ள்.)

தகரைவிதை எருக்கம்வேர்ப்பட்டை
அருகம்புல்லின் மேல்பட்டை

இவைகளை நறுக்கிப் பசுவின்பால் 1 படியுடன் (பட்டணம் படி ½) சேர்த்துக் காய்ச்சிப் புளிப்பில்லாத மோர்விட்டு உறையவிடவும். மறுநாள் அத்தயிரை உட்கொள்ளவும்.

மஞ்சளை, அத்தயிரினுலரைத்துப் படர் தாமரையைச் சொறிந்தபின் அதன்மேல் போடவும். இவ்வாறு மூன்று நாட்கள் செய்யவும். படர்தாமரை சருகுகள் உதிர்ந்தாப் போலுதிரும்.

## 54. படர்தாமரைக்குப் பூச்சு.

நிலவாகை வேரெலுமிச் சம்பழச்சாற்
விட்டரைத்து நேகத்தானே
வலுவுசெழு மலர்கொன்றைச் சாற்றினிலே
குழப்பியதை வளமதாக
நல்மேனி தனில்படரும் தாமரையைச்
சொறிந்ததனில் நாட்டமாகச்
சலமதாகப் பூசிகுளி படர்தாம
ரையுமுதிர்ந்து நலமதாமே (அசு)

(இ-ள்)

நிலவாகை வேரை, எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நன்றாக அரைத்து, செழுமலர்க்கொன்றைச் சாற்றில் குழப்பவும். படர்தாமரையைச் சொறிந்து முன்சொன்ன மருந்தைப் பூசி சிறிதுநேரஞ் சென்றபின் குளிக்கவும். அவை தீரும்.

---

## 54. படர்தாமரைக்கு மருந்து.

சகமதனில் மானிடர்மேல் படர்தாம
ரைவளரு மதற்குக்கேளு
தகரைவிரை யையார்க்கப் பொடிசெய்து
கக்கரிக்காய்த் தண்ணீர்வாங்கி
வகையாகக் குழைத்துசொறிந் துப்பூசி
மேல்குளிக்க வந்தநோயுந்
திகிலெடுத்துப் படர்தாம ரையுமுதிர்ந்து
தேகமதுந் தீர்க்கமாமே (அள)

(இ-ள்)

தகரைவிதையைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து, கக்கரிக்காய்ச் சாற்றில் குழைத்துப் படர்தாமரையின்

மேல் பூசவும். பூசுவதற்குமுன் படர்தாமரையை நன்றாகச் சொறிந்து விடவும். சுமார் 2 மணி நேரஞ் சென்றபின் குளிக்கவும்.

படர்தாமரை தீரும். உடம்பும் தேறும்.

---

# 55. படர்தாமரைக்குப் பூச்சு.

வாகையுட கொழுந்துகொன்றைக் கொழுந்திலுப்பைப்
புண்ணாக்கு மஞ்சளோடே
வாகுடவே சிவந்திருக்குங் காரையிலை
யுஞ்சேர்த்து மரைத்துநன்றாய்த்
திகழ்மேனி தனிற்படரு தாமரையைச்
சொறிந்துசொறிந் தேதான்பூசு
சுகமாகும் படர்தாம ரையுமுதிர்ந்து
சரீரமது சுத்தியாமே (அஅ)

(இ-ள்)

வாகைக்கொழுந்து கொன்றைக்கொழுந்து
அரப்புக்கட்டி மஞ்சள்
காரையிலை

இவைகளைச் சமனெடுத்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டு நன்றாகவரைத்துத் தேகத்தின்மேல் ஏற்பட்டிருக்கும் படர்தாமரையைச் சொறிந்து, அதன்மேல் பூசவும்.

அவை தீரும்.

---

# 57. படர்தாமரைக்குப் பூச்சு.

நிலவாகை வேரெலுமிச் சம்பழச்சாற்

பலயிலுப்பைப் புண்ணாக்கி லெருக்கம்பா
லாதல்கள்ளிப் பாலிலாத
லுலவுமம்மி தனிலரைத்துச் சொறிந்துபடர்
தாமரையு முற்றிடத்தில்
நலம்பெறவே பூசபடர் தாமரையு
முதிர்ந்துசடம் நலமதாமே (அசு)

(இ-ள்)

(1) நிலவாகை வேரை அம்மியின்மேல் வைத்து, எலு மிச்சம்பழச்சாறு விட்டரைத்துப் படர்தாமரைகளின் மேல் பூசவும்.

(2) அரப்பை, எருக்கம்பால் அல்லது கள்ளிப்பால் விட்டு நன்றாக அரைத்துப் படர்தாமரையைச் சொறிந்தபின் இம்மருந்தைப் போடவும். படர்தாமரை உதிர்ந்துவிடும்.

---

## 57. படர்தாமரைக்கு உள்மருந்து.

நிலவாகைச் சமூலமே பிடுங்கிவந்து
மதைவெய்யி லினிலுலர்த்தி
நலமான மருள்கிழங்கு முலர்த்தித்தா-
மரைமணியும் நலமாய்ச்சேர்த்து
வலுவான வுரல்தனிலே யிடித்துமம்மி
தனிலரைத்து வடியுங்கட்டிக்
கலசமதில் வைத்துவெரு கடித்தூளைத்
தேன்றனிலே காலையுண்ணே (கூம)

காலையந்தி யிலுங்கொம்புற் றேனிலே
மண்டலந்தான் கலிவாயுண்ணு

சோலிசெய்யா மல்வயிறு மன்றுட
கழும்வலமுஞ் சுத்தியாகும்
ஞாலமதிற் புளிப்புகைப்புத் தள்ளிச்சாப்
பத்தியமாய் நளினமேனி
மேலுபடர் தாமரையுந் தன்னிச்சை
யரயுதிர்ந்து மேன்மையாமே (சுக)

(இ-ள்)

நிலவாகையைச் சமூலமாக எடுத்து வெய்யிலில் உலர்த்தவும். அதற்குச் சமமாகத் தாமரைக்கொட்டையும், மருளங்கிழங்கும் சேர்த்துக் காயவைத்து, எல்லாவற்றையும் உரலிலிட்டு நன்முக இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இதில் மூவிரல் கொள்ளுமளவுள்ள தூளையெடுத்துத் தேன் விட்டுக் குழைத்துச் சாப்பிடவும். சாயங்கால வேளைகளிலும் இவ்வாறே உண்ணவும். இம்மாதிரி 40 நாட்கள் சாப்பிடப் படர்தாமரை தீருவதுடன், அன்றுடம் மலப்பிரவ்ருத்தியும் சரியாக ஆகும்.

**பத்தியம்:—**

புளிப்புச் சுவையுள்ள பண்டங்களையும், கைப்புச் சுவையுள்ள பதார்த்தங்களையும் நீக்கிவிடவும்.

---

## 58. படர் தாமரைக்கு உள்மருந்து.

புளிக்கொழுந்து சிறுகுறிஞ்சா யிலையுங்கொண்
டைக்கொழுந்தும் பிசகாமற்முன்
வனவெலுமிச் சம்பழச்சாறு தனிலரைத்துத்
தின்னுமிதை மாறேழுநாள்
விளைக்குபடர் தாமரையுஞ் சரகுதிர்ந்தாப்
போலுதிரும் விமலர்நெஞ்சங்
களிக்கமல ரர்ச்சனைசெய் தஞ்சைசர
பேங்கிர னுனர்

(இ-ள்)

| | |
|---|---|
| புளியங்கொழுந்து | ஒரு பிடி |
| சிறுகுறிஞ்சாயிலை | ,, |
| கொன்றைக்கொழுந்து | ,, |

இம்மூன்றையும் அம்மியின்மேல் வைத்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்றாக வரைத்துச் சாப்பிடவும். 7 நாட்களுக்குள் படர்தாமரை பட்டுப்போகும்.

---

## 59. படர்தாமரைக்குப் பூச்சு.

நிலவாகைவேர் பிரண்டைவேர் கொடிவேலி
யின்வேரும் நிலத்தின்மேவும்
பலமான குளவிந்த மஞ்சள்தக
ரையின்வித்தும் பகரதல்லால்
வலுவான மிளகாறுந் திருகுகள்ளிச்
சாற்றைவிட்டு மரைத்துப்பூச
அலர்போலே தேகத்திற் படர்தாம
ரையுமகலு மன்பாய்ச்செய்யே (௬௯)

(இ-ள்)

| | |
|---|---|
| நிலவாகைவேர் | குளவிந்தமஞ்சள் |
| பிரண்டைவேர் | தகரைவிதை |
| கொடிவேலி வேர் | மிளகு |

இவைகளைச் சமமெடுத்து அம்மியின்மேல் வைத்துத் திருகுக்கள்ளிச்சாறு விட்டு நன்றாக அரைத்துப் பூசவும். தேகத்தில் படர்ந்திருக்கும் படர்தாமரை தீரும்.

## 60. படர்தாமரை, குஷ்டம், கடிவிஷங்களுக்குப் பூச்சு மருந்து.

*சித்தமல்லி யின்கிழங்கின் மேற்றோலைப்*
*போக்கியுலர்த் தியுமிடித்து*
*வைத்துக்கை யிலெலுமிச்சம் பழச்சாற்றி*
*னிற்குழப்பி வளமாய்க்கொள்ளு*
*சத்துவமாந் தகரைவிதை யெலுமிச்சம்*
*பழச்சாற்றிற் றனரைத்து*
*வுத்தபடர் தாமரைமேற் றடவக்கடி*
*குட்டமும்போ யுசித்தமாமே* (கூச)

(இ-ள்)

(1) சித்தாமல்லியின் கிழங்கின் மேல்தோலை நீக்கிவிட்டு, வெயிலில் காயவைத்துஇடித்து வஸ்திரகாயஞ்செய்து கொண்டு, அதில் ஒரு குத்தளவெடுத்து எலுமிச்சம்பழச் சாற்றுடன் குழைத்துச் சாப்பிடவும்.

(2) தகரை விதையை யெலுமிச்சம்பழச்சாற்றிலரைத்துப் படர்தாமரையின்மேல் போடவும்.

படர்தாமரை, குஷ்டம் முதலான ரோகங்களுந் தீரும்.

---

## 61. எழுநாயிறு, படுநாயிறுக்கு நஸ்யம்.

*வசம்புள்ளி முருங்கையிலை பிராயிலைவெத்*
*திலையாக வகைகளைந்து*
*மிசைவான சிறுநீரி லரைத்துச்சந்*
*தலையிலப்பி மேலுந்தானே*

செமுடனே நசியமது செய்யவெழு
நாயறுடன் வளருமந்த
நிசமான படுநாய றுமகன்று
போமிதையும் நீயுஞ்செய்யே (கூரு)

(இ-ள்)

செம்பு
உள்ளிப்பூண்டு
முருங்கையிலை
பிரமயிலை
வெற்றிலை

முதலான ஐந்து சரக்குகளையும் எடுத்து (வகைக்கு ஒரு பிடி) அம்மியின்மேல் வைத்து உலகமறியாப் பிள்ளையின் மூத்திரம் விட்டு நன்ருக அரைத்து நோயாளியின் தலையுச்சியில் அப்பவும்.

இதையே ஒரு வெள்ளைத் துணியிலிட்டுப் பிழிந்த சாற்றை மூக்கினுள் நஸ்யஞ் செய்யவும்.

எழுநாயறு, படுநாயறு முதலானவை தீரும்.

## 62. படர்தாமரைக்குப் பூச்சு.

ஒருபடி தகரைவிதை கொண்டுவந்து
கலயத்தி னுள்ளேபோட்டு
சரிதண்ணீர் விட்டுமொரு நாலுநாட்
புதைத்துவைத்துத் தானெடுத்து
உரமான அலரிச்சை வேருமதி
னுடனேமோ ரும்விட்டேதான்
அரைத்துமைப் போலசொறிந் தேதடவு
மறுபடியப் படியேதானே (கூசு)

அப்படியா யிரண்டாவ துக்கிளைக்கு
மலையாமல் தாக்குங்கேளு
செப்பியவெள் ளுள்ளிதனை நேகவரைத்
தேசொறிந்து தேய்த்தாயானு
லெப்படியே படர்தாம ரையுமுதிருந்
தப்பாமல் லாதிமூர்த்தி
பொற்பஞ்ச னைபுரியுஞ் தஞ்சைசர
பேந்திரனுணர் புனிதமாமே (கூஎ)

(இ-ள்)

ஒரு படி தகரைவிதையை ஒரு கலயத்தில் போட்டு, ஒரு படி தண்ணீர் ஊற்றவும். பின்பு அக்கலயத்தின் வாய்க்குத் தகுந்தபடி அகலினல் மூடிச் சீலை மண் செய்து பூமிக்குள் புதைத்து வைக்கவும். நாலாவது நாளன்று அதை வெளியே யெடுத்துத் தகரைவித்தை அம்மியின்மேல்வைத்து அனிச்சை வேர் (காட்டுமல்லிகை வேரும்) கூட்டிப் பசுவின் மோர்விட்டு நன்ருக மைப்போலரைக்கவும்.

படர்தாமரையைச் சொறிந்தபின் அங்கு இவ்விழுதைத் தடவவும். இவ்வாறு 2 நாளைக்குச் செய்யவும்.

மறுபடியும் ஏதேனும் கிளைக்கும்போல் தோன்றினல், அவ்விடத்தைச் சொறிந்து, வெள்ளைப்பூண்டை மைப்போலரைத்து அவ்விடத்தில் பூசவும்.

படர்தாமரைகள் உதிரும்.

---

# 63. புண்புரைகளுக்கு எண்ணெயும், பூச்சும்.

நல்லெண்ணெய் தனிலேதிரி புரமெரித்தான்
சமூலமமே நசுக்கிப்போட்டு

மல்லலறப் பொன்னிறமாய் வறுத்துவைத்துக்
கொண்டுபுரை யதிலேவிட்டு
வல்லமையா யூதுமந்தப் புரைநாலு
நாளில்சதை வளருங்கண்டாய்
கல்லதனில் மஞ்சாநாள் வேப்பிலையும்
நறுக்கியுந்தான் கருதக்கேளே (கஅ)

கருதக்கேள் முன்னெண்ணெ யிலிந்தப்
பொடிபொரித்துக் கட்டிறலே
திருளுசெய்யும் புண்ணுறுங் கைகண்ட
யெண்ணெயிது சிவனார்பாத
மர்ச்சனைசெய் தஞ்சைநகர் விபுசரபேந்
திரனுணர்ந்து வரியயெண்ணெய்
பரிவுடனே சொன்னபடி யேசெய்து
மதன்குணத்தைப் பார்நீதானே (கக)

(இ-ள்)

(1) நல்லெண்ணெய் ஒரு படியில் (5 சேர்), மாவலிங்கின் சமூலத்தையும் (சுமார் 2 பலம்) சிறுசிறு துண்டுகளாக நறுக்கிப் போட்டு, அடுப்பின்மேலேற்றிப் பொன்னிறமாக வறுத்து இறக்கவும்.

இத்தைலத்தைப் புண்களில் போடவும். புரைகளுள் இதைவிட்டு நன்றாக ஊதி உட்புகும்படி செய்யவும். நாலு நாட்களுள் சதை வளர்ந்து புரைகள் தூர்ந்துவிடும்.

(2) மஞ்சட்டூளையும், வேப்பிலையையும் சேர்த்தரைத்து ஒரு சுண்டைக் காயளவெடுத்து மேல்சொன்ன தைலம் ¼ சேரில் குழப்பி எரித்து அப்படியே புண்களின்மேல் கட்டவும்.

புண்கள் ஆறிவிடும். கைகண்டது.

# 64 எழுநாயிறு, படுநாயிறு முதலியவைகளுக்கு மருந்து.

முற்றினதேற் ருன்காயின் சாறுழக்கு
மேனிச்சாறு மொழியக்கேளு
நத்துவமாய் நாற்பலம்பொன் னரிதாரம்
பணவெடைநன் ருய்ச்சாரித்து
சுத்தவெள்ளைச் சீலைதனி லூட்டிநிழ
லுணர்த்தியும்வைத் துக்கொண்டேதான்
அத்திரியி னிளவெந்நீ ருழக்கதனி
லிருவிரல்சீ லையுங்கிழித்தே (ஶ)

கிழித்துக்கசக் கியநீரை நாலஞ்சுநாள்
உட்கொள்ளக் கிளைக்குமந்த
யெழுநாய றும்படுநா யறும்பரிதி
கண்டபரி யெனவேயோடும்
வழியான மருந்திதையும் பாம்புகடித்
தாலுமிந்த மருந்தைக்கொள்ளு
எழில்மிகுந்த தஞ்சையையாள் விபுசரபேந்
திரனுணர்ந்த வியல்பிதாமே (ஶக)

(இ-ள்)

தேத்தான்காயை இடித்துப் பிழிந்த சாறு —1 உழக்கு
குப்பைமேனிச்சாறு —4 பலம் (¼சேர்)
சுத்திசெய்த மடல்தாளகம் —1 பணவெடை

இவைகளையொன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டு மெழுகு போலரைத்துக்கொள்ளவும், சாறுவகைகளதிகமாக இருந்தால் அது வற்றுமளவும் வெயிலில் வைக்கவும். ஒரு முழ நீள அகலமுள்ள வெள்ளைத்துணியில் முன்சொன்ன விம

இதில் 2 விரற்கெடையளவு துணியைக் கிழித்து, இளஞ்சூடான வெந்நீர் ஒரு உழக்குடன் ஊறவைத்துக் கசக்கிப் பிழியவும் இச்சலத்தை உள்ளுக்குச் சாப்பிடவும். இவ்வாறு 4 அல்லது 5 நாட்கள் உட்கொள்ளவும்.

அடிக்கடி கிளைத்துக்கொள்ளும் எழுநாயறு, படுநாயறு முதலான ரோகவகைகள் தீரும்.

பாம்பு கடித்து அதனால் துன்புறும் நோயாளிக்கும் இம் மருந்தைக் கொடுக்கவும்.

குறிப்பு:— பணவெடை—3⅓ குன்றிஎடை.

---

# 65. எழுநாயறு, படுநாயறு முதலான ரோகங்களுக் கெண்ணெய்.

வசம்புள்ளி சிறுகுறட் டைக்கிழங்கு
மழிஞ்சில்வேர் வளரிண்டம்வேர்
பசையான குப்பைமேனி வேரானு(று)ம்
நறுக்கியெண்ணெய் பதியப்போட்டு
வசமான பதங்கண்டு மிறக்கியதை
நக்கிடவும் வளருமந்த
அசுசைமிகு மெழுநாய றும்படுநா
யறும்விட்டு மகலுந்தானே (௱௨)

(இ-ள்)

| | |
|---|---|
| வசம்பு | அழிஞ்சில்வேர் |
| பூண்டு | இண்டம்வேர் |
| சிறுகுறட்டைக்கிழங்கு | குப்பைமேனிவேர் |

இவைகளை வகைக்கு 1 வராகனெடை யெடுத்து நறுக்கி, நல்லெண்ணெய் (1 சேருடன்) கலந்து அடுப்பின் மேலேற்றி, எரித்துச் சிவந்தபதங்கண்டு இறக்கவும்.

இதிலொரு காலணா அளவெடுத்து நக்கி வர அருவருப்பு உண்டாகாதும். எழுநாயறு, படுநாயறு முதலான ரோகங்கள் தீரும்.

---

## 66. எழுநாயறு, படுநாயறுக்கு மருந்து.

இலுப்பைமர வைரத்தை வெட்டிப்பொடி
யாய்ச்சீவி யிளவெந்நீரில்
கலக்கியதை யூறவைத்து யிறுத்துமே
கொள்ளுமதி காலையந்தி
வலுத்தவெழு நாயறுடன் படுநாய
றுந்தீரு மதங்கள்மீறி
பலக்கட மான்களிற்றிற் பவனிவருஞ்
சரபேந்திரன் பகரும்வாறே (௯௩)

(இ-ள்)

இலுப்பைமர வைரத்தைத் துண்டாக்கி ஒரு இழைப் புளியால் நன்றுகச் சீவிவைத்துக்கொள்ளவும். இத்தூளில் கொஞ்சமெடுத்து (ஒரு குத்தளவு) ஒரு சேர் இளஞ்சூடான வெந்நீரில் போட்டு ஊறவைத்து, மறுநாள் காலையில் இதை இறுத்துச் சாப்பிடவும். இவ்வாறு (2 அல்லது 3 நாட்கள்) சாப்பிட எழுநாயறு, படுநாயறு முதலான ரோகங்கள் தீரும்.

---

## 67. எழுவியாதிக்குப் பூச்சு.

நீளுமுலை கினின்மனிதர்க் கெழுவியாதி
வந்துற்றால் நெடுநாட்சென்ற

தாளிப்பூ வரைத்துபசு வெண்ணெய்தனிற்
குழப்பிமுகந் தானேவிட்டு
பாளமாய் சுற்றிலும் பூசுகாலை
யந்தியிலும் பலமதான
நாள்சென் றிடுமெழு வியாதியது
மேயகன்று நலமதாமே (௫௪)

(இ-ள்)

நெடுநாள் சென்ற அதாவது முற்றிய தாளிக்கொடியின் பூவை அம்மியின் மேல்வைத்து நன்றாக அரைத்து அதற்குச் சரியளவு பசுவெண்ணெய் கூட்டி, ஒன்றாகக் கலந்து எழுநாயறின் முகத்தை விட்டுவிட்டு அதைச் சுற்றிலும் ஒரே சிராகக் காலையிலும் மாலையிலும் பூசிவிடவும். நாட்பட்ட எழுவியாதிகள் தீரும்.

---

# 68. எழுவியாதிக்குப் பூச்சு.

எலுமிச்சங் காயளவு கொடிவேலி
வேர்வெண்ணெ யிளிலரைத்து
நலனுற்ற பசும்பாலும் நாழிதனிற்
கரைத்துமதை நன்றாய்க் காய்ச்சி
சலமுற்ற மோர்விட்டு வுறைக்குத்திக்
கடைந்துவெண்ணெய் தனையெடுத்து
வலுவுற்ற யெழுவியாதி மேற்றடவ
வன்றேயு மகலுந்தானே (௫௫)

(இ-ள்)

பசுமையான கொடிவேலிவேரின் மேல்தோல், எருமை வெண்ணெய் இவ்விரண்டும் வகைக்கு ஒரு எலுமிச்சங்காயள

துப் பசுவின் பால் பட்டணம்படி கால்படியுடன் குழப்பி, அடுப்பின்மேல்வைத்துக் காய்ச்சி, மோர்விட்டு உறையவைக்கவும். மறுநாள் இத்தயிரைக் கடைந்து வெண்ணெயெடுத்து எழுநாயிறின்மேல் தடவவும்.

அவை குணமாகும்.

---

## 69. எழுநாயிறு, படுநாயிறுக்கு மருந்து.

படுநாய றெழுநாய றெனும்வியாதி
தொண்டையதைப் பற்றித்தானே
யடைக்குமுண்டை யுண்டையதா யிவ்வியாதி
தனக்குமருந் ததுவுங்கேளு
கபமான பூவந்திப் பழமிரண்டு
மவ்வளவு கணக்கரப்புந்
திடமான பழம்புளியுஞ் சமங்கூட்டி
யரைத்துமதைச் சிறுகத்தானே (ருசு)

தானிரண்டு திறஞ்சிறுகச் சிறுகவடி
நாக்கினிலே தானேவைக்க
ஈனமுறு மெழுநாய றும்படுநா
யறுந்தீரு மிதிற்றீராட்டால்
ஊனமிலா மருந்ததனை மற்றநா-
ளும்வைக்க வோடிப்போகும்
மாருநெல்லி னெய்க்காய்ச்சி யுப்பும்போட்
டதையுண்ண வாசியாமே (ருஎ)

(இ-ள்)

எழுநாயறு, படுநாயறு முதலான நோய்கள் தொண்டையைப்பற்றி உண்டாகும். அங்கு சிறுசிறு உருண்டையேற்பட்டுத் தொண்டையை யடைக்கும். இவ்வியாதிக்கு,

பூந்திப்பழம் 2
அரப்பு இருபூந்திக்கொட்டை யளவு
பழம் புளி ,,

இவைகளைக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்து அடிநாக்கில் அதாவது உருண்டையிருக்குமிடங்களில் தினம் இருவேளைச் சிறுகச் சிறுகத் தடவவும். அவை தீரும். இவ்வாறே மறுநாளுஞ் செய்யவும். நொய்யரிசிக்கஞ்சியுடன் சிறிது இந்துப்பு சேர்த்துச் சாப்பிடவும்.

---

## 70. எழுநாயறு, படுநாயறு வீக்கத்திற்குக் கட்ட மருந்து.

பருத்தியடை யைநையத் தட்டியடை
யாய்ப்பிசைபின் பதிலேயுப்பு
இருபது மிளகுமஞ்சற் றேறொன்றும்
பொடிபண்ணி யிதையுந்தான்முன்
பருத்தியடைக் குள்ளே வைத் தெழுநாயற்
வீக்கமதைப் பார்த்துத்தானே
யுரத்திடுவீக் கம்மிடது புறம்வீங்கில்
வலதுபுற முந்தான்கட்டே (௩௮)

கட்டுவல துபுறமது வீங்கிடிலே
யிடதுபுறங் கையிற்கட்டு
வெட்டிவே ரையுமரைத்து மறுநாளும்
போடுமந்த வீக்கம்வாங்குஞ்
சட்டமதிள் கோபுரமு மாலயஞ்சூழ்
பெருவிடையர் சம்புபாத
மட்டவிழு மலர்சூடி பூசனைசெய்
தஞ்சைவிபு வருளிதமாமே (௩௯)

(இ-ள்)

கொட்டையுடனிருக்கும் பருத்தியை அம்மியின் மேல் வைத்து நசுக்கி அடையைப்போல் செய்துகொள்ளவும்.

| | |
|---|---|
| உப்பு | ஒரு பிடி |
| மிளகு | 20 (எண்ணிக்கையில்) |
| மஞ்சள் | ஒரு சிறுதுண்டு |

இவைகளைக் கல்லுரலிலிட்டு இடித்துப் பொடி செய்து மேல் சொன்ன பருத்தியடையின் மத்தியில் வைத்துச் சுருட்டி எழுநாயறு வலதுபுறமிருந்தால் இடது புறங்கையில் கட்டவும். எழுநாயறு இடது புறமிருந்தால் வலது புறங்கையில் வைத்துக் கட்டிவிடவும்.

மறுநாள் அந்த இடத்தில் வெட்டிவேரை யரைத்துக் கட்டப் பலவித வீக்கங்களுந் தீரும்.

குறிப்பு :— புறங்கை — முன்கை.

## 71. எழுநாயிறு, படுநாயிறுக்கு இலுப்பைக்கட்டி மருந்து.

இலுப்பையின் புண்ணாக் கதையன வினிலே
யிட்டது புகையெடுக் கச்சே
நலத்துட னெடுத்து யெருக்கம்பால் விட்டு
நன்றாக வேயரைத்து மைப்போல்
வலுத்த சுண்டைக்கா யளவுண்டை செய்து
வைத்திடு பதனம தாக
நிலத்தினிற் பெரிய மனிதர்க்கோ ருண்டை
நிகழ்சிறு பிள்ளைக ளுக்கே (௱ய)

பிள்ளைக ளுக்கு முண்டையிற் பாதி
பிரித்துமே கொடுமிள வெந்நீ
ரன்னிலே குழப்பிக் கொடுத்திடக் கோழை
யகன்றுமே வாந்திய தாகு
முள்ளது சொன்னேன் வலுத்தெழு நாய
றுடன்படு நாயறு மகலு று
சள்ளைசெய் யாது வளமிகுந் தஞ்சை
சரப பூபதி யருளாமே (௱கக)

(இ-ள்)

இலுப்பைப் புண்ணாக்குத் தூளை (அரப்பை) ஒரு சட்டியில் போட்டு வறுத்தால் அதிலிருந்து புகை யெழும்பும். அப்போது சட்டியை அடுப்பின் மேலிருந்து கீழே யிறக்கி, அதிலுள்ள அரப்பைக் கல்வத்திலிட்டு எருக்கம்பால்விட்டு நன்ருக மைபோல் அரைக்கவும். பின்பு இதைச் சுண்டைக்காயளவுள்ள உருண்டைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

பெரியவர்களுக்கானல் ஒரு உருண்டையும், சிறு குழந்தைகளுக்கெனில் ½ உருண்டையும் எடுத்து இளஞ்சூடான வெந்நீருடன் உட்கொள்ளக் கொடுக்கவும்.

கோழைக் கட்டுடன் வாந்தியாகும் எழுநாயறு, படுநாயறு முதலானவைகள் தீரும். கைகண்டது

---

# 72. பவுத்திரத்திற்கு ரஸமருந்து.

இரும்பினாற் செய்த கரண்டியை யடுப்பி
லேயன லினிலதை வைத்து
நெருப்பெனக் காய்ச்சி யெடுத்ததைப் பழுத்த
சேருட னெலுமிச்சம் பழச்சாறு

சுருக்கென விட்டு மச்சாறது தானுஞ்
சுண்டியு மறுபடி சாற்விட்
டிரதமும் பணலின் னெடையதி லிட்டு
மியல் கடுக்காய் தாற்றே (மிகஉ)

தேய்த்திட விழுதா மவ்விழு தையுந்
சிக்கென வெடுத்துவைத் துக்கொள்
வாய்ந்தமுன் கரண்டி திரும்பவு மடுப்பில்
வைத்ததை நெருப்பதாய்க் காய்ச்சி
காய்ச்சிடு வெலுமிச் சம்பழம் பாதி
கடுகவே யறுத்துமக் கரண்டி
வாய்த்தகூட் டிலிலே யொத்தியே விரண
மதிலொத்து யிப்படித் தானே (ாமிந)

இப்படித் தானப் பழமதி ரண்டு
மேயறுத் தொத்திப் பின்முன்
செப்பிய மருந்தைத் துணியிலே யூட்டித்
தினமந்தி காலையும் போடு
தப்பா மலுமச் சியெலா மேலே
தான்புறப் படுமதைத் துடைத்துச்
செப்பமா யிரண்டு மூன்றுநாட் போட்டுச்
செய்வித மின்னமுங் கேளே (ாமிச)

கேளதின் மேலே புங்கம்வே ரிழைத்துக்
கிளர்புரை யதிலிருந் தாலுங்
குளவே மருந்து மூதுவா யாலே
சுத்தியக் காயையும் நறுக்கிப்
பாளம தாலே கட்டிட மாதர்
பைங்குறும் பைமூலைக் குத்து
மீளுமி தெல்லா மலுடம்பி னிற்கண்ட
விரணமும் போக்கிடு மிதற்கே (ாமிரு)

(இ-ள்)

ஒரு குழிவுள்ள இரும்புக் கரண்டியை அடுப்பில்போட்டு நன்றாகச் சிவக்கும்வரைக் காயவைத்து, அதில் ஒரு எலுமிச் சம்பழத்தின் சாற்றை விடவும். அது கருகும். மறுபடியும் அதில் கொஞ்சம் எலுமிச்சம்பழச் சாற்றைப் பிழியவும். அத னுடன் சுத்திசெய்த பாதரஸம் 1 வராகனெடை சேர்த்து ஒரு கல்வத்திலிட்டு, ஒரு முற்றிய கடுக்காயினால் நன்றாக அரைக்கவும். இவ்வாறு அரைக்கப்பட்ட விழுதை பத்திரப் படுத்தவும்.

பின்பு, அந்த இரும்புக்கரண்டியை அடுப்பில் போட்டுப் பழுக்கக்காய்ச்சி ஒரு புது எலுமிச்சம்பழத்தை இரண்டாக நறுக்கி, அதிலொத்திச் சூட்டுடனே இரணத்தில் ஒத்தட மிடவும். அதன்பிறகு, முன்னே சொல்லப்பட்ட விழுதை ஒரு வெள்ளைத்துணியில் தடவிக் காலையிலும், மாலையிலும் அவ்விரணத்தின்மேல் ஒட்டி விடவும். விரணத்திலுள்ள சீழ் அனைத்தும் வெளியே வந்துவிடும். புண்களை அடிக்கடி துடைக்கவும். இவ்வாறு இரண்டு அல்லது மூன்று நாட்கள் செய்யவும்.

சீழ் வற்றியபின் புங்கம் வேர்ப்பட்டையைத் தண்ணீர் விட்டிழைத்துப் பவுத்திரத்தின் மேல் போடவும். புரைக ளிருந்தால், அவைகளுக்குள்ளேயும் புங்கம் வேரின் விழுதை ஊதி உட்செலுத்தவும். அவ்விடத்தில் புங்கங்காயை நறுக்கி வைத்து ஒரு துணியினால் இழுத்துக் கட்டிவிடவும்.

உடம்பிலுள்ள விரணங்கள், பவுத்திரம், முலைக்குத்து முதலானவைகள் தீரும். கைகண்டது.

---

# 73. பஞ்சைக்குப் பிராய்வேர் கட்டு மருந்து.

பஞ்சது போலப் பிராயப் பட்டையைத்
பஞ்சை வாயினி லதைத்தாலே
யஞ்சி டாமலு மேகட்டு மூன்றே
நாளப் படியே யதுமழுந்தி
சஞ்சலஞ் செய்யாம லுமது காய்ந்து
தான்விடும் பஞ்சை யென்பதுவுங்
கொஞ்சிய மொழியான் றுரைசர பேந்திரன்
குணமுட னுணர்ந்திடு முறையே (௭௰௩)

(இ-ள்)

பிராய்வேர்ப்பட்டை, வேண்டிய அளவெடுத்துக் கல்லுரலிலிட்டுப் பஞ்சுபோலிடிக்கவும். பின்பு இதை ஒரு வெள்ளைத்துணியில் வைத்துச் சிலந்தியின் வாயில் கட்டிவிடவும். இவ்வாறு 3 நாட்கள் கட்டிவரச் சிலந்திகள் தீரும்.

# 74. பவுத்திரப் புண்ணுக்கு நத்தைச்சூரி மருந்து.

அடவியின் நத்தைச் சூரிவே றன்னை
யங்கையா லொருபிடி பிடுங்கி
திடமுன னன்று யரைத்து நல்லெண்ணெய்
சேர்த்ததைக் குழப்பி நாற்பதுநாள்
துடியுடன் கொள்ளும் பவுத்திரப் புண்ணுந்
துலைந்திடும் சிவ கிருபையினால்
வடிவழ குள்ள சரபபூ பாலன்
மகிழ்ந்து ரைத்திடு முறையிதுவே (௭௰௪)

(இ-ள்)

நத்தைச்சூரியின் வேரை நோயாளியின் கையால் ஒரு பிடியிருக்கும் அளவு பிடுங்கி அம்மியின்மேல் வைத்து நன்றாக அரைத்து நல்லெண்ணெயுடன் குழப்பிச் சாப்பிடவும்.

இவ்வாறு 40 நாட்களுக்கு உண்ணவும். பவுத்திரப் புண்கள் ஆறும்.

---

## 75. பவுத்திரச் சிலந்திக்கு எண்ணெய்.

கொடிவேலி வேர்விளாம் பழத்தள வுகொண்
டரைத்தே மைகள் போல
லடவுள வள்ளி யுரித்தப் பலமூன்
றதுல்லாற் சுக்கைந்து பலமுங்
கிடமுள சீர கம்பல மூன்றுந்
திப்பிலி யரைப்பல முடனே
வடிவுள மிளகும் பலமது மூன்றும்
வளர்கருஞ் சீரக மதுவே (ஈ௰அ)

அதுவுமோர் மூன்று பலமிது வாக
வறுவகை மருந்துதண் ணிர்விட்
டிதமுட னரைத்தெள் ளெண்ணெயிற் போட்டுத்
தீயினில் வைத்ததை மெழுகு
பதமதி லிறக்கி வடித்துமோர் கரண்டி
பருகிடு காலை யந்தியிலு
மதிவிதப் பவுத்திரச் சிலந்தியுந் திருமப்
புண்ணின் மீதிலும் போடே (ஈ௰க)

போட்டிடப் புண்ணும் மாறிடு மிதையும்
பூசிடு வண்டு கடிக்கும்
நாட்டமா யுள்ளுக் கொள்ளு பீனிசமும்
நகர்ந்திடுஞ் சொற்படி கரண்டி
பூட்டிடு நாசி தனிலுமே நசியமுஞ்
செய்து பாரந்த நோய்கள்
போட்டிடு மிதற்குப் பத்தியம் புளிப்பு
முறுத்தன் புகையிலை நீக்கே (ஈ௨௰)

நீக்கியே முருங்கைக் காயிலை யுடனே
நேருள துவரையின் பருப்பு
மாக்கிடு முளைக்கி ரையுமி து வாகு
மப்புற மொன் றுமா கா து
வாக்கினி லரிச்சந் திரன்மனு நீதி
வாய்மைநன் றியும்விற் பன்னன்
யோக்கி யருந்தஞ் சையில் வாழு
முச்சித விபுவுரை யாமே. (௱௨௧)

(இ-ள்)

கொடிவேலி வேர் ஒரு விளாம்பழத்தளவு

எடுத்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டுக் கைபடாமல் நன்முக வரைத்து, அதனுடன்,

| | |
|---|---|
| உரித்த உள்ளிப்பூண்டு | 3 பலம் |
| சுக்கு | 5 பலம் |
| சீரகம் | 3 பலம் |
| திப்பிலி | ½ பலம் |
| மிளகு | 3 பலம் |
| கருஞ்சீரகம் | 3 பலம் |

இவைகளையுஞ் சேர்த்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு ஒன்முகவரைத்து, நல்லெண்ணெய் (10 சேருடன்) குழப்பி அடுப்பின்மேல் வைத்தெரித்து மெழுகு பதத்தி லிறக்கவும். இதை வடிக்கட்டிப் பத்திரப்படுத்தித் தினந் தோறும் காலையிலும் மாலையிலும் சிறு கரண்டி (காலணு) யளவு உட்கொள்ளவும்.

பவுத்திரம், சிலந்தி முதலானவைகள் தீரும்.

இத்தைலத்தையே பவுத்திரப் புண்களிலும் போடவும். வண்டுகடிக்கும் இதை மேலே பூசலாம்.

பீனசத்திற்கு இந்த எண்ணெயில் ஒரு கரண்டி யுள்ளுக்குங் கொடுத்து, நாசிகளிலும் (4 துளிகள்) விதம நஸ்யஞ் செய்யவும்.

பத்தியம் :—

புளிப்புச் சுவையுள்ள பதார்த்தங்களையும், புகையிலையையும் நீக்கிவிடவும். முருங்கைக்காய், முருங்கையிலை, துவரம்பருப்பு, முளைக்கீரை முதலானவைகளை உபயோகப்படுத்தலாமே யல்லாது இதர பதார்த்தங்களை அறவே நீக்கிவிட வேண்டும்.

---

## 76. பவுத்திரத்திற்குக் குப்பைமேனி மருந்து.

குப்பைமே னியையும் பிடுங்கியும் வந்தே
குணமுடன் றலைகீழாய்க் கட்டி
தப்பிலா துலர்த்தி வைத்தத னிலையைத்
தான்பறித் திடித்து நன்றாக
செப்பமாய் வடியுங் கட்டியே கொம்புத்
தேனிலே காசெடை கொள்முன்
னப்பாங் கழற்கா யளவது கொள்ளு
மடவுள தேனினிற் றனே. (௱௨௨)

தேனிலே கொள்ளப் பவுத்திரந் தீருஞ்
செப்பிய பாகத்தின் படியே
ஈனமி லாமற் பத்துநாள் கொள்ளு
மிதற்கிச் சாப்பத் தியமாக
ஞானமுங் கல்வி யாகம புராண
நான்மறை முறையறி வோர்க்கு
ஊனமி லாத தஞ்சையில் வாழு
முச்சிதமா னுவின்முறை யிதுவே. (௱௨௩)

(இ-ள்)

குப்பைமேனிச் செடியைச் சமூலமாகப் பிடுங்கிக் கொண்டுவந்து, ஒரு கயிற்றிலதைத் தலைகீழாகக் கட்டிவிடவும். அப்படியே அது உலர்ந்தபின், அதன் இலைகளைப் பறித்துக் கல்லுரலிலிட்டு நன்றாகவிடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்ளவும். இதை ஒரு பாட்டிலில் பத்திரப்படுத்தி வேண்டும்போது, முதலில் ஒரு வராக னெடையளவு தேன் சாப்பிட்டு விட்டுப், பின்பு சூரணத்தில் ஒரு கழற்சிக்காயளவெடுத்துத் தேனில் குழைத்துச் சாப்பிடவும். இவ்வாறு 10 நாட்கள் உட்கொண்டுவரப் பவுத்திர ரோகந் தீரும்.

பத்தியம்:—

ஸ்திரீ சேர்க்கை கூடாது.

---

## 77. நெடுநாளான பவுத்திரம், நூதனப் பவுத்திரங்களுக்குக் குப்பைமேனி மருந்து.

குணமுள்ள குப்பையின் மேனிச் சமூலங்
　　கொண்டு வந்தே நிழலுலர்த்தி
உணர்வுடன் சூரண மாக்கியே வடித்து
　　தொருமையாய் மூவிரற் றூளை
மணமுள வெருமை வெண்ணெய் விளாங்காய்
　　மாத்திரத் தினிற்பொடி குழப்பி
கனிதமாய் நெடுநாட் பவுத்திர மாகிற்
　　கண்டித மண்டலங் கொள்ளே　　(௲௨௪)

மண்டலங் கொள்ளு நூதன பவுத்திர
　　மாகிடிற் மண்டல மரையே

கொண்டிடு மிதற்கு நெய்யுடன் பாலுங்
கூட்டிடு பின்னையொன் றையுமே
யண்டியே கையாற் றொடாதே யாதொன்று
மாகிடா திதற்குசுத் தமுமா
கண்டித மாகப் பவுத்திர நோயுங்
கலங்கியூர் விட்டகன் றிடுமே (௩௨௫)

(இ-ள்)

குப்பைமேனிச் செடியைச் சமூலமாகப் பிடுங்கி நிழலில் உலர்த்திக் கல்லுரலிலிட்டு நன்றாக இடித்து, வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். இச்சூரணத்தில் மூவிரல் கொள்ளுமளவெடுத்துப் புதிய எருமை வெண்ணெய் ஒரு விளாங்காய்ப் பிரமாணத்துடன் தூவிக் குழைத்துச் சாப்பிடவும்.

வெகு நாள் சென்ற பவுத்திரமாகில் இம்மருந்தை 40 நாட்களுக்குச் சாப்பிடவும். புதிதா யேற்பட்ட பவுத்திரமானால் மேற்படி மருந்தை 20 நாட்களுக்கு உபயோகிக்கவும்.

பத்தியம் :—

பசுவின் நெய், பசுவின் பால் முதலியவைகளை வேண்டிய அளவு சேர்த்துக்கொள்ளவும். மற்ற பதார்த்தங்களைக் கையினால் கூடத் தொடாமலிருத்தல் வேண்டும்.

---

## 78. நீர்விழும் பவுத்திரத்திற்கு வில்வவேர்க்களி.

இரவியு மிந்துங் கூடும மாவா
சியில்விநா யகனைப்பூ சித்து
வுரமுடன் வடக்கே யோடும் வில்வவே
ருன்கையாற் சேரையு மொன்று
முரித்திடு நவ்வல் பட்டையுஞ் சேரை
யொன்றிதி ரண்டையுந் தானே
பருவமாங் குருவை யரிசியி லிடித்துப்
பக்குவ மாய்க்களி கிண்டே. (௩௨௬)

கிண்டிநெய் வார்த்துக் கருப்புட்டி கூட்டிக்
கேளமா வாசை பூரணையுங்
கண்டநா டொட்டு மூன்றுநாட் கொள்ளு
கணக்கதாய் நீர்விழு பவுத்திரம்
அண்டிடா தோடும் புண்ணிலெவ் வேழு
வடவியி னெருக்கிலை வாட்டி
கண்டித மாகக் கட்டிடப் பவுத்திரங்
கரைந்துபுண் ணாறிடுந் தானே. (௱உஎ)

ஆறிடும் பத்தியம் புளிபுகை யிலையு
மாகிடா திதற்குமா வின்பால்
சேருநெய் கூட்டி யுண்முருங் கைக்காய்
தின்றிடு மூன்றுமு றையுமே
ஆரியர் தமக்கு ஷோடச தான
மருளிய தஞ்சைமா நகரை
வீரிய மாக நீதிகள் செலுத்து
விபுசர பேந்திர னருளே. (௱உஅ)

(இ-ள்)

அமாவாசையன்று அதிகாலையில் விநாயகரைப் பூசை செய்து வடக்கு நோக்கிப் போகும் ஒரு பருத்த வில்வவேரை எடுத்துக்கொள்ளவும். அதைச் செதுக்கிய தூள் ஒரு சிரங்கை யிருந்தால் போதுமானது. இதேபோல் நாகப் பட்டைத் துண்டுகளும் ஒரு சிரங்கையளவு எடுத்துக்கொள்ளவும். இவ்விரண்டையுங் குறுவை யரிசியுடன் சேர்த்துக் கலந்து கல்லுரலிலிட்டிடித்து மாவாக்கித் தண்ணீர் சேர்த்து களியாகக் கிண்டி வைத்துக்கொள்ளவும். இதனுடன் நெய் யும் பனைவெல்லமும் சேர்த்து அமாவாசை முதல் 3 நாட் களுக்கு உட்கொள்ளவும்.

தூர்நீர் கசியும் பவுத்திரம் தீரும். மேலும், ஏழு எருக் கிலைகளை ஒன்றின்மேலொன்றாக அடுக்கி அனலில் வாட்டி

சூடாக இருக்கும்போதே அப்புண்ணின் வாயில் வைத்துத் துணியினுல் கட்டிவிடவும். பவுத்திரம் கரைந்து, புண்களும் ஆறிவிடும்.

பத்தியம் :—

புளி, புகையிலை முதலியவைகளை நீக்கிவிடவும். பசுவின் பால், பசுவின் நெய், முருங்கைக்காய் முதலானவைகளை வேண்டிய அளவு கூட்டிக்கொள்ளவும்.

---

## 79. பவுத்திரம், கர்ணப்புண்களுக்கு மிளகரணைக் கிழங்காதிக் களி.

கானக மிளகர ணைக்கிழங் கிரம்பக்
 கையினுல் வெட்டியே வந்துத்
தானதைப் பாக்குப் போலவே நறுக்க
 தணையுலர்த் திப்பொடி யாக்கி
யேனய மாயுரி யரிசியி லிடித்து
 மிதமுள களியதாய் கிண்டி
யூனமில்சாதி லிங்கங் காற் கழஞ்சு
 மொக்கவே பொடிபண்ணித் தூவே (௩உக)

தூவியே மூன்று நான்குநாட் கொள்ளு
 துடியுட னந்தியுங் காலை
மேவிய பவுத்திர முங்கர் ணப்புண்
 விட்டிடுஞ் சுத்த மாய்த்தானே
பூவினி லதிகக் கீர்த்தியே பெற்ற
 புண்ணிய வான்மனு நீதிக்
காவலன் சரப பூபனு முணர்ந்த
 கையது காண்முறை யிதுவே (௩உ௨)

(இ-ள்)

காட்டு மிளகரணைக்கிழங்கை வேண்டிய அளவு வெட்டிக்கொண்டு வந்து, பாக்குவெட்டியினல் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி வெயிலில் உலர்த்தவும். பின்பு இத்துண்டுகளைக் கல்லுரலிலிட்டு நன்ருக இடித்து, அதனுடன் ஊறிய அரிசி பட்டணம் படி ¼ போட்டு நன்ருக இடித்து மாவாக்கிக் கொள்ளவும்.

பின்பு இதையொரு பாத்திரத்திலிட்டுச் சிறிது தண்ணீர் விட்டு, அடுப்பின் மேலேற்றிக் களியாகக் கிண்டவும். பின்பு, அதனுடன் சுத்திசெய்த சாதிலிங்கம் ¼ கழஞ்சு (10 குன்றியெடை) எடுத்துப் பொடி செய்து, களியுடன் சேர்த்துக் காலையில் ஒரு கொட்டைப்பாக்களவும் சாயங்காலத்தில் ஒரு கொட்டைப்பாக்களவுமாக, 12 நாட்களுக்கு உட்கொள்ளவும்.

பவுத்திரப் புண்கள், காதிலுள்ள புண்கள் முதலானவைகள் தீரும்.

---

## 80. பவுத்திரம், பிளவை, விப்புருதி, மூலக் குத்து, நாடீ விரணம், தாதுநஷ்டம், பீனஸம், கண்டமாலை, யோனிசூலை, நாக்குச் சிலந்திப் புண்களுக்குக் கிருதம்.

திப்பிலிகோ ரைக்கிழங்கு கொத்தமல்லி
சித்திரமூ லமுங்கடுக்காய்
திப்பிலிமூ லஞ்செவ்வி யஞ்சுப்பு
தேவதாரஞ் சுக்குசிந்தில்
தப்பிலாப்பொன் னின்முசுட்டை வேருடனே
சாரணைவேர் வில்வவேரு
மொப்பிலா முக்காவேளை வேர்ப்பேய்ப்பு
டாலின்வே ரின்னமுங்கேளே (௱௩௧)

இன்னமுமா டாதோடை யின்வேருட
னேகண்டங் கத்திரிவேரும்
நன்னய வாடுதின்ருத பாளையின்வேர்
நவின்றிடு மெட்டுவேரெல்லா
லுன்னிதக் கருவேலப் பட்டையுமா
யிலுடப்பட்டை கொன்னையின்பட்டை
வன்னமாம் புங்கம்பட் டையும்வேப்ப
மரத்துடபட் டையுமைந்தே (௩௩௨)

ஐந்துட னிருபத்தி நாலுள வகையு
மறுபலம் வகைய தொன்றுக்கு
மிந்தவேர்ப் பட்டை மருந்தையுந் தட்டி
யேகலத் தூணிதண் ணீர்விட்
டுந்திற மாகயெட் டொன்ருய்க் காய்ச்சி
யொக்கவா செய்யும் நாநாள்
தந்திர மாய்விட் டதற்குமேல் கற்கந்
தகுமி லவங்கப் பத்திரியே (௩௩௩)

இலவங்கப் பத்திரி வசம்புவெண் கடுகு
யேலம்பொன் முசுட்டை வேர்கடுகு
இலவங்கஞ் சவுக்காரஞ் சீனக் கார
மிந்துப் பினுடனே வைந்துப்பு
இலவங் கப்பட் டையுங்கொடி வேலி
யினிப்பதி மதுரமு மோமம்
நலமிகுந் தேவ தாரமுங் கோட்டம்
நாகப்பூ பெருங் குறும்பையுமே (௩௩௪)

குறும்பையு வாய்வேர்ப் பட்டைமஞ் சிட்டி
கூறிடும் பெருமரப் பட்டை
பெருங்காய மத்தித் திப்பிலி திப்பிலி
பெலமிகுஞ் சத்தியின் சாரஞ்

தருசடா மாஞ்சிலு மமதி விடையந்
தப்பிலாக் கடுக ரோகிணியு
முரமிகுஞ் சிறுமூல் லையுந்திப் பிலிமூலத்
துடன்சரள தேவ தாரமுமே (௩௫)

தாரமுங் கையாங் தகரையு முப்பத்
தறுவகை மருந்ததுஞ் சரியா
யோரொரு வராக னெடையது கூட்டி
யொக்கவுஞ் சுத்தியே செய்த
கூறுள குக்கிலு மைந்துபல முங்
கோவின்பால் விட்டதைத்தானே
நேருட னெல்லாம் பாலினி லரைத்து
நெய்யினிற் போட்டிடு வாயே (௩௬)

போட்டு மைந்தேநாட் சிறுகொதி யிட்ட
பிறகறு நாடனில் வடித்து
நாட்டமாய் பத்து மாறுநா டானிய
நளிர்புடங் தன்னிலே வைத்து
தேட்டமாய் நல்ல முகூர்த்தங்கள் பார்த்து
திரிபுர சுந்தரி பதத்தில்
சூட்டியே மலரை யர்ச்சித்து தீப
தூபநி வேத்திய முஞ்செய்யே (௩௭)

செய்திந்த நோயைத் தவிரெனப் போற்றி
சிரமது வணங்கி யுந்தானே
கையினல் வராக னெடையது வொன்று
கணக்குட னெடுத்துக் காலையினிற்
பையவே கொள்ளத் தீரும்நோய் கேளு
பவுத்திரம் புளவை விப்புருதி
தையலர் முலைக்குத் துடனுடி விரணங்
தாதுநஷ்ட மதும் போமே (௩௮)

போகுமெண் வகைபீ னசங்கண்ட மாலை
பலமிகு நாக்கினில் சிலந்தி
வாகுள யோனிச் சூலையும் பல்லாம்
வகைவெகு புண்களுந் தீரும்
நாகரீ கங்கள் மிகும்பல பண்டு
நாவலர்க் கருளியே முன்சொல்
ஆகமப் படியே தஞ்சையை யாளு
மரசர்கோன் விபுவரு ளிதுவே (௩௩௯)

(இ-ள்)

| | |
|---|---|
| திப்பிலி | கோரைக்கிழங்கு |
| கொத்தமல்லிவிதை | கொடிவேலிவேர் |
| கடுக்காய்த்தோல் | கண்டத்திப்பிலி |
| செவ்வியம் | தேவதாரம் |
| சுக்கு | சீந்தில்கொடி |
| பொன்முசுட்டைவேர் | சாரணைவேர் |
| வில்வவேர் | முக்காவேளைவேர் |
| பேய்புடல்வேர் | ஆடாதோடைவேர் |
| கண்டங்கத்திரிவேர் | ஆடுதீண்டாப்பாளை வேர் |
| கருவேலம்பட்டை | ஆயில்பட்டை |
| கொன்றைப்பட்டை | புங்கம்பட்டை |
| வேப்பம்பட்டை | சோத்துப்பு |
| இந்துப்பு | வளையலுப்பு |
| அட்டுப்பு | உவர்மண் உப்பு |

மேற்கூறிய சரக்குகளை வகைக்கு ¼ பலம் வீதமெடுத்துக் காய வைத்துக் கல்லுரலிலிட்டிடித்து ஒரு பெரும் பாத்திரத்தி லிட்டு 4 மரக்கால் சுத்த ஜலம்விட்டு ஊறவைத்து, மறுநாள் அதை அடுப்பின்மேலேற்றி, எரித்து எட்டிலொன்றாக்கி யிறக்கவும்.

இக்கஷாயத்தை வடிக்கட்டிப் பசுவின் நெய் பட்டணம் படி 1 சேர்த்து கலந்துகொண்டு,

| | |
|---|---|
| இலவங்கப்பத்திரி | வசம்பு |
| வெள்ளைக்கடுகு | ஏலக்காய் |
| பொன்முசுட்டைவேர் | சவர்க்காரம் |
| சீனக்காரம்(படிக்காரம்) | இந்துப்பு |
| சோத்துப்பு | வளையலுப்பு |
| உவர்மண் உப்பு | அட்டுப்பு |
| இலவங்கப்பட்டை | கொடிவேலிவேர்த் தோல் |
| அதிமதுரம் | ஓமம் |
| தேவதாரம் | கோஷ்டம் |
| சிறுநாகப்பூ | *பெருங்குரும்பை |
| உவாய்வேர்ப்பட்டை | பெருங்காயம் |
| பெருமரப்பட்டை | திப்பிலி |
| யானைத்திப்பிலி | சடாமஞ்சில் |
| அதிவிடயம் | கடுகரோகிணி |
| சிறுமூல்லைவேர் | கண்டத்திப்பிலி |
| சரளதேவதாரம் | கையாந்தகரை |
| மஞ்சிஷ்டி | சத்திச்சாரம் |

ஆக இந்த வகை மருந்துகளை வகைக்கு ஒரு வராகனெடை யெடுத்துக்கொள்ளவும்.

சுத்திசெய்த குக்கில் 5 பலமும்

எடுத்து எல்லாச் சரக்குகளையும் கல்லுரலிலிட்டிடித்துப் பசுவின் பால்விட்டு அம்மியின்மேல் வைத்து நன்றாக அரைத்து விழுதாக்கி, முன்சொன்ன கஷாயஞ் சேர்ந்த நெய்யுடனே குழப்பிக்கொள்ளவும்.

பின்பு இதையடுப்பின் மேலேற்றி 5 நாட்களுக்குச் சிறுகச் சிறுக எரிக்கவும். 6-வது நாளன்று அதை நன்றாகக் கொதிக்கவைத்துப் பக்குவமாக்கி இறக்கவும்.

---

*இதற்குப்பதில் 'மருளை'ச் சேர்த்துக்கொள்ளலாம்,

அதற்குப் பின், இந்நெய்யையொரு ஜாடியிலிட்டு நன்ருக மூடித் தானிய (நெல்லினுள்) புடத்தில் 16 நாட்கள் வைக்கவும். பின்னர், இந்நெய்யைப் பத்திரப்படுத்தி, சுப முகூர்த்தத்தில் தேவியைப் பூஜித்துத் தீப, தூப, நைவேத்யம் முதலானவைகள் செய்தபின் உபயோகிக்கவும். நோயாளி, இந்நெய்யில் ஒரு விராகனெடை யளவெடுத்துத் தினந்தோறும் காலை நேரங்களில் உட்கொள்ளவும்.

இதனுல் பவுத்திரம், பிளவை, விப்புருதி, மூலக்குத்து, நாடி விரணம், இந்திரிய நஷ்டம், 8 வகைப் பீனிஸ ரோகங்கள், கண்டமாலை, நாக்கிலுண்டாகும் சிலந்தி, யோனிச்சூலை, புண்கள் முதலான பற்பல ரோகங்களுந் தீரும்.

---

## 81. பவுத்திரத்திற்கு மேற்போடச் சீலை.

திருகுகள் ளிப்பால் மங்கையர் முலைப்பால்
 சேர் கருங் கோழியின் கார
முரமிகு மரளிப் பாலுட னாலு
 மொக்கவே சரியதாய்க் கூடக்
கரமதி ஞல்மத் தித்துசீ லையினிற்
 கருத்துட னூட்டியே போட
எரியுறு பவுத்திர மாறிடு மாதி
 யீசரின் கிருபையி ஞலே (ரசம்)

(இ-ள்)

| | |
|---|---|
| திருகுக்கள்ளிப்பால் | கருங்கோழிக்காரம் |
| முலைப்பால் | அரளிப்பால் |

இவைகளைச் சமம் எடுத்துக் கையினுல் நன்ருக மத்தித்து, ஒரு வெள்ளைத்துணியில் ஊட்டவும். இதை வலியுடன் கூடிய பவுத்திரத்தில் வைத்துக் கட்டிவிடவும். எரிச்சல் முதலானவை தீரும்.

## 82. சகல வீக்கத்திற்கும் உள்ளுக்கு மருந்து.

வனத்தினில் செங்கத் தாரிவேர் சென்று
வரையின்வேர் குன்றி வேர்மூன்று
மினத்துடன் சரியாய்க் கூட்டிச் சம்பீரத்
தின்பழத் தளவரைத் தேதான்
கனத்தவெள் ளெண்ணெய் நாழியிற் கலந்து
காய்ச்சிப் பாக்களவெண்ணெய் கொள்ளு
அனைத்துள வீக்க மற்றிடுந் தானே
யன்புட னேசெய் வாயே (௱௯௧)

(இ-ள்)

செங்கத்தாரிவேர்
சென்னுவாரைவேர்
குன்றிமணிவேர்

இம்மூன்று வகை வேர்களுஞ் சேர்ந்து ஒரு எலுமிச்சம்பழப் பிரமாணமெடுத்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டு நன்றாக வரைத்து, நல்லெண்ணெய் 1¼ சேருடனே குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இந்த எண்ணெயில் ஒரு பாக்களவெடுத்து (சுமார் 2 ஸ்பூன்) உட்கொள்ளவும்.

உடம்பிலேற்பட்ட வீக்கங்கள் குறையும்.

---

## 83. பவுத்திரம், புரை, புண்கள் முதலியவைகளுக்கு மேலே போட எண்ணெய்.

கொடிவேலி வேரெலி மிச்சங்கா யளவு
கொண்டரைத் தேகருஞ் சீரந்
திடமுள் ளவெள்ளைக் குங்கிலி யத்தோ
டேவெளிச் சைப்பிசின் டானும்

மடவுள்ள கார்போ கரிசியிம் மூன்றும்
வகைக்கி ரெண்டேவ ராகனெடை
பொடிசெய் தெள்ளெண்ணெ யரைப்படி யினிலே
போட்டதை யடுப்பினில் வைத்தே (௱சஉ)

ஏற்றியே காய்ச்சிப் பதத்தினில் வடித்தவ்
வெண்ணெயிற் றுணியதை நனைத்து
பூத்திடு பவுத்திரந் தன்னிலே சரியாய்ப்
போட்டதைப் புரையிருந் தாலு
மாத்திடு மிதுவுஞ் சோதனை முறையு
மாகிடு மெந்தப்புண் ணுக்குஞ்
சாத்திய படிக்கிச் செய்யெனத் தஞ்சைச்
சரபரா சேந்திர னருளே (௱சந)

(இ-ள்)

கொடிவேலி வேர்த்தோல் சுமார் ஒரு எலுமிச்சங்காயள வெடுத்து, அம்மியின்மேல் வைத்துக் கைபடாமலரைத்து, அதனுடன்,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | வெள்ளைக்குங்கிலியம் |
| வெளிச்சைப்பிசின் | கார்போகரிசி |

இவைகளை வகைக்கு 2 வராகனெடை யெடுத்து இடித்துச் சேர்த்து, நன்றாக அரைத்து நல்லெண்ணெய் அரையேயரைக் கால் சேருடன் குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி வடிக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு சிறிய வெள்ளைத் துணியை நனைத்துப் பவுத்திரத்தின் மேல் வைத்துக் கட்டவும். புரைகளுக்குள்ளேயும், இந்த எண்ணெயை விட்டு ஊதவும்.

இதைத் தவிர, மற்றெந்தப் புண்களுக்கும் இந்த எண்ணெயைப் போட மிகக் குணந்தரும்.

## 84. ஒட்டுக் கோழை, விப்புருதி முதலானவைகளுக்கு உள்ளுக்குச் சாப்பிட மருந்து.

கூறெளி ணெண்ணெய் வெங்காயச் சாறுங்
குணமாடா தோடையின் சாறும்
நேருடன் சரியாய்க் கூட்டியே காய்ச்சி
நீபதத் தினிலதை யிறக்கி
கூறுடன் காலை நக்கிட வொட்டுக்
கோழைவிப் புருதியு மாறும்
பாரில கியத்தஞ் சையினிலே வாழும்
பார்த்திப னருளிது தானே (௱௪௪)

(இ-ள்)

| | |
|---|---|
| சுத்தமான நல்லெண்ணெய் | 1 சேர் |
| வெங்காயச்சாறு | 1 சேர் |
| ஆடாதோடைச்சாறு | 1 சேர் |

இவைகளை யொன்று கலந்து அடுப்பின்மேலெற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதில் ஒரு ஸ்பூன் அளவெடுத்துக் காலை நேரங்களில் நக்கி வரவும்.

கோழை, விப்புருதி முதலானவைகள் தீரும்.

---

## 85. விப்புருதிக்கு எலுமிச்சங்காயெண்ணெய்.

எலுமிச்சங் காயி னளவுசிற் றவுரி
யிலையரைத் தேமைகள் போல
நலமுற்ற கோழி முட்டையின் வெள்ளை
நறக்கு வெடுத்த திற்குழப்பி

பலமுற்ற வெள்ளி னெண்ணெயை விட்டுப்
பருகிடு மூன்று நாட்காலே
வலிமிச்ச மாம்விப் புருதியுந் திரு
மண்புடன் செய்து பாரிதையே (ராசரு)

(இ-ள்)

சிற்றவுரியிலை ஒரு எலுமிச்சங்காயளவெடுத்து அம்மியின் மேல் வைத்து, நேகவரைத்துக் கோழிமுட்டையின் வெள்ளைக் கருவுடனே குழைத்து, நல்லெண்ணெய் (2 ஸ்பூன்) சேர்த்துத் தினந்தோறும் காலை வேளையில் உட்கொள்ளவும்.

இவ்வாறு 3 நாட்கள் செய்ய விப்புருதிகள் தீரும்.

---

## 86. ஐந்துவகை விப்புருதிகளுக்கும் நெய்.

அவுரி யிம்பூர லெருக்கு மாவிலங்கை
யடவியின் பிராய்குறிஞ் சாவேர்
கவன மாயிந்த வாறுவே ருள்ளிக்
கடுகரோ கணியும்நேர் வாளம்
நவம தாஞ்சுக்கு யிதுநாலு முன்பு
நவின்றிடு வகையின் வேரா று
மிவையதி லொவ்வோர் வகைக்குப்பாக் களவு
மிதமுட னரைத்துக் கொள்வாயே (ராசசு)

அரைத்து வாநெய்யிற் போட்டெரித் தேவடித்
தக்கடு குடன்வைத்துக் கொண்டு
திருத்தமாய் நாலு நாளது கொள்ளு
செய்யெட்டு நாளுமே பத்தியம்
வருக்கமாம் புளியுப் பாகிடா தொன்றும்
வளரஞ்சு விப்புருதி யும்போ
யுரத்திடுந் தேகந் தப்பிலா முறையிது
உண்மையாய்ச் செய்துநீ பாரே (ராசஎ)

(இ-ள்)

| | |
|---|---|
| அவுரிவேர் | சிறுகுறிஞ்சாவேர் |
| இம்பூரல் சமூலம் | பூண்டு |
| எருக்கம்வேர் | கடுகரோகிணி |
| மாவிலங்கம்வேர் | சுத்திசெய்த நேர்வாளம் |
| பிராய்வேர் | சுக்கு |

முதலான சரக்குகளை வகைக்கு ஒரு பாக்களவெடுத்து அம்மி யின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நேகவரைத்து, பசுவின் நெய் (5 சேருடன்) குழப்பி அடுப்பின்மேல் வைத்து எரித் துப் பதத்தில் இறக்கவும். இந்நெய்யைக் கடுகுடனேயே வைத்துக்கொண்டு 4 நாட்களுக்குச் சாப்பிடவும். தினம் 2 வேளை காலையிலும் மாலையிலும் ஒரு ஸ்பூன் உபயோகிக்கவும்.

பத்தியம் :—

எட்டு நாட்களுக்கு உப்பு, புளி முதலியவை கூடாது.

விப்புருதிகள் தீரும்.

---

# 87. விப்புருதிக்குத் திருகுக்கள்ளியெண்ணெய்.

திருகுக் கள்ளியுங் கொடிவேலி யாதண்டை
சேர்சங் கங்குப்பியு மமுக்கிரா
பெருமருந் துடனுத் தாமணி கூடப்
பிரண்டைவே ராகவு மெட்டே
பெருங்கா யம்வெங் காயமு மிளகும்
பலமுள காந்த மிந்துப்பு
உரமுள வசம் தாகமுஞ் சுக்கி
னுடன்கருஞ் சீரக முங்கூட்டே (௱சஅ)

கூட்டிடு கடுக்காய் பூதகரப் பான்
　　கூறிய பத்து மெண்வகையுங்
கூட்டிடு சமனு யரைத்துவேப் பெண்ணெய்
　　கொண்டிடு நாழியுந் தானே
நாட்டிடு மணக்கி னெண்ணெயுந் தானே
　　நாழியுங் கூட்டியே காய்ச்சி
வாட்டமில் லாமல் பதத்தினிற் றுனே
　　வடித்துக்கொள் வகையு மோதுவனே (௱௪௯)

ஓதுவே னெட்டு நாளதி காலை-
　　யுங்கொளு விப்புரு தியும்போய்ச்
சாதக மாகும் பத்திய மாய்க்கொள்
　　சட்டமா மதிளுங் கோபுரஞ்சூழ்
பூதம தோடே யாடிய பாதர்
　　பொற்பாதம் பணி சரபேந்திரன்
நீதியாய் வைத்திய நூல்களை யுணர்ந்து
　　நிட்ச யித்தது மிதுவாமே (௱௫௰)

(இ-ள்)

| | |
|---|---|
| திருகுக்கள்ளிவேர் | வெங்காயம் |
| கொடிவேலிவேர் | மிளகு |
| ஆதண்டைவேர் | சுத்திசெய்த காந்தம் |
| சங்கங்குப்பிவேர் | இந்துப்பு |
| அமுக்கிராகிழங்கு | ஓமம் |
| பெருமருந்துவேர் | சுக்கு |
| உத்தாமணிவேர் | கருஞ்சீரகம் |
| பிரண்டைவேர் | கடுக்காய்த்தோல் |
| பெருங்காயம் | பூதகரப்பான்பட்டை |

முதலான சரக்குகளை வகைக்கு ஒரு பாக்களவெடுத்து, இடித்துப் பின்பு அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர்விட்டு நேக வரைத்து,

வேப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய் இவ்விரண்டும் தனித்தனியே $1\frac{1}{4}$ சேர் வீதமெடுத்து ஒன்று கூட்டி, அதனுடன் குழப்பி அடுப்பின்மேல் வைத்துப் பதமாகக் காய்ச்சி இறக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு ஸ்பூனளவெடுத்துத் தினந்தோரும் அதிகாலையில் உட்கொள்ளவும்.

பத்தியம் :—

(உப்பு, புளி முதலியவைகளை நீக்கவும்.)

விப்புருதிகள் தீரும்.

---

## 88. விப்புருதிக்குச் சித்திரமூல மருந்து.

சித்திர மூலியு மாவாரைத் தூதுவளைத்
திறகறி முள்ளி வேர்நாலுஞ்
சத்துவ மாகச் சரிசமன் கொண்டு
தானிடித் தேவடிக் கொண்டு
வைத்துமே கோழி முட்டையு மூன்று
மதின்வெள்ளைக் கருவதிற் றனே
யுத்ததூள் பருவெரு கடியதிற் போட்டு
முன்கையாற் குழப்பி யும்பருகே (௬௫௧)

பருகிடு மூன்றுநா ளந்தி காலை
பத்திய முப்புடன் புளிப்புந்
திருகுசெய் புகையி னிலையதுந் தள்ளித்
தின்னுவெந் நீருமே சோறு
முரையிளங் கீரை மிளகுடன் பொரிமா
வுந்தூவிக் கொள்ள விப்புருதி
இரவியைக் கண்ட பனியென வோடு
மிம்மருந் துறுதியாய்ச் செய்யே (௬௫௨)

(இ-ள்)

சித்திரமூலம் தூதுவளைவேர்
ஆவாரைவேர் கறிமுள்ளிவேர்

முதலானவைகளைச் சமனெடை யெடுத்து (வகைக்கு 1 பலம்)க் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். மூன்று கோழிமுட்டையின் வெள்ளைக் கருவுடன் ஒரு வெருகடியளவு சூரணத்தையிட்டுக் குழைத்துச் சாப்பிடவும்.

இவ்வாறு தினமொன்றுக்கு 2 வேளை வீதம் காலையிலும் மாலையிலும் 3 நாட்களுக்குச் சாப்பிடவும்.

பத்தியம் :—

உப்பு, புளிப்பு முதலிய சுவைகளுள்ள பதார்த்தங்களை நீக்கிவிடவும். புகையிலையையும் நீக்கவும். வெந்நீர் சாதம் மாத்திரமே சாப்பிடவும். இளங்கீரையைச் சுண்டி, மிளகும், பொரிமாவுஞ் சேர்த்துச் சாப்பிடவும்.

விப்புருதிகள் தீரும்

---

## 89. மலட்டு விப்புருதிக்கு மருந்து.

அடவி வேம்பாடம் வேர்கொழிஞ்சியின்வே
ரத்துட னேகருஞ் சீரந்
திடமுள மூன்றுவ கையதில் வகைக்குச்
சேர்ந்ததொரு பலமதா யிடித்து
வுடனேவேப் பெண்ணெய் தனிலே குழப்பி
யும்பத மாகவுங் காய்ச்சி
விடியநே ரத்தில் வாலையைப் போற்றி
மேல்செய்யும் வகைய துங்கேளே (௯௫)

வகையது கேளு சொல்லிய படிக்கு
வண்மையாய் பதினைந்து நாடான்
துகையுடன் கொள்ளக் குடலிலே யூறித்
தோன்றிடும் மலட்டு விப்புருதி
யகண்டு பூச்சியது விழுந்திடுங் கெர்ப்ப
மாகிடு முப்புடன் புளிப்பு
புகையிலை யுந்தள் ளிம்முறை நல்ல
புண்ணியத் தஞ்சை மானுரையே (ாரு௪)

(இ-ள்)

| | |
|---|---|
| வேம்பாடம் வேர் | 1 பலம் |
| கொழிஞ்சி வேர் | 1 பலம் |
| கருஞ்சீரகம் | 1 பலம் |

இம்மூன்று சரக்குகளையும் சிறுசிறு துண்டுகளாக்கிக் கல்லுரலிலிட்டு இடித்து, வேப்பெண்ணெ (1 சேர்)யுடன் குழப்பி, (ஒரு நாளூறவைத்து) அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயில் 1 ஸ்பூன் எடுத்துப் பருகவும். இம்மாதிரி 15 நாட்கள் பருகிவர

மலட்டு ரோகம், விப்புருதி முதலானவைகள் தீரும்.

பத்தியம் :—

எண்ணெய் சாப்பிடும் நாட்களில் உப்பு, புளிப்பு முதலான சுவையுள்ள பதார்த்தங்களையும், புகையிலையையும் நீக்கவும்.

## 90. கெர்ப்ப விப்புருதிக்கு நக்க நெய்.

தெங்கினி முற்றக் காயைப்பால் பிழிந்துத்
தீயினில் வைத்துநெய் யெடுத்து
வங்கண வாய்பே சாமல்நெய்க் கொட்டான்
வடக்கினி லோடும்வேர் வெட்டி
யுங்க வனத்தோ டந்தவேர்ப் பட்டை
யுரித்தரைத் தேநெய்யி னிற்போட்
டுங்கன விட்டு மெழுகினின் பதத்தி
லுமிறக்கி யும்வடித் திடுமே (௫௫)

வடித்துச் சங்கரனைப் போற்றி யர்ச்சித்து
வளமுட னந்தியுங் காலை
திடத்துட னேர்கா சளவது நக்குத்
தீர்ந்திடுங் கெர்ப்ப விப்புருதி
துடித்துக் கூட்டோடே விழும்புழு செத்து
துர்க்குண மென்பதெல் லாம்போய்
வடிப்பமாங் கெர்ப்பந் தானது முண்டாம்
வன்மையாந் தஞ்சை மானுரையே (௫௬)

(இ-ள்)

முற்றின தேங்காயையுடைத்துத் துருவிப் பால் பிழிந்து கொண்டு, ஒரு ஈயம்பூசிய பாத்திரத்திலிட்டு அனலில் வைக்கவும். அது எண்ணெயாகும், அதனுடன், நெய்க்கொட்டான் (பூந்திக்கொட்டை) மரத்தின் வடக்கே போகும் வேரை வாய் பேசாமல் வெட்டிக்கொண்டு வந்து, அதன் மேல் பட்டையை உரித்துத் தண்ணீர் விட்டரைத்துச் சேர்த்து, எரித்து, மெழுகுபதத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு சிறு ஸ்பூனளவெடுத்து (காசளவு)க் காலையிலும், மாலையிலும் உட்கொள்ளவும்.

கெர்ப்ப விப்புருதி அப்படியே விழும். மலட்டுப் புழு கூண்டுடன் செத்து விழும். பற்பல துன்பங்களும் நீங்கும். கெர்ப்பமும் உண்டாகும்.

---

## 91. விப்புருதிக்கு முருங்கை நெய்.

இருபத்து நாலுப லமுருங் கையின்வே
  ரிலிற்றுணி நீர்விட்டுக் குறுணி
வருமட்டுங் காய்ச்சிவ டித்துமுன் சொல்வேர்
  வகையிரு பத்துநாற் கழஞ்சு
யரைத்த திற்போட்டு நெய்யிரு நாழி
  யதிற்புகட் டியும்பதத் திறக்கி
பருகிடு துட்டியெ ளையும்விப் புருதி
  பரந்திடுங் கைகண்ட முறையே (௩௫௭)

(இ-ள்)

முருங்கை வேர் 24 பலமெடுத்துச் சிறு சிறு துண்டுகளாக்கி, ஒரு பாத்திரத்திலிட்டு 4 மரக்கால் சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி ஒரு மரக்காலாகும் வரை வற்றக் காய்ச்சவும்.

பின்பு, இதனுடன், முருங்கை வேர் 24 கழஞ்சு (3 பலம்) எடுத்துச் சிறு துண்டுகளாக்கி, அம்மியின் மேல் வைத்து நன்றாக அரைத்துக் கஷாயத்துடன் கலந்து, பசுவின் நெய் 2 படி (10 சேர்) விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். இதிலொரு துட்டளவெடுத்துப் பருக விப்புருதிகள் தீரும்.

---

# 92. விப்புருதி, கண்டமாலைக்குப் புகை.

இலுப்பைக் கட்டியும் நாற்கழஞ் சத்துட
னேயும் வாளங்க ழஞ்சது ரண்டையும்
வலுத்தவே லிப்பருத் திச்சாறு விட்டதை
மைகள் போலரைத் தேசேலை யூட்டியே
யுலர்த்தி நிழலி லேயந்தச் சேலையி
லுறுதியா கச்சற் றேகிழித் துத்திரி
நலத்துடன் செய்து நீகொளுத் திப்புகை
நாளுமெட் டுடன்பத்து நாட் கொண்டே (௱௫௮)

கொள்ளுமுப் புப்புளி கரப்பான் பண்டங்
கூட்டிடா தேவள முருங்கைப் பிஞ்சு
அள்ளியே பொரிமா விட்டுக்கூட் டிக்கொள்
கண்ட விப்புருதி கண்ட மாலையு
முள்ளினிற் புரையுங் கூட மாறிடு
முறுதி யாகயற் புதத் தஞ்சையின்
வள்ள லிற்றய வுள்ள குடைப்ருள்
மன்னர்கோன் சரபேந் திரனரு ளிதே (௱௫௧)

(இ-ள்)

இலுப்பைப் புண்ணாக்கு 4 கழஞ்சு (½ பலம்)
சுத்திசெய்த நேர்வாளம் 1 கழஞ்சு (⅛ பலம்)

இவ்விரண்டையும் நசுக்கிக் கல்வத்திலிட்டு வேலிப் பருத்தி யிலைச்சாறு விட்டு, நன்கு மைபோலரைத்து, ஒரு சாண் நீள அகலமுள்ள வெள்ளைத் துணியிலூட்டவும். பின்பு இதை நிழலில் காயவைத்து பத்திரப்படுத்தவும். வேண்டும்போது இத்துணியில் கொஞ்சம் கிழித்துத் திரிசெய்து, கொளுத்தி அதனின்று எழும்பும் புகையை யுட்கொள்ளவும் இவ்வாறு 8 நாட்களோ அல்லது 10 நாட்களோ செய்யவும்.

பத்தியம் :—

உப்பு, புளி, கரப்பான் பண்டங்கள் (கத்திரி, சாமை, முதலியன) முதலியவைகளை நீக்கவும் முருங்கைப் பிஞ்சு, பொரிமா முதலியவைகளை அதிகமான அளவில் உபயோகிக்கவும்.

விப்புருதி, கண்டமாலை முதலான ரோகங்கள் தீரும்.

---

## 93. கெர்ப்ப விப்புருதி, கூடல் விப்புருதி முதலானவைகளுக்குக் கிருதம்.

பசுவின்பா லும்நா ழியிள நீரும்
பாரதிற் குச்சரி சேர்த்து நாட்டினி
யிசவா யிஞ்சியி டித்ததிற் போட்டுநீ
யிட்டுநா லொன்று யிறக்கிவ டித்துக்கொள்
வசமதா மெருமை வெண்ணெய் நாழியு
மதிற்க லந்ததில் லிங்கமுங் கோட்டமும்
பசைய தாஞ்செண்ப கப்பூ மதுரமும்
பாரின் னுலுஞ்ச ரிநிறை யாகவே (௱சூ௰)

சரிய தாகவ ரைத்ததிற் போட்டுப்பின்
சற்று கள்ளிப்பா லுஞ்சேரு யின்னமுங்
திருகு கள்ளிப்பால் சற்றதிற் கூட்டியே
தீயின் வைத்தெரித் தேபதங் தன்னிலே
திருத்த மாய்வடித் தேகாலை நக்கிட
தீருங் கெர்ப்பவிப் புருதியுங் கூடல்விப்
புருதி யுந்திரு மேயிது தஞ்சையாள்
புரவலன் சரபேங் திரனரு ளிதே (௱சூக)

(இ-ள்)

| | |
|---|---|
| பசுவின் பால் | 4 படி |
| இளநீர் | 4 படி |

இவ்விரண்டையு மொன்றுகலந்து, அதனுடன் இஞ்சிச் சாறு (1 படியும்) விட்டு அடுப்பின் மேலேற்றி நாலிலொன்ருகும் வரை எரித்து இறக்கவும். இக்கஷாயத்தில் ஒரு படி எருமை வெண்ணெயிட்டு,

சுத்திசெய்த லிங்கம்
கோஷ்டம்
செண்பகப்பூ
அதிமதுரம்

இவைகளை வகைக்குச் சரியெடை (1 பலம் வீதமெடுத்து) மேல்சொன்ன கஷாயத்தைவிட்டு நன்ருக அரைத்துக் கலக்கி அதனுடன்

சதுரக்கள்ளிப்பால்
திருகுக்கள்ளிப்பால்

இவைகளையும் சேர்த்து (வகைக்கு 1 பலம்) அடுப்பின் மேலே ஏற்றி எரித்துப் பதத்தில் வடிக்கவும்.

இந்த நெய்யில் ஒரு ஸ்பூனளவெடுத்துக் காலை நேரங் களில் நக்கவும்.

கெர்ப்ப விப்புருதி, கூடல்விப்புருதி முதலானவைகள் தீரும்.

---

## 94. விப்புருதிக்கு மருந்து.

பசுவின் பாலிலே நல்லதா யம்மான்
பச்சரிசிசம் பீரப் பழத்தூள்
விசைவ தாகவ ரைத்துக்க ரைத்ததை
மேன்மையாக நாலஞ்சு நாட் கொண்டிடு

தசையி லேயெழு விப்புருதி யும்போய்
சடமுமெற் றக்குணமதாந் தஞ்சையினி
லுசித வாணர் தர்மறி யன்புள்ள
உத்தமன் சரபேந் திரனரு ளிதே (௺௬௨)

(இ-ள்)

பசுவின் பாலுடன், அம்மான் பச்சரிசி ஒரு எலுமிச்சை யளவெடுத்து அரைத்துக் கலக்கி 4 அல்லது 5 நாட்களுக்கு உட்கொள்ளவும். மாம்ஸங்களில் ஏற்படும் விப்புருதிகள் தீரும் உடம்பும் நன்றாகும்.

---

## 95. விப்புருதிக்குப் பூச்சு.

எருக்கம்வே ரமுக்கி ராவேரும் வேளையி
ளிலையிம் மூன்றில் வகையது மொன்றுக்கு
திருத்த நாலுவ ராகனெ டைசிறு
நீரைவிட் டரைத்தே நாழிவேப் பெண்ணெய்
திருத்த மாகவும் விட்டெரித் தேவடி
செய்து மேலினும் பூசந்தி காலையில்
வருத்தஞ் செய்விப்பு ருதியு மற்றிம்
மருந்தை யுஞ்சிறு நீரதாற் பூசிடே (௺௬௩)

(இ-ள்)

எருக்கம்வேர்
அமுக்கிராக்கிழங்கு
வேளையிலை

இவைகளை வகைக்கு 4 வராகனெடை யெடுத்துத் துண்டுகளாக்கி இடித்துத் தூள்செய்து, உலகமறியாப் பிள்ளையின் மூத்திரம்விட்டு நன்றாக வரைத்து

வேப்பெண்ணெய் $1\frac{1}{4}$ சேருடன் குழப்பி, அடுப்பின் மேலேற்றி எரித்துப்பதத்தில் இறக்கவும். இந்த எண்ணெயை விப்புருதிகளின்மேல் பூசவும். தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் உபயோகிக்கவும். சிறுநீர் கூட்டியும் உபயோகிக்கலாம்.

---

## 96. விப்புருதிக்கு உள்ளுக்கு எண்ணெய்,

முடக்கொத் தானுடா தோடையும் பாவட்டை
முதிர்ந்த வஞ்சிலை நொச்சி கழற்கொடி
திடமுற் றவிந்த வைந்தும்வே ருமிலை
சேர்புளி நரளைக் கிழங்கு மிலை
அடவுற் றதழு தாழையி லையுட
னவனியின் கழற்கோடிப் பருப்பதுங்
கடுக்காய் பதறுவெங் காயத்து டன்பெருங்
காயம் வெந்தயஞ் சீரகங் கூட்டிடே (௪௬௪)

கூட்டிடு கருஞ்சீ ரகமிந் துப்புங்
குணமாம் பூதகரப் பானின் பட்டையுங்
காட்டி னில்வெளுத் தப்பிசி னித்திலே
காடி யிற்றுவைத் தேயிலை யுள்ளதை
நாட்ட மாகவே நாலுப டிச்சாறு
நயந்து மேபிழிந் துவடி கொண்டுதான்
மூட்டிடு வேர்கடைச் சரக்குள் ளதை
முழுது மேயரைத் துக்கரை சாற்றிலே (௪௬௫)

சாற்றி லேகரைத் தேநாழி வேப்பெண்ணெய்
தானும் விட்டெரித் தேபதந் தன்னிலே
பாத்தி றக்கியவ் வெண்ணெயிற் காலையிற்
பண்புட னேர்கரண் டியும் நக்கிடு

சாத்தி ரப்படி யேபுளி யும்புகை
தள்ளிடு கரப்பான் பண்ட முள்ளதை
பூத்த விப்பு ருதியெனும் நோயது
போகு மூரைவிட் டப்பால் தானுமே (௱௬௫)

(இ-ள்)

| | |
|---|---|
| மூடக்கொத்தான் | பாவட்டை |
| ஆடாதோடை | அஞ்சிலேநொச்சி |
| கழற்கொடி | |

முதலான சரக்குகளின் வேர், இலை இவ்விரண்டையும் எடுத்துக் கொள்ளவும். இதனுடன்,

| | |
|---|---|
| புளிநரளைக்கிழங்கு | வெந்தயம் |
| புளிநரளையிலை | சீரகம் |
| தழுதாழையிலை | கருஞ்சீரகம் |
| கழற்கோடிப்பருப்பு | இந்துப்பு |
| கடுக்காய் | பூதக்கரப்பான்பட்டை |
| வெங்காயம் | வெளிச்சைப்பிசின் |
| பெருங்காயம் | |

முதலியவைகளையும் (வகைக்கு 1 பலம்) எடுத்துக்கொள்ளவும் முதலில் இலை வகைகளை எல்லாம் ஒரு பாத்திரத்தில் போட்டு, காடி விட்டூறவைத்துக் கல்லுரலிலிட்டு இடித்துப் பிழிந்த சாறு 4 படியுடன், மற்ற வேர்களையும், கடைச்சரக்கு வகைகளையும் தண்ணீர் விட்டு அம்மியின்மேல் வைத்து நன்ருக அரைத்துக் குழப்பிவிடவும். இதனுடன் வேப்பெண்ணெய் 1 படி (5 சேர்) விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு சிறு கரண்டியளவெடுத்துக் காலை வேளைகளில் சாப்பிடவும்.

பத்தியம் :—

புளிப்புப் பதார்த்தங்களை நீக்கிவிடவும். புகையிலையை யும் தள்ளவும். கரப்பான் பதார்த்தங்களும் உதவாது.

விப்புருதிகள் தீரும்.

---

## 97. விப்புருதி, மகோதரம், புண், புரை, நீராமை, பெருவயிறு, நீர்க்கோர்வை, கடிகை விப்புருதிக்கு வேலிப்பருத்தி நெய்.

பசுவின் னெய்யும் படிரெண்டு வேலியின்
பருத்தி வேருஞ் சிற்றவரை வேருடன்
விசவ தாஞ்சித்ர மூலிவே ரும்வசம்
பெழிலாந் தூது வளைவேர் மிளகுடன்
பசைபடிக் கையு வாய்வேரு முள்ளியும்
பகரு மெட்டுவகை மருந்தொவ் வொன்றுக்
கசவ தாகவோ ரைந்துப லங்கூட்டி
யதையும் நைய நறுக்கியும் போட்டிடே (௱௬௭)

போட்டெ ரித்துப்ப தத்தி லிறக்கியே
புராத னின்பதம் போற்றியே யன்புடன்
நாட்ட மாகக்க முஞ்சுநெய் கொண்டிடு
நல்லநெய் யைவிக் கத்தினும் பூசிடு
ஊட்டி டாதேயுப் புப்புளி யென்பது
மொன்று மாகிடா தேயிளங் கீரையை
போட்டி டுமிள கின்பொடி மாத்திரம்
போகு நோய்விதங் கேளினிச் சொல்வனே (௱௬௮)

சொல்லக் கேள்விப்பு ருதிம கோதரம்
தோன்றிய புண் புரையும் நீராமையுஞ்

சல்லயஞ் செய்பெரு வயிறு கெண்டையுந்
தானேபட்டுக் கிடக்கிற கட்டியு-
மல்லர் செய்நீர்க் கோர்வை கடிகையு
மகட்டின் விப்புரு திப்பல புண்களும்
வெல்லு மிந்தநெய் யென்றுதஞ் சாபுரி
விபு சரபேந்தி ரனரு ளாகுமே (௱௬௯)

(இ-ள்)

பசுவின் நெய்— 2 படியுடன் (10 சேர்)

| | |
|---|---|
| வேலிப்பருத்தி வேர் | தூதுவளை வேர் |
| சிற்றவரை வேர் | மிளகு |
| சித்திரமூல வேர் | உவாய் வேர் |
| வசம்பு | உள்ளிப்பூண்டு |

முதலான சரக்குகளை வகைக்கு 5 பலம் வீதமெடுத்து இடித்து, நெய்யுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும்.

இந்நெய்யை விப்புருதி வீக்கத்திற்கும் மேலே பூசி, உள்ளுக்கும் $1\frac{1}{4}$ விராகனெடையளவெடுத்து உட்கொள்ளவும்.

பத்தியம் :—

உப்பு, புளி, முதலானவைகளை நீக்கவும், முளைக்கீரையை மிளகுத் தூள் சேர்த்து வேகவைத்துச் சாப்பிடவும்.

தீரும் நோய்கள் :—

விப்புருதி, மகோதரம், புண், புரைகள், நீராமைக்கட்டி, பெருவயிறு, தானே உண்டான கட்டி, நீர்க்கோர்வை, அகட்டின் விப்புருதி, முதலானவை.

# 98. கெற்ப விப்புருதிக்கு அவுரி நெய்.

அவுரி வேர்மூக்க ரட்டைவேர் சாறணை
யதின்கி ழங்குமிம் மூன்றுஞ்ச ரியதாய்
நலம தாகிய வுள்ளிவ சம்புடன்
நல்ல கள்ளிப்பால் தானுமே காசெடை
யிவைக ளொங்தையும் நெய்விட்டுக் காய்ச்சியே
யிதமா யுண்ணன லாகிடிலா வின்பால்
கவன மாகவுண் கெற்பவிப் புருதியுங்
கழன்று நல்லகு ணமது வாகுமே (ாஎம)

(இ-ள்)

அவுரி வேர்
மூக்கரட்டை வேர்
சாரணைக் கிழங்கு

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து நசுக்கிக்கொண்டு அதனுடன்

பூண்டு வசம்பு
கள்ளிப்பால்

இவைகளை வகைக்கு ஒரு காசெடையும்விட்டுப் பசுவின் நெய் 1 படியுடன் (5 சேர்) கலந்து, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பக்குவத்திலிறக்கவும். இதில் ஒரு சிறு கரண்டியள வெடுத்துச் சாப்பிடவும். உஷ்ணமதிகமானுல் பசுவின் பால் அதிகமாகச் சேர்த்துக்கொள்ளவும்.

கெற்ப விப்புருதிகள் தீரும்.

## 99. கெற்ப விப்புருதிக்கு இர்பூரல் புட்டு.

ஆவின் பாலி னின்பூரல் வேரதை
யரைத்துண் டாலும் நரளைக் கிழங்கதை
யேவு லர்த்தியி டித்துக்க றுப்பரி
சியின்மா கூட்டிப்பிட்டுச் சுட்டுண் டாலுமே
மேவு கெற்பத்தி லுற்பத்தி யாகிய
விப்பு ருதியு மற்றிடு முண்மையாய்
பூவி னில்மிக்கக் கீர்த்தியே பெற்றிடும்
புரவ லன்சர பேந்திர னருளிதே (௱௯௧)

(இ-ள்)

(1) இம்பூரல் வேரைப் பசுவின் பாலுடன் அரைத்துச் சாப்பிடவும்.

(2) புளிநரளைக்கிழங்கை உலர்த்திக் கல்லுரலிலிட்டு இடித்துத் தூளாக்கி, குறுவையரிசி மாவுடன் கலந்து, தண்ணீர் விட்டுப் பிசைந்து புட்டு சுட்டு உட்கொள்ளவும்.

இம்மருந்துகளைச் சாப்பிடக் கெற்ப விப்புருதிகள் நீங்கும்.

---

## 100. சத்திவிப்புருதி, ஓடு விப்புருதிக்கு எண்ணெய்.

ஆமணக் கெண்ணெய் தன்னிலே வீழிவே
ரதின்றா ளுள்ளி வசம்பதிற் கூட்டியே
நேமமாக விரண்டு மூன்று கொதி
நேரி டவு மெரித்து மிறக்கியே

யாமிவ் வெண்ணெயோர் துட்டெடை நக்கிட
வணுகிடுஞ் சத்தி விப்புரு திகளும்
போமிதற் கோடு விப்புரு திகளும்
புதுமை யான மருந்திது தானுமே (௱எஉ)

(இ-ள்)

வீழிவேர் சூரணம் பூண்டு
வசம்பு

இவைகளைச் சமனெடுத்து (1 பலம்)த் தண்ணீர் விட்டு நன்ருக வரைத்து, ஆமணக்கெண்ணெய் $1\frac{1}{4}$ சேருடன் குழப்பி அடுப்பின்மேலேற்றி எரித்து, 2 அல்லது 3 கொதிகள் கண்டவுடன் கீழே யிறக்கவும்.

இந்த எண்ணெயில் ஒரு துட்டெடை யெடுத்து உட்கொள்ளச் சத்தி விப்புருதி, ஓடுவிப்புருதி முதலானவைகள் தீரும்.

---

# 101. கண்டமாலை முதலான எந்த வகை வீக்கத்திற்கும் பூச்சு.

இரதங் கெந்தக மிந்துப்பு மேசம
னேநிறுத் துக்கொண் டேயதைக் காவள
ரெருக்கம் பால்விட்ட ரைத்துமைப் போலவே
யெழும்பிய கண்ட மாலைவீக் கத்திற்குந்
திருகு செய்யுமெவ் வீக்கத்திற் குமிதைத்
திறமாய்ப் பூசந்தி காலைகள் தன்னிலே
வுரம தாம்வீக்க மற்றிடும் பாருநீ
யுண்மை யாமிது கைகண்ட பூச்சிதே (௱எந)

(இ-ள்)

சுத்தி செய்த பாதரஸம்
,, கெந்தகம்
பொரித்த இந்துப்பு

இவைகளைச் சமனெடுத்துக் கல்வத்திலிட்டு வெள்ளெருக்கம் பால் விட்டு நன்றாக வரைத்து மையாக்கி, வீக்கமுள்ள கண்ட மாலையின்மேல் பூசவும். இதைப் போலுள்ள எவ்வித வீக்களுக்கும் காலையிலும் மாலையிலும் மேலே பூசவும். குண முண்டாகும்.

---

## 102 உதர விப்புருதிக்கு லேகியம்.

அசம தாகம்பிந் துப்பு சதகுப்பை
அச்சியின் மிளகுள் ளியுஞ் சுக்குடன்
மிசைவதா மிந்த வாறு மருந்திலு
மேவு கைக்கு மரைப்பலங் கூட்டிடு
கசக்கும் பேய்கொமட் டிச்சாறு படியொன்று
கனலிலேகுறு கக்காய்ச்சிக் கொண்டுதான்
பசுவின் கோமிய மும்படி முக்காலும்
பாவை கல்லுப்பொரு சேரைக் கூட்டிடே (௱எச)

கூட்டுவாய்க் கடுக் காயைந்து சூரணங்
கொண்டு லேகியஞ் செய்து நன்றாகவே
நாட்டமாய்க் கொட்டைப் பாக்களவு வெட்டுநாள்
நயமாகக் கொண்டிடு பத்தியங் கைப்புடன்
போட்டிடு புளிதள் ளுதரத் தின்விப்
புருதியும் போயனு கூல மாகிடும்
பாட்டி னுக்காய ருள்புரி யன்பனார்
பாதம் போற்றிய மானு வுரையதே (௱எரு)

(இ-ள்)

ஓமம் பொரித்த இந்துப்பு
சதகுப்பை மிளகு
பூண்டு சுக்கு

இவைகளை வகைக்கு ½ பலம் வீதமெடுத்துத் தூள்செய்து பேய்க்கொமட்டிக்காய் சாறு 1 படி விட்டு, அடுப்பின்மேல் ஏற்றி எரித்து எட்டிலொன்ருக்கி இறக்கவும் அதனுடன் பசுவின் மூத்திரம் ¾ படியும், கல்லுப்பு 1 சேரும், 5 கடுக்காயின் (எண்ணிக்கையில்) சூரணத்தையும் போட்டு லேகிய பதத்திலிறக்கவும்.

இதிலொரு கொட்டைப்பாக்களவெடுத்து 8 நாட்களுக்குத் தினம் காலை வேளையில் மாத்திரமே உட்கொள்ளவும்.

பத்தியம் :—

கைப்புச்சுவையுள்ள பதார்த்தங்களையும், புளியையும் நீக்கிவிடவும்

உதரவிப்புருதிகள் தீரும்.

---

## 103 கெற்ப விப்புருதிக்கு உள்ளியாதி கிருதம்.

தோலைப் போக்கியே யுள்ளி யொருபடி
சுத்த மாமிள குந்தா னொருபடி
சீலமாஞ் சதுரக் கள்ளிப் பாலிலே
சேர்த்தரைத் தொரு நாளுமி ரவியில்
கோலமாக வைத் தேபசு நெய்யது
கூட்டியே யடுப் பில்வைத் திளங்கொதி
மேலிடுஞ் சமயம் பார்த்ததுக் குத்தான்
மேன்பொடி நெல்லிக் காய்கெந் தகமுமே (ராஎசு)

கெந்தகஞ் சுத்தி வாளப் பருப்புடன்
 கிளைக்குஞ் சித்த ரத்தைசிறு தேக்குமே
யிந்த நாலு வகைக்கு மொருபல
 மிடித்து நற்பொடி செய்ததிற் போட்டுமே
தொந்தமா யடுப் பேத்திப் பதத்திலிற்
 சுறுக்குட னிறக்கி யந்தி காலையி
லிந்த நெய்யினிற் காசெடை ரெண்டுமே
 யிதமாய்க் கொள்ளந்த வாலையைப் போத்தியே (௱௭௭)

போத்திக் கொண்டிடு பத்தியந் தானது
 புளியும் வாயுப தார்த்தமுந் தள்ளிடு
பூத்திடுங் கெற்ப விப்புரு திகளும்
 போகிடு மிதுமுன் னோருரைத் ததை
ஆத்தி சூடும்பொன் னம்பலர் பாதத்தை
 யர்ச்சனை செய்யும் தஞ்சை விபுவெனார்
சாத்தி ரமிது வுண்மையாய்ச் செய்திடு
 தப்பி லாமலும் போகும் வியாதியே (௱௭௮)

(இ-ள்)

| | |
|---|---|
| தோல்நீக்கிய உள்ளிப்பூண்டின் பருப்பு | 1 படி |
| மிளகு | 1 ,, |

இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுச் சதுரக் கள்ளிப்பால்விட்டு நன்ருக அரைத்து ஒரு நாள் வெயிலில் வைக்கவும். மறுநாள் அதனுடன் பசுவின் நெய் *2 படி விட்டு (5 சேர்)க் குழப்பி அடுப்பின்மேலேற்றி எரிக்கவும். இளங்கொதி வருகையில் அதனுடன்,

சுத்திசெய்த நெல்லிக்காய் கெந்தகம்
 ,, நேர்வாளம்
 ,, சித்தரத்தை
 ,, சிறுதேக்கு

*98 ெந. சுவடியில் காணப்படுகிறது.

இந்த சரக்குகளை வகைக்கு 1 பலமெடுத்துத் தூள் செய்து போட்டு, நன்ருக எரித்துப் பதத்தில் இறக்கி வடிக் கட்டிக்கொள்ளவும்.

இந்நெய்யில் 2 காசெடை யெடுத்துக் காலையிலும் மாலையிலும் உட்கொள்ளவும்.

பத்தியம் :—

புளி, வாயு பதார்த்தங்கள் முதலியவைகளை நீக்கவும்.

கெற்ப விப்புருதிகள் தீரும்.

குறிப்பு:—

(1) வாயு பதார்த்தங்களாவன:— பாகற்காய், கிழங்கு வகைகள், மாங்காய், கொத்தவரங்காய், அகத்திக்கீரை முதலியன.

(2) இந்நெய்க்குப் பேதியாகும் குணமுள்ளதால் இதை நிதானித்து உபயோகிக்கவும்.

---

## 105. உதரவிப்புருதிக்கு நெய்.

பசுவின் னெய்யும் நாலு ழிக்குமே
பாரொரு தலைப்பூண் டதுபத்துட
விசவதா மாண்வசம் புமல்ல ரெண்டுட
னேற்ற சுக்கும் பலம திரணடதாம்
பசையதாம் வெள்ள றுகுகட் டுக்கொடி
பார்ச மூலமரி தார மோமமும்
வசப்பதா முடும்பி ராஞ்சி சமூலமு
மடவியின் கருஞ் சீரகங் கூட்டிடே (௱எகூ)

கூட்டுவா று மருந்தில் வகையொன் றுக்கும்
பலமொன்று கொண் டரைத்தே நெய்யில்
போட்டுக் காய்ச்சிப் பதத்தி லிறக்கியே
புனிதமா முள்ளிச் சுக்கு வசம்புமே
வாட்டமில் லாமல் வெவ்வே றரைத்துமே
வளமாம் நெய்யி லரைத்துக் கலக்கியே
மூட்டு மூன்றுநாட் கொள்ள வுதரத்தில்
மூடுகும் விப்பு ருதியும கலுமே (௱௮௰)

(இ-ள்)

பசுவின் நெய் 1 படிக்கு ஒருதலைப்பூண்டின் 10 பற்கள் போட்டு அதனுடன்,

| | |
|---|---|
| வசம்பு | 2 பலம் |
| சுக்கு | 2 ,, |
| வெள்ளறுகு | 1 ,, |
| கட்டுக்கொடிச்சமூலம் | 1 ,, |
| சுத்திசெய்த தாளகம் | 1 ,, |
| ஓமம் | 1 ,, |
| வசம்பு | 1 ,, |
| *உடும்பிராஞ்சி சமூலம் | 1 ,, |
| கருஞ்சீரகம் | 1 ,, |

இவைகளை இடித்து அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் சேர்த்தரைத்து பூண்டு சேர்த்த நெய்யுடனே குழப்பி அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்திலிறக்கவும். பின்பு,

வெள்ளைப்பூண்டு
சுக்கு
வசம்பு

---

*உடும்பிராஞ்சி என்பது என்னவென்று தெரியவில்லை. 98 ஸ. சுவடியிலும் இப்படியே உள்ளது.

இம்மூன்றையும் (வகைக்கு ¼ பலம்) எடுத்து நேகவரைத்து நெய்யுடனே சேர்த்துக் குழப்பிக் கொள்ளவும்.

இந்நெய்யைத்தினம் 1 துட்டெடை வீதம் 3 நாட்கள் சாப்பிடவும். வயிற்றிலேற்படும் விப்புருதிகள் தீரும்,

குறிப்பு :—

98 நெ. சுவடியில் நெய்க்குப் பதில் வெண்ணெயை எடுத்துக் கொள்ளவேண்டும் எனக் காணப்படுகிறது.

---

## 106. கெற்ப விப்புருதிக்கு எண்ணெய்.

கடுக்காய் மஞ்சளிந் துப்புவெள் ளுள்ளியுங்
கடுகுட லிலவாகை வேர்வீழி வேர்
முடுக்காமா மணக்கம் வேர்வெங் காரமு
மொழியு மொன்பது வகை மருந்ததில்
திடத்துட னோர்வகைக் குமூன்று பலஞ்
சேர்த்திடித் துத்தண் ணீருமெட் டுப்படி
விடுத்தொரு படியா கவுங் காய்ச்சியே
மேலு முன்சொல் மருந்ததிற் றனுமே (௱அக)

மருந்தி லொவ்வோர் வகையது தன்னிலே
வளமாய் மூன்று களஞ்சது கூட்டியே
அரைத்து வாமணக்கி னெண்ணெ யொருபடி
யத்துடன் கள்ளிப் பாலுமு ழக்குமே
திருந்தவே விட்டுக் காய்ச்சி வடித்துதான்
தினமிரு கழஞ்சுன் றிடுகெற் பவிப்
புருதி தீரும் பூமிக்க டலையதும்
பொருந்த வேகழஞ் சைந்தது கூட்டிடே (௱அஉ)

(இ-ள்)

| | |
|---|---|
| கடுக்காய்த்தோல் | நிலவாகைவேர் |
| மஞ்சள் | வீழிவேர் |
| இந்துப்பு | ஆமணக்கம்வேர் |
| வெள்ளைப்பூண்டு | வெங்காரம் |
| கடுகு | |

இச்சரக்குகளை வகைக்கு 3 பலம் வீதமெடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து, ஒரு பாத்திரத்திலிட்டு 8 படி (1 மரக்கால்) ஜலம் விட்டு எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும்.

பின்பு, கடுக்காய்த்தோல் முதலான ஒன்பது சரக்குகளையும் வகைக்கு 3 கழஞ்சு (சுமார் காலேயரைக்கால் பலம்) வீதமெடுத்து கஷாயம் விட்டு நேகவரைத்துக் கஷாயத்துடன் கலக்கிச் சுத்தமான ஆமணக்கெண்ணெய் 1 படி விட்டு, அதனுடன் கள்ளிப்பால் ஒரு உழக்குஞ் சேர்த்து, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் வடித்து இறக்கவும். இந்த எண்ணெயில் 2 கழஞ்சு எடுத்துக் காலை நேரங்களிலுட்கொண்டபின்னர். 5 கழஞ்சளவு நிலக்கடலை சாப்பிடவும்.

கெற்ப விப்புருதிகள் தீரும்.

---

# 107. விப்புருதிக்கு உள்ளுக்கு எண்ணெயும் மேலுக்குப் பூச்சும்.

நிலக்குமிழ் மும்வேர் பிராய்பட்டைக் கள்ளக்குன்
றியிலை யுங்கொடி வேலிவே ருள்ளியும்
வலுபெரு மரப்பட் டையிலை யுடன்
வளர்புளி நரளைக் கிழங்குங் கூட

நலமிகும் வெள்ள றுகம்வேர் மிளகு
சாரணையின் வேர்வசம் பாகவும் பத்துமா
மிலகிய வகையொன் றுக்குத் தானுமே
மேன்மை யாய்முக்க ழஞ்சது கூட்டிடே (௱௮௩)

கூட்டியே யரைத்தா மணக் கெண் ணெயுங்
கொள்ளோர் நாழிதனி லிட்டுக் காய்ச்சியே
நாட்ட மாகப்பதத் தில்வடித் துக்காலை
யிலுங்கொண்டு வவ்வெண் ணெயைத் தானுமே
போட்டிடு மந்த வீக்கத் திலுமதை
பொருந்து விப்பு ருதிவீக்க மற்றிடும்
நாட்டிற் கீர்த்தி பெருதஞ்சை மாநகர்
நரபதி சரபேந் திரனரு ளிதே (௱௮௪)

(இ-ள்)

| | |
|---|---|
| நிலக்குமிழம் வேர் | பெருமரத்தின் இலை |
| பிராய்ப்பட்டை | புளி நரளைக் கிழங்கு |
| குன்றிமணியிலை | வெள்ளறுகம் வேர் |
| கொடிவேலி வேர் | மிளகு |
| வெள்ளைப் பூண்டு | சாறணை வேர் |
| பெருமரப்பட்டை | வசம்பு |

முதலான சரக்குகளை வகைக்கு 3 கழஞ்சு வீதமெடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து, ஆமணக் கெண்ணெய் —$1\frac{1}{4}$ சேருடனே குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

காலையில் இந்த எண்ணெயைக் காசளவெடுத்துச் சாப்பிடவும்.

விப்புருதி வீக்கத்தின் மேலும் இவ்வெண்ணெயை உபயோகிக்கவும். விப்புருதிகள் தீரும்.

## 108. கண்டமாலை முதலான எவ்வித வீக்கங் களுக்கும் பூச்சு.

எருமைமூத் திரத்திற் பழங்கிட் டத்தை
யேயரைத் துத்தட விடத் தானுமே
உரமதாங் கண்ட மாலைவீக் கங்களு
முற்ற மற்றச ரீரத்தின் வீக்கமுங்
கரைந்து வூரைவிட் டோடுமே சங்கரன்
கருணையால் சோழ மண்டலந் தன்னில்வாழ்
புரவலன் சரபோசி மகரா சேந்திரன்
புனிதமா யுணர்ந்தா ராய்ந்த முறையதே (ராஅரு)

(இ-ள்)

பழய கிட்டத்தை (மண் டூரம்) எருமை மூத்திரத்தில் இழைத்துக் கண்டமாலை வீக்கங்களின் மேலும், உடம்பி லேற்படும் மற்ற வீக்கங்களிலும் போடவும். குணமுண் டாகும்.

---

## 109. கண்டமாலைக்கு மருந்து.

தும்பை வேருமிலை யுந்திருத் துழாய்
துளிரும் வேருட னுப்பதுங் கூட்டியே
நம்பியே யரைத்தே மைகள் போலவே
நல்லவெந் நீரிற் கொண்டிடு காலையில்
வம்பு கண்டமாலை யுந்தீர்ந் திடுமே
வையகத் தோர்புகழ் சோழ மண்டலம்
அம்புவிக் கதிபதி யன்றுள சேந்திர
னருளிய சரபேந் திரன்முறை யிதே (ராஅசு)

(இ-ள்)

தும்பைவேர் துளசிவேர்
தும்பையிலை உப்பு
துளசி இலை

இவைகளைச் சமனெடுத்து, அம்மியின்மேல் வைத்துத் தண்ணீர் விட்டு நேகவரைத்து, வெந்நீருடன் கலக்கிக் காலையில் உட்கொள்ளவும்.

கண்டமாலைகள் தீரும்.

---

## 110. கண்டமாலை வீக்கந்தீர மருந்து.

கானக வெளிக்கொட் டைக்கரந் தைவேர்
    கடுகவே பிடுங்கி வந்துமந் தச்சாறு
தானதைப் பிழிந்தே யந்தச்சாற் றில்முன்
    சாத்தும் வேரை யரைத்துமைப் போலவே
பானமாகக் கொண்டே மேலும் பூசிடப்
    படரும் கண்டமாலை வீக்கந் தீர்ந்திடு
மூனமில்லா மருந்திதை முன்னவ
    ருரைத்தச் சரபேந் திரனு ணர்ந்ததே (௯௮௭)

(இ-ள்)

கொட்டைக்கரந்தைச் செடியைச் சமூலமாகப் பிடுங்கிக் கொண்டுவந்து கல்லுரலிலிட்டிடித்துச் சாறுபிழிந்து, அதைக் கொண்டு கொட்டைக்கரந்தை வேரைச் சேர்த்து நன்றாக வரைத்துப் பருகவும். இதனையே வீக்கத்தின்மேலும் பூசவும், கண்டமாலை வீக்கங்கள் மாறும்.

---

# 111. கண்டமாலைக்கு மருந்து.

புனலிற் றேற்றான் பழத்தைப் பிசைந்துதான்
பிறகுபேய்ப் பீர்க்குச் சாறுபி ழிந்துமே
மினமதாய்க் கொண்டு சாரித்து வெள்ளையா
மினிய சீலையி லூட்டி நன்றாகவே
நினைவதா கத்தான் னிழலுணர்த் தியன்னி
வியத்திச் சற்றுக் கிழித்தே வெந்நீர்
தனிற் பிழிந்துக் குடிகண்ட மாலைதான்
விடுமைந் துடநாறு நாடன் னிலே (௩௮௮)

(இ-ள்)
தேற்றாம்பழச்சாறு
பேய்ப்பீர்க்கஞ்சாறு

இவ்விரண்டையும் சமமாக ஒன்று கலந்து, ஒரு சாண் நீள அகலமுள்ள வெள்ளைத் துணியிலூட்டவும். பின்பு துணியை நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்தவும். வேண்டும்போது இத்துணியில் கொஞ்சம் கிழித்து வெந்நீரில் கசக்கிப் பிழிந்து குடிக்கவும். கண்டமாலை தீரும்.

---

# 112. கண்டமாலைக்குக் கருணைக்கிழங்கு உருண்டை.

கண்ட மாலைக்கோ ருண்டைசொல் வேனல்ல
கருணையின் கிழங்கைக் கொண்டுவந்துதான்
பண்டுள வரகின் வைக்கோல் தன்னையும்
பாரிற் போட்டுக் கிழங்கை மேல்வைத்து
வண்டலை யந்தவைக் கோலைமேற் போட்டு
மனலை யிட்டுக் கொளுத்தித வெந்தபின்
கண்ட கோலினூற் றள்ளிக் கிழங்கைக்
கடுகவே யெடுத்தே தோலு ரித்திடே (௩௮௯)

உரித்து வம்மியில் மையதைப் போலரைத்
துக்கொள் பாக்கள வத்தனை தானுமே
கரத்தி னலெடுத் தேயந்தி தன்னிலுங்
காலையுங் கொள்ளவே கண்டமாலையும்
வருத்த மாய்வெகு நாட்பட்ட தாமிந்த
மண்டலம் விட்டுப் போகிடு முண்மையாந்
திருக்குறள் நிர்த்தன மாடுதஞ் சாபுரி
தீரன் மானரு ளிம்முறை தானுமே (ராகூ)

(இ-ள்)

கருணைக்கிழங்கு வேண்டிய அளவு கொண்டுவந்து, வரகு வைக்கோலை யதற்குக் கீழேயும் மேலேயும் போட்டுக் கொளுத்திவிடவும். கிழங்குகள் நன்ருக வெந்தவுடன் ஒரு கோலினல் அதைத் தள்ளி அதன்மேல் தோலை யுரித்துவிடவும். பின்பு கிழங்குகளை அம்மியின்மேலே வைத்து நேக வரைத்துப் பத்திரப்படுத்தித் தினம் இருவேளை காலையிலும் மாலையிலும் ஒரு பாக்களவு உட்கொள்ளவும்.

நாட்பட்ட கண்டமாலைகள் தீரும். கைகண்டது.

---

## 113. கண்டமாலை, எழுவியாதி பல வியாதிக்கும் கொடிவேலி வேர் உருண்டை.

பச்சை யாங்கொடி வேலிவேர் தன்னையும்
பாய்ச்சிடா மலிரி சிமாவும் வெல்லமு
மிச்சையாய் வகையொன் றுக்கு நல்ல
தோரெலு மிச்சம்பழ மாத்திர மேயரைத்



1800

தச்சமில் லாம லொன்றாகக் கூட்டியே
யரைத்துக் காணி யளவில்லை யாவு
மிச்சமா கச்செய் யாமலே நாழிநெய்
விட்டு சட்டியில் வைத்திட டுப்பிலே (௱௬௧)

அடுப்பில் வைத்துக் கொதிக்கையில் வில்லையை
யதனிற் போட்டுத் துளாவிக் கரண்டியால்
சடக்க தாகவெந் தபணி யாரமாஞ்
சமயந் தன்னிறக் கியும்வைத் துக்கொள்
எடுத்து வேரேயும் வில்லையை வைத்துக்கொண்
டதிலோர் வில்லையுந் துட்டிடை நெய்யுமா
யடுத்த காலையு மந்தியு முண்டிடி
லதற்குத் தீரும் வியாதியைச் சொல்வனே (௱௬௨)

சொல்லுவே னெழுவியா தியெல் லாமறுந்
துடுக்கத் தாங்கண்ட மாலையுந் திர்ந்திடும்
வல்லதோர் பலநோய் களுக்கு மற்றிடும்
வாய்வு பண்டம் புளிப்புமே தள்ளிடு
நல்லநூற் பலவா ராய்ந்து வுணர்ந்திதை
நரபதி சரபோ சிரா சேந்திரன்
சொல்லிய முறையே யிதுவுண் டுபார்
சுகமதாங் கொடிவே லிவே ருண்டையே (௱௬௩)

(இ-ள்)

| | |
|---|---|
| கொடிவேலிவேரின் மேல்த்தோலைப் பச்சையாக உரித்துக் கைபடாமல் அரைத்தெடுத்த விழுது | ஒரு எலுமிச்சங்காயளவு |
| ஊறிய அரிசி மாவு | ” |
| வெல்லம் | ” |

இம்மூன்றையு மொன்றுசேர்த்துத் தண்ணீர்விட்டு இடித்து மொத்தை செய்து, ஒரு வெள்ளைத் துணியின்மேல் துக்காணி அளவுள்ள சிறுசிறு வில்லைகளாகச் செய்துகொள்ளவும்,

ஒரு இரும்புச்சட்டியில் $1\frac{1}{4}$ சேர் பசுவின் நெய்விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துக் காய்ந்ததும் அதில் மேற் சொல்லிய வில்லைகளைக் கொஞ்ச கொஞ்சமாகப் போட்டு நன் ருகத் துளாவி வரவும் நன்ருக வந்து பணியாரமான பின்பு அவைகளை சட்டியிலிருந்து எடுத்து விடவும். வில்லைகளை முருகாமல் பார்த்துக்கொள்ளவேண்டியது அவசியமாகும்.

தினந்தோறும் ஷை வில்லைகளிலொன்றை யெடுத்துக் காலையிலும் மாலையிலும் உட்கொண்டு, மிகுந்திருக்கும் நெய் யில் ஒரு துட்டெடையுங் கொடுக்கவும்.

தீரும் வியாதிகள்:—

எழுநாயிறு, கண்டமாலை முதலானவை.

பத்தியம்:—

வாயு பதார்த்தங்கள், புளி முதலானவைகளை நீக்கவும்.

---

## 114. கண்டமாலைக்கு எண்ணெய்ப் பூச்சு

மனித ரைச்சுட் டெலும்பதைச் சூரண
மாக்கி யேனரி கொண்டுநெய்க் கொட்டான்வேர்
தனிலுறும் பட்டை யெடுத்ததை நையவுந்
தட்டி யோர் விளங்கனி மாத்திர
முனிதமா யரைத்தே வசம்பு மிளகுள்ளி
யாகவு மூன்று வகை யதிற்
றினிச தொன்றுக் கிருகழஞ் சும
ரைத்தே கலந்ததில் நாழிநல் லெண்ணெயே (கசக)

நல்லெண் ணெயிற்போட் டுமவ் வெண்ணெயை
நலம தாகவைத் தேயதின் முன்னமே
வல்ல மோரினில் வெள்ளிய சீலையை [முன்
வளம தாய்த் தோய்த்ததைப் போட்டெட்டு நாளு
சொல்லு மெண்ணெயைத் தோய்த்துதான் போட்டிடச்
சோர்ந்தி டுங்கண்ட மாலையும் மாறிடும்
வல்ல வர்புகழ் மால்சர பேந்திரன்
மனது ணர்ந்தபூச் செண்ணெயி தாகுமே (௱௬)

(இ-ள்)

நன்றாக வெந்த மனிதனின் எலும்பைக் கல்லுரலிலிட்டு இடித்துச் சூரணம் பண்ணி வஸ்திரகாயஞ் செய்துகொண்டு, அதனுடன்

பூவந்திவேர்
பூவந்திப்பட்டை

இவ்விரண்டுஞ் சேர்ந்து நசுக்கிய தூள் ஒரு விளாங்கனிப் பிரமாணம் சேர்த்து அரைத்து நல்லெண்ணெய் ஒரு படியுடன் (5 சேர்) சேர்த்து, அதனுடன்,

வசம்பு
மிளகு
வெள்ளைப்பூண்டு

இவைகளைத் தனித்தனியே 2 கழஞ்சு (¼ பலம்) எடுத்து நன்றாக அரைத்துக் குழப்பிக்கொள்ளவும்.

கண்டமாலை வீக்கத்தில், ஒரு வெளுப்பான துணியை மோரில் நனைத்துப் போடவும். இவ்வாறு 8 நாட்கள் செய்த பின், மேற்சொன்ன எண்ணெயைப் போடக் குணமாகும். கைகண்டது.

# 115. கண்டமாலைக்கு உள்ளுக்கு எண்ணெயும் பூச்சும்.

குப்பை மேனி யிலைச்சா றிருநாழி
　　கொண்டு தானிரு நாழிநல் லெண்ணெயு
மப்ப வேகலந் தேவசம் புள்ளியுட
　　மதுட னேமிள குமுழி மஞ்சளுந்
தப்பி லாமற் சங்குங் கிலியமுந்
　　தானே தட்டிப் போட்டேரவி தன்னிலே
முப்பதுங் கடிகை வைத்துத் தீயையு
　　மூட்டிச் சாறும் சுவறிடக் காய்ச்சியே (௩௯௬)

காய்ச்சியே பதந்தன் னிலிறக்கி யேகரண்
　　டியா லொருமுட் டையும் நித்தியம்
வாச்சு தெனவுள் ளுக்குக் கொள்மே
　　லுக்கும் வளமதாக வேபூசி டுசிதமாய்
தாச்சி யிலாமுருங் கையின் பிஞ்சிலை
　　தானே தாதுவளைத்துவ ரம்பருப்
பாச்சு வெள்ளாட்டுப் பால்கூட் டிப்பத்
　　தியம்பட ருங்கண்ட மாலையதுந் தீருமே (௩௯௭)

(இ-ள்)

| | |
|---|---|
| குப்பைமேனி யிலைச்சாறு | 2 படி |
| நல்லெண்ணெய் | 2 ,, |

இவ்விரண்டையு மொன்று கலந்து,

| | |
|---|---|
| வசம்பு | வெள்ளைப்பூண்டு |
| மிளகு | மஞ்சள் |
| குங்கிலியம் | |

முதலானவைகளை வகைக்கு (1 பலம்) வீதமெடுத்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து, சாறு கலந்த எண்ணெயிலிட்டு 1 பகல்

முழுதும் சூரிய புடத்தில் வைக்கவும். அன்று சாயங்காலம் அடுப்பின்மேலேற்றி எரித்து மெழுகு பதத்திலிறக்கவும்.

இதில் ஒரு ஸ்பூனளவெடுத்துத் தினமும் உட்கொண்டு, கண்டமாலைகளின் மேலேயும் பூசவும்.

பத்தியம் :—

முருங்கைப் பிஞ்சு, முருங்கையிலை, தூதுவளங்கீரை, துவரம்பருப்பு ரஸம், வெள்ளாட்டுப்பால் முதலியவைகளைத் தாராளமாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

---

# 116. கண்டமாலைக்குப் பூச்சு.

அடுக்குச் சட்டியிலைச் சாறுநல் லெண்ணெயு
மதில்வசம் பொன்று தட்டியே போட்டுத்தான்
வடிப்ப மான ரவிதனி லேபுடம்
வைத்துப் பூசிடு கண்ட நேரமெல்லாஞ்
சடுத்தஞ் செய்கண்ட மாலையும் பத்து
நாடன்னிற் றீர்ந்து குணமதாஞ் தஞ்சையை
நடத்து செங்கோல் முறை வழுவாத
நரபதி சரபேந் திரன ருளிதே (൧௧௮)

(இ-ள்)

அடுக்குச்சட்டி யிலைச்சாறு
நல்லெண்ணெய்

இவ்விரண்டையு மொன்றுகலந்து ஒரு வசம்பைத்தட்டி அதிலிட்டுச் சூரிய புடமிடவும்.

கண்டமாலையின் மேலே பூசிவரப் பத்துநாட்களுள் தீரும்.

குறிப்பு:—அடுக்குச்சட்டி என்ற சரக்கு என்னவென்று தெரியவில்லை.

---

# 117. கண்டமாலைக்குச் சூரணம்.

அடவிக் காஞ்சுரை வேரின் பட்டையை
யலரிமுன் வைத்து லர்த்தியே தூள்செய்து
வடித்துப் பத்திர மாகக் கலயத்தில்
வைத்துமே கண்ட மாலையுற் றோர்களுக்
கிடுவெரு கடிதூள் ரெண்டு நேரமு
மிடர்செய் யுங்கண்ட மாலையுந் தீர்ந்திடும்
படிகீர்த் திபெருந் தஞ்சை மானகர்
பார்த்திபன் சரபேந் திரனரு ளிதே (௱௬௧)

(இ-ள்)

எட்டி மரத்தின் வேர்ப்பட்டையைக் கொண்டுவந்து, வெயிலில் நன்றாக உலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திர காயஞ்செய்து, ஒரு மண் கலயத்தில் பத்திரப்படுத்தவும்.

கண்டமாலையுள்ள நோயாளிகளுக்கு இதில் மூவிரல் கொள்ளுமளவு சூரணம் எடுத்துத் தினம் காலையிலும் மாலையிலும் தண்ணீருடன் உட்கொள்ளக் கொடுக்கவும். குணமுண்டாகும்.

---

# 118. கண்டமாலைப் புண்களுக்கு மேல்போடப் பூச்சு.

இரும்புக் கிட்டம் நன்றாகப் பொடிசெய்து
யித்துட னேமயில் துத்தம் நல்லதாய்
கருங்குங் கிலியமும் வெள்ளைக்குங் கிலியமுங்
கருது நாலுஞ் சரியெடை கூட்டியே

திருத்த மாக நன்ரு கப்பொடி
செய்துவா மணக்கெண் ணெயில் மத்தித்து
பொருந்த கம்பிப் பிசின்போல் வந்தபின்
பொருந்திய சிமிழிடன் னிலே வைத்திடே (உ௱)

வைத்துக் கொண்டு கண்டமாலைப் புண்ணதை
வழுவில் லாமற் கழுவிவெந் நீர்விட்டுச்
சுத்தி செய்துபின் னிம்மருந் திட்டிடுச்
சுளீரென வெரிவா கிற்பழுங் கிட்டஞ்
சத்தரைத் தப்பொடி யதிற்கூட் டிக்கொள்
தன்னி லேபுழு வும்புறப் பட்டிடு
முதறிடு மிலைக்கள் ளிப்பால் பஞ்சினி
லூட்டி யேபுரை வாயி லூட்டிடே (உ௱க)

இட்டி டயெரி யாம லிருந்திடி
லெழிவதாந் துருசுப் பொடிகூட் டிக்கொள்
துட்ட மாம்புழு தானும் விழாவிடில்
சுப்பிர வெல்லத்தைப் பஞ்சினி லூட்டியே
சட்ட மாகப்புண் மேலினும் போட்டிட
சண்டி செய்புழு தானே புறப்படும்
விட்டி டுபுளிப் புப்புகை ரெண்டையும்
வெகுநாட் சென்றகண் டமாலை தீருமே (உ௱உ)

(இ-ள்)

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த இரும்புக்கிட்டம் | | 1 பலம் |
| ,, | மயில்துத்தம் (துருசு) | 1 பலம் |
| கருங்குங்கிலியம் | | 1 பலம் |
| வெள்ளைக்குங்கிலியம் | | 1 பலம் |

இவைகளெல்லாவற்றையும் ஒன்றுகூட்டிப் பொடி செய்து ஒரு கல்வத்திலிட்டு ஆமணக்கெண்ணெய் விட்டு நன்ருகக் கம்பிப்பதம் வருமளவும் அரைக்கவும்.

பின்பு இதை யொரு சிமிழில் பத்திரப்படுத்திக் கண்ட மாலைப் புண்களை வெந்நீர் விட்டுச் சுத்தமாகக் கழுவி, மேற் சொன்ன களிம்பை ஒரு வெள்ளைத் துணியில் தடவி அதன் மேலொட்டிவிடவும். அதிகமான எரிச்சல் உண்டாகில் கிட்டப் பொடியை இன்னும் அதிகமாகச் சேர்த்துக்கொள்ளவும்.

புண்களிலிருந்து புழுக்கள் வெளிப்படும். அப்புரை வாயில் இலைக்கள்ளிப்பாலூட்டிய பஞ்சை வைத்துக் கட்டிவிடவும். எரியாமலிருந்தால் துரிசுப் பொடியைக் கூட்டிக் கொள்ளவும். புழு வெளிவராவிடில் நல்ல வெல்லத்தைக் கரைத்த தண்ணீரில் பஞ்சை நனைத்துப் புண்களிலிடவும். புழுக்கள் வெளிவரும்.

பத்தியம் :—

புளிப்புச் சுவையுள்ள பதார்த்தங்கள், புகையிலை முதலியவைகளை நீக்கவும்.

---

## 119. கண்டமாலைக்கு மருந்து.

நத்தைச் சூரிவேர் வேலிப்ப ருத்திவேர்
நல்ல வேளைவேர் மூன்றையும் பால்விட்டுச்
சுத்த மாயரைத் தப்பால் தன்னிலுஞ்
சுகமாய்க் கொண்டிடு னுஞ்செம் பருத்தம்பூ
நத்தியே யரைத்துப் பாலிற் கொள்ளினும்
நகர்ந்து கண்ட மாலைய துஞ் சுத்தமா
யத்திடு மத்த ரசித்தர் கிருபையா
ரன்புட னிதைச் செய்துபா ருண்மையே (உாந)

(இ-ள்)

நத்தைச்சூரி வேர்
வேலிப்பருத்தி வேர்
நல்லவேளை வேர்

இம்மூன்றையுஞ் சமனெடுத்துக் கல்வத்திலிட்டுப் பசுவின் பாலில் குழப்பிச் சாப்பிடவும்.

கண்டமாலைகள் தீரும்.

---

## 120. கண்டமாலை முதலான எல்லாப் புண்களுக்குங் களிம்பு.

முத்தின தேங்காய் கண்டிரந் தந்நீரை
முழுதும் போக்கி யிரதங் கழஞ்சுடன்
சுத்தத் தேன்திப் பிலிப்போட் டதைச்
சுகத்துட னந்த ராத்திரி வைத்துமே
மெத்த யெடுத் தேயதைப் பார்த்திடில்
வழும தாய்க்கு ழம்பாயி ருக்குமதை
வைத்து மெந்தபுண் டன்னிலும் பூசிட
வருத்தஞ் செய்புண் ணு மாறிடு முண்மையே
(உ௱௪)

(இ-ள்)

ஒரு முத்தியதேங்காயின் கண்ணைத் திறந்து, அதிலுள்ள இளநீரை ஊற்றிவிட்டு, அதற்குள் சுத்தமான தேன், திப்பிலிச் சூரணம், பாதரஸம் முதலானவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு வீதமெடுத்து உட் செலுத்தவும். ஒரு இரவு முழுதும் இத்தேங்காயை ஓரிடத்தில் வைத்திருந்து, மறுநாள் இதைச் சாய்க்கக் குழம்பாக மருந்து வெளிவரும். இதனை வழித்து வைத்துக்கொண்டு புண்களிலிட அவை மாறும்.

---

